# சித்த மருத்துவ
## வினா - விடை நூல்

ஐந்தாம் பதிப்பு

ஆசிரியர் :

மருத்துவரேறு

**பெ.மு.இரா.**

வெளியீடு




**SIDDHA MARUTHUVA GURUGULAM**

89-(23-B), T.P.K. Road,
Pykara,
MADURAI - 625 004.
✆ : 0452 - 2370632

மதுரை சித்தவைத்திய சங்க நிறுவனர்களுள் ஒருவரும்
சித்த மருத்துவக் குருகுல நிறுவனரும்
சித்த மருத்துவத் தந்தையும்-தமிழ் மருத்துவக் காவலருமான
சித்த வைத்தியப் பெருந்தலைவர்



# அமரர் பண்டிட் P. முத்துக்கருப்ப பிள்ளை

அவர்கள் பொறுப்பேற்றிருந்த சில அமைப்புகளாவன.

உறுப்பினர்: அரசினர் 'சித்த அறிவியல் மேம்பாட்டுக் குழு'
உறுப்பினர்: அரசினர் 'இந்திய மருத்துவ ஆலோசனைக் குழு'
உறுப்பினர்: அரசினர் 'சித்த மருத்துவ அறிவியல் வளர்ச்சிக்குழு'
உறுப்பினர்: அரசினர் 'இந்திய மருத்துவ மத்தியக்கழகம்' (CBIM)
உறுப்பினர்: அரசினர் 'மருந்து தயாரிப்பு நிறுவனம்' (TAMCOL)
இயக்குநர் : சென்னை அடையாறு கூட்டுறவு (Impcops) பார்மஸி
இயக்குநர் : சித்த வைத்திய கூட்டுறவு சங்கம் (கோவை)
தலைவர் : தமிழக சித்த வைத்திய மத்தியக் கழகம் (சென்னை)
தலைவர் : 5-ம் உலகத் தமிழ் மாநாட்டு சித்த வைத்தியக் கண்காட்சிப்பிரிவு (மதுரை)
தலைவர் : மதுரை சித்த வைத்திய சங்கம் (மதுரை)
தலைவர் : தமிழ்நாட்டுத் தமிழர் பேரவையின் சித்த மருத்துவப் பிரிவு (திருச்சி)

பதிப்பாசிரியர் : முதல் சித்தன் & வைத்திய மலர் (மருத்துவ ஏடு)
ஆலோசகர் : சித்தாலயம் (மருந்தகம்) & பண்டிட் P.M. பிள்ளை மருத்துவமனை (மதுரை)

முதற்பதிப்பு : சனவரி - 1973 (2000)
இரண்டாம் பதிப்பு : ஏப்ரல் - 1982 (3000)
மூன்றாம் பதிப்பு : மே - 1992 (1500)
நான்காம் பதிப்பு : ஏப்ரல் - 1997 (2500)
ஐந்தாம் பதிப்பு : டிசம்பர் - 2006 (1500)



அச்சாக்கம் :

ஸ்ரீ விநாயகம் பிரஸ்

4/51, மெயின்ரோடு, வலையங்குளம், மதுரை - 22. © 2690438



தந்தையும் - மருத்துவக் குருவுமான

பண்டிட். P. முத்துக்கருப்ப பிள்ளை அவர்களது

அறிவுரைகளின் படி

## சித்தமருத்துவ வினா-விடை நூலை

எழுதி - வெளியிட்டவர் :-

Dr. பெ. மு. இராசகோபாலன் R.M.P. (S.A.U.H&N)

விலை ரூ. 70.00
(அஞ்சல் கட்டணம் தனி)

நூல் வெளியீடு :

சித்த மருத்துவக் குருகுலம்
பைகரா, மதுரை - 625 004.
போன் : 0452 - 2370632

# சித்தமருத்துவ வினா-விடை நூல்

"அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு"

- குறட்பா

**முதற்பதிப்பின் முன்னுரை:-**

பேரன்புடைய மருத்துவ நண்பர்கட்கு முதற்கண் எமது பணிவான வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

அன்பர்களே!

ஆழிசூழ் உலகமாம் இவ்வண்டத்தின் கண் ஆதிமுதலாய்த் தோன்றிய அருந்தமிழ்க் குடியினரின் அழகு தமிழ் மொழியும்-அரிய நற்கலையும் - அன்புநிறை பண்பாடும், அகிலத்திற்கே அன்றும் - இன்றும் - என்றும் வழிகாட்டும் முன்னோடியெனத் திகழ்ந்துவரும் மேன்மைமிகு ஆற்றல் மிக்கவை என்பது அறிஞர் குழாத்தினரால் அட்டின்றி ஒப்புக் கொள்ளப்பட்ட உண்மையாகும்!

இத்தகு சிறப்புமிகு செந்தமிழ் நாட்டின்கண் - உலகில் நீர்வற்றி நிலப்பரப்பு தோன்றிய மூன்றாம் நாளில் முதன்முதலில் உதித்ததெனக் கூறப்படும்-மூதண்ட மூலிகையினையே முதன்மையாகக் கொண்டு தொடங்கிய சீர்மிகு சித்தர்மருத்துவம்; காலங்காலமாகவும் மக்களின் வாழ்க்கை முறையுடன் ஒட்டி உறவாடி இணைந்தும் நவீன ஆடம்பர ஆர்ப்பாட்ட எதிர்ப்புகளை வெற்றி கொண்டும், ஆலென ஓடி அறுகெனத் தழைத்து மக்கட் பிணி தீர்க்கும் மாபெரும் சக்தியாகத் திகழுகின்றதெனில் மிகையாகா!

வாதம், வைத்தியம், யோகம், ஞானம், கணிதம், சில்பம், சோதிடம், மந்திரம், விண்வெளி ஆய்வு உட்பட சகல கலைகளையும் செப்பியுள்ளதன் மூலம் - இன்றைய நடைமுறை வாழ்வினின்று, நவீன விஞ்ஞான ஆய்வு உட்பட சகல இயக்கங்கட்கும் வழி காட்டியாகத் திகழும் வண்ணம், வற்றாத வளமிகு கருத்துக் கருவூலங்களை வாரியளித்துள்ள

வர்களும்-என்றென்றும், எத்தகு சக்திகளினாலும் அழிக்கவியலாத உடலினைப் பெற்று இறைத்தன்மையுடன் இலங்குபவர்களுமான, ஈடிணையற்ற ஏந்தல்களாம் அருள் ஞான முனிவர் பெருமான்களால்-ஆண்டு அனுபவிக்கப் பெற்றபின் 'தாம் பெற்ற இன்பம் இவ்வையகமும் பெற்றுய்ய வேண்டும்' என்ற ஏற்ற மிகு அவாவினால், ஒளிவு மறைவின்றி அருளிச் செய்யப் பெற்ற அற்புதக் கலையே அவர் தம் பெயருடன் இலங்கி வரும் ''சித்தர் (தமிழ்) மருத்துவம்'' ஆகும்!

உலகின் மற்றெந்த மருத்துவ முறைகளினாலும் தீராதெனக் கைவிடப் பெற்ற கொடிய-நாட்பட்ட கருமநோய்களையும் முழுமையாகவும் பின் விளைவின்றியும் தீர்ப்பது தமிழ் மருத்துவம் ஒன்றேயாகும். மேலும், பிற மருத்துவ முறைகளில் பிணி தீர்க்கும் முறைகளை மட்டுமே கூறியிருக்கையில், சித்தமருத்துவ முறையில் மட்டும் வந்த நோய்களைத் தீர்ப்பதன்றி, நோயே வராது தடுக்கும் முறைகளையும்: மற்றும் நரை, திரை, மூப்பு பிணி, பயம், சாக்காடு முதலிய உலகியல்புகளை வெல்லக் கூடிய பலவித அரிய காயகல்ப தத்துவ முறைகளையும் செப்பியுள்ளது இதன் தனிப்பெரும் சிறப்பு ஆகும்! எனவே இம்முறை அகில மெங்கும் பரவிப் புகழெய்தும் காலம் வெகு தூரத்திலில்லை!

நிற்க, ஆண்டுதோறும் கோடிக் கணக்கில் பணத்தை வாரிக் கொட்டியும், தமது முயற்சிகட்கேற்ற பலனைத் தரவியாலாத ஆடம்பர மிக்க அலோபதி மருத்துவத்தினையே மேன்மேலும் தத்துப் பிள்ளையாக எடுத்துச் சீராட்டிப் பாராட்டி வளர்த்து வரும் நமது மத்திய-மாநில அரசுகளின் கடைக்கண் பார்வை-நமது பல்லாண்டு கால முயற்சிகளின் பயனாய்-இப்பொழுதுதான் சிறிது சிறிதாக தமது சொந்தப் பிள்ளைகளாகிய இந்திய மருத்துவ முறைகளின் மீதும் திரும்புகின்றதென்பதை உணரும் நாம் மகிழ்வுறுவதோடன்றி, அதற்கென நமது நன்றியையும் அரசுக்குத் தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளோம்!

இதன் தொடர்பான, மாநில அரசின் , ஆக்கப் பணிகளிலொன்றே சித்த-ஆயுர்வேத-யூனானி ஆகிய இந்திய மருத்துவத் துறைகளில் சேவை புரிந்து வரும் வைத்தியர்களுக்கு, ஆக்கமும், ஊக்கமும் தரும் பொருட்டு-உரிய விதி முறைகட்குட்பட்ட தேர்வுகளுக்குப் பின்னர் அவர்களையும்

மருத்துவர்களாக ஏற்றுக்கொண்டு அரசுப் பதிவேட்டில் பதிந்து கொண்டு (R.I.M.P.) சான்றிதழ் நல்கிச் சிறப்பிப்பதாகும்!

நிற்க, மேற்கூறிய பதிவுக்கான அரசுத் தேர்வுகட்குச் செல்வோர், நடைமுறையில் எத்தகு திறன் வாய்த்திருப்பினும், அவர்களில் பலர் முதன்முறையாகத் தேர்வுக்குச் செல்வதோடு, தேர்வில் எழும் வினாக்களுக்கேற்ற விடைகளை உரிய முறையிலும்-சுருக்கமாக, தெளிவாக, கருத்துச் செரிவுடனும் எடுத்தியம்பவியலாத பேதை நிலையிலுள்ளதே கண் கூடாகும். எனவேதான், அத்தகு நிலையிலுள்ள எண்ணற்ற மருத்துவர்களின் அன்பு வேண்டுகோளின் படியும்-எமது குருகுல மாணவ மணிகளின் அவா நிறைவேறும் வண்ணமும் இந்த ''வினா விடை நூலை'' படைத்துள்ளளோம். எமது மாணவர்கட்கும் பிறருக்கும் எமது அரிய பாடநூற் தொகுப்பே இணையற்ற துணை புரியவல்லதென்ற நம்பிக்கை எமக்கிருப்பினுங்கூட - தற்போதைய அரசின் புதிய தேர்வுகட்குரிய பாடத் திட்டங்களின் படியும், எமது பாடங்களில் விடுபட்டுப்போன பல புதிய விபரங்களையும் இணைத்து தேர்வுக்குதவும் சகல பொருட்களையும் எளிய முறையில் இந்நூலில் விளக்கிக் கூறியுள்ளோம். எனவே இந்நூல் தேர்வுகட்குச் செல்வோர்க்கு மட்டுமின்றி பிறருக்கும் மிக்க பயன் தரும் என்பதில் ஐயமில்லை.

இந்நூலின் கண் காணக் கிடக்கும் வினா - விடைத் தொகுப்பு யாவுமே மிக முக்கியமானதோடு-முற்றிலும் பயன் தரத்தக்கதே வென்பதிலும் கற்றவர்க்கு ஐயமிராது. எனினும், இயற்கை நியதிப் படி வைரக் குவியலினுள்ளும், பட்டை மிகத்தீட்டி ஒளிருவதையே கண்கள் குறிப்பாக நாடுமென்ற இயல்பு நமக்கும் உண்டாகவே: இங்குள்ள நூற்றுக் கணக்கான வினா விடைகளிலும், மிக மிக முக்கியமானதாகவும் - நடை முறையில் அவசியம் அறிந்திருக்க வேண்டியனவாகவும் நாங்கள் கருதக்கூடிய்னவற்றில் மட்டும் இரண்டு (★★) மலர்க் குறிகளை இட்டுக் காட்டியுள்ளோம். எனவே, அவற்றை மட்டும் பிறவற்றை விட மேலும் சில தடவை நன்கு படித்தறிந்து கொள்ள வேண்டுகிறோம்.

மேலும், இந்நூலைத் தொகுப்பதற்கு ஆதாரமாக எமது குருகுலத்தின் பாட நூற்களோடு-அரசினரால் அங்கீகரிக்கப் பெற்ற சில நூற்களையும் அடிப்படையாகக் கொண்டுள்ளமையால் இந்த வினா விடை நூலையே ஆதாரமாகக் கொண்டு அரசுத்தேர்வில்

கலந்து கொள்ள, மறுக்கவியலாத கருத்துக்களை எடுத்தியம்பி திண்ணமாய் வெற்றியும் பெறவியலும் என்பதை உறுதியாக நம்பலாம் இந்நூலிலுள்ளவை போக பல முக்கிய விபரங்களுக்கும்-இங்கு கூறியனவற்றுக் குரியதை விட மிக விரிவான விளக்கங்களுக்கும், தயவு செய்து எமது குருகுலப் பாடநூற் தொகுப்பை ஒப்பு நோக்கி அறிய வேண்டுகிறோம்.

பொதுவாக இந்த " தமிழ் (சித்தர்) மருத்துவ வினா விடைகளை" பன்முறை கருத்தூன்றிப் படித்துத் தெளியும் மருத்துவ அன்பர்கள் அரசுப் பதிவுத் தேர்வில் வெற்றி பெறும் நல் வாய்ப்பைப் பெறுவதோடன்றி - தமது தொழிலிலும் மேன்மையுடன் திகழ்ந்து பயனுறுவர் என்பதிலும் ஐயமில்லை. எனவே, இந்நூலினைக் கைக்கொண்டுள்ள தங்களுக்கு சகல நலமும் கிட்ட நல்லாசியருளுமாறு எல்லாம் வல்ல இறையை வணங்கி வேண்டி முடிக்கின்றோம்.

வாழ்க தமிழ்! வளர்க நற்கலை!! வெல்க சித்தம்!!!

* வணக்கம் *



**மரு. பெ.மு. இராசகோபாலன் R.M.P.**

நூலாசிரியர்


இயக்குநர் : சித்த மருத்துவக் குருகுலம்
: இம்ப்காம்ஸ் (E.C.M.)
: சித்தாலயம் (மருந்தகம்)
Hon. தலைவர் : மதுரை சித்த வைத்திய சங்கம்
Hon. தலைவர் : சி.ஆ.யு.ம.ம. நலச்சங்கம்
Ex. ஆசிரியர் : முதல்சித்தன் (மருத்துவ மாத இதழ்)
ஆசிரியர் : சித்த மருத்துவ நூற்கள்
தலைமை மருத்துவர் : பண்டிட் P.M.P. மருத்துவமனை
மதுரை-625 004. ✆ : 0452 - 2370632

# சித்த மருத்துவ வினா-விடை நூல்

## நான்காம் பதிப்பின் முன்னுரை :

அன்புள்ள மருத்துவ மணிகளுக்கு வணக்கம்.

எமது "சித்த மருத்துவக் குருகுலத்தின்" வெளியீடான "சித்த மருத்துவ வினா-விடை நூல்" என்ற இந்நூலின் முதற்பதிப்பு கடந்த 1973-ம் ஆண்டு வெளிவந்து - அவ்வமயம் அரசுப்பதிவு (R.I.M.P.) தேர்வுகளில் கலந்து கொண்ட ஆயிரக்கணக்கான மருத்துவர்கட்கு மிகவும் உறுதுணையாகத் திகழ்ந்தது. மேற்படி மூன்று பதிப்பு தீர்ந்து ஆண்டுகள் கடந்தும் இந்நூலின் பயன்கண்டு வேட்கை மிகக்கொண்ட ஏராளமானோரின் இடையறா வேண்டுகோளின் படியே - முன்னைவிட மேலும் பல புதிய விபரங்களையும் இணைத்தும், திருத்தியும் இந்த நான்காம் பதிப்பை வெளியிட்டுள்ளோம். எமது பாடங்கள் மற்றும் இதர நூற்களைப் போன்றே இதுவும் மிகு நலம் புரியும் என்பது திண்ணமாகும்.

சித்தா-ஆயுர்வேதம்-யூனானி ஆகிய மூவகை மருத்துவத் தேர்வுகட்கும் வினாக்களின் அமைப்பு சற்று மாறியிருப்பினும், பதில்கள் ஏறத்தாழ இணைந்தே இருக்கும் என்பதால்; இந்நூல் சித்தா- ஆயுர்வேதம்-யூனானி ஆகிய மூன்று வைத்திய முறைகளுக்குமுரிய அரசினரின்-எழுத்து மற்றும் வாய்மொழித் தேர்வுகளின் வெற்றிக்கு உறுதுணை புரியும் என்பது உறுதியாகும்.

நிற்க, இந்நூலின் கண் உள்ளபடியேதான், சிறிதும் மாற்றமின்றி அரசுத்தேர்வு வினாக்களும் அமைந்திருக்கும் என நினைக்க வேண்டாம். ஒருக்கால், அரசினரது கேள்விகளின் அமைப்பும்- சொற்றொடர்களும் மாறியும், குழப்பமூட்டும் தோற்றத்திலும் - எளிதில் புரியாவண்ணமும் அமையக்கூடும். எனினும் அரசுத் தேர்வுகளின் போது எழுப்பப்பெறும் வினாக்களின் அமைப்பு எங்ஙனமிருப்பினும் அவைகட்குரிய விடைகள் நிச்சயம் இந்நூலில் உள்ளவையேயாகும் என்பதை மறவாதீர்கள்.

எனவே அரசினரால் நடத்தப்பெறும் எழுத்து மற்றும் வாய் மொழித் தேர்வுகளின் பொழுது எழுப்பப்படும் வினாக்கள் குறித்து நன்கு சிந்தித்து - அவற்றின் உட்கருத்தினை அறிந்து கொண்டு பிறகு அவற்றுக்குரிய பதில்களை இந்நூலில் கண்டுள்ளபடி இன்னது தான் எனப் புரிந்து கொண்டு, தாமதமும் - குழப்பமுமின்றி உரிய விடையினைப் பகர்ந்து, வெற்றி பெற வேண்டுகிறோம்.

எமது குருகுலத்தின் பாட நூற்களையும் - இந்த வினா விடை நூலையும் நன்கு படித்தறிந்து நற்தேர்ச்சி பெற்றுள்ள நீங்கள் அரசுத் தேர்வுகளிலும் நிச்சய வெற்றிகளைப் பெற்று அரசுப் பதிவு (R.I.M.P) சான்றும் அடைந்து, பெற்ற சான்றுகளுக்கேற்ப நற்பணியாற்றி நன்னிலையடைந்து நலமுடன் வாழ நல்லாசியருளுமாறு எல்லாம் வல்ல சித்தர் பெருமான்களை வணங்கி வேண்டிக் கொள்கிறோம்.

தங்கள் அன்புள்ள

**Dr. பெ. மு. இராசகோபாலன், R.M.P. (S.A.U.H & N)**

(இயக்குநர்:- சி.ம.கு.)

# பொருளடக்கம்



மொத்தப் பகுதிகள் -16 ★ மொத்த வினாவிடைகள்: 758

# சித்த (தமிழ்) மருத்துவ வினா - விடை

## 1. சித்தர்களும் - கருவமைப்பும்

### ★ 1. பரப்பிரம்மம் என்றால் என்ன?

உலகின் பொருள் யாவும் **நான்முகன் - விட்டுணு - உருத்திரன்** ஆகிய மூன்று சக்திகளான **படைத்தல் - காத்தல் - அழித்தல்** ஆகியவற்றால் முறையே, மீண்டும் மீண்டும் தோன்றி - நிலைத்து - அழிந்து வருகையில், இவை ஓரிடத்தில் ஒடுங்குவதே **பரப்பிரம்மம்** எனப்படும். அதாவது, முறையே, பராபரத்தில் - பரமும், ப்ரத்தில் - சிவமும், சிவத்தில் - சக்தியும், சக்தியில் - நாதமும், நாதத்தில் - விந்துவும், விந்துவில் - சதாசிவமும், சதாசிவத்தில் - மகேசுவரமும், மகேசுவரத்தில் - உருத்திரனும், உருத்திரனில் - விஷ்ணுவும், விஷ்ணுவில் - பிரம்மனும், பிரம்மனில் - ஆகாயமும், ஆகாயத்தில் - வாயுவும், வாயுவில் - அக்கினியும், அக்கினியில் - நீரும், நீரில் - மண்ணும், மண்ணில் - அன்னமும், அன்னத்தின்கண் - நர, மிருக, பட்சி, தாவர, சங்க மாதிகளும் தோன்றின என்றும்; இதில் கடைசியில் கூறப் பெற்றவை அழியும்போது முறையே (தலைகீழாக) ஒன்றிலொன்றை அடைந்து முடிவில் பராபரமாகிய பரமேசுவரனிடத்தில் ஒடுங்கும் எனவும் கூறப்படும்.

### ★ 2. மருத்துவம் என்ற சொல் எப்படி ஏற்பட்டது?

மனிதனுக்கு வரும் பிணிகளைத் தீர்ப்பதற்கென **தாவர தாது - சீவ** இனங்களைக் கையாண்டு நலமுறும் வழிகளை வகுத்து உள்ளதே **'மருத்துவம்'** ஆகும். இங்கு 'மருந்து' என்ற சொல் வலித்தல் விகாரம் பெற்று 'மருத்து' எனவாகி, அதனைக் கொண்டு புரியும் செயலையுணர்த்த 'மருத்துவம்' என அமைந்தது. இச் சொல் 'நோயை மறுத்தல்' என்பதினின்று பிறந்ததாகவும் கூறுவர். (இதனை, வைத்தியம் - சிகிச்சை - பரிகாரம் - மாற்று மருந்து - நீக்குகை - அகற்றல் எனவும் அழைப்பர்.)

### ★ 3. சித்த மருத்துவம் யாரால் போதிக்கப் பெற்றது?

மாந்த இனத்திற்கு நலமூட்டி ஆயுளை நீடிக்கச் செய்வதற்கென மருத்துவ முறையினை **தமிழ் மொழியில்** சிவபெருமான் உமையவளுக்கும் - அவள் நந்தி தேவருக்கும் - அவர் தன்வந்திரிக்கும் - அவர் அச்சுவினித் தேவர்கட்கும் - அவர்கள் அகத்தியருக்கும் - அவர் புலத்தியருக்கும் - அவர் சௌமியருக்கும் - அவர் தேரையருக்கும் - அவர் தம் வழிவந்த ஏனையோர்க்கும் இயம்பியதாகக் கூறப்படுகிறது. (இது சித்தர்களால் உலகில் பரவியதாலேயே **சித்தர் மருத்துவம்** எனப் பெயர் பெற்றது.)

### ★ 4. சித்தர்கள் என்பவர்கள் யாவர்?

தமது அரிய, தளராத விடாமுயற்சியினால் நடைமுறை மக்கள் அடையவியலாத, நற்பெரும் பேறாகிய, தன் உடலையும், ஊன் பொருட்களையும், தான் நினைத்தபடி மாற்றிக் கொள்ளும் சக்தியைப் பெற்றும் - உயிர்ப்பைப் பிடித்து மூலக்கனலை எழுப்பி **மணி - மந்திர - மாமருந்துகளின்** துணையால் மாறாத மதியமுதமுண்டு, நரை - திரை - மூப்பு - பிணி - சாக்காடு ஆகிய உலகியல்பை வென்று, என்றென்றும், எத்தகைய சக்திகளாலும் அழியாத உடலைப் பெற்றும், **சிரஞ்சீவியாக** வாழ்ந்து வருபவர்களே பொய்ப் பொருளுக்கு மெய்ப் பொருள் கண்டுணர்ந்த முக்திபெற்ற **சித்தர்கள்** எனப்படும் **மெய் ஞானிகளாவர்.**

### ★ 5. நால்வகைச் சித்தர்கள் என்பவர் யாவர்?

பொதுவாக, சித்தர்கள், **வேதாந்தம் - சித்தாந்தம் - வேதாந்த சித்தாந்தம்** என்ற மூன்று பிரிவினுள் செயல்பட்டு சித்தியடைவர். இவர்களை குறிப்பாக, பிரம்மவித்து - பிரம்மவிதுர் - பிரம்மவிதுர்யான்-பிரம்மவிதுரிஷ்டு என நால் வகையாகப் பிரிக்கலாம். அதாவது **1. பிரம்மவித்து** என்பது, இலட்சியம் மோனத்திலிருப்பினும், சாதாரண மனிதனைப் போல் வாழ்வதுடன் - பலன் கருதாமல், தன்னைப் போல் பிறரையும் மேல் நிலைக்கு கொண்டுவரப் பாடுபடுபவராகும். **2. பிரம்மவிதுர்** என்பது, தானாக உலக விஷயங்களில் ஈடுபடாமலும். தனக்கென எதையும் விரும்பாமலும், தானே கேட்காமல் பிறராகவே முன்வந்து கொடுத்தால் மட்டும் உட் கொள்பவராகவும் இருப்பவராகும். **3. பிரம்மவிதுர்யான்**

என்பது, யாராவது உணவை வாயில் ஊட்டினாலன்றி, தானாக கேட்பதோ, உண்பதோ இல்லாமல், அலை நின்ற கடல் போல் சதா சிவயோக நிலையிலேயே இருப்பவராகும். 4. **பிரம்மவிதுரிஷ்டு** என்பது யாராவது உணவை வாயில் ஊட்டினாலும் இறங்காத நிலையிலும், பிள்ளையார் சுழியாகிய அமுத நிலையினின்றும், குண்டலி சக்தியினால் சதா அமுதத்தை உட்கொண்ட வண்ணமே இருப்பவராகும்.

## ★ 6. சித்தர்களது யோகம் எத்தனை வகைப்படும்?

சித்தர்களது **யோகம்** (சமாதிநிலை) உணர்வுகளை ஒருமைப் படுத்தும்-**இராஜயோகம்;** செயல் துடிப்பையடக்கும் - **ஹடயோகம்;** பிராணனை சிந்தையிலோடுக்கும் - **லயயோகம்;** அம்ச மந்திரத்தை உச்சரிக்கும் - **மந்திரயோகம்** ஆகிய 4 - பகுதியாகவும், 64 - வகைப் பிரிவாகவும் கூறப்படும். அவற்றுள், சிவராஜயோகம் - வாசியோகம் - குளிகையோகம் - பிண்டயோகம் - ஞானயோகம் - கவுனயோகம் - அட்டாங்க யோகம் - கற்பயோகம்-கருயோகம்-குருயோகம் - சத்தியோகம் - குண்டலியோகம்-தாரகயோகம்-சித்தியோகம் - நிஷ்டயோகம் - மகாராஜ சம்பத்துயோகம் - பிராணாயயோகம் - மௌனயோகம் - தீட்சையோகம் - அங்கியோகம் ஆகியன சிலவாகும். (இவையனைத்திலும் முதற்சிறப்புப் பெறுவது - சிவராஜயோகம் எனப்படுவதாகும்.)

## ★ 7. சித்தர்களின் மாய வேலைகள் எவை?

உடலுயிர்த் தத்துவங்களின் உண்மை நிலையுணர்ந்து சித்தியினால் பஞ்ச பூத சக்திகளை அடக்கியாளும் வலிமை பெற்று-சூக்கும உடலுடன் அண்டசராசரமும் சுற்றித்திரியும் சித்தர்கள், **'ஓம் - நமசிவய'** எனும் பஞ்சாட்சர உட்பொருளுணர்ந்து மந்திர (யோக) பலனை அடைந்த போது, 64 - வித கலைக்கியானங்களையும் செய்து காட்டினர். அவர்களது **மாயச் சித்துக்களில்,** ஆகருடணம் - உச்சாடனம் - வித்து வேடணம் - மோகனம் - வசியம் - காருட வித்தை - முட்டிப் பிரசனம் - ஆகாயப் பிரசனம் - பரகாயப்பிரவேசம் - அதரிசனம் - இந்திரசாலம் - மகேந்திரசாலம் - அக்கினித் தம்பம் - சலத்தம்பம் - வாயுத்தம்பம் - திருட்டித் தம்பம் - வாக்குத்தம்பம் - சுக்கிலத்தம்பம் - கட்கத்தம்பம் ஆகிய **மந்திர வேலைகள்** (மாயாசாலம்) குறிப்பிடத்தக்கனவாகும்.

## ★ 8. சித்தர்கள் கூறிய சமாதிநிலை என்பது என்ன?

சித்தர்கள் செப்பியுள்ள **சமாதிநிலை** (ஆத்மதியானம்) என்பது தன்னையும், சுற்றுப்புறச் சூழலையும் மறந்த, ஒருமை யுணர்வுடன் கூடியதொரு உயர்நிலையாகும். இது நிலைத்து விட்ட பின், தான் செய்த பூர்வவினையும், 'நான்' என்ற அகந்தையும் ஒழிந்து **பிரமக்யானம்** தோன்றி தனக்கு இனி இறப்பும் பிறப்பும் இல்லை என்ற உயர்நிலை கிட்டும். இது பொதுவாக, **சம்பிகசாதனம்** (வழக்கத்தை வெல்லுதல்) - **அசம்பிகசாதனம்** (மேலான உணர்வு பெறுதல்) என இருவகைப்படும். இவை **1.** நிருவிகற்ப சமாதி (வேறுபாடற்ற நிலை) **2.** சவ்விகற்பசமாதி (விகல்பமுடன் கூடியது) **3.** ஆருட சமாதி (முற்றும் துறந்த பின் செய்வது) **4.** சஞ்சார சமாதி (ஓரிடத்திலும் நிலையில்லாதிருப்பது) **5.** வியவகார சமாதி (உலக வழக்கிலிருந்த படியே செய்வது) **6.** சகச சமாதி (சுகதுக்கங்களைக் கருதாது சாதாரணமாக விருப்பப்படி செய்வது) என்ற ஆறு பிரிவுகளாகும். (சமாதி புகுமுன் தன் உடலை காயசித்தியாக்குதல் வேண்டும்.)

## ★ 9. ஏகாந்த நிலையினால் விளையும் பயன் என்ன?

உலகத்தினர் தொடர்பையும் - பந்தபாசங்களையும் உதறித் தள்ளி, தனியிடம் சென்று, மனதையும் - செயலையும் நல் வழிப்படுத்தி ஒருமையுணர்வால் ஆத்மானந்தம் அடைய முயலுவதே சித்தர்கள் கூறிய **ஏகாந்த நிலை** என்பதாகும் இதனால் பண்பும், செயலும் சீராக்கப்பட்டு, நல்லொழுக்கமும் - பக்தியும் கைகூடி, மனம் பரிசுத்தமுற்று - சிந்தனை மிகுந்து, மற்றவர் அறிவிற்குப் புலப்படாத எண்ணங்களும் - சக்தியும் உதித்து, கடவுளிடத்தும், தேவர்களிடமும் தொடர்பும் உண்டாகும். பொதுவாக, ஏகாந்த நிலையினால் (தனித்திருத்தல், அறிவை மூடிய அஞ்ஞானம் விலகும் - மதியைக் கவரும் இருள் நீங்கி ஞானம் உண்டாகும். ஆன்மாவைப் பற்றிய கட்டுப்பட்ட வினை எளிதாகும். கவலை அறவே நீங்கி சிந்தனை மேலிடக் காணாத காட்சியெல்லாம் புலப்படும் - ஐம்புலக் கதவு அடைபட்டு ஆன்மா விடுபடும். குறிப்பாக, தனித்திருத்தலினால், சிற்றின்பத்தை விட்டு பேரின்பம் அடைதல் - வியாகூலத்தை அறவே ஒழித்து மனோ சாந்தமடைதல் - ஆயுள் கூடி நீடித்து வாழல் முதலியன கிட்டும். (ஏகாந்த நிலைகொள்ள காட்டிற்குத்தான் செல்ல

வேண்டுமென்பது இல்லை. நாட்டிலும், கிராமப்புறங்களிலும் கூட தனியிடம் அமைத்துக் கொள்ளலாம்.)

## ★ 10. அமுதத்தாரணை என்றால் என்ன?

**அமுதத்தாரணை** என்பது ஒரு விதயோக நிலை ஆகும். அதாவது சித்தயோகிகள் உணவின்றி சமாதி நிலையில் நெடுநாள் இருத்தற்கென - தங்கள் நாக்கை உண்ணாக்குத் தண்டில் படுமாறு மடித்து, சுவாசக் குழலுக்குப் போகும் இடைவெளியைத் தடுத்துச் சித்தாசனத்தில் அமர்ந்து, கண்டம் -கபாலம்-நெற்றி இவற்றில் சிந்தையை ஒரு முகப்படுத்தி, புருவ நடுவை நோக்கித் தவமியற்றுவதால் நாபி முதல் நாசி வரை யோகாக்கினி சுவாலை உண்டாகி, அதனால் தலையில் மூளைப் பகுதியாகிய ஆக்கினையின் பகுதியிலுள்ள பிரமரந்திரக் கோள்கள் தாக்குண்டு, அவற்றினின்றும் அமுதம் ஊறி உண்ணாக்கின் வழி பாய்ந்து, கண்டத்தின் மூலப் பொறியில் விளையும் அமுதமுடன் கலந்து சொட்டு சொட்டாய் விழுந்து கொண்டேயிருக்கும். இதனை அருந்துவதால் தபசிகள் தாகம், பசி, சோர்வு முதலியவற்றிலிருந்து விடுபட்டு, யோகத்தை எவ்வித இடையூறுமின்றி தொடருவதுடன், பல்லாண்டு காலம் உயிர் நிலைபெற்றுத் தவமியற்றி சித்தி பெறுதற்கும் வழி கிடைக்கிறது. (சுழிமுனைக் கோளத்திலிருந்து ஊறிக் கசியக் கூடிய நீர்ச்சத்துதான் மேற்கூறிய "**அமிர்தம்**" எனப்படும்)

## ★★ 11. சித்தர்கள் கூறிய "மணி" என்றால் என்ன?

சித்தர்கள் தாம் செப்பியுள்ள மருத்துவமுறையில், **மணி - மந்திர - ஔடதம்** எனும் முப்பிரிவினைக் கூறி, அதில் 'மணி' என்பதை முதலிடம் பெறச் செய்து சிறப்பித்துள்ளனர். மணி என்றால் பொதுவாக நவமணி - தானிய மணி - அணி மணி போன்றவற்றை உணர்த்தினாலும், இங்கு குறிப்பிடப் படுவது **இரசமணி** என்பதையேயாகும். இரசம் என்றால் பொதுவாக காய், கனி, இலை போன்ற சகல பொருட்களி னின்றும் பிழிந்து பிரித்தெடுக்கப்படும் 'சத்து' என அறியப்படுவது போல் - இங்கு குறிப்பிடப்படும் **பாத இரசம்** என்பதுவும் மண்ணிலிருந்து கிடைக்கக் கூடிய வெண்ணிறமும், நீர்வடிவமும், மிக்க எடையும் கொண்டதும், மற்ற சகல மருந்துகளையும் விடமேலான சிறப்பினைக் கொண்டது - மானதொரு சத்துப் பொருளோயாகும். நிற்க, எண் வகைச் சித்திகளைப் பெறவும், மலின உலோகங்களை துல்லியமாகச்

செய்யவும், தொட்டதையெல்லாம் பொன்னாக்கவும், உடலை சித்தியாக்கவும், சகல நோயையும் தீர்க்கும் அவிழ்தமாக்கவும் கையாளத்தக்க அளவில் - தீயில் புகைந்தோடும் இரசத்தை - உரிய முறைகளின்படி நெருப்பிற் கோடாமல் கட்டி, இறுக்கி சாரணைகளின் மூலம் புத்துயிரும், புதுசக்திகளும் ஊட்டி, கிட்டுதற்கரிய இரசமணியாக (குளிகை) ஆக்கப் பெறுவதே மணி என்பதாகும். (உயரிய சக்திகளையுடைய "இரசமணி" செய்வதற்கு சித்து அடைந்தவர்களால் மட்டுமே இயலும்.)

## ★ 12. சித்தர்கள் கூறிய 'மந்திரம்' என்பது என்ன?

சித்தர்கள் செப்பியுள்ள **மந்திரம் (யோகம்)** என்பது தன் **மனதின் திரம் (மனவலிமை)** எனப்படுவதேயாகும் இதனால் சுவாசத்தை (மூச்சு) பழகிவரின், அது வீணா தண்டினுள் புகுந்தோடி, உடல் முற்றுமுள்ள நரம்புகள், மற்றும் மூலாதாரம் முதல் அனாகதம் முடியவுள்ள (ஆராதாரம்) உறுப்புகளை வலிமைப்படுத்தி, மனதை ஒருமைப்படுத்தி, அறிவினை விளக்கி, உடலை என்றும் அழியாதிருக்கச் செய்வதற்கும் மற்றும் இறைத் தன்மையுடன் இலங்குவதற்கும் இயலும். அதாவது **யோகம் (மந்திரம்)** என்பதன் பிரிவுகளான நன்னடக்கம், நற்செயல், இருக்கை, சரப்பழக்கம், புலனடக்கம், மூச்சடக்கல், தன்னையடக்கல், இரண்டரக்கலத்தல் ஆகிய எண் வகை நிலைகளையும் கடந்தோர், எண்வகை சித்திகளையும், அழியாவுடலையும் பெறுவதுடன், சிவபதமடைந்து சிறப்புறவும் இயலும். நிற்க, ஐம்புலனை அடக்க, மூச்சடக்கி, மனதை ஓர் நிலைக்குக் கொணர்ந்து, உடலை வளர்த்து சிவகதியடையும் பொருட்டு செய்யப்படும் மந்திரத்தைக் கடைப்பிடிப்பவர் **வேதாந்தி** எனவும் - இச்செயல் முறைகளை தங்கள் **திரத்தால் (தந்திரம்)** வெற்றி கொள்பவர் **சித்தாந்தி** எனவும் அழைக்கப பெறுவர். இவ்விரண்டினுள், எவரும் எளிதில் கைக் கொள்ளத் தக்கது "மந்திரமே" ஆகும்.

## ★★ 13. சித்தர்கள் கூறிய 'ஔடதம்' என்றால் என்ன?

சித்தர்கள் செப்பியுள்ள **ஔடதம் (மருந்து)** என்பது அவிழ்த்தல் தன்மையுடையது (அவிழ்தம்) எனப்படுவதாகும் அதாவது முக்குற்றம், தசவாயு, ஏழு உடற்கட்டு, பதினான்கு வேகம் போன்றவற்றின் பிணக்குகளினாலான பிணிக் கூட்டங்களை நீக்குதற்கென கூறப்பட்ட மருந்துகள் ஆகும் இம்மருந்தையும் மூன்றாகப் பிரித்து முதலிரண்டை

உட்தராமலும், கடைசி வகையை உட் கொடுத்தும் பிணி தீர்க்கச் செய்தனர். உட்கொள்ளும் மருந்தையும் தாவர - தாது - சீவ இனம் என மூவகையாகப் பிரித்தனர். அதாவது உடற்பிணியை நீக்கி, உடலை அழியாது நிலைக்கச் செய்வதற்குரியனவற்றில் முக்கால் பங்கு அளவு தாவர - உயிர் இனமும்; கால்பங்கு அளவு உலோகபாடாண வகையும் எனக் கூறினர். இவற்றுள் முதலிரு வகையை உணவு மற்றும் துணை மருந்துகளாகவும்; கடைசி வகையை பற்ப, செந்தூர, சுண்ண வகைகளாகவும் ஒழுங்குபடுத்தினர். நிற்க, மணி - மந்திரம் ஆகிய இரண்டும் எல்லா மக்களும் எளிதில் பெறக் கூடாத நிலையிலிருப்பதால், இவ்விரண்டையும் விட மிக எளிதாகப் பெறத்தக்கதான "ஔடதம்" (மருந்து) மட்டுமே சகலருக்கும் பயன்படுகின்றது.

## ★ 14. பதினெண் சித்தர்கள் யாவர்?

அகத்தியர்-திருமூலர்-காலாங்கி-போகர்-புலிப்பாணி-சட்ட முனி-மச்ச முனி-ராமதேவர்-கமலமுனி-உரோமரிசி-கருவூரார்-இடைக்காடர்-சுந்தரானந்தர்-அகப்பேய்சித்தர்-பாம்பாட்டி-தேரையர்-யூகிமுனி-யாக்கோப்பு ஆகியோரே **பதினெண் சித்தர்களாவர்.** (இவர்களுள் அகத்தியரே முதன்மை பெற்றவராகும்.)

## ★ 15. சித்தர்கள் அடங்கியுள்ள தலங்கள் யாவை?

**சித்தர்களுள்** முறையே, திருமூலர்-சிதம்பரம், இராமதேவர் அழகர்மலை, கும்பமுனி - அனந்தசயனம், கொங்கணவர் - திருப்பதி, கமலமுனி - திருவாரூர், சட்டமுனி - திருவரங்கம், கருவூரார் - கரூர், சுந்தரானந்தர் - மதுரை, வான்மீகர் - எட்டிக்குடி, நந்தீசர் - காசி, பாம்பாட்டி-விருத்தாசலம், போகர் - பழனி, மச்சமுனி - திருப்பரங்குன்றம், கோரக்கர் - பேரூர், பதஞ்சலி - இராமேசுவரம், தன்வந்திரி - வைத்தீஸ்வரன் கோவில், குதம்பை-மாயவரம், இடைக்காடர்- திருவண்ணா மலை ஆகிய தலங்களில் அடங்கியுள்ளனர். (இங்ஙனமே, **மண்** - தஞ்சை, **நீர்** - திருவானைக்காவல், **நெருப்பு** - திருவண்ணாமலை, **காற்று** - திருக்குற்றாலம், **வெளி** - தில்லை என **பஞ்சபூத நிலங்களையும்** வகுத்துள்ளனர்.)

## ★ 16. சித்தர்களின் சிறப்பு முறை என்ன?

**சித்தர்கள், காப்பு-நீக்கம்-நிறைவு** பெற இரசபாடாணாதி உபரசங்களை நெருப்பில் புகையாது கட்டுப்படுத்தியும்

அவற்றை பெருந்தீயில் அமைத்து பற்ப - செந்தூர - சுண்ணங்களாக்கியும் தீராப் பிணிகளையெல்லாம் தீர்த்துப் புகழடைந்தனர். அதற்கென சரக்குகளை ஐம்பூதக்கூட்டினால் முடிக்கும் - **ஏகமூலிகைப் பயன்;** சரக்குகளின் சத்துரு, மித்துருவை உறவாக்கும்-**மாரணப்பயன்;** உப்புத்திராவகத்தால் சரக்குகளை மடித்து முடிக்கும் - **திராவகப்பயன்;** சரக்குகளை நீர் வடிவில் மாற்றி புகைச் சரக்குகளை முடிக்கும் - **செய நீர்ப் பயன்;** பூநீறு உப்பைச் சுண்ணமாக்கும் - **முப்பூப்பயன்** (மற்றும் குருமருந்து - சுத்தித்தபூநீறு முதலியன) ஆகிய சிறப்பு முறைகளைக் கையாண்டனர்.

## ★ 17. சித்தர்களின் நுட்பம் என்றால் என்ன?

சித்தர்கள் தத்தமது பேரறிவின் துணையினால் எவ்வித நடைமுறை ஆய்வுமின்றியே பல்வேறு விஷயங்களைப்பற்றியும் பொதுப்பட எழுதி வழங்கியுள்ள நூற்களிலுள்ள சுருக்கக் கருத்தே-**சித்தர்நுட்பம்** எனப்படும். இத்தகைய நூற்தொகுப்பை வழங்க மதிநுட்பமும், ஆத்ம சக்தியுமுள்ள சித்தர்களால் மட்டுமே முடியுமே தவிர, மற்ற எவராலும் நினைத்துப் பார்க்கக்கூட முடியாது. ஏனெனில், சித்தர்களுக்கு இயற்கையே ஏவல் புரிவதால் செயற்கரிய செயல்களைச் செய்து முடிக்க வழிபிறக்கும். இத்தகைய அருஞ்செயல்களை அவர்களால் இயற்றப்பெற்ற, வாதம் - வைத்தியம் - யோகம் - ஞானம் - சோதிடம் - நாடி - மாந்திரீகம் போன்ற அருங்கலை நூற்களின் மூலம் அறியலாம். இவற்றுக்கு இணையாக வேறெந்த நூற்களையும் கூற கண்டிப்பாக இயலாது.

## ★ 18. சித்தர் முறைகளில் மட்டுமே உள்ளவை யாவை?

சித்த வைத்திய முறைகளில் மட்டுமே கூறப்பட்டுள்ளதும்; வேறெந்த மருத்துவ முறைகளிலும் காண முடியாததும் - நவீன முறைகளில் நினைத்துக் கூடப் பார்க்க முடியாததுமான - செயல்பாடுகள் ஏராளமாக **சித்தர் முறைகளில் மட்டும் உள்ளன.** உதாரணமாக, **காயசித்தி** (என்றும் இளமை யோடிருத்தல்) - **வாதம்** (பொன் செய்யும் வித்தை) - **யோகம்** (தான் நினைத்தபடியே உடலை அமைத்தல்) - **ஞானம்** (தத்துவ விளக்கம்) - நெருப்பை வெல்லும் இரசம், பாடாணங்கள், காரசாரம் போன்ற பொருட்கள் **(கட்டு முறை)** - **கவுனக்குளிகை** (உயிரூட்டப்பட்ட சூதமணி) - **மாந்திரீகம்** (சுக்கிசக்கிரியை) - **சாலம்** (மாய வித்தை) - **நாடிநடை**

(கைநாடி மூலம் பிணிகளைக் கண்டறிதல்) மற்றும் **அட்டமாசித்துக்கள்** போன்றவற்றைக் கூறலாம்.

## ★ 19. கரு எப்படி உற்பத்தியாகிறது?

பெண்ணின் மாதவிடாய் கண்ட 16 - நாட்களுள் நாதாசயத்தினின்று ஓரிரு நாதக்குமிழ்கள் முற்றி வெடித்து வெளிப்பட்டு கருக்குழியில் விழுந்திருக்கும் சமயம் ஆணுடன் உடலுறவு கொள்கையில் தியும், வாயுவும் கூடிய விந்து பாய்ந்து நாதத்துடன் கலந்துறவாகித் திரண்டு தன் வடிவாகி தமர்போன்று இதழ்களின் வாயிலை மூடும். அவ்வமயம் அபானவாயு வெளியில் நின்று வாயிலைக்காக்க, உட்சென்ற பிராணவாயு கருவைப் பல பிரிவுகளாக்க, உதானவாயு கருவை வளர்த்து வரும். எனவே பரமாணுக்களை ஒத்த நாதவிந்துச் சேர்க்கையின் போதே **படைத்தல் - காத்தல் - வளர்த்தல்** ஆகிய தொழில் புரியும் **வாதம்-பித்தம்-கபம்** ஆகிய முத்தோடமும் விளைவதை அறியலாம்.

## ★ 20. கருத்தரித்து விட்டதை உணர்வது எப்படி?

பொதுவாக, உடல் நலமுடைய ஆணின் விந்து நெய், தேன், தைல பதத்தில் வெள்ளையாகவும், எடையிலும் அளவிலும் அதிகமாகவும், பிசுபிசுப்புடன் இனிப்பாகவும், வெகுட்டலற்ற மணமுடன் களங்கமின்றியும் இருக்க வேண்டும் என்பது போன்றே பெண்ணின் நாதம் கலந்த மாதவிடாய் செவ்வரக்கு, முயல் ரத்தம் இவற்றின் நிறத்தில் துர்மணமும் களங்கமுமின்றியும், அது ஒட்டிய துணியைக் கழுவுகையில் கரைபடியாமலும் இருக்க வேண்டும். (இங்ஙனமிருப்போர்க்கே கருத்தரிக்கும்.) நிற்க, ஒரு பெண்ணிற்கு கருத்தரித்த வினாடியில் செய்த புணர்ச்சியில், மகிழ்வும், திருப்தியுமுண்டாகும். அவளது யோனியானது ஆண் குறியையும், விந்துவையும் முழுமையாக ஆட்கொள்ளும் - நாதவிந்து வெளிப்படாமல் ஒருங்கிணைந்து விடும்-உடன் வயிற்றில் ஏதோ பாரமுண்டானது போன்ற துடிப்பும், உணர்வும் காணும், இருதயத்துடிப்பு, சோம்பல், நாவறட்சி, உடல்வாட்டம், மயிர்ச் சிலிர்ப்பு ஆகியன ஏற்படும். இக்குறிகளால் கருத்தரித்து விட்டதென உணர்ந்து அடுத்து கர்ப்பிணிக்குரிய விதிமுறைகளைக் கடைப்பிடித்து வரத் தொடங்க வேண்டும்.

## ★ 21. ஆண் - பெண் தோன்றும் விதம் என்ன?

உடலுறவின் பொழுது விந்து வெளிப்படும் சமயம் சரம், **பிங்கலையில்** இயங்க-ஆண்மகவும், **இடகலையில்** இயங்க பெண்மகவும், இருவாயுவும் சமமாக ஓடினால் பேடியும் உருப் பெறும் எனவும் - உடலுறவில் ஆணுக்குப் பெண் மீது அதிக அன்புண்டாகில் ஆணும், பெண்ணுக்கு ஆண் மீது அதிக அன்புண்டாகில் பெண்ணும், இரண்டும் சமமாகில் அலியும் பிறக்கும் எனவும் - நாதவிந்துச் சேர்க்கையில் நாதம் கூடினால் பெண்ணும், விந்து கூடினால் ஆணும், இரண்டும் கூடினால் இரட்டைப் பிள்ளையும் பிறக்கும் எனவும் கூறப்படும்.

## ★ 22. சிசு ஆணா - பெண்ணா என்பதை எப்படி அறியலாம்?

கர்ப்பிணிக்கு மிதமான பசி, வலது முலை அதிகம் விம்மல், முலைக்காம்பை நசுக்க கலங்கிய வெண்ணிறப் பொருள் வெளிப்படல், பலநிற சிறுநீர், சிசு வலப்புறமிருப்பதுபோல் தோன்றல், அமருதல் - எழுதல் - வேலை செய்தலின் போது வலது கையையே ஊன்றுதல், வலப்புறம் படுத்தல் ஆகிய குறிகளிருப்பின் வயிற்றிலிருப்பது **ஆண் சிசு** எனவும் - மிக்க சோம்பல், இடது முலை அதிகம் விம்மல், அற்ப உணவில் அவா, கள்ளப்பசி, முகஒளிகுன்றல், அமருதல்-எழுதல்-வேலை செய்தலின் போது இடது கையையே ஊன்றுதல், இடதுபுறம் படுத்தல் ஆகிய குறிகளிருப்பின் வயிற்றிலிருப்பது **பெண் சிசு** எனவும் அறியலாம்.

## ★★ 23. மெய் - பொய் கர்ப்பத்தின் குறி என்ன?

உண்மையிலேயே **கருவுற்ற பெண்ணின்** உடல் பூரித்து, நாடி படபடத்து, கண்கள் மஞ்சள் நீல நிறமுறும். முலைகள் பருத்து காம்புகள் கருத்து, முடிச்சுகளுடன் காணும், வாநீரூறல், மயக்கம், காலையில் வாந்தி காணும். வயிறு படிப்படியாய் பெருகும். மூன்றாம் மாதத்திற்கு முன் வயிற்றில் பிண்டம் அசைவதில்லை. விரலினால் அடிவயிற்றை அழுத்தினால் கல் போலிருப்பதுடன், விரலை எடுத்ததும் பழைய நிலையை மெதுவாகவே அடையும்-ஆயின், வயிற்றில் **சூதகக் கட்டியிருப்பின்** ஆரம்பத்திலேயே வயிறு பெருத்துவிடும். முதல் மாதத்திலேயே வயிற்றில் சிசு புரளுவது போல் தோன்றும். விரலினால் வயிற்றை அழுத்தி எடுத்தவுடனேயே

பள்ளம் மறைந்து விடும். இதன் மூலம் **மெய்-பொய் கர்ப்பத்தை** அறியலாம்.

## ★★ 24. கர்ப்பிணிக்குரிய கோளாறுகள் யாவை?

ஒரு பெண் கருவுற்றிருப்பதை முறையே, சூதகம் நிற்றல், உடல் மசக்கை - மனச்சஞ்சலம் - முலை பருத்து, காம்பு கருத்து, முடிச்சுகளுடன், பாலும் கசிதல் - பிண்ட அசைவு - வயிறு பருத்தல் - சிசுவின் இருதயத்துடிப்புக் காணல் முதலிய குறிகளின் மூலம் அறியலாம். மேலும் கருப்பிணிக்கு, மலச்சிக்கல் - மூல நோய், வெள்ளையொழுகல், பல்வலி - படை-அரைப்புண்-அக்கி-தலைவலி - குரக்குவலி - நெஞ்செரிவு -இருதயப் படபடப்பு-சோர்வு-கை கால் வீக்கம்- தூக்கமின்மை -அசீரணபேதி-மிகுவாந்தி-நரம்புவலி-பொய்வலி-நீரடைப்பு - வாநீருறல் - வெகு மூத்திரம் - உட்சூடு - கருப்பசூலை போன்ற குறிகளும் தோன்றலாம். இவை தவிர, **சாதாரண கருப்பம் -அழிகருப்பம்-மூட கருப்பம்-லீநாக்கிய கருப்பம்** என்ற நால்வகைப் பிரிவினுள் அடங்கும்..., அடிவயிற்றுக் கருப்பம்- இரட்டைக் கருப்பம் - வெளிக் கருப்பம் - நாளக்கருப்பம் - ஊதுகருப்பம் உள்வெளிக்கருப்பம் - சவ்வுகருப்பம் - கோசக்கருப்பம் - அடுக்குக் கருப்பம் - நாததாரைக் கருப்பம் - நாதாசயக் கருப்பம் - அறியாக் கருப்பம் - நாதசண்டப்பை கருப்பம் - சண்டப்பை உதரகருப்பம் - பண்மைக் கருப்பம் என்ற பலவித கருப்பத்திற்குரிய கோளாறுகளும் ஏற்படலாம்.

## ★★ 25. கருச்சிதைவானதற்கு என்ன மருந்து?

கர்ப்பிணிக்கு கருச்சிதைவு ஏற்பட்டுவிட்டால், கருச்சிதைவு கண்ட மாதத்திற்கேற்ப கீழ்க்கண்ட மருந்துகளைக் கொடுக்க வேண்டும். அதாவது, கருச்சிதைவு 1. **முதலாவது மாதம்** ஏற்பட்டால் - அதிமதுரம், வாலுளுவை, தேவதாரு, க்ஷீரகாகோலீ; 2. **2-வது மாதம்** - கல்லுருவி, மஞ்சிட்டி, எள், சதாவரிக்கிழங்கு; 3. **3-வது மாதம்** - சீந்தில்கொடி, க்ஷீரகாகோலீ, ஞாழல், கருநெய்தல்; 4. **4-வது மாதம்** - அறுகு, நன்னாரி, ஓரிதழ் தாமரை, மதுரம், சிற்றரத்தை; 5. **5-வது மாதம்**-குமிழன், வெள்ளைக் கண்டங்கத்திரி, கண்டங்கத்திரி, பால் சொரியும் மரத்தின் மொட்டுப்பட்டை, நெய்; 6. **6-வது மாதம்** - சிறுமல்லி, சிற்றாமுட்டி, முருங்கை, நெரிஞ்சில், சிறுகுமிழன்; 7. **7-வது மாதம்** - சவுட்டுக் கோரைக்கிழங்கு, தாமரைக் கிழங்கு, திராக்ஷை, சிறுகோரைக்

கிழங்கு அதிமதுரம், சர்க்கரை; 8. **8-வது மாதம்** - வில்வம், விளா, கண்டங்கத்திரி, பேய்ப்புடல், கரும்பு, வெள்ளைக் கண்டங்கத்திரி; 9. **9-வது மாதம்** - நன்னாரி, அறுகு, க்ஷீரகாகோலீ, மதுரம்; 10. **10-வது மாதம்** - மதுரம், சுக்கு, தேவதாரு, க்ஷீரகாகோலீ ஆகிய மருந்துகளைக் கொடுக்க வேண்டும். இதில் முதல் 7 - மாத மருந்துகளின் சூரணத்தை பாலுடனும், கடைசி 3-மாத மருந்துகளை பாலிலிட்டுக் காய்ச்சி வடித்தும் உட்கொள்ளலாம். இதனால், கருச்சிதைவினாலான குற்றங்களைத் தடுக்கலாம்.

## ★★ 26. கர்ப்பிணிக்குரிய மருந்துகள் யாவை?

கருவுற்ற பெண்ணுக்கு முறையே 1. **துவாலை கண்டால்** அதி மதுரம், மந்திஷ்டிக் கிழங்கு, செங்கழுநீர்க் கிழங்கு, காட்டத்திப்பூ வகைக்கு காசெடை கூட்டி அரைத்து, பாலுடன் கலந்து சர்க்கரை சேர்த்து மூன்று தினம் அருந்தக் குணமாகும். **2. நீரடைப்பு கண்டால்**-பொரிகாரம்-2, சங்கம் வேர்ப்பட்டை, இலவங்கப்பத்திரி, மிளகு, முள்ளிக்கீரைவேர், சந்தனம், பொன்னாங்காணி வகைக்கு-1 விராகன் வீதம் கூட்டி காடியிலரைத்துக் கலந்து கொடுக்கத் திரும். **3. பிள்ளை பெறக் கடினமாயிருப்பின்**-சிவனார் வேம்பை முலைப்பாலிலரைத்து தொப்புளுக்குக் கீழே போடவும். **4. வயிற்றில் சிசு மரித்துவிட்டால்**-சங்கன் வேரும், இந்துப்பும் கூட்டியரைத்துக் காடித்தெளிவில் கொடுக்க பிண்டம் வெளியேறும் (பசுவின் வெண்ணெயை கர்ப்பிணியின் வயிற்றில் தடவ, அது உருகாவிடில் சிசு இறந்ததென அறியலாம்.) **5. நஞ்சுக் கொடி வெளியேறாவிடில்**-சீரகம், பழம் புளி, வட்டத்துத்தி வேர் இவை சமன் கூட்டிக் குடிநீரிட்டுக் கொடுக்கத் திரும். **6. பிரசவித்த பின் வயிறு பழுத்தால்**-சுக்கு, மிளகு, பூண்டு, வேலிப்பருத்தி வகைக்கு 20 விராகன் சிதைத்துக் குடிநீரிட்டு மூன்று நாள் கொடுக்கத் திரும்.

## ★ 27. கர்ப்பிணிக்குரிய பேதி மருந்து யாவை?

கருவுற்றவளுக்கு **கள்ளி - வாளம்** போன்ற வெப்பமூட்டும் கடுமையான பேதி மருந்துகளைக் கொடுக்கக் கூடாது. அவளுக்கு 1. வெருகடியளவு சிவதை வேர்ச் சூரணத்தை பால் அல்லது திராக்ஷைக் குடிநீரில் தரலாம். 2. கடுக்காய்த் தோடும், உலர்ந்த திராக்ஷையும் சமன்கூட்டிக் குடிநீரிட்டுத் தரலாம். 3. இரவு உணவுக்குப்பின் நெல்லியளவு சூரத்து நிலா வரை இலை

விழுதை சுடுநீருடன் கலந்து தரலாம். (இவற்றால் எளிய முறையில் தொல்லையின்றி பேதியாகும்.)

## ★ 28. கருவளர்க்கும் மருந்து முறை என்ன?

விளக்கெண்ணெய் - 1/4, ஆவின்பால் - 1/8, கழுதைப்பால் -1/8 அரிந்த வெங்காயம் 3/4 படி வீதமும்; கருஞ்சீரகம்-1 விராகனும்கூட்டிமெழுகு பதமாய்க் காய்ச்சி வடிக்கவும். இதில் கருப்பிணிகள் 5-7-9 மாதங்களில் காலை - மாலை 2-கழஞ்சு வீதம் 5-நாள் உட்கொண்டு மறுபத்தியம் 5 நாள் இருக்கவும். இதனால் கருவையழிக்கும் சூலை, கிரந்தி முதலிய பிணிகள் நீங்கி, குழந்தை ஆயுளுடன் பிறக்கும்.

## ★ 29. கருவழித்த கேட்டிற்கு மருந்து என்ன?

ஒரு பெண்ணின் கருவை அழித்தற்கென யோனியினுள் திரியை வைத்து வெந்துவிட்டால்; வயிறும் குடலும் கெட்டுப் புண்ணாகி, துர்நாற்றமுள்ள குருதிவெளிப்படும். முதுகுவளையும் 7நாளில் மரணம் நேரலாம். இதற்கு முறிவாக, அருகன்வேர் - 1, பொரிகாரம்-1/2, அதிமதுரம்-1/4 ஆகிய பங்குவீதம் பொடித்துக்கலந்து, வெண்ணெயில் கொடுக்கப்புண் ஆறிவிடும்.

## ★ 30. பிள்ளை-சவலை பாய்தல் என்றால் என்ன?

பொதுவாக, மாதாந்திரமுழுக்கான பெண்ணின் பார்வைக்குள்ளாகப்பட்ட குழந்தைக்குக் காணும் ஒரு வகை இளைப்பு நோயே **சவலைபாய்தல்** எனப்படும். மேலும் மாதமுழுக்கான பின் கருப்பத்தை நாடி குழந்தைகள் முகத்தில் விழித்து, அன்றிரவு கணவனைக்கூடி கருவுற்றால், அக்குழந்தை நாளுக்கு நாள் உடல் இளைத்து, பலவீனமுற்று, தோடக்குற்றம் பெருகி, மிகத்துன்பம் அடையும் - அதோடு, அக்கருப்பிணி குழந்தை பெற்றவுடன், தோடமுற்ற **சவலைப்பிள்ளை** இறந்துவிடுவதும் உண்டு. நிற்க, கைக்குழந்தையிருக்கும் பொழுதே, ஒருவள் கருப்பமுற்று, அச்சமயத்தில் கைக்குழந்தைக்கு பால் கொடுப்பதினாலும் - அல்லது கருவுற்றதால் பால் கொடுக்காது குழந்தையை ஏக்கமுறச் செய்வதாலும் - விபரமறியு முன்னே அடுத்த குழந்தையும் வந்து விடுவதால் அதனைக் கண்டு குழப்பமும், தன்னைக் கவனிக்கவில்லையே என்ற மன ஏக்கமும் **சவலைநோய்** ஏற்படக் கரணமாகும் (சவலைப்பருவம் என்பது ஒரு வயது வாய்ந்த காலமாகும்.) எனவே கண்டிப்பாக இரு

குழந்தைகளுக்கு இடையே 5-ஆண்டுகளாவது இடைவெளி இருத்தலே நலம் பயக்கும்.

## ★ 31. ஒழுங்கற்ற பிரசவம் என்றால் என்ன?

பொதுவான பிரசவக் குறிகளுடன். அதிகத் துன்பமின்றியும் - உரிய காலத்திலும் தாய்சேய் இருவருக்கும் ஆபத்தின்றியும்- உடனடிப் பின்விளைவின்றியும் மகப்பேற்றையடைவது **சுகப் பிரசவம்** எனவும், மற்றவை **ஒழுங்கற்றபிரசவம்** எனவும் கூறப்படும். அதாவது கைப்பிரயோகம் முதலிய செயல் களினாலும், ஆயுதங்களின் துணை கொண்டும் பிரசவிப்பது- குருதிப்பெருக்கு, வலிப்பு, அதிர்ச்சி, பயம் கவலை முதலிய வற்றால் சிக்கல் ஏற்படுவது-பிரசவவழியில் கட்டி கழலை ஏற்பட்டோ, அல்லது வழி சிறுத்தோ தடையுண்டாவது - குறிப்பிட்டதற்கு மேல் நாளான அல்லது மிக முன்னதான அல்லது பிரசவக்குறிகள் மிக நீடிப்பதுடன் குழந்தை வெளிவரவும் தாமதித்தல்-பனிக்குடம் விரைவில் உடைந்து விடுவதால் ஏற்படுவது - குழந்தை கருப்பையில் தாறுமாறாய் மாறுதலினால் ஏற்படும் சிரமம் - கருப்பையின் பலவீனத்தால் ஏற்படுவது என்று ஒழுங்கற்ற பிரசவம் பலவகைப்படும் இத்தகைய முரண்பாடான பிரசவத்தின்போர்து,..... மிகக் கவனமுடன் செயல்படவேண்டும்.

## ★ 32. கடினப் பிரசவம் என்றால் என்ன?

இயற்கையாகவும், உரிய காலத்திலும் பிரசவிக்காமல், பழக்க வழக்கத்திற்கு மாறாகவும், மிகச்சிரமப்பட்டும் பிள்ளை பெறுவதே **கடினப்பிரசவம்** ஆகும். அவை - **(1) நீடித்தது** - இது, சாதாரண எல்லையைத்தாண்டி, சலிப்படையுமளவில் தாமதித்து பிரசவிப்பதாகும். **(2) இரட்டைப்பிள்ளை** - இது, தொல்லை தருமளவில் இரு சிசு பிறப்பதாகும். **(3) செயற்கை முறை** - இது, இயந்திரம் முதலிய உதவியால் எளிதாக்கிய நிலையில் பிரசவிப்பதாகும். **(4) இரத்தப்பாடு** - இது, குருதிப்பெருக்கு முதலிய சிக்கலான நோய்களோடு பிரசவிப்பதாகும். **(5) பனிக்குடம்** - இது, பலவீனத்தால் முன்னதாகவே பனிக்குடம் உடைந்து நீர் வெளியேறுவதால் பிரசவிப்பதாகும். **(6) நிலைமாறுதல்** - இது, வயிற்றில் சிசுவானது இயற்கை நிலையிலின்றி மாறியுள்ளதால் தடுமாறி தவிக்கும் பிரசவமாகும். **(7) ஆயுதமுறை** - இது, ஆயுதங்களைப் பயன் படுத்தி பிரசவிக்கச் செய்வதாகும். **(8) அகாலப்பிரசவம்**

- இது, உரிய காலத்திற்கு மிக முன்னதாகவோ, மிகப் பின்னதாகவோ பிரசவிப்பதாகும். **(9) மரித்த பிண்டம்** இது, வயிற்றிலேயே சிசு மரித்து விட்ட ஆபத்தான நிலையில் பிரசவிக்கச் செய்வதாகும். **(10) அறுவைமுறை** - இது, பல காரணத்தால் யோனி வழியே பிரசவிக்க இயலாத நிலையில் தாயின் அடிவயிற்றைக் கீறித்திறந்து, சிசுவை வெளிக் கொணருவதாகும்.

## ★ 33. அக மரித்த கருப்பம் என்றால் என்ன?

ஒரு குழந்தை முழுமையடைந்து பிறப்பதற்கு முன்னரே தாயின் வயிற்றினுள்ளேயே இறந்து விடுவதே **அகம் மரித்த கரு** எனப்படும். இது பெரும்பாலும் கருவுற்றதிலிருந்து 3-மாதங்களுக்குள் ஏற்படும். இதனை **தெய்வச் செயல்** எனக் கொண்டாலும், வாதாதிக்குற்ற மீறல்களும் காரணமாகும். மேலும்-தாய்க்குரிய தீவிர மனக்கிளர்ச்சியினாலான இடையூறுகள்; குருதிச் சுழற்சியில் நச்சுத்தன்மை ஏற்படுதல்; மிக்க வீரியமுள்ள மருந்துகளையோ, கருவழிக்கும் மருந்துகளையோ ஏற்றல், கருப்பைக் குற்றம், கருவிற்கு ஏற்படும் பிணி, காலம் தவறிய மற்றும் பொருந்தாத உணவுகள், மேகநோய்த் தொடர்பு, கடும் பிணியின் தாக்கம், கடுமையான அதிர்ச்சியும்-அச்சமும், போதிய வளர்ச்சியற்ற கரு, கருப்பிணி கடைப்பிடிக்க வேண்டிய விதிகளை மீறல் போன்ற காரணங்களினாலும் **சிசு வயிற்றிலேயே மரிப்பதுண்டு.** இதனால், தாய்க்கு-அசவுகரிய உணர்வு, அரோசகம், சுவாச நாற்றம், மார்புத் தளர்ச்சி, அடிவயிறு கனத்தல், 'உடல் சில்லிடல், குளிர், இருபக்கமும் கனமாய்த் தோன்றல் போன்ற குறிகள் காணும்.

## ★ 34. அழிகருப்பம் என்றால் என்ன?

**அழிகரு** என்றால் வளர்ச்சியின்றியே **சிதைந்த பிண்டம்** எனலாம். அதாவது, சினை கருப்பைக்குள் வந்த சேருமுன்னரே அதன் தன்மையழிந்து கருத்திரளாமை, அல்லது, கருப்பையில் உறுப்புக்கள் திரளுமுன் இளங்கருவாயுள்ள போதே கரைந்து வெளியேறுவதை - **அழிகருப்பம்** எனப்படும். இது, வாதாதிக் குற்றங்களினாலும், முறை கேடான நடத்தைகளினாலும், கரு கரைந்தும், கரையாமலும் - கருவுற்றது முதல் 7-மாதம் வரை வெளியேறுவதுண்டு. ஆயின், சிலருக்கு கரு உண்டாகாமலேயே,

கருப்பையில் கட்டுண்ட குருதியானது, காரசார வெப்பமுடைய பொருட்களினால் கரைந்து வெளியேறுவதுண்டு. இதை பிண்டமெனக் கருதி, பேய் பிசாசு முதலிய தீய சக்திகளினால் அழிந்து வெளியேறுகிறது என அறியாமையால் கூறுவதுண்டு (அழி கருவைத் தடுக்க, கருவளர்ச்சித் தைலம் முதலியன உண்டு.

## ★ 35. அகால கருப்பம் என்றால் என்ன?

ஒரு பெண் ஏற்ற காலத்தில் உண்டாகாமல், உரிய காலத்திற்கு விரோதமாக முந்தியோ, பிந்தியோ கருவுறுவதே - **அகால கர்ப்பம்** எனப்படும். அதாவது, பெண்கள் பருவமடைந்து மாதவிடாய் தோன்றுவதற்கு முன்பும் - சுமார் 12 வயதுக்கு முன்பும் 50-வயதுக்குப் பின்பும் (சிலர் 9-வயதிலும், 70-வயதிலும் கூட கருவுற்றதாகக் கூறப்பட்டுள்ளது) - பிரசவமான 8-வாரத்திற்குள்ளும் உண்டாகும் கருப்பங்களாகும் சிலருக்கு 3-வருடம் வரை அசைவின்றியே உள்ளிருக்கும் சிசு மிக்க பிரயாசையோடு வெளி வருவதுண்டு. இதற்கு **மும்மாங்காய்** அல்லது லீநாக்கிய கர்ப்பம் எனப் பெயராகும் இங்ஙனமே, 5-முதல் 8-மாதத்திற்குள் சிசு வெளியேறுவது - சரிமாதம் ஆகுமுன் சிசு உயிருடனோ, மரித்தோ பிறப்பது ஆகியவற்றை **அகாலப் பிரசவம்** எனக் கூறப்படும்.

## ★ 36. உற்பாத பிண்டம் என்றால் என்ன?

அகோரமான உருவத்துடன் பிறக்கும் சிசுவே உறுப்பு மயக்கம் அல்லது **உற்பாத பிண்டம்** எனப்படும். இதனால் கெட்டவை நிகழுமெனக் கூறப்படும். இவ்வகை சிசுக்கள் இரண்டு உருவமாக, இடுப்பு அல்லது வேறு இடத்தில் ஒட்டிக் கொண்டு (ஒட்டுப்பிண்டம்) பிறப்பது - இரண்டும் முழுமையின்றிப் பொருந்தியும், தனியாக நிலைத்து வாழப் பக்குவமின்றியும் பிறப்பது - ஒரே உடலும், கீழுறுப்புகள் இரட்டையாயும் அமைவது - ஏதாவது ஒரு அங்கம் அளவு மீறி பருத்திருப்பது - சில உறுப்புகள் இல்லாமலேயே பிறப்பது - இயல்பாக அமைந்த உறுப்புகளுக்கு மேற்பட்ட அமைப்பு வாய்ந்தது - மூன்றுருவாய்ப் பிறப்பது - கருவினின்று வெளிவராமலேயே கர்ப்பக்கழலையாக மாறும் பிண்டம் எனப்பலவகைப்படும். இவற்றுக்கு நாத விந்துக்களின் வாதாதிக் குற்றங்களும் - முறை கேடான புணர்ச்சியும் - முன்வினைப் பயனும் காரணமாகும்.

### ★★ 37. ஆண் பெண் மலட்டுக்கு காரணம் என்ன?

ஆண் - பெண்ணின், சுக்கில -சுரோணிதங்களில் ஏற்படும் முக்குற்றக் கேடுகளாலும், முன்சென்ம பாவங்களாலும் ஏற்படும் நோயே - **மலட்டுத்தன்மை** ஆகும். இது **ஆண்மலடு - பெண்மலடு** என இரு வகைப்படும் **(1) ஆண்மலட்டுக்குக் காரணம்** - விந்துவில் உயிரணுவின்மை - பிறவிக்கோளாறான குறியமைப்பு - பெண்குறிக்கு சமமில்லாத ஆண்குறியின் கட்டமைப்பு - விந்து அல்லது உயிரணுவின் கழிவின்மை - விந்து யோனியினுள் செல்லவியலாதபடியான சிறுநீர்க் குழாயமைப்பு - குறி போதிய எழுச்சியின்மை போன்ற குறைகள் - சிறிய குறியுடன் போதிய அளவு விந்து வெளியேறாமை - பிறவியில் ஏற்பட்ட கிரகக்கோளாறுகள் முதலியனவாகும். **(2) பெண் மலட்டுக்குக் காரணம்** - கருப்பை திறக்கும் போது ஊசி முனை போன்ற சிறிய வழியே காணுதல் - நாதத்தில் சூல் அணுவின்மை - பிறவிக்கோளாறான கருப்பையின் அமைப்பு, அல்லது சூல்ப்பையின்மை - சூல் அணு அல்லது யோனி வழியின்மை - கருக்குழாய்களின் சீர்கேடு - கருப்பையின் மாறுபட்ட நிலை-கருப்பையின் குறுகிய பகுதியின் வாய் இறுகிப் போயிருத்தல் - மாதவிடாய்க் கோளாறுகள் - பிறவியில் ஏற்பட்ட கிரகக் கோளாறுகள் முதலியனவாகும். இவற்றோடு, இருபாலரின் குறிகளின் நீளம், பருமன் - ஆழம், விரிவு - பொருத்தம், முறண்பாடு - பொதுவான அமைப்பு - பிறவித்தோற்றம் போன்ற காரணங்களையும் கவனத்தில் கொள்ள வேண்டும். (மலடில் பிறவிக் கோளாறு தவிர மற்றவை மருந்தினால் தீரும்)

### ★ 38. ஐவகை மலடுகள் யாவை?

மகப்பேறின்மையே **மலடு** எனப்படும். இது, குறிப்பாக ஐவகைப்படும். அவை - **(1) ஆதிமலடு** (சன்ம மலடு) - இதில், வயிற்றில் மூன்று மடிப்புகள் விழுந்து, இடுப்பு பருத்து, உடல் கொழுத்து அதி தூலமாயிருக்கும். **(2) காக மலடு** - இதில், முதல் இரண்டு பிள்ளைகளைப் பெற்ற பின் கருத்தரிக்காது. **(3) கதலிமலடு** - இதில், வாழை ஒரே முறை குலை தள்ளுவதுபோல், ஒரு பிள்ளை பெற்ற பிறகு கரு ஏற்படாது. **(4) கருப்பமலடு** - இதில், கருவுறும் சிசு வயிற்றிலேயே செத்துச் செத்துப்போகும். **(5) ஆண்மலடு** - இதில் விந்து உயிர்ப்பற்றிருப்பதால், பெண் மலடாவர்.

இங்ஙனமே, பெண்களுக்குக் காணும் ஐவகை **மலட்டு நோய்களாவன;** வாயுமலடு - புழுமலடு - சீழ்மலடு - இரத்த மலடு - சதை மலடு ஆகியனவாகும். இவை கருப்பையின் குற்றத்தினால் ஏற்படுவதாகும். (இவை சிகிச்சைக்கு வசப்படும்)

## ★ 39. அகால சூதகம் என்றால் என்ன?

இயற்கை நியதிக்கு மாறாக, உரிய காலத்திலல்லாது ஏற்படும் மகளிரின் முதற் பூப்பு; அல்லது தொடர் மாதவிடாயில் ஏற்படும் மாற்றமே- **அகால சூதகம்** எனப்படும். சாதாரணமாக 12-முதல் 40-வயது வரையுள்ள பெண்களுக்கு 28-நாளைக்கொரு முறை யோனி வழியே குருதி வெளிப்படும். இது, கருக் கொள்ளும் தகுதியைக் குறிப்பதாகும். சரியான வயதில் ருது வெய்தாமல், உழைப்பின்மை, பிணி, பைசாசம், கருப்பைக் கோளாறுகள் முதலியவற்றால் நீண்ட நாள் கழித்தும் பக்குவமடைவதுண்டு. சிலர் 9-10 வயதில் பருவமுற்றாலும் அவர்கள் சரியான வளர்ச்சி அடைந்ததாகக் கூறலாகாது. சிலர் பூப்படையுமுன்பே பருவமடைந்து விடுவதுண்டு. பொதுவாக, பாரம்பரியம், சொந்தபந்தம், உணவு, வசதி, உழைப்பு, வறுமை, வாழுமிடம், வெப்பதட்பம் போன்றவற்றுக் கேற்ப 10 முதல் 20 வயது வரை பெண்கள் பருவமடைவதுண்டு. சிலருக்கு, கருத்தரித்தும் மாதசோணிதம் வெளிப்பட்டு வருவதை **தங்குபிண்டம்** அல்லது **சுப்தி பிண்டம்** எனப்படும். சிலருக்கு கருவுற்ற சமயமல்லாது, மற்ற காலத்தில் சூதகம் வராது. சிலருக்கு 23-வயதில் தொடங்கி சில ஆண்டுகளில் முற்றாக நின்று விடுவதும் - சிலருக்கு 77 வயது வரை தீட்டுக் காண்பதுமுண்டு. சுமார் 3 வயதுக் குழந்தைக்கு தொடர் மாதவிலக்கு ஏற்பட்டதாயும்; 5 வயது குழந்தைக்கு 6-வாரத்திற்கொரு முறை கண்டதோடு 13-வயதிற்குரிய பாலுணர்வு ஏற்பட்டதாயும் கூடப் பல அரிய செய்திகளும் உண்டு. இவையெல்லாம் **அகால சூதகம்** எனப்படும்.

## ★ 40. பிரசவத்திற்குரிய முற்குறிகள் யாவை?

ஒரு நிறைகருப்பிணிக்கு திடீரெனக் காணும் சில குறிகளிலிருந்து **இன்றோ, நாளையோ** பிரசவம் ஆகிவிடும் என அறிந்து கொள்ளலாம். அதாவது, உடல் வாடி, அசதியுறும், கண்களும் வயிறும் தளரும். அடிவயிற்றில் பாரம் அதிகரிக்கும். அரோசகமும், வாநீரூறலும் காணும், மூத்திரம் அதிகரிக்கும். துடைகள், தொடையிடுக்கு, இடுப்பு, ஆசனம், இருதயம்,

சிறுநீர்ப்பை, வயிறு இவற்றில் வேதனை காணும், அடுத்து யோனி விரிந்து, குத்தல்வலியெடுத்து அதனின்று சில திரவமும் கசியத் தொடங்கும். தொடர்ந்து பிரசவத்திற்குரிய இயல்பான வேதனையுடன், கருப்பை நீரின் கசிவும் காணும். இக்குறிகளின் மூலம் பிரசவநேரம் நெருங்குவதை உணர்ந்து, உடன் சுடுநீரில் குளிப்பாட்டி மங்கலச் சடங்குகள் செய்வித்து, நெய் கலந்த திரவ உணவு வகைகளைப் பருகச் செய்யவேண்டும்.

## ★ 41. பிரசவத்தில் பாதுகாப்பு என்ன?

**பிரசவத்தின் போது** முதலில் சிசுவின் தலை வெளிப்படு முன்பே **பனிக்குடம்** என்ற ஒருவித நீர்ப்பை கிழிந்து அதிலிருந்து நீர் தள்ளிக்கொண்டு வருவதால் கருப்பையின் வாய் தேவையான அளவு திறக்கப்பட்டு விடும். மேலும், சிசுவின் தலைமயிர் யோனி வழியை நாரினால் துடைப்பது போல் நன்கு துடைத்துக்கொண்டே வருகிறது. எனவே பனிக்குட நீரினாலும் - **புருஷ் போன்ற தலைமயிரினாலும்** யோனி வழி இருமுறை சுத்தமாகிறது. சிசுவெளியேறியபின் மிகுந்த பனிக்குட நீரும் அதிகமாக வெளிப்பட்டு யோனியைக் கழுவுவதுடன் - மிருதுவான நச்சுக் கொடியும் முறுக்கிக் கொண்டு யோனி வழியை சுத்தம் செய்தே வெளியேறுகிறது. மேலும், கருப்பையின் உட்புறமிருந்து ஒருவித ஊனீரும், குருதியும் கலந்த நீர் சுமார் மூன்று வாரம் வரை கசிந்து உள்ளுறுப்புகளைச் சுத்தமாக வைக்கிறது. இவையாவும் பிரசவத்திற்குரிய இயற்கைப் பாதுகாப்பு ஆகும்.

## ★ 42. பெண்களின் பருவங்கள் யாவை?

பெண்களின் வயதிற்கேற்ப பிரித்துக் கூறப்படுவதே - **பருவங்கள்** எனப்படும். அவை *1)* ***ஆரியரின் கூற்றுப் படி*** - ருதுவடைவதற்கு முன்னர் - ***வாலை (1-16);*** பருவமுற்றபின் ***தருணி (17-30);*** நடுத்தர வயதில் - ***பிரவிடை (31-50);*** முதுமையில் - ***விருத்தை (51-முதல்)*** ஆகிய 4-பருவங்களாகக் கொள்ளப்படும். ***2) தமிழரின் கொள்கைப்படி*** -பிறந்தது முதல் 5- வயது வரை - ***பிள்ளை;*** 5-முதல் 7-வயது வரை - ***பேதை;*** 7-முதல் 11-வயது வரை - ***பெதும்பை;*** 11-முதல் 12-வயது வரை - ***மங்கை;*** 12 முதல் 19 வயது வரை - ***மடந்தை;*** 19 முதல் 25 வயது வரை - ***அரிவை;*** 25 முதல் 31 வயது வரை - ***தெரிவை;*** 31 முதல் 42 வயது வரை - ***பேரிளம் பெண்;*** 42 வயதுக்கு மேல் இறுதி வரை - ***முதுமை***

ஆகிய பருவங்களாகக் கூறப்படும். மேலும், **பெண்கள் பிறந்த நட்சத்திரத்திற்கேற்ப** - தெய்வ, முனி, நாக, காந்தர்வ, பூத, இயக்கி, அரக்கி, பைசாசம் ஆகிய தத்துவங்களையுடைய குணங்களுடன் திகழுவர்.

### ★ 43. கூடா மகளிர் என்பவர் யாவர்?

**கூடாமகளிர்** என்றால் உடலுறவு கொள்ளத்தகாத பெண்கள் எனப்படும். இவர்களைப் புணருவதால் பல்பிணிகள், அல்லது முறைகேடான உறவால் விளையும் பாவத்தினால் தீவினைக் கருமங்கள் உண்டாகும். அத்தகையோர்-அலிப்பெண், அடங்காப்பிடாரி, அங்கவீனப்பெண், இருசி (சூதகம் நின்றவள்), இரத்தக் கலப்புள்ள மகள்:- சகோதரி முதலானோர், கற்புள்ளவள், கருவுள்ளவள், கருப்பக் கோளாறுடையவள், காமமுறாப்பெண், காதல் கொள்ளாதவள், கைம்பெண், குருபத்தினி, சந்நியாசம் கொண்டவள், சுத்தமில்லாதவள், நிறை கருப்பிணி, நோயுற்றவள், நோயால் மிக மெலிந்தவள், பத்மினி (உத்தம) சாதிப் பெண், மலடி, மதம்கொண்டவள், மாத விடாயுற்றவள், மூப்படைந்தவள், மேகநோயுற்றவள், வயதில் மூத்தவள், வெறுப்புற்றவள், வேசிப்பெண் போன்றவர்களாகும்.

### ★ 44. கிரகதோடம் பீடிப்பது ஏன்?

பொதுவாக, எண்ணற்ற நட்சத்திரங்களுள் ஆபத்தானவை பல இருப்பினும் - இங்கு, **நவக்கிரகங்களின்** கோளாறால் ஏற்படும் தீயவிளைவு அல்லது பிணிகளை **கிரகதோடம்** எனப்படும். ஒருவனது மனம் - மெய்-செயல் ஆகியன தவறாகச் செல்லுகையில், அவன் தலையெழுத்து அல்லது ஊழ்வினைக் கேற்பவும் - கிரகங்களின் புனிதத் தன்மையைப் பாதுகாக்கும் பொருட்டும் - கிரகங்களின் சார்பாக அலைந்து திரியும் துர்தேவதைகள் தனது வலிமையினால் அவனுக்களிக்கும் கொடிய, தீய தண்டனைகளே கிரக தோடமாகும். இங்ஙனமே, பெரிய அளவிலான மதச்சடங்கு, திரு விழாக்களில் கூட கிரகங்களுக்குரிய வழிபாட்டினை ஒட்டு மொத்தமாகவும். மிகச்சிறிய அளவிலும் செய்வதோடன்றி, மற்ற சமயங்களில் அவற்றை வணங்குவதேயில்லை. இதனால் சினமுறும் கிரகங்கள், அத்தகையோருக்கு தன்பால் கவனமும், வணக்கமும் ஏற்படுத்த வேண்டியும், மேற்கூறியவாறு கோறாறுகளை ஏற்படுத்தி, அதனால் தனக்குரிய தனியான சிறப்பு வழிபாட்டினை பெற்றுக் கொள்வதுண்டு. இதனாலான தீமை அல்லது பிணிகளினின்று

தன்னைப் பாதுகாத்துக் கொள்ள **கிரக சாந்தி** செய்வது மனித இயல்பாகும். இத்தகைய செயல்பாடுகளுக்கு உட்படுத்துவதே கிரகதோடத்தின் வலிமையாகும்.

### ★ 45. பாலக்கிரக தோடம் என்றால் என்ன?

**பாலக்கிரக தோடம்** என்றால் குழந்தைகள் முலைப்பால் குடிக்கும் காலத்திலும், பிறகும் கூட தாய் கிரமப்படி நடவாமையால் - கிரகங்களின் ஏவலினால் பேய், பூதங்கள் குழந்தைகளைத் தாக்குவதால் - ஏற்படும் கடின அல்லது அசாத்திய நோய்களாகும். இவ்வகைப்பிணிகள். அந்தந்த தேவதைகளின் ஏவலின் படி பின் வருவனவற்றால் பீடிக்கும். குழந்தை பிறந்தது முதல் ஒரு ஆண்டு வரை - **மோகநாங்கி;** 2-வருடம் வரை - **நிலகண்டி;** 3. ஆண்டுவரை - **விரோதகன்னி** 4. வயதுவரை-**பைரவி;** 5. வயதுவரை-**ஆகாசசின்னு;** 6-வருடம் வரை - **வைத்திரிகன்னி** ஆகிய தேவதைகள் பிடிக்கும். இவற்றின் தன்மைக்கேற்ப நோயின் குறிகுணங்களும், தன்மையும் அமையும். சில நூலின்படி **கிரகதோடங்களை** முறையே - நந்தம், விசாரம், மேஷம், சுவானம், பிதுர், சகுனி, பூதனா, சீத பூதனா, அதிர்ஷ்பூதனா, முகமண்டலிகா, ரேவதி, சுட்கரேவதி என 12-விதமாகக் கூறப்படும் கிரக தோடப் பிணிகளுக்கு அதனதற்குரிய **மருத்துவத்தோடு – கிரக சாந்தி வழி முறைகளையும்** மேற்கொள்வது அவசியமாகும்.

### ★★ 46. குழந்தைப்பிணிகள் என்பன யாவை?

பொதுவாக, **சிசு பிறந்தது முதல் குழந்தைப் பருவம் முடிய** உள், வெளிக் காரணங்களால் வரும் நோய்கள் பலவாகும். அவை-அக்கரம் பொங்கல், அடித்தள்ளல், அம்மை, அக்கி, அன்னம் வெடிப்பு, இளம்பிள்ளைவாதம், உள்வலி, கணம், கண் பொங்கல், கரப்பான், கக்குவான், கிரந்தி, கிரகதோடம், குழ்ந்தைவலிப்பு (தெற்கத்திக்கணை), குழந்தை சன்னி, குழிதோடம், சலதோடம், சவளைபோதல், சுரம், சோகை, நரிமிரட்டல், நாபிரணம், நாக்குமுடிச்சு (நாவு எழாமை), பட்சிதோடம், பல் முளைத்தல், மாந்தம், மூத்திரக்குண்டி, மூத்திரவெரிப்பு, வயிற்றுப்பூச்சி, வீரிடல் முதலியனவாகும்.

### ★ 47. சப்தசந்தான தருமம் யாவை?

ஒருவருக்கு மகப்பேறு கிட்டாமைக்கு உடல்

பொருத்தமின்மை, நோய் இவை தவிர -மனிதர் செய்யும் சில பாவச்செயல்களும் காரணமாகும் என்பதால், அதற்கு **பிராயச்சித்தமாக** தானதருமங்கள் செய்ய வேண்டும் எனக் கூறப்படும். கன்மகாண்டம் மற்றும் சோதிடநூலின்படி - முற்பிறப்பில் செய்த பாவத்திற்கு நட்டஈடாக, பரிகாரம் செய்வது மட்டும் பேதாது எனவும் - நற்கதியடைய வேண்டி பொது நலப்பணிகளுக்கு உதவவும் வேண்டும் எனவும் கூறப்படும். அப்படிக் கூறியுள்ள **சந்தான தருமங்கள்** ஏழுவகைப்படும் அவை; தரும கைங்கரியங்கள் - மத வழிபாட்டு உதவிகள் - ஆலயம் கட்டல் அல்லது திருப்பணி உதவிகள் - ஏழைகளுக்கு அன்னம் வழங்குதல் - ஏரி குளங்களை செப்பனிடல் - பொதுக்கிணறு, குளம் வெட்டல் - நல்ல நூற்களை இயற்றுதல் அல்லது வெளியிடல் ஆகியனவாகும். இவ்வகை நற்பணிகளால் குழந்தை பிறக்கத்தடையாயுள்ள பாவம் நீங்கி மகப்பேறு கிட்டும் எனக் கூறப்பட்டுள்ளது.

### ★ 48. கடிஸ்நானம் என்றால் என்ன?

ஒரு பாத்திரத்தில் நோயாளியை அமரச்செய்து இடுப்பு வரை மட்டும் தண்ணீரில் மூழ்குமாறு செய்தலே **இடுப்புக் குளியல்** எனப்படும் **கடிஸ்நானம்** ஆகும். சுடுநீருடன் கடுகையும் சேர்த்துக் குளிக்க, பெண்களின் சூதகக் கட்டு உடைந்து வெளியேறும். பெண்களின் இதர இடுப்பு நோய்களும் நீங்கும். கொதிநீரில் தில்லைமர இலைகளையிட்டு ஆறியபின் இளஞ்சூட்டில், இளம்பிள்ளை வாதத்தால் பீடிக்கப்பட்ட குழந்தைகளை அமரச் செய்து, கைகால்களை உருவி விடப் பயனுண்டு. பொதுவாக இக்குளியல், நோயாளிகளுக்கு சில சமயம் நற்பலன் தரும். தினமும், குளிர்ந்த அல்லது இளம் சூடான நீரில் அமர்ந்து குளிப்பது பெண்களுக்கு நல்ல ஆரோக்கியமூட்டும். ஆனால் மாதவிடாய்க் காலங்களில் கூடாது. கிராமப் புறங்களில் குளம், குட்டைகளில் அமர்ந்து குளிப்போருக்கு மூலக்கொதிப்புப் பிணிகள் அதிகம் தாக்குவதில்லை.

### ★ 49. வஸ்தி கருமம் என்றால் என்ன?

ஆண்களுக்கு ஆசனம் வழியாகவும்; பெண்களுக்கு குதம், யோனி வழியாகவும் **பீச்சுக்குழலின்** மூலம் கியாழம், தைலம், சுடுநீர், மருந்து ஊறிய நீர் முதலியவற்றை உட்செலுத்தி குடலைக்கழுவவும், கருப்பையைச் சுத்தம் செய்யவும் -

விரணங்களை ஆற்றவும் செய்யும் முறையே வஸ்திகருமம் எனப்படும். இதனால் நோயின் வலிமை குன்றி சாந்தமடைவதோடு, முக்குற்ற மீறல்களும் தன்னிலையுறுவதால் முதுகு, இடுப்பு, அடிவயிறு முதலிய பகுதிகளின் நோவு தணியும் - கடும் மலக்கட்டு உடைந்து வெளியேறும். தொடர்ந்த, முறையான வஸ்தியினால்-மேனியழகு, உடல்வலு, நோய் எதிர்ப்பு சக்தி, நீண்ட ஆயுள் இவை விளையும். வஸ்தியினால் - சுரம், சலதோடம், வயிற்றுக்கடுப்பு, குடல்வாதம், செரியாமை, வயிறு பொருமல், இரைச்சல், சூதகக்கட்டி, கருச்சிதைவு, சிறுநீரகத் தாபிதம் போன்றவை தீரும். வஸ்தியினால் வேறுதுன்பமோ, அசவுகரியமோ இல்லாது - அமைதியாகவும், பத்தியமின்றியும் - ஒரே தடவையில் பல பலன்களையும் பெறலாம்.

## ★ 50. அங்கவிலக்கணம் என்றால் என்ன?

ஈசனால் உமையவளுக்கும், பின் அகத்தியரால் இவ்வுலகினர்க்கும் எடுத்தோதப்பெற்ற **அங்கவிலக்கணம்** (சாமுத்திரிகா இலட்சணம்) என்பது-மானிடரனைவரும் பிறவியிலேயே தத்தமது சகல உடலுறுப்புகளின் நீள அகலம், நிறம், மச்சம், ரேகை போன்ற பலவிதத்தோற்ற அமைப்புகளின் தன்மைகளுக்கேற்ற பலாபலன்களையே அடைவதாகக்கூறி விளக்கப்படுவதேயாகும். பொதுவாக மனிதர்கட்குரிய பல இலட்சணங்களிலும் முக்கியமானவை-32 எனவும்; அவற்றுள் முறையே 1. கண், கை, மூக்கு, கதுப்பு, முழங்கால், இவை-5ம் நீண்டும், 2. பல், விரல், நகம், தோல், மயிர் இவை-5ம் மிருதுவாயும், 3. மார்பு, வயிறு, நெற்றி, அக்குள், தோள்கள், புறங்கை இவை-6ம் உயர்ந்தும், 4. கடைக்கண், உதடு, உள்ளங்கை, உள்ளங்கால், நகம், வாய், ஆண்குறி இவை-7ம் சிவந்தும் 5. கழுத்து, முழுங்காலின் கீழ், ஆண்குறி இவை-3ம் குறுகியும் 6 உந்தி, நடுமார்பு, நெற்றியின் கீழ்ப்பாதி இவை-3ம் தாழ்ந்தும் இருக்க வேண்டும் எனப்படும். இவையனைத்தும் அப்பழுக்கின்றி அமையப்பெற்றவன் சகல நலன்களும் பெற்ற 'தலைவனாக' விளங்குவான் என்றும்-மற்ற மாறுபட்ட அமைப்புகளுடன் கூடியவன் அதனதற்குரியதான அளவில் வாழ்வில் ஏற்ற தாழ்வு, வலிமை, அறிவு, பிணி, மூடத்தனம் போன்றவற்றையும் அடைவான் எனக்கூறப்படும்.

## ★ 51. மூவகை உடலும்-மருத்துவமும் யாவை?

உடல்கள் தூல - சூக்கும - காரண உடல் என மூவகைப்படும். இதில் -

**1. தூல உடல்** என்பது ஏழுதாதுக்களினாலான பிண்டதத்துவ நிலையிலுள்ளதாகும். இதற்கு சுரம், நீர்க்கோவை, வலி, கடுப்பு, சிரங்கு, அடி-குத்து-வெட்டுக்காயம், வெப்பதட்ப மாறுதலினாலான கேடு, பசி, தாகம் ஆகிய உடற்பிணிகள் காணும். இதற்கு தாவர சரக்குகளினாலான சூரணம், மாத்திரை, லேகியம், தைலம், குடிநீர், மணப்பாகு, கருக்கு முதலியவற்றால் **அப்புவின்** துணைகொண்டு உடலில் கலக்கச்செய்து பிணிகளை நீக்க வேண்டும்.

**2. சூட்சம உடல்** என்பது தசவாயு - தசநாடியினாலான சாராசர தத்துவ நிலையிலுள்ளதாகும். இதற்கு, சன்னி, சயம், குட்டம், நீரிழிவு, வாதம், குன்மம் ஆகிய உயிர்ப்பிணிகள் காணும். இதற்கு இரசபாடாண உலோகங்களினாலான பற்பம், செந்தூரம், சுண்ணம் முதலியவற்றால் **தேயுவின்** துணை கொண்டு, வாயு நாடிகளைச் சம்பந்தப் படுத்தி பெருநாடி நரம்பு மூலம் உடலில் பரப்பி பிணிகளை நீக்க வேண்டும்.

**3. காரண உடல்** என்பது பஞ்சபூதங்களினாலான அண்ட தத்துவ நிலையிலுள்ளதாகும். இதற்கு நரை, திரை, மூப்பு, பயம், சாக்காடு ஆகிய பிறவி நோய்கள் காணும். இதற்கு, சித்துவின் தன்மையினாலான இரசகல்பம், மூலிகைகல்பம் முதலியவற்றால் நரை, திரை, மூப்பை நீக்கியும்; ஆசனத்தினால் **பிராணவாயுவின்** துணைகொண்டு பயம், சாக்காடு இவற்றை வெல்லவும் வேண்டும்.

## ★ 52. ஐவகை உடல்கள் என்பன யாவை?

பஞ்ச பூதங்களின் அடிப்படையினாலான நமது உடலை ஐவகையாகக் கூறப்படும். அவை *1)* **இருள் தேகம்** (தூலவுடல்) - இது, தாதுக்கள் முதலிய கட்டமைப்பினால் ஆனது. *2)* **மருள் தேகம்** (மோகவுடல்) - இது, மாயையின் தொடர்பால், தன்னையறியாமலேயே அகங்காரம் கொண்டு, பகுத்தறிவை இழந்து, கர்வமும்-சுயபெருமையும் - முரட்டுத் தனமும் கொள்வதாகும். *3)* **சுத்த தேகம்** (தூயவுடல்)- இது, கருவி கரணாதிகள் - உணர்வுகள் ஒழிந்து, அறிவு தானே விளங்கி, காணும் பொருள் யாவும் அருள் வடிவாய் நிற்பதாகும். *4)* **பிரணவதேகம்** (மாயவுடல்) - இது, உடல் பார்வைக்குத் தோன்றினும், நிழலின் சாயை இருக்காது. கையில் தொட புலப்படாது. *5)* **ஞானதேகம்** (அறிவு உடல்) - இது, காயகல்பத்தினாலானது. கண்ணுக்குத் தோன்றாது, அறிவுக்குப்

புலப்படும். இது மிக மேலானதாகும். (ஐம்பெரும் பூதங்களால் இயங்குவதால் - சாதாரண உடலையும் **ஐவகைத்தேகம்** எனக் கூறுவதுண்டு)

## ★ 53. கருவின் போக்கு என்றால் என்ன?

தாயின் வயிற்றில் கரு தோன்றிய நாள் முதல் சொற்ப நிலையிலிருந்து மென் மேலும் விருத்தியாகி; பிறகு படிப்படியாய் இறக்கமடைந்து கதியை அடைவதே - **கருவின் போக்கு** எனப்படும். அதாவது, மனிதனுடைய வயது 100 - எனக் கொண்டால், அதில் - பிறந்தது முதல் 30 - வயது வரை வளரும் பருவமாகும்..அதன் பின் உடல் ஒளி குன்றும்; 40-வயதில் அழகு போகும்; 50-ல் பிருதிவியில் அப்பு மேவுவதால் மயிர் வெளுத்து , உடல் தளரும்; 60ல் பிருதிவியில் அப்பு கலப்பதால் கண்ணொளி மங்கி, நடைகுன்றும்; 70-ல் தேயு உண்டாவதால் தாது உலர்ந்து, அறிவு குன்றும்; 80-ல் வாயு வெளியிற் பாய்ந்து. மூச்சு மேல் நோக்கும்; 90-ல் ஆகாயத்தினால் சிவனோடு ஐம்புலன்களும் வசமாகிப் பொருந்திக் கொள்ளும், இந்திரியம் அற்றுப் போகும்; 100-வயதில் மரணம் உண்டாகும். (இதில், வயது நீடிக்காதவர்களுக்கு 20-உடைய 3- பிரிவாக்கிக் கொண்டு, அதற்கேற்ப மேற்படி ஒவ்வொன்றுக்கும் 10- ஆண்டுகளைக் கழித்து விட்டுக் கணக்கிடவும்.)

## ★ 54. மனிதனுக்கு வயது எத்தனை?

மனிதனுக்கு, கிரமப்படி **வாதத்தில்-30, பித்தத்தில்-33 கபத்தில்-37** ஆக மொத்தம் **100-வயதாகும்.** இந்த நூறு வயதில், 30-க்குள் உடல் வளர்ந்து பின் முக ஒளி குன்றும்; 40 -க்கு மேல் தேஜஸ்கெடும், 50க்கு மேல் உடல் தளர்ந்து மயிர் நரைக்கும்; 60க்கு மேல் கண்ணொளி குன்றி, நடக்கையில் திகருண்டாகும்; 70-க்குமேல் அறிவு குன்றும்; 80-க்கு மேல் நோக்கு வெளியில் பாயும்; 90-க்கு மேல் பொறிபுலன் ஒடுங்கி, இந்திரியம் அற்று 100-ல் மரணம் உண்டாகும். (ஆயின், நல்வினையால் ஆயுள் பெருக்கமும், தீவினையால் ஆயுள் சுருக்கமும் ஏற்படும்)

## ★★ 55. சரம் என்றால் என்ன?

**சரம் என்பது பிராணவாயுவின் இயக்கமாகும்.** அது, மூக்கில் இரு தொளைகளின் வழியாக உள் நுழைதலும் -

வெளிச் செல்லுதலுமாயிருக்கும். மூக்கின் இடது தொளை **இடகலை** என்றும், வலது தொளை **பிங்கலை** என்றும் கூறப்படும். மூச்சு இவ்விரு தொளையிலும் ஒரே சமயம் நுழைந்து-வெளியேறாமல், ஒவ்வொன்றிலும் 5 நாழிகை வீதமே நடக்கும். அதுவும், **திங்கள்-புதன்-வெள்ளிக்கிழமைகளில்** இடது பக்கத் தொளையில் காலை 4-மணியில் தொடங்கி ஐந்தைந்து நாழிகைகளாக ஒவ்வொரு மூக்குத்தொளையாக மாறிமாறி நடக்கும். **சனி-ஞாயிறு-செவ்வாய்க் கிழமைகளில்** காலை 4-மணியில் வலது பக்கத்தொளையில் தொடங்கி ஐந்தைந்து நாழிகைகளாக ஒவ்வொரு மூக்குத் தொளையாக மாறி மாறி நடக்கும். இங்ஙனமே, **வியாழக் கிழமையில்** வளர்பிறையில் இடது தொளையிலும்-தேய்பிறையில் வலது தொளையிலும் மாறி மாறி நடக்கும். (சரத்தின் வகையினை ஆய்ந்து அதன் வழி சென்று, சரத்தை ஏற்றி - இறக்கி - மாற்றிப் பயன் படுத்தும் யோகிக்கு ஆயுள் நீடிப்பும், வெளியிற் பாய்ந்து செல்லுதலும் கைகூடும்)

## ★ 56. முத்தோட உடலினரின் பண்புகள் யாவை?

உடல்கள், வாத - பித்த - கப - வாதபித்த - வாதகப - பித்தவாத - பித்தகப - கபபித்த - கபவாத உடல்கள் எனப் பலவகைப்படும். இவற்றுள் முறையே.

1. **வாத உடல்** பருத்து, குளிர்ந்து அசதியுடன், கருமை நிறமாயிருக்கும். மந்தபுத்தி - அசட்டை - அற்ப பெண்ணிச்சை மிதமான நாடியுடன், மிக்க காரத்தை நாடுவர். வெற்றியும் புகழும் பெற பொய்யுரைப்பர்.

2. **பித்த உடல்** மெலிந்து, சூடாக, வெண்பசுமை நிறமுடனிருக்கும். இளநரை, அற்பவுண்டி, அதிகப் பெண்ணிச்சை, விரைவு நாடி, கடைக்கண் சிவப்பு, அதிகப் புளிப்பு நாடல் இவற்றுடன்; பெரியோரை இனிமையாக உபசரித்தலும், திடமும் கடினமுமான செயல் புரிதலும், மெய் பொய்யறிய பன்னூலாய்தலும் கொள்வர்.

3. **சிலேத்தும உடல்** தணிந்து, வியர்வையுடன், சிவப்பு நிறமாயிருக்கும். நீண்ட தலைமயிர், மிக்க இனிப்பை நாடல், மிக்க பசி, பெண்ணிச்சை, சமய விருப்பம், அதிக மிரட்சியுடன் பலவீனமான நாடி இவற்றுடன் - அடக்க மொடுக்கமுடன் அழுத்தமான முடிவான வார்த்தையே பேசுதலும், பொய்யை மெய்போலுரைத்தலும் கைக்கொள்வர்.

—

★ 57. முத்தோட உடலின் பிணிகள் யாவை?

முத்தோட உடலினருள் பொதுவாக முறையே;

1. வாத உடலினர்க்கு வயிற்றுப்பிசம், வாயுதிரட்சி, கிராணி, நீராமை, சீதபேதி, நீர்க்கிரிச்சரம், மூலம், சூலை, அண்டவாயு, மகோதரம் முதலிய பிணிகள் பற்றும்.

2. பித்த உடலினர்க்கு உடல்சூடு, எரிச்சல், உஷ்ணவாயு, அஸ்திசுரம், பைத்தியம், சோபை, மனக்கவலை, தாகம், மயக்கம், தயக்கம், இரத்தபித்தம், பிரமேகம், பெரும்பாடு முதலிய பிணிகள் பற்றும்.

3. கப உடலினர்க்கு ஈளை, சயம், மந்தாரகாசம், பாண்டு சோபை, காமாலை, சுரம், சன்னி, கரப்பான், விஷதோடம், புண்புரை, விரணம், மாரடைப்பு, தூக்கம், இருத்துரோகம் முதலிய பிணிகள் பற்றும்.

★★ 58. உடலில் வாயு கூடினால் என்ன நேரும்?

உடலில் வாயு கூடினால்,

1. வாத உடலினர்க்கு உள்வீச்சு, புறவீச்சு, திமிர், ஆனந்த வாயு, நரம்பிழுப்பு, பக்கசூலை, உடலில் குத்தல், மாரடைப்பு தொடை - குறுக்கு - விலா - பிடரி - நெஞ்சு-நரம்பு இவற்றில் வலி ஆகியன காணும்.

2. பித்த உடலினர்க்கு அசதி, செரியாமை, வலி புளியேப்பம், தாது நட்டம், தலை கிறு கிறுப்பு, பைத்தியம் குன்மம், வாந்தி, சூலை, விக்கல், அரோசகம், ஈரல் வலி மார்பு வலி ஆகியன காணும்.

3. கப உடலினர்க்கு சுவாசகாசம், குன்மம், மாரடைப்பு குரல்கம்மல், வாநீரூறல், திமிர்வாயு, வலி, இழுப்பு, பாண்டு மயக்கம், தியக்கம், நாவழுவழுப்பு, மலத்துடன் சீதம் உடல்குத்தல் ஆகியவை காணும்.

★ 59. உடலில் உஷ்ணம் கூடினால் என்ன நேரும்?

உடலில் உஷ்ணம் கூடினால்

1. வாத உடலினர்க்கு அதிசாரம், பெரும்பாடு, உளைச்சல், அக்கினிமந்தம், இரத்தப் பிரமேகம், சூலை, நீர்க்கோவை, கரப்பான் ஆகியன காணும்.

2. பித்த உடலினர்க்கு சயம், சத்தி, அஸ்திசுரம், அதிசாரம் வயிற்றுவலி, மூலவாயு, குன்மம், நாவு கசப்பு, இரவில் கனவு வெறி, தாகம், எரிவு ஆகியன காணும்.

3. கப உடலினர்க்கு சயம், இருமல், சுவாசகாசம் நாசிநோய், விக்கல், கொட்டாவி, மந்தார காசம், விப்புருதி ஆகியன காணும்.

★ 60. உடலில் சீதளம் கூடினால் என்ன நேரும்?

உடலில் சீதளம் கூடினால்

1. வாத உடலினர்க்கு - சன்னி, குளிர்சுரம், மலக்கட்டு வலி, இளைப்பிருமல், வாந்தி, விரணம், சோர்வு, வீக்கம் சூலை, பாண்டு, தனுர்வாதம், தோஷம் ஆகியன காணும்.

2. பித்த உடலினர்க்கு-பசியின்மை, மூலக்கடுப்பு, தோஷம் வாந்தி, வீக்கம், சோகை, காமாலை, இருமல், குளிர்சுரம், நா வழுவழுப்பு ஆகியன காணும்.

3. கப உடலினர்க்கு - சன்னிதோஷம், சுவாச அடைப்பு. வீச்சு, மயக்கம், மூர்ச்சை, விக்கல், வியர்வை, வயிற்றுப் பொருமல் ஆகியன காணும்.

**அகாரமே-அனைத்திற்கும் காரணம்!**

அகாரமல்லோ கருவுடனே விந்துவாச்சு
அகாரமல்லோ அன்னையொடு தந்தையாச்சு
அகாரமல்லோ ஆடுகிற வித்தையாச்சு
அகாரமல்லோ கண்காணா தெட்டதாச்சு
அகாரமல்லோ மதியுடனே விதியுமாச்சு
அகாரமல்லோ அகண்ட பர வெளியுமாச்சு
அகாரமல்லோ குருவுடனே சீடனாச்சு
அகாரமடா உபதேசப் பொருளுமாச்சே. (கௌ.சூ)

**கல்பம் வசமாகும் காலம்!**

காலங் கழிந்து காயம் நெகிழ்ந்து காற்றுமழிந்து
தோலும் துருத்தியும் நாடிநரம்பும் துவண்ட பின்பு
சாலவும் கற்பம் சாராது சார்ந்தும் சத்திலைகாண்
வாலிபமெய்திடுங் காலத்தில் கற்பம் வசப்படுமே!

# II. தத்துவம் - உடற்கூறு

★ 1. தத்துவம் எத்தனை வகைப்படும்?

ஐம்பெரும் பூதங்களினாலும் - ஏழு தாதுக்களினாலும் ஆக்கப் பெற்ற நமது உடல் பின்வரும் பூதம்-5, பொறி-5, புலன்-5 ஞனேந்திரியம்-5, கன்மேந்திரியம்-5, கரணம்-4, அறிவு-1, ஆசயம்-5, கோசம்-5, வினை-2, குணம்-3, ஈடணை-3, மலம்-3, மண்டலம்-3, இராகம்-8, ஆதாரம்-6, நாடி-10, அவஸ்தை-5, வாயு-10, தோடம்-3, ஆகிய **96 தத்துவங்களின்** இயக்கங்கட்குட்பட்டு அமைக்கப்பட்டுள்ளது.

★★ 2. பஞ்சபூதத்தின் கூறு யாவை?

பிருதிவி-அப்பு-தேயு-வாயு-ஆகாயம் ஆகியன ஐம்பெரும் பூதமாகும். இவற்றுள் **(1) பிருதிவி** உரத்துத் தரிக்கும். இதன் உடற்கூறு-எலும்பு, தோல், தசை, மயிர், நரம்பு முதலியன வாகும். இதன் பொறி-மூக்கு, புலன்-மோத்தல், பொருள் - நாற்றம் ஆகும். **(2) அப்பு** குளிர்ந்து பதஞ் செய்யும். இதன் உடற்கூறு-குருதி, கொழுப்பு, வெண்ணீர், சிறுநீர், மூளை முதலி பனவாகும். இதன் பொறி - வாய், புலன் - சுவைத்தல், பொருள் - உருசி ஆகும். **(3) தேயு** சுட்டொன்றுவிக்கும். இதன் உடற்கூறு - இறுமாப்பு, சோம்பல், மைதுனம், அச்சம், தூக்கம் முதலியனவாகும். இதன் பொறி - கண், புலன் - பார்த்தல், பொருள் - உருவம் ஆகும். **(4) வாயு** சலித்து எவையுந்திரட்டும். இதன் உடற்கூறு - ஓடல், இருத்தல், நடத்தல், கிடத்தல், நிற்றல் முதலியனவாகும். இதன் பொறி - மெய், புலன் - உணர்தல், பொருள் - ஊறு ஆகும். **(5) ஆகாயம்** நிலையாய் இடம் கொடுக்கும். இதன் உடற்கூறு - ஆசை, உட்பகை, மோகம், மதம், வஞ்சனை முதலியனவாகும். இதன் பொறி-காது, புலன்-கேட்டல் பொருள்-ஓசை ஆகும்.

★ 3. அண்டமும் பிண்டமும் ஒன்றே-என்பது ஏன்?

**அண்டத்தில் (பூமி)** உள்ள தாது, தாவர, சங்கமப் பொருள் யாவும் தோன்ற ஏதுவாயுள்ள பஞ்சபூத சேர்க்கையி னாலானதும் - சகல பொருட்களையும் சூக்கும நிலையில் உள்ளடக்கியதுமான - சிறியதோர் உலகமே **பிண்டம் (மனித உடல்)** எனப்படும். மனித உடலின் சகல உறுப்புகளும் பூமியில்

பரவி நிற்கும் சில தத்துவங்களின் பொது சக்தியால் உண்டாகி அவற்றால் ஆட்டுவிக்கும் தன்மையுமுடையவனவாகும் உதாரணமாக இருதயம் - சூரியனாலும், மூளை - சந்திரனாலுப் பித்தப்பை- செவ்வாயினாலும், மூத்திரப்பை - சுக்கிரனாலும் நுரையீரல்- புதனாலும், கல்லீரல் - குருவினாலும், மண்ணீரல் சனியாலும் தொடர்புள்ள இயக்கங்களைப் பெற்றவையாகும் மேலும், மனிதனின். குருதியில் உள்ள மூலப்பொருள்களுக்கும் செவ்வாய் கிரகத்தின் சூக்கும சக்திகளுக்கும் ஒற்றுமையும். சுக்கிரனால் உயிர்கள் உய்வதற்குரிய சக்தியும் கிட்டுவதால்தான் பாலுணர்வும் அதனால் இனப்பெருக்கமும் ஏற்பட்டு உயிரினப் அழியாதிருக்கின்றன. நிற்க, மனிதனுக்கு முக்குற்றம் முதலிய தத்துவக் கோளாறுகளால் பிணிகள் தோன்றுவதுபோன்றே இவை உலகில் பரவுங்கால் புயல், வெள்ளம், பூகம்பம் கொள்ளை நோய்கள் முதலியன விளைந்து தொல்லை தருவதைக் காணலாம். குறிப்பாக, மனிதனிடம் மட்டுமே உலகின் சடப் பொருள் முதல் ஈசனின் சக்தி ஈராகவுள்ள சகல சக்தி களும் உள்ளடங்கியுள்ளன. எனவே, நமது ஆன்ம உடலின் அமைப்பை அறிவது, உலகனைத்திற்கும் முதற் கருவாய் நின்ற பொருளின் தத்துவத்தை அறிவதற்குப் ஏதுவாகும். இங்ஙனம் பல காரணங்களையும் விளங்கிச் கொள்வதன் மூலம் **அண்டமும் பிண்டமும் (பூமியும் மனிதனும்)** ஒன்றே என உணரலாம்.

## ★ 4. பதி - பசு - பாசம் என்றால் என்ன?

**பதி - பசு - பாசம்** இம்மூன்றும் அனாதி நித்தியமாகும் இவற்றுள் **1. பதி** என்பது தானே சொரூபம் எனவும், தடத்தப் எனவும் இரு வகைப்படும். பதியின் தொழில் படைத்தல். காத்தல் - அருளல் - மறைத்தல் - அழித்தல் ஆகியனவாகும் **2. பசு** என்பது ஆன்மா ஆகும். இது குன்றிமணி ஒரே பொருளாயிருந்தும் மூவகைப் பேதம் காட்டுதல் போல் விஞ்ஞானகலர்- பிரளையாகலர்-சகலர் என மூவகையுள்ளது **3. பாசம்** என்பது செம்பின் களிம்பு போல் அனாதியே ஆன்மாக்களுடன் கலந்திர நின்ற மலமாகும். இது, ஆனவமலப் - கன்மமலம் - மாயாமலம் - மாயேயம் - திரோதாயி என ஐவகைப்படும்.

## ★ 5. ஐம்பொறியும் - செயலும் யாவை?

செவி-மெய்-கண்-நாக்கு-மூக்கு ஆகியன ஐம்பொற

களாகும். இவற்றின் செயல்கள் (ஞானேந்திரியம்) முறையே ஒலியை அறிதல் - ஊற்றை அறிதல் - உருவத்தை அறிதல் - சுவையை அறிதல்-மணத்தை அறிதல் ஆகியனவாகும்.

★ 6. ஐம்புலனும் - செயலும் யாவை?

வாய் - கால் - கை - எருவாய் - கருவாய் ஆகியன ஐம்புலன்களாகும். இவற்றின் செயல்கள் (கன்மேந்திரியம்) முறையே பேசுதல் - நடத்தல் - இடுதல், ஏற்றல் - மலம் கழித்தல் - சுக்கிலம் கழித்தல் ஆகியனவாகும்.

★ 7. கரணத்தின் செயல்கள் யாவை?

மனம் - அறிவு - நினைவு - முனைப்பு இவை நான்கும் கரணமாகும். (அகக்கருவி) இவற்றின் செயல்கள் முறையே விஷயங்களைப் பற்றல் - நிச்சயித்தல் - நினைத்தல் - எழுப்புதல் முதலியனவாகும்.

★ 8. ஆசயம் என்பன யாவை?

ஐவகை ஆசயங்கள் (விஷயம்) என்பன முறையே அமர் வாசயம் (அன்னரசம் அமருமிடம்) - பகிர்வாசயம் (அன்னம்பகிருமிடம்)-சலவாசயம் (சிறுநீர்க்குழி) - மலவாசயம் (மலக்குழி) சுக்கில வாசயம் (விந்து பிரியுமிடம்) ஆகியனவாகும்.

★ 9. கோசங்கள் என்பன யாவை?

கோசங்கள் (உடல்) முறையே அன்னமயகோசம் (தாதுக்க ளாலானது)-பிராணமயகோசம் (பிராணனும், புலனும் கூடியது) - மனோமயகோசம் (மனமும், பொறியும் கூடியது) - விஞ்ஞானமய கோசம் (அறிவும், பொறியும் கூடியது) - ஆனந்தமயகோசம் (பிராணனும், சுழுத்தியும் கூடியது) என்று ஐவகைப்படும்.

★ 10. குணங்களின் விவரம் யாவை?

சத்துவம்-இராசதம்-தாமதம் ஆகியன முக்குணமாகும். இவற்றுள் சத்துவத்தின் பண்பு - அருள், ஞானம், தவம், பொறை, மேன்மை, மோனம், வாய்மை, பொறியடக்கம் ஆகியனவும்-இராசதத்தின் பண்பு-ஒழுக்கமின்மை, ஊக்கம், ஞானம், வீரம், அறம், தவம், ஈகை, கல்வி, கேள்வி ஆகியனவும் - தாமதத்தின் பண்பு-ஒழுக்க மின்மை, காமம், சினம்,

கொலை, சோம்பு, நீதி வழுவல், நெடுந்துயில், பேருண்டி, பொய், மறதி, வஞ்சகம் ஆகியனவும் ஆகும்.

**★ 11. மலங்களின் வகை யாவை?**

**மலங்கள்** (இயல்பு) முறையே, **ஆணவம்** (ஆன்மாவின் அறிவை விடுத்து யான்-எனது-எதுவும் தனதென இருத்தல்) **மாயை** (பிறர் பொருளை நாடித் தீங்கிளைத்தல்) - **காமியம்** (முதலிருவகையுடன், இதாகிதத்தினால் பாவபுண்ணியஞ் செய்தல்) என்று மூவகைப்படும்.

**★ 12. மண்டலங்களின் இருப்பிடம் யாது?**

மும்மண்டலங்களுள் **அக்கினி மண்டலம்** மூலாதாரத்திற்கு இரு விரற்கடைக்கு மேலும்-**ஆதித்தமண்டலம்** உந்திக்கு நாலு விரற்கடைக்குமேலும்-**சந்திரமண்டலம்**(அமுதக்கலை) அமுதம் மேல் நோக்கியும், அக்கினி கிழ் நோக்கியும் சரியாய் நிற்கும்

**★★ 13. ஆதாரங்களின் இருப்பிடம் யாவை?**

ஆதாரங்களுள் முறையே, காலெலும்பும், கதிரெலும்பும், கூடுமிடமாகிய குய்யத்திற்கும் குதத்திற்கும் நடுவில் - **மூலாதார மும்;** இதற்கு இரு விரற்கடைக்கு மேல் - **சுவாதிஷ்டானமும்;** இதற்கு எட்டுவிரற்கடைக்குமேல் - **மணிபூரகமும்;** இதற்கு பத்து விரற்கடைக்கு மேல்-**அனாகதமும்;** இதற்கு பத்து விரற்கடைக்கு மேல்-**விசுத்தியும்;** இதற்கு பன்னிரு விரற்கடைக்கு மேல்-**ஆக்கினையும்** அமைந்துள்ளன.

**★★ 14. நாடிகளின் இருப்பிடம் யாவை?**

தசநாடிகளுள் **1. இடகலை** வலதுகால், பெருவிரலினின்று கத்தரிக்கோல் மாறலாய் இடது மூக்கைப் பற்றியும், **2 பிங்கலை** இடது கால் பெருவிரலினின்று கத்தரிக்கோல் மாறலாய் வலது மூக்கைப் பற்றியும், **3. சுழுமுனை** மூலாதாரத்தைத் தொடர்ந்து சகல நாடிக்கும் ஆதாரமாய் நடு நாடியாய் தலையளவில் முட்டியும், **4. சிகுவை** உண்ணுக்கிலும், **5. புருடன்** வலது கண்ணளவிலும், **6 காந்தாரி** இடது கண்ணளவிலும், **7. அத்தி** வலது காத அளவிலும், **8. அலம்புடை** இடது காதளவிலும், **9. சங்கினி** குறியினளவிலும், **10. குகு** அபானத்தளவிலும், முறையே அமைந்துள்ளன.

★ 15. சத்துவப்பிரிவு என்பன யாவை?

உடலில் ஏற்படும் இயற்கை குணத்தின் பத்துவகை செயல்களே **சத்துவப் பிரிவு** எனப்படும். அவை, கண்ணீர் சொரிதல் - வியர்த்தல் - களித்தல் (மகிழ்ச்சி)-தூக்கத்தினின்று விழித்தல் - வெதும்பல் (சினம்) - உடலில் மயிர் சிலிர்த்தல் - நடுக்கமெடுத்தல் - குரல் சிதைவு (ஒலி குன்றல்) - தேற்றம் (துணிவு) - சாக்காடு (மரணம்) ஆகியனவாகும்.

★ 16. அவஸ்தைகளின் வகை என்ன?

ஐவகை அவஸ்தைகள் என்பன முறையே, **சாக்கிரம்** (இன்ப துன்பங்களை அறியும் நிலை) - **சொப்பனம்** (புலனும், பொறியும் கண்டத்தில் நிற்கும் நிலை) - **சுழுத்தி** (அறிந்ததை பிறருக்குக் கூறவியலாநிலை) - **துரியம்** (சுவாசிக்கும் நிலை)- **துரியாதீதம்** (உலகப்பற்றும் பரிசமும் அறியாநிலை) என்பவையாகும்.

★★ 17. வாயுவுகளின் செயல்கள் யாவை?

தசவாயுவுகளுள் (காற்று) **1. பிராணன்**-மூச்சுவிடல், உணவுகளைச் செரிப்பித்தல்; **2. அபானன்**-மலசலத்தைத் தள்ளல், ஆசனவாயைச் சுருக்கல், அன்னசாரத்தை உரிய இடத்தில் சேர்த்தல்; **3. வியானன்** - உடலுறுப்புகளை நீட்டல், மடக்கல், பரிசத்தையறிதல், அன்னசாரத்தை அங்கு நிரப்பி உடலைக் காத்தல் **4. உதானன்** அன்னசாரத்தைக்கூடி அதை ஆங்காங்கு நிறுத்தல், வெளிப்படுத்தல், கலக்குதல் **5. சமானன்**-பிறவாயுவை சமனப்படுத்தல், நீர், உணவு, அறுசுவைகளை சமனப் படுத்தி உடலிற்சேர்த்தல்; **6. நாகன்** - கண்ணிமைத்தல், மயிர் சிலிர்த்தல், கலையறிதல், பண்ணிசைத்தல்; **7. கூர்மன்**-வாய்மூடல், இமைகொட்டல், கொட்டாவி விடல், கண்திறந்து மூடல், பொருளைக்காணல், கண்ணீர்விடல்; **8. கிருகரன்** - நா - மூக்கு கசிவித்தல், பசியுண்டாதல், ஒன்றை நினைத்தல் பேசுத்ல், தும்முதல், இருமுதல், **9.தேவதத்தன்**-உடல் முறித்தல், சோம்புதல், தூங்கி எழுகையில் அயர்தல், கண்ணை ஒட்டி உலாவித்தல், தாங்கல், தர்க்கித்தல், சண்டையிடல், சினத்தல்; **10.தனஞ்செயன்**-மூக்கினின்று தடித்து உடலை வீங்கச்செய்தல், காதில் கடல்போல் இரைந்து, உடல் இறந்து காற்றெல்லாம் வெளிப்பட்டபின் மூன்றாம் நாளில் தலைவெடித்தபின் வெளியேறல் ஆகிய செயல்களை முறையே செய்துவரும்.

## ★ 18. பஞ்சவாயுக்களின் தன்மை என்ன?

உடலிலுள்ள ஐவகை வாயுக்களின் தன்மை அல்லது தொழில் பின் வருமாறு கூறப்படும். அவை. **(1) பிராணவாயு** - இது, சிரம், மார்பு, தொண்டை இவற்றில் தங்கிக்கொண்டு - எதனையும் புரிந்து கொள்ளல், இருதயத்தை இயக்குதல் உணர்வுகளைக் கிளறுதல், மூளையின் சில வேலைகளுக்கு பொறுப்பேற்றல் இவற்றிலும்; மற்றும் விழுங்கல், தும்மல் ஏப்பமிடல், இருமல் இவற்றிலும் உதவியாயிருக்கும். **(2) உதானவாயு** - இது, மார்புக்குமேல் நாசி வரை, கழுத்து கொப்பூழ் இவற்றில் தங்கிக்கொண்டு - பேச்சு மற்றும் நினைவு உறுப்புகளை இயக்கவும்; விஷயங்களை மேனோக்கி நகர்த்தவும் உதவும். **(3) வியானவாயு**-இது இருதயத்தில் தங்கியும், உடல் முற்றும் பரவியும் - குருதியோட்டத்திற்கும்; மற்றும் நிற்க அமர, படுக்க, கண் சிமிட்டவும் உதவும். **(4) சமான வாயு** - இது, வயிற்றில் தங்கிக்கொண்டு - பசித்தீயைத் தூண்டுவதோடு; வயிறு, கல்லீரல், மண்ணீரல், நுரையீரல் சிறுநீரகம், ஆசனம் இங்கெல்லாம் அலைந்து திரிந்து கொண்டுமிருக்கும். **(5) அபான வாயு** - இது, குடலின் அடிப்பகுதியில் தங்கிக்கொண்டு - இடுப்பு, தொடை பிறப்புறுப்புகள், அடிவயிற்றின் இயக்கங்களுக்கும்; மற்றும் மலம், நீர், விந்து, சூதகம், சிசு இவற்றை வெளியேற்றவும் உதவியாயிருக்கும்.

## ★★ 19. முத்தோடங்களின் விபரம் என்ன?

முத்தோடங்களுள் (குற்றம்) **1. வாதம்** - மலமும் நாபிக்குக் கீழும். அதாவது அபானம் முதல் உந்திவரை தங்கியிருக்கும் காற்றின் தன்மையை யொத்த வாதத்தின் சுவை - புளிப்பு. நிறம்-கருமை, நீலம்; குணம்-குளிர்ச்சி அளவு-1 பங்கு, வகை-10 ஆகும். (பேதியினால் வாதம் குறையும்) **2. பித்தம்**-சிறுநீரும் கண்டத்தின் கீழும். அதாவது உந்திமுதல் மார்புவரை தங்கியிருக்கும். நெருப்பின் தன்மையை யொத்த பித்தத்தின் சுவை-கசப்பு, நிறம்-பச்சை, பசுமை; குணம் - சூடு, அளவு - 1/2 பங்கு, வகை-5 ஆகும். (வாந்தியினால் பித்தம் குறையும்) **3. சிலேத்துமம்** - விந்தும் கபமும், அதாவது மார்பு முதல் உச்சிவரை தங்கியிருக்கும். நீரின் தன்மையை யொத்த சிலேத்துமத்தின் சுவை - இனிப்பு, நிறம் - வெள்ளை, குணம் - வியர்வை, அளவு, 1/4 பங்கு, வகை-5ஆகும். (அஞ்சனத்தால் சிலேத்துமம் குறையும்) நிற்க, மேற்கூறிய முத்தோடங்களும்

தன்னளவினின்று கூடினாலோ குறைந்தாலோ உடலில் பல பிணிகளும் பற்றும்.

### ★ 20. முக்குற்றங்களின் செயல் யாவை?

வாத - பித்த - கப தோடங்களுக்கென சில பொது செயல்முறைகள் உண்டு. அவை, **1. வாதத்தின்** (காற்று) செயல்கள் முறையே, நெகிழ்வித்தல் - அகலப்படுத்தல் - குடைத்தல்- திமிர்த்தல் - இளைத்தல் - வலித்தல் - குத்தல் - பிளத்தல் - அங்கங்களைச் சிதைத்தல் - சேர்த்தல் - சுருக்கல்-புரளுதல் - சிலிர்த்தல் - வறட்சி - நடுக்கல் - குரூரமாதல் - தொளைகள் அல்லது இடை வெளி அமைத்தல்-உலர்த்தல்-அசைத்தல் - சுற்றுதல் - அசைவற்றுப்போதல் ஆகியனவும்; துவர்ப்புச் சுவையும், வெண்கறுப்பு அல்லது சிவப்பு நிறமும் ஆகும். **2. பித்தத்தின்** (நெருப்பு) செயல்கள் முறையே, சுடுதல், எரித்தல் - சமைத்தல் - சிவத்தல் - வியர்த்தல்-நீர்கசிதல்-பெருகுதல் - பதனழிதல் - மெலிதல் - மயக்க முறுதல் - வெறிபிடித்தல் ஆகியனவும்; கார்ப்பு-புளிப்புச் சுவையும், வெண்மை - வெண்சிவப்பு தவிர மற்ற நிறமும் ஆகும். **3. கபத்தின்** (நீர்) செயல்கள், முறையே எண்ணெய்ப்பசை 'யுண்டு பண்ணல் - வன்மை - தினவு - குளிர்ச்சி - கனத்தல் - கட்டுதல் - மந்தவேலை - பூசுதல் - அசைவற்றுப்போதல் - பக்குவமின்மை -சோகை-மிகுதூக்கம் ஆகியனவும்; இனிப்பு உவர்ப்புச் சுவையும், வெண்ணிறமும் ஆகும்.

### ★ 21. முக்குற்றம் மீறக்காரணம் என்ன?

பொதுவாக, **வாதம் – பித்தம் – கபம்** ஆகிய முக்குற்றமும் காலம் - பொருள் - செயல் ஆகியவற்றின் இயல்புகளுக்கேற்ப தன்னிலை பிறழும். குறிப்பாக **1. வாதம்** அதிக கைப்பு, கார்ப்பு, துவர்ப்புச் சுவைப் பொருட்கள் - கொழுப்புணவு -உணவை அகாலத்திலும் அற்பமாகவும் உண்ணல் - மலநீரை பலவந்தமாக வெளியேற்றல் அல்லது அடக்குதல்- கத்திப் பேசுதல் - கசரத் முதலிய கடின உழைப்பு - பயம்- மனத்துயர் - அதீதப்புணர்ச்சி - கூரிய வெப்பம்-பகல் அல்லது இரவின் முடிவு-உணவு செரித்த சமயம் முதலியவற்றில் சினமடையும். **2. பித்தம்** மிக்க கார்ப்பு, உப்பு, புளிப்புச் சுவைப்பொருட்கள் - வெப்பவீரியம் - கூரிய சிந்தனை - சினம் - அழற்சியூட்டும் பொருள் - சூரியவெப்பம் - நடுப்பகல் - நடுநிசி - உணவு செரிக்கும் சமயம் இவற்றுள் கோபமடையும் **3. கபம்** அதிச

இனிப்பு, உப்பு புளிப்புச் சுவைப் பொருட்கள் - நெய்ப் பசையுள்ள மாவுச்சத்துள்ள, சீதளமான, கனமுடைய உணவுகள் - பகலுறக்கம்-சுகவாழ்வு-செரியாமை- சோம்பல்தனம் - உடற்செழுமை தரும் சிகிச்சை-வாந்தி சிகிச்சையில் குறைபாடு வசந்தகாலம்-உணவு கொண்ட சமயம்-காலை மாலை இதில் அதிகரிக்கும். (இங்ஙனமே, இருகுற்றத் **தொந்திப்பிலும்-முக்குற்றச் சேர்க்கையிலும்** அந்தந்த தோடங்களுக்குரிய காரணங்களும் சேர்ந்து செயல்புரியும். குற்றமீறலுக்கு வேறு பல காரணமும் உண்டு) பொதுவாக, ஆயுள்காலம்-பகல்-இரவு-உணவு இவற்றின் இறுதியில் - வாதமும், நடுவில்-பித்தமும், ஆரம்பத்தில்-கபமும் அதிகரிக்கும். வாய்ப்புப் பெறுகிறது.

### ★ 22. சிலேத்துமதாதுவின் பயன் யாவை?

உடலில் பித்ததாது தொடர்பான பலவித இரசாயன மாறுபாட்டினால் உடலில் சூடு உண்டாகையில், அவ்வெப்பம் அளவு மீறாமல் தடுக்கும் சக்தியுள்ளதே - **சிலேத்தும தாது** ஆகும். வெப்பம் சிரமடைவதால், சவ்வு அறைகளின் தேய்மானம் குறையும். குறிப்பாக, மார்பில் தங்கியுள்ள சிலேத்துமத்திற்கு - தழுவுதல் எனப்பொருளாகும். எனவே, இப்பிராண சக்தியானது சவ்வு அறைகளை அணைத்துத்தழுவி, அணுவாதித் தத்துவங்களுக்கு வலுவூட்டிக் காக்கவும், கரு - நிண நீர்ச் சுழிகளில் ஒரு வழுவழுத்த நெய்ப்பசையைத் தரவும் உதவும் மேலும், கீல்களின் உட்புறம் வழவழப்பு தருதல் - உடலுக்கு பசைதருதல் - பருமணல் போன்ற சதை வளர்ச்சிக்கு உதவுதல் - உடல் பருமனை வளர்த்தல் - புதிய சவ்வுகள் கட்டல் - உடலுக்கு இனிய உணர்வூட்டல் - பலத்தைப் பெருக்கல் - கைகால்களுக்கு வலுவைத் தருதல், ஆக **எண்வகைச் செயல் புரியும்**. இதோடு, சகிப்புடன் ஒன்றிப்போகும் தன்மையால் உடலைக்காக்கும் - சிற்றறைகளை நிரப்புவதன் மூலம் அவற்றை குளிர்ப்பிக்கும். இது, வெண்ணிறம், குளிர்ச்சி, நெய்ப்பு, திடம் கனதி, சாந்தம் ஆகிய பண்புகள் கொண்டதாகும்.

### ★ 23. உடலில் கிரக நிலையும் பிணியும் யாவை?

மனித உடலில் அட்டமாதி கிரகங்களின் இருப்பிடமும் அங்கு தோன்றும் பிணிகளுமாக முறையே **1. அங்காரகன்** தலை (வெறுப்பு, தலைவலி) **2. சுக்கிரன்**-முகம் (கண்ணோய் **3. புதன்-கழுத்து** (தோள், கழுக்கட்டில் கட்டிகழலை) **4 சந்திரன்-மார்பு** (சீதளம்-நெஞ்சுவலி-) **5. ரவி**-வயிறு

(வாயு-வயிற்றுவலி) **6.** குரு-அரை (மூலநோய்) **7. சனி**-தொடை (வாதம்-முடக்கு சூலை) **8.** ராகு-கால் (விஷபீலிதம்-முசல் வலி) ஆகியனவற்றைக் கூறலாம். மற்றும், ஒருவர் அட்டமாதிகளுள், ரவியில் - தீயினாலும், சந்திரனில் - நீரினாலும், அங்காரகனில் - ஆயுதத்தினாலும், புதனில் - வெதுப்பினாலும், குருவில் - பிணியினாலும், சுக்கிரனில் - குளிர்வாயுவினாலும், சனியில் - பசியினாலும், ராகுவில் - நஞ்சு அல்லது நாபி நோயினாலும் முறையே மரணம் அடைவர் எனக் கூறப்படும். (இவற்றையெல்லாம் அறிந்து, தக்கவாறு சிகிச்சை செய்தலே சிறப்பு)

## ★ 24. கோள்களின் குணமும்-பிணியும் யாவை?

**கோள்களினால்** உடலில் முறையே, 1. இளம்சூடும், வறட்சியுமான - **ரவியினால்** பித்தம், உட்சூடு, தலை, மூளை நரம்பின்வலப்புறம், இருதயம், நுரையீரல், வாய், பல், விலா, வலதுகண், குருதியின்சூடு இவற்றைப் பற்றிய நோய்களும்; **2.** குளிர்ந்த ஈரமுடைய - **மதியினால்** தோல், மயிர், நகம், இடதுபிடரி, கால், இடதுகண், குருதியின் குளிர்ச்சி இவை தொடர்புள்ள பிணிகளும்; **3.** மிகுசூடும் வறட்சியுமான-**செவ்வாயினால்** பித்தச்சூடு, மாமிசம், பித்தப்பை, பீஜம், விரை, வலதுநாசி, சுரம், காமாலை, கருப்பசின்னம், பீனிசம், பெரும்பாடு, மூலம் இவை பற்றிய நோய்களும்; **4.** மிகு வறட்சியும், குளிர்ச்சி கலந்த வறட்சியும், ஈரம் கலந்த வண்டலுமான - **புதனினால்**, நரம்புபாரிசபுலன், நாவு, கண், காது, மூக்கு, இவற்றில் அற்ற குளிர்ச்சியும் வறட்சியும் பற்றிய பிணிகளும்; 5. சமமான சூடும் குளிர்ச்சியுமான **குருவினால்** தூயகுருதி, விந்து, மூளை, இரத்ததாரை, மஜ்ஜை, இரைப்பை, குடல், தொண்டை, மேலண்ணம், இடதுகாது, ஒலிப்புலன் ஆகியன பற்றிய பிணிகளும்; **6.** சமமான குளிர்ச்சியும், ஈரமுமான **சுக்கிரனினால்** இரசதாது, நிணம், விந்து, கருப்பை, ஆண்குறி, நாசித்துளை, நீர்த்தாரை, சிறிது கொழுமை, அற்பக்குளிர்ச்சி இவை பற்றிய பிணிகளும்; **7.** மிகு குளிர்ச்சியும் வறட்சி வண்டலுமான **சனியினால்** வலது செவித்தோல். குறும்பி, மயிர், நகம். மண்ணீரல், மலநீர் கால்விரல் இசிவு, உள்ளுறுப்புகள் இவை பற்றிய நோய்களும் **முறையே தொடரும்** எனக்கூறப்படுகிறது.

## ★ 25. உடலுக்கேற்படும் அவத்தைகள் யாவை?

பொதுவாக உடலுக்கு, நோய்-துன்பம்-ஆபத்து-கவலை - ஊழ்வினையினாலான சுகதுக்கம் ஆகிய **அவத்தைகள் (உபாதை)** ஏற்படும். மற்றும் **1. விரக தத்துவத்தினால்,** காட்சி-வெட்கை-ஒருதலையுள்ளல்-மெலிதல்-ஆக்கஞ்செப்பல் -நாணுவரையிரத்தல்-காண்பதெல்லாம் அதேபோல் தோன்றல்-மறத்தல் - மயக்கம் - மரணம் ஆகிய **மன உபாதை** ஏற்படும். **2. ஆகமதத்துவத்தினால்,** அஞ்ஞானம் - ஆவரணம் - விட்சேபம் -பரோட்சபம் அபரோட்சம்-சோகநிவர்த்தி-ஆனந்தம் ஆகியனவும்; குறிப்பாக காரணாவத்தை - காரியாவத்தை ஆகிய **ஆன்ம உபாதை** விளையும். **3. யோகதத்துவத்தினால்,** சாக்கிரம் - சொற்பனம் - சுழுத்தி - துரியம் - துரியாதீதம் ஆகிய **உயிர்நிலை உபாதி** ஏற்படும். **4. பிணி தத்துவத்தினால்,** பிணநாற்றம் - வேற்றுமை கூறல் - தெளிவு நாற்றம் - இளைப்பு-உடல் குளிரல்-உணவு வேண்டல் - கண்பஞ்சடைதல் - உடல் வியர்த்தல்-முகம் வெளுத்தல் - சாக்காடு ஆகிய **மரண உபாதி** ஏற்படும். (கடவுளின் மூவித நிலைகளாக, இலயம் - போகம் - அதிகாரம் ஆகியவற்றையும்; மனிதனது நான்கு பருவங்களாக பாலியம் - கௌமாரம் - யௌவனம் - வயோதிகம் ஆகியனவும் கூறப்படும்)

## ★ 26. உடலுக்கு ஏற்படும் கேடுகள் யாவை?

உடலுக்கு பல் வேறு காரணங்களாலும் - பிணியாலும் ஏற்படும் குறைபாடு அல்லது துன்பங்களே உடற்கேடு எனப்படும். அவை, பிண்டக் கேடு (கருவழிவு) - கருப்பக்கேடு (மலடு) - அவயக்கேடு (உறுப்புக் கோளாறு) - அந்தக்கேடு (அவலட்சணம்) -இரத்தக்கேடு (குருதிக்குறைவு - அசுத்தம்) - பித்தக்கேடு (பித்தநீரின் ஒழுங்கின்மை) - வயிற்றுக்கேடு (செரியாமை) - பத்தியக்கேடு (அபத்தியக்கோளாறு) - பார்வைக்கேடு (குருடு) - சத்தக்கேடு (செவிடு) - பற்கேடு (பல்சொத்தை-தேய்வு) - நரம்புக்கேடு (நரம்பு பலவீனம்) - சதைக்கேடு (தசையழிவு) - சுவைக்கேடு (உருசியின்மை)- சிறுநீர்க்கேடு (அதிமூத்திரம்) - அறிவுக்கேடு (பைத்தியம்) - கிழக்கேடு (முதுமை) - ஈனக்கேடு (எதுவும் கெடல்)- உடம்புக்கேடு (உறுப்புக்குறை-பிணிகள்) - குரற்கேடு (சப்தம்மாறல்) - உயிர்க்கேடு (மரணம்) போன்றவையாகும்.

## ★ 27. தூக்கத்தினாலான பயன் யாவை?

உலகொங்கும் நிறைந்துள்ள சக்தியைப் பற்றிய மாயையின் வலிமையினால் ஏற்பட்டு-மனதின் செயலற்று, மெய்மறந்து. இறந்தவனைப்போல் தற்காலிகமாகக் கிடக்கச் செய்யுமோர் நிலைமையே நித்திரை எனப்படும் **தூக்கம்** ஆகும். இருதயம் **தாமசகுணத்தின்** மயக்கத்தால் மூழ்கப்படும் போதுதான் உறக்கம் வரும். மாயாசக்தியினால் ஈடுபடாதவர்களுக்கு தூக்கமே கிடையாது. மற்றவர்களுக்கு தூக்கத்தினால் உடல்நலம் ஏற்படும். நித்திரையின் போது இச்சையும், உணர்வும் முழுமையாகவோ, பகுதியாகவோ செயலற்றுப் போவதால் உடலுக்கும், மனதிற்கும் ஓய்வு கிடைக்கிறது. விழித்திருக்கும் சமயத்தைவிட சுவாசமும், நாடி நடையும் குறைவாகவும், அமைதியாகவும் இயங்கும். கண்மணியும் - சுரப்பியும் ஓய்வடைகிறது. சில உள்ளுறுப்புகளைத் தவிர மற்றவை தானாகவே கிட்டும் ஓய்வினால் அமைதியடைகிறது. இதனால் புத்துணர்ச்சியும்-வலிமையும் கூடும். அளவான இராத்தூக்கம் அனைவருக்கும் பயனளிப்பதாகும். (மெய் மறந்த, ஆழ்ந்த தூக்கத்தில் புலன்கள் செயலற்று மனதையடைவதாகவும் - கனவு, வலி முதலிய தொல்லையின்றி **ஆன்மா** உடலை விட்டு வெளியேறி பிறகு வந்து உட்புகுமெனவும் கருதப்படும். இது. உயிர்ப்பில் ஓர் அமைதியான நிலையாகும்)

## ★ 28. கனவுகளினால் விளையும் பிணிகள் யாவை?

ஒருவனுக்குத் தோன்றும் **கனவுகளின்** நிலைக்கேற்ற நன்மை தீமைகளும் பலவித பிணிகளும் தொடரும் என்பது சித்தர்களின் கூற்றாகும். குறிப்பாக, 1. பிணங்களுடன் மது அருந்திக் கொண்டு, நாயினால் வ்லிந்து இழுக்கப்படுவதாக கனவு கண்டால் - **சுரநோயினாலும்;** 2. சிவந்த உடலும், சிவப்பு மாலையும் - உடையுமணிந்து . பெண்ணினால் இழுக்கப் படுவதாகக் கனவு கண்டால் - **இரத்த பித்தத்தினாலும். 3.** எருமை, நாய், பன்றி, கழுதை, ஒட்டகம் இவற்றில் ஏறி தெற்கு நோக்கி செல்வதாகக் கனவு கண்டால் - **சயநோயினாலும்; 4.** தன் மார்பில் பனை அல்லது முட்செடி முளைப்பதாக கனவு கண்டால் - **குன்மவலியினாலும்; 5.** உடலில் ஆடையின்றி, நெய்ப் பூச்சுடன், சுடரில்லாத தீயில் யாகம் செய்து கொண்டிருக்க, மார்பில் தாமரை உண்டாவதாக கனவு கண்டால்-**குட்ட நோயினாலும்; 6.** தீயவர்களுடன் கூடி

பலவித திரவங்களை அருந்துவதாக கனவு கண்டால் - **பிரமேகத்தினாலும்; 7.** அரக்கர்களுடன் நடனமாடி, நீரில் மூழ்குவதாக கனவு கண்டால் - **வெறிநோயிலும்; 8.** சூரிய - சந்திர கிரகணங்களை கனவில் கண்டால் - **கண்ணோயும், 9.** ரவி - மதி வானிலிருந்து விழுவதாகக் கனவு கண்டால்-**கண் குருடும், 10.** கழுதை, ஒட்டகம், பூனை, புலி, குரங்கு, பன்றி, பிணம், நரி இவற்றில் ஏறிச் செல்வதாக கனவுகண்டால் - **முக்குற்ற நோயினாலும்** முறையே **துன்பமும் மரணமும்** விளையும் என அறிந்து கொள்ளலாம்.

## ★ 29. இறப்பதற்குரிய அடையாளங்கள் யாவை?

ஒருவன் **இறந்துவிடுவான்** என்பதை பின் வரும் குறிகளின் மூலம் அறியலாம்-அவை; உயிர்மூச்சு குறையும் - உணர்வு குன்றும்-உறுப்புக்கள் வலுவிழக்கும்-உழைக்க வியலாது - புலன்கள் செயலிழக்கும்-அறிதல் தடைப்படும் - மனம் விசாரப்படும்-நினைவு மாறும்-நுண்ணறிவு நீங்கும்- மனோசக்தி மறையும் - கண்ணியம் விலகும் - பிணியின் துன்பம் யாவும் மறையும் - வலிவும், துணிவும் மறைந்து பீதி ஏற்படும் - ஒழுக்கமும், விருப்பக்கட்டுப்பாடும் மாறும் - காரணமின்றி கக்குதல் வரும் - வாயு மோனோக்கி, கடின மூச்சாகும் - குருதியும், தசையுறுதியும் குறைந்து அழியும்-உடல் வெப்பம் மறையும் - மூட்டுகள் தளர்ந்து கட்டுவிடும்-குரலோலி மாறும்- தலையிலும், நெற்றியிலும் ஒடுக்கம் காணும் முதலியனவாகும் எனினும், கண்கள் கருப்பு அல்லது நீலநிறமுற்றும்; ஒளிகுன்றி பார்வை மங்கிப் பஞ்சடைத்துக் கம்முதல் - பல் நீலநிறமுறல் - வாயினால் சுவாசம் விட்டு, தொண்டையில் கபம் கட்டி மேல் சுவாசமிடல் - தலையுருட்டல் - பிதற்றல் - வாசலை நோக்குதல் போன்றவை முக்கியக்குறிகளாகும்.

## ★ 30. நின்மலாவத்தை என்றால் என்ன?

சாக்கிரம் உள்ளிட்ட ஐவகை உயிர்நிலை உபாதிகளை நீக்கவேண்டி, யோகப்பயிற்சியினால் அடையும் ஐவகை நிலைமையே - **நின் மலாவத்தை** எனப்படும். அவை (1) **நின்மலசாக்கிரம்** - இது, ஆன்மா முழுத்தோற்றத்திற்கு வருவது. (2) **நின் மல சொற்பனம்.** இது, ஆன்மா கனவினால் பாதிப்பது. (3) **நின்மலசுழுத்தி** - இது, பாவ எண்ணங்களில் உணர்வின்மை. (4) **நின்மலதுரியம்** - இது, மகிழ்ச்சிப் பகுதியை அடைவது. (5) **நின்மலதுரியாதீதம்** - இது, சகல உடர்

துன்பங்களையும் தாண்டி, ஆன்மா பேரானந்த நிலையடைவது, ஆகியனவாகும். இதனால் **யோகிக்கு** - புறச்சிந்தனையும், உணர்வும் மறைந்து மனம் சமநிலையடைவதால் பின்வரும் அரிய காட்சிகள் புலப்படும். அவை, தனது அடி முதல் சிகரம் வரை - மனதின் வளமிகு வண்ணங்கள் - தமது வாழ்வையும், நீதியையும் குலைக்கும் உணர்வுகளுக்குரிய தன்மையும், காரணமும் - தமது எண்ணத்தையும், செயலையும் ஆட்டுவிக்கும் பிறவிக்குணத்தின் காரணம் - மனோசக்தியின் உள்ளுணர்வுச் செயல்முறைகள் - ஆன்ம சக்தியின் மேலான உணர்வுகள் முதலியனவாகும்.

### ★ 31. ஆன்மா (ஆத்துமா) என்றால் என்ன?

**திருமூர்த்தி** வடிவாகிய பரமாத்மாவே **ஆன்மா** எனப்படும். இது, **ஜீவாத்மா - பரமாத்மா** என இருவகைப்படும். பரமாத்மாவினுள் சீவாத்மா ஐக்கியப் பட்டதாகும். இதனால்தான் சீவான்மா பிரம்மரந்திரம் வழியாக உடலில் புகுந்து, மூளையை அனுசரித்து அவ்வழியாகவே ஆக்கினையை இயக்கி முடிக்கும். ஆன்மா ஒன்றே உலகின் மூலப் பொருளாகவும் - மற்ற யாவுமே சேர்க்கைப் பொருளாகவும் கருதப்படும். உடலும், மனமும் அத்தகையதே. ஆத்மா பிற விபரங்களை தானாகவே அறிவதால் தனக்குத்தானே விளங்கும் தன்மையுடையது. உடலின் மலங்கள் யாவும் கழிந்து - மனதின் மும்மலங்களும் அறவே ஒழிந்து, தூய்மையடையும் போதுதான் **ஆன்ம சக்தி** சகலத்திலும் பிறவிர்த்திக்கக் காரணம் ஏற்படும். இது ஒன்றேயாயினும், **ஆன்மா - முமூட்சு - நித்திய முக்தன் - சீவன்முக்தன்** என நான்காக விளக்கப்படும். சுத்த சத்துக்கள் தொடர்பாக உடல் முற்றும் பரவி நிற்கும் சுத்த சூக்கும தத்துவமாகிய ஆன்மா எந்தப் பொருள் வடிவிலும் பொருந்தியதல்ல. பிற தத்துவங்களைப் போல் அழியக் கூடியதல்ல. சகல உயிர்களிலும் சமமாக அமைந்துள்ளது. மனதிற்கெட்டாதது. பூதமு மின்றி, பிரகிருதியுமின்றி சுயம்புவாய்த் தனக்குத்தானே விளங்கக்கூடியது, பேதமும். நிறமுமற்றது, பிறப்பற்றது - நித்தியமானது - மாறாதது - சூக்குமத்தில் சூக்குமமானது - பெரிதினும் பெரிதானது - காலத்தில் தோன்றி அழியும் பொருளல்ல - எப்போதும் அழியாத்தன்மையுடையது. ஆதியும் அந்தமுமற்ற **ஆன்ம ஞானத்தை** சித்தர்களால் மட்டுமே அறியவியலும்.

### ★ 32. சிரஞ்சீவியம் என்றால் என்ன?

நாம் உயிர்வாழத்துணை புரியும் உயிர்க்காற்றின் **இடகலை – பிங்கலை** சுவாசம் சமானமாகுமாறு செய்தலால் ஏற்படும் நீண்ட ஆயுளையடைவதே **சிரஞ்சீவியம்** எனப்படும். இது **பிராணாயாமப் பயிற்சியினால்** கைகூடும். நாம் உள்ளிழுக்கும் மூச்சுக்காற்றின் அளவைவிட, வெளிவிடும் காற்றின் அளவு கூடுதலாகும். அதாவது ஒவ்வொரு முறை மூச்சுவிடும் போதும் 16 அங்குல நீளத்திற்கு காற்றை வெளியேற்றி விட்டு, பதிலாக 12 அங்குல காற்றை மட்டுமே உள்ளிழுப்பதால், 4-அங்குல நீள அளவுள்ள காற்று நஷ்டப்படுவதால், ஆயுள்பாகமும் குறைகிறது. இதனை, சுவாசப் பயிற்சியின் மூலம் மாற்றியமைத்து, உள்ளிழுப்பதும் - வெளிவிடுதலுமான காற்றின் அளவை 16-அங்குலமாக மட்டும் வைத்துக் கொண்டால் பிராணவாயுவின் நட்டமின்மையால் ஆயுளும் நீடிக்கும். யோகிகள் சுவாசத்தை படிப்படியாகக் குறைத்து, முடிவில் முற்றாக வெளியேறாதபடி செய்து, தன்னுள்ளேயே **மார்புக்கும் – கண்டத்திற்கும்** இடையில் மட்டும் இயங்கச் செய்து, சமாதி நிலையுற்று அழியாத உடலைப்பெறுவர் இதனைக் குறிக்கவே, **பதினாறும் பெற்று பெரு வாழ்வு வாழ்வாய்** என்ற முதுமொழியும் - மற்றும், **என்றும் 16–(வயது)** உடையதாகக் கூறப்படும் **மார்க்கண்டேயன்** என்ற பாத்திரப் படைப்பும் உண்டானது. இவ்விரண்டின் உண்மைப் பொருளும் **மூச்சுப் பயிற்சியே** தவிர வேறில்லை.

## உடலின் வேகங்கள்

### ★ 33. உடலின் வேகங்கள் யாவை?

உடலில் இயற்கையாய் உண்டாகும் வேகங்கள் முறையே அபான வாயு, தும்மல், சிறுநீர். மலம், கொட்டாவி, பசி தாகம், இருமல், இளைப்பு, தூக்கம், வாந்தி, கண்ணீர், விந்து, சுவாசம் என்று 14 வகைப்படும்.

### ★ 34. அபான வாயுவை அடக்கினால் என்ன நேரும்?

**அபானவாயுவை** உரிய முறையில் வெளிவிடாது

தடுப்பதால் மார்பு நோய், வாதகுன்மம், குடல்வாயு, உடல் முற்றும் குத்தல், குடைச்சல், வல்லைவாதம், மலசலத்தடையினால் பசியின்மை முதலியன விளையும்.

### ★ 35. தும்மல் - கொட்டாவி இவற்றை அடக்குவதால் என்ன விளையும்?

**தும்மலை** அடக்கினால் தலைநோவு, பொறியும்-புலனும், தெரித்து விழுவதுபோல் தோன்றல், முகம் கோணல், இடுப்புவலி முதலியன காணும்-**கொட்டாவியை** அட்க்கினால் தும்மலை அடக்குவதாலான குறிகளுடன், முகம்வாடல், இளைப்புக்குறி, செரியாமை, நீர்நோய், வெள்ளை நோயினால் அறிவுமயக்கம், வயிற்றுப்பிணி முதலியன காணும்.

### ★ 36. மலம்-நீரை அடக்கினால் என்ன நேரும்?

**மலத்தை** அடக்கினால் அபானவாயு பெருகி அடக்கிய மலத்தைத் தள்ளும். மேலும், மலதோடம், முழங்காலின் கீல்த்தன்மையான நோய், தலைவலி, ஒலியுடன் வாயு பரிதல் பலவீனம், மலநீர்க்கட்டு இவை விளையும்-**சிறுநீரை** அடக்கினால் நீரடைப்பு, நீரிறங்கும்புழை புண்ணுய் எரிதல், ஆண்குறி சோர்ந்து குத்தல், கீல்களில்வலி, வயிற்றில் அபானவாயு நிறைதல் இவை விளையும்.

### ★ 37. பசி-தாகத்தை அடக்கினால் என்ன நேரும்?

**பசிதாகத்தை** அடக்கினால் உடலுறுப்புகள் செயல்குன்றி சூலை, பிரமை, உடலிளைப்பு, முகவாட்டம், சந்துகளில் வலி, ஆகியனவும்; நாளடைவில் மூலச்சூடு கண்டு தாதுவற்றி, சயநோயும் காணும்.

### ★ 38. இருமல் - இளைப்பு - சுவாசம் இவற்றை அடக்குவதால் என்ன விளையும்?

**ஈளை இருமலை** அடக்கினால் கடும் இருமலும், மூச்சுக்காற்றில் துர்நாற்றமும், இருதயநோயும் காணும்-**இளைப்பை** அடக்கினால் மிக்கசூடுற்று நீர்மேகம், மூர்ச்சை, குளிர், மற்றும் தும்மலை அடக்குவதாலான பிணிகளும் பற்றும்-**சுவாசத்தை** அடக்கினால் இருமல், வயிற்றுப் பொருமல், சுவையின்மை, சூலைநோய், சுரம், வெட்டை முதலியன காணும்

★ 39. தூக்கம்-கண்ணீர் இவற்றை அடக்கினால் என்ன விளையும்?

தூக்கத்தை அடக்கினால் தினமும் தலைக்கனம், கண்சிவந்து பீளைகட்டி எரிதல், செவிட்டுத்தனம், தெளிவற்ற சொல், சோம்பல், இவை விளையும்-கண்ணீரை அடக்கினால் கண்ணோய், பீனிசம், தமர்வாயு, தலையில் புண் கண்டு அதில் வாயு கூடி குன்மநோய் இவை விளையும்.

★ 40. வாந்தியை அடக்கினால் என்ன நேரும்?

வாந்தியை அடக்கினால் புழுக்கடியினாலான தடிப்புக் குட்டம் போன்ற தடிப்புகள், நமைச்சல், பாண்டு, இரைப்பு. கண்ணோய், பித்த விஷபாகம், சுரம், இருமல் முதலியன காணும்.

★ 41. விந்துவை அடக்கினால் என்ன நேரும்?

விந்துவை அடக்கினால் சுரம், நீர்க்கட்டு, கை கால்கள்-கில்கள் நோதல், விந்துகசிந்து துணி நனைதல், வெள்ளை, மார்படைப்பு முதலியன விளையும்.

## உடலின் தாதுக்கள்

★ 42. உடலின் தாதுக்கள் யாவை?

உடலின்தாதுக்கள் சாரம் - குருதி - ஊன் - கொழுப்பு - எலும்பு - மூளை - சுக்கிலம் என 7 வகைப்படும். (இவை நாம் உண்ணும் அன்னரசத்தினின்றும் தோன்றுவதாகும்).

★★ 43. தாதுக்கள் தோன்றுவது எப்படி?

நமது உணவின் சாரம் ஏழு தாதுக்களின் வெப்பத்தினால் மீண்டும் பக்குவப்பட்டு அவ்வவற்றின் பரிணமத்தை அடையும். அதாவது, முதல் நாள் உண்ட உணவினின்றும் பிரிவுற்ற அன்னரசம் அன்றைக்கு இரசதாதுவை நனைத்து ஊறி நிற்கும் 2-ம் நாள் உண்ட அன்னரசம் அந்த இரசதாதுவிலேற முன்பு ஊறி நின்ற இரசம் இரத்த தாதுவில் பாயும். இங்ஙனமே 3-ம் நாள் மாமிசதாதுவிலும், 4-ம் நாள் கொழுப்பு தாதுவிலும், 5-ம் நாள் எலும்பு தாதுவிலும், 6-ம் நாள் மூளைத் தாதுவிலும்,

7-ம் நாள் சுக்கிலத் தாதுவிலும், சென்று அவ்வவற்றைப் பெருக்கி, 8-ம் நாள் உடலுக்கு குன்றாத வலிமையை நல்கும். (சிற்சில தாது மருந்துகள் உடன் சுக்கிலத்தை உற்பவிக்கும்.)

**★ 44. சாரத்தின் மிகு-குறை குணம் என்ன?**

உடலில் **சாரம்** அதிகரிப்பின் பசிக்குறைவு முதலிய பிணியும், இது குறைந்தால் தோல் சுரசுரப்பு, உடல் நோவு-இளைப்பு, வாட்டம், சப்தத்தில் வெறுப்பு முதலியனவும் காணும்.

**★★ 45. குருதியின் மிகு-குறை குணம் என்ன?**

உடலில் **குருதி** கூடினால் புருவம், உதடு, கொப்புள், அண்டம், தோலினுட்புறம் வெளிப்புறம் உட்பட பல இடத்தில் கொப்புளம் காணல். இடப்பாட்டீரல் வீக்கம், கட்டி, சூலை, பசியின்மை, குருதிவாந்தி, இரத்தமூத்திரம், சிவந்தகண், தோல்சிவப்பு, குருதித்தடிப்பு, பெருநோய், காமாலை, வெறி முதலியன காணும்-இது குறைந்தால் புளிப்பு-குளிர்ச்சிப் பொருளில் அவா, நரம்புத்தளர்ச்சி, வறட்சி, உடல் நிறம் குன்றல் ஆகியன காணும்.

**★ 46. ஊனின் மிகு-குறை குணம் என்ன?**

உடலில் **ஊன்** கூடினால் கன்னம்-வயிறு-தொடை-குறி இவற்றில் முண்டுகட்டல், கண்டமாலை, கிரந்தி, கழுத்து இவற்றில் ஊன் கூடுதல் முதலியனவும்-இது குறையின் ஐம்பொறிகளில் சோர்வு, கீல்வலி, தாடை-பிட்டம்-தொடை-குறி இவை சுருங்கல் ஆகியனவும் காணும்.

**★ 47. கொழுப்பின் மிகு - குறை குணம் என்ன?**

உடலில் **கொழுப்பு** கூடினால் ஊன் மிகுதியினாலான பிணிகளும்; களைப்பு, சிறுபணியிலும் பெருமூச்சு, பிட்டம்-குறி - மார்பு - வயிறு - தொடை இவற்றில் ஊன் பெருகித் தொங்கல் முதலியனவும் - இது குறைந்தால் இடுப்பு பலவீனமுற்று வலித்தல், உடலிளைப்பு, இடப்பாட்டீரல் வளர்ச்சி ஆகியனவும் காணும்.

**★★ 48. எலும்பின் மிகு - குறை குணம் என்ன?**

உடலில் **எலும்பு** கூடினால் எலும்புகளும், பற்களும்

கூடுதலும்-இது குறைந்தால் எலும்புச் சந்துகளில் வலி, பற்கள் விழுதல், நகம்-மயிர் உதிரல், வெடித்தல் ஆகியனவும் காணும்.

### ★ 49. மூளையின் மிகு - குறை குணம் என்ன?

உடலில் **மூளை** கூடினால் உடல் பாரித்தல், கண் கனத்தல் விரல் கணுக்களின் அடிபருத்தல், சிறுநீர் குன்றல், அரிதில் தீரும் புண் இவையும்-இது குறையின் எலும்புகளில் தொளை விழுதல், திகைப்பு, கண் கம்மல் இவையும் காணும்.

### ★ 50. சுக்கிலத்தின் மிகு-குறை குணம் என்ன?

உடலில் சுக்கிலம் கூடினால் பெண்ணிச்சையும், கல்லடைப்பும்-இது குறைந்தால் புணர்ச்சியில் வெண்ணீரும் சுரோணிதமும் பொருத்துப் பொருத்து துளிகளாய் விழுதல் அல்லது குருதி வெளிப்படல், விதையில் குத்தலுடன்வலி, அழற்சி கூடி குறி கருத்தல் முதலியனவும் காணும்.

### ★ 51. உடலின் கழிவுப் பொருட்கள் யாவை?

மலம் - சிறுநீர் - வியர்வை முதலியனவும்; மற்றும் கண் - காது - மூக்கு இவற்றினின்று கசியும் மலமும் உடலின் கழிவுப் பொருட்களாகும்.

### ★ 52. மலத்தின் மிகு - குறை குணம் என்ன?

உடலில் **மலம்** கூடினால் வயிறு உப்பல், இரைதல், கனத்தலும்-இது குறைந்தால் வயிற்றில் வாயுகூடி இரைந்து குடலைச் சுற்றி பரவி முறுக்கிப் பிடிப்பதுடன், சிற்சமயம் தமரகத்திலும் பக்கங்களிலும் நோவை உண்டாக்கி மேல் நோக்கி வருத்தத்தையும் ஏற்படுத்தும்.

### ★ 53. சிறுநீரின் மிகு - குறை குணம் என்ன?

உடலில் **சிறுநீர்** கூடினால் சிறுநீர் நாளத்தில் ஊசியால் குத்துதல் போன்ற துன்பமும், சிறுநீர் கழித்த பின்பும் நீரைக் கழிக்க வேண்டுமென்ற எண்ணமும் ஏற்படும். இது குறைந்தால் கடும் முயற்சியுடன் நீர் துளித்துளியாகவும், நிறம் மாறியும், சில சமயம் குருதி நிறமாகவும் வெளிப்படும்.

### ★ 54. வியர்வையின் மிகு - குறை குணம் என்ன?

உடலில் **வியர்வை** கூடினால் வியர்வை மிகுதி, நாற்றம்

னவும்-இது குறையின் மயிர் உதிர்தல், உதிராதமயிர் விரைத்து நிற்றல், தோல்வெடிப்பு முதலியனவும் காணும்.

## உடற்கூறு - உடலியல்

### ★ 55. உடற்கூறு-உடலியல் என்றால் என்ன?

உடல்கூறு; உடலியல் பஞ்சபூதங்களினாலும்-எழுவகைத் தாதுக்களினாலும் ஆக்கப்பட்டதும், தொன்னூற்றாறு தத்துவங் கட்கும்-பதினான்குவித இயற்கை விரைவுகட்கும் உட்பட்டது மான, நமது உடலின் உறுப்புகள் யாவும் அமைக்கப்பட்டுள்ள இடம்-அமைப்பு முதலியவற்றை இயம்புவது **உடற்கூறு** எனவும், மேற்கண்ட உடலுறுப்புகள் யாவற்றின் பயன்-செயல் முறைகளைப்பகருவது **உடலியல்** எனவும் கூறப்படும்.

### ★ 56. ஐம்பொறியின் இருப்பிடம் யாவை?

ஐம்பொறிகளுள் 1) ஒளிப்புலனைக்காணும்-**கண்கள்** உருண்டை வடிவில் தலையோட்டின் முன்புறமுள்ள இருகுழி களில் பதிக்கப்பட்டு உருவெளியாயுள்ள நீர்நிறைந்த மூன்று சவ்வுக்கவசங்களுடன் உள்ளன. 2) ஒலிப்புலனைக் கேட்கும் **காதுகள்**, வெளிக்காது-நடுக்காது-உட்காது என மூன்று பிரிவுகளாக தலையின் இருபுறமும் அமைந்துள்ளன. 3) நாற்றப்புலனை நுகரும் **மூக்கு** இருசளியூறும் சவ்வுத் துவாரங்களுடன் கண்களுக்குக் கீழ் நடுவிலும் வாய்க்கு மேலும் அமைந்துள்ளது 4) சுவைப்புலனைச் சுவைக்கும்- **நாக்கு** நீரூறும் சவ்வு மூடிய தசையிழைகளினாலான இரு பிரிவாக வாயில் அமைந்துள்ளது. 5) ஊற்றுப்புலனை உணரும்-**மெய்** தோல் மற்றும் உணர்வு நரம்புகளாலாக்கப்பட்ட உடலின் மேற்பகுதியாகும்.

### ★ 57. இரைப்பையின் அமைப்பு என்ன?

**இரைப்பை** மெல்லிய இசிவுள்ள மூன்று சவ்வுப்படலங் களாலானது. அது மார்பின் கீழ், வயிற்றில், உடலின் நடுவே சற்று இடப்புறத்திலுள்ளது. சவ்வுகளில் வெளிப்படலம் ஒத்த செப்பமுடன் மிக அழுத்தமாகவும்-நடுப்படலம் நுண்ணிய இழைகளிலான இரு அடுக்குடனும்-உட்படலம் மிகவிரிந்து மெதுவாக, பல மடிப்புகளுடனும் இருக்கும். கோழை

பரவியுள்ள அம்மடிப்பு, குடல்களுக்கு உள்ளுறையாய குடலின் தொடர் முற்றும் ஒன்றாய்ப் பரந்து உள்ளது. நாட உண்ணும் பொருட்கள் இரைப்பையில் செரிக்கப்படுகிறது.

### ★ 58. சடராக்கினி என்றால் என்ன?

வயிற்றை - சடரம் எனவும், அக்கினியை - நெருப்ட எனவும் கூறப்படுவதால் **சடராக்கினி** என்பதற்கு **வயிற்றின் நெருப்பு** என்றும்; மற்றும் சடரச்சுவாலை, உதராக்கினி மூலாக்கினி, ஆமயாக்கினி என்றும் கூறப்படும். இது, உண்ட உணவை உதரக்கோளநீரின் உதவியோடு, இரசாயன மாற்றத்திற்குட்படுத்தி கடுரசமாய் மாற்றுவதற்காக, வயிறு குடல்களில் அடங்கியுள்ள தீயின் சக்தியாகும். இதுவே உடல் வலிமைக்கும், ஆயுளுக்கும் காரணமாகும். இதன் இயக்கத் தன்மைக் கேற்ப நால்வகையாகக் கூறப்படும். அவை (1) கடுப் செரிமானத்திற்கு தயாராகும் வண்ணம், தீயின் சுவாலைபோல் சூக்குமமான வீரியமிக்க பசியை உண்டு பண்ணக்கூடிய **தீபாக்கினி;** (2) முதலாவதை விட கடுமை குறைந்ததும் சாதாரண செரிமானத்திற்கேற்ப நடுநிலை வெப்பத்தை உடையதுமான **-சமாக்கினி;** (3) செரிப்புச்சக்திக் குறைவினால் பசிகுறைந்த நிலையில் ஏற்படும் தேவைக் கேற்ப, மெதுவான அல்லது சோர்வான வெப்பத்தையுடைய **மந்தாக்கினி;** (4 செரிமானக் கோளாறுகளினால் முறையற்ற பசி அல்லது பசியற்ற நிலையில் ஏற்படும் நச்சுத்தியை உடையதான **விஷமாக்கினி** என்பனவாகும்.

### ★ 59. சீரணத்தின் வகை யாவை?

நாம் உட்கொள்ளுபவை **வாய்நீர் - பித்தநீர் - பாசகநீர் - குடல்நீர்- கணையநீர்** ஆகியவற்றின் உதவிகளினால் செரிமானமடைவதால், இதனைப் பல வகையாகக் கொள்ளப்படும். அவை - (1) வாயிலுள்ள உமிழ் நீரினால் ஏற்படும் சீரணம். (2) கல்லீரலினின்று வரும் பித்த நீரினால் எற்படுவது. (3) வயிற்றிலுள்ள பாசகநீரினால் ஏற்படுவது (4) குடல் பகுதி நீரினால் ஏற்படுவது (5) கணையத்திலிருந்து சுரக்கும் நீரினால் ஏற்படுவது; (6) அன்னப்பாதை தவிர, குருதி மற்றும் தோலின் அடிப்படையில் எற்படுவது; (7) உபசீரணம் எனப்படும் உண்டவை இறுதியாக அடையும் செரிமானம் ஆகியனவாகும். இதிலிருந்து, ஒரே இடத்திலேயே முழு சீரணமும் அடைவதில்லை என அறியலாம்.

## ★★ 60. சீரணம் எவ்வாறு நடைபெறுகிறது?

**நமது உணவு** முதலில் வாயிலுள்ள பற்களால் மெல்லப் பட்டு, உமிழ்நீருடன் கூடி விழுங்க மிடற்றுக்குழல் வழியே இரைப்பையை அடைந்து அங்கு பிசையப்பட்டு திரண்டுவர, இரைப்பையின் உட்புறம் உண்டாகும் புளிப்பு நீருடன் கலந்த நரை நிறமான பாகாகச்சமைந்து; துணைக்குக்கிக்குட் சென்று, அங்கு பித்தநீர் - கணையநீர் இவற்றுடன் கலந்து, பால் நிறமாகவும், மலமாகவும் மாறுதலுற்று சிறுகுடலை அடையும், அங்குள்ள சிறுகுழல்கள் அன்ன சாரத்தை மட்டும் உறிஞ்சி நாறை எலும்பிற்குப் பின்னாலுள்ள நாளத்தில் செலுத்த, அங்கிருந்து சுவாசப்பை நாளத்தினுட் சென்று சுவாசக்காற்றுப் பட்டு குருதியாகமாறும். சக்கைப் பொருளாகிய மலம்பெருங் குடலுக்குள் சென்று ஆசனத்தின் வழியே வெளியேறும். இதுவே **சீரணம்** ஆகும்.

## ★ 61. சீரணத்தில் முக்குற்றம் ஏற்படுவது எப்படி?

நாம் **உட்கொள்ளுபவை**-இரைப்பையினுள் பக்குவப்பட்ட பின், தன் சுய பேதத்தை விட்டு, திரவ வடிவமாகும். இதில் எஞ்சிய சக்கை மலமாக வெளியேறிவிட, மிகுந்தவை குடல் வழியாக நீர்த்துவமடைந்து சுத்தரூபமாக மாறிய அன்னரசம் இரை நீர்த்தாரையை அடைந்து, பின் குருதியாக மாறும். அவ்வமயம் - *(1)* மேலே நுரைத்தெழுந்த கல்மிஷத்திற்கு **பித்தம்** எனவும்; *(2)* அடியில் படிந்த வண்டலுக்கு **வாதம்** எனவும்; *(3)* மத்திய பாகமாய் நிற்பதற்கு **கபம்** எனவும் பெயர் கொண்டு உடலில் பரவும். இதனால் தான் உணவு பேதங்களுக்கேற்ப தோடங்களின் அளவும் **கூடுதல் – குறைதல்** ஏற்பட்டு, அதற்கேற்ப பிணிகளும் பற்றும் எனப்படும்.

## ★ 62. ஈரல்களின் அமைப்பு என்ன?

கருஞ்சிவப்பாக **வலப்பாட்டீரல்(கல்லீரல்)** சுமார் ஒரு அடி நீளம் குறுக்களவில் நான்கு இராத்தல் எடையுடன், வலது விலாவினுள் நுரையீரலுக்குக் கீழேயுள்ளது. (இதன் கீழ்ப்புறம் பித்த நீரையுடைய பிளிகைப்பையும்-இரைப்பைக்குப் பின் சற்று கீழே கணையமும் உள்ளன) **இடப்பாட்டீரல் (மண்ணீரல்)** சிறிது வட்டமாய், சப்பையாய் கருமை நிறமுடன் இடது புறத்தில் கணையம் மற்றும் இரைப்பையுடன்

சேர்ந்துள்ளது. கல்லீரல் பகுதியினின்று பித்தநீரும்-மண்ணீரல் பகுதியினின்று சிவப்பணுக்களும் உற்பத்தியாகும்.

## ★★ 63. கழிவு உறுப்புகள் என்பன யாவை?

கழிவு உறுப்புக்கள் உடலின் சகல பகுதிகளிலும் பின்ன லாய் நெருங்கியுள்ள, நுண்ணிய குழல்களின் தலைப்புகளாயும்: உடலிலும் உட்தோலிலும், குடலின் உட்சவ்விலும் உள்ள சிறுசிறுபைகளாகவும்; தோலில் காணும் சிறு கண்ணறைகளா கவும் உள்ளவையாகும். மேற்படி உறுப்புகளின் வழியே, செந்நீரிலிருந்து கழிக்க வேண்டிய சிறுநீரைக் கழித்துவிடும். அவ்வாறே உமிழ் நீர்க்கோளங்கள் எச்சிலையும்-கல்லீரல் மஞ்சளான கசப்புப் பித்தநீரையும், குண்டிக்காய்-சிறுநீரையும் கழிக்கின்றன-இவ்வகைக் கழிவுகள் வெளியேறாவிடில் பிணிபற்றும்.

## ★ 64. கங்காளம் என்றால் என்ன?

கங்காளம் என்பது தசைகள் நீங்கிய எலும்புக்கோர்வை யாகும். எலும்புகள் வெண்ணிறமுடன், உறுதியான சவ்வினால் மூடப்பட்டு, வலிவுள்ள சுண்ணாம்பும், ஒரு வித பசையுமுள்ள தாய், மெதுவாகவும், நடுத்தர வயதுவரை வளருவதாகவும், முதுமையில் இலேசாகத் தெரிக்கத்தக்க வைரமுடனுமிருக்கும். எலும்புகளின் எண்ணிக்கை சுமார் 208 ஆகும். இதில் ஒரு எலும்பு முறிந்துவிடின் அதன் தலைப்புகள் மொக்கு வைத்துப் பொருந்தும். முறிந்தவுடன் அதற்கேற்ற அளவுத்தசை வீங்கும் - முறிந்த எலும்பு ஒரு கிழமைக்குள் ஊறத் தொடங்கும்.

## ★ 65. தோல்கள் எத்தனை வகைப்படும்?

தோல்கள் உள்தோல் மற்றும் இதிலுள்ள சிறு குழல்களால் உடல் முற்றும் வெளிப்பட்ட நீரினால் அமைந்த வெளித்தோல் என இரு பிரிவு ஆகும். (இதில், நீர் உள்ளது, குருதியுள்ளது சிரங்கு வருவது, குட்டம் வருவது, கட்டி வருவது, காயத்தில் வலிப்பது என ஆறுவகை உள்ளதாகவும் கூறுவர்). இருதோல்களிலுமுள்ள பல படைகளுள் உட்படை நீராயிருக்க, வெளிப்படைகள் காய்ந்து செதில்களாவதால் வெளித்தோல் வன்மையாயுள்ளது. வெளித் தோல்களின் மூலம் நிணமும் வியர்வையும் கழிவதால், குருதி தூய்மையாகின்றது.

### ★ 66. மூளையின் அமைப்பு என்ன?

தலை ஓட்டினுள்ளிருக்கும் - அறைகள் மிகுந்த குழைவான உறுப்பாகிய **மூளை** வெண்ணிறமாயும், அதன் வெளிப்படை நரை நிறமுடனும், நெற்றிக்கு நேரே பிடரிவரை வலமிடமாய் இரு சமபங்காகப் பிரிக்கப்பட்டுமுள்ளது. மூளையில் அரைக்கால் பங்களாவில் தலையின் கீழ்ப்பிடரியைப்பற்றி பந்து வடிவிலுள்ளது-**துணைமூளை** ஆகும். இதில் வெண்ணிறப்பகுதி குறைந்து நரை நிறப்பகுதி மிகுந்திருக்கும். இவ்விரண்டில் நரை நிறப்பகுதி வெண்ணிறப் பகுதிக்கு ஊடாக மரம் கொம்புவிட்டுப் படர்ந்தது போல் தோன்றும். மூளையைச் சுற்றியுள்ள மூன்று சவ்வுகளில் வெளிச்சவ்வு மிகத்தடித்து வலிமை குறைந்தும் - இடைச்சவ்வு மிகமெல்லியதாய் ஒளியுடனும் உட்சவ்வு மிக நுண்ணிய குருதிக்குழல்களால் பின்னப்பட்ட வலையை ஒத்தும் இருக்கும் (மூளையும்-நரம்புக் கூட்டங்களும் இணைந்து உடலின் சகல இயக்கங்கட்கும் துணையாயுள்ளன)

### ★★ 67. சுவாச உறுப்புகளின் அமைப்பு என்ன?

சுவாசாசயங்களுள் **நுரையீரல்** பொகுட்டுவடிவில் இரட்டை உறுப்பாய், வெண் சிவப்பு நிறத்தில் கரும்புள்ளி அமைந்ததாய் தமரகத்தைத் தழுவிக் கொண்டும் - நெஞ்சறையின் பக்கத்திற்கொன்றாய் நிற்குமாறு ஒரு சவ்வினால் ஒன்றைவிட்டு ஒன்று பிரித்தும் அமைந்துள்ளது. மிக்க இசிவுள்ள குருத்தெலும்பு வளையங்களாலான **மூச்சுக்குழல்** கழுத்தின் முன்புறம் தொண்டை முதல் நுரையீரல் வரை நீண்டு அதனுடன் பொருந்தியுள்ளது. நாம் சுவாசிக்கும் காற்று நுரையீரலிலுள்ள காற்றுக் கண்ணறைகள் குருதிக்குழல்களின் மெல்லிய சவ்வு வழியே செல்கையில் இரத்தத்திலுள்ள கரியமில வாயுவும், நீர் அணுக்களும் பிரிந்து வெளியேறி விடுவதால் குருதி தூய்மையடைகிறது.

### ★ 68. கோளங்கள் சிலவற்றை கூறவும்?

உடலின் பாதுகாப்புக்கும், வளர்ச்சிக்கும் தேவைப்படும் முக்கியப் பொருட்களான சுரப்பிகளை தயாரித்தளிக்கவும் - கழிப்பதற்கும்; குருதியிலுள்ள திரவப் பொருளைக்கவரவும் - கழிக்கவும், இரத்தத்திலுள்ள மாசுக்களை வடிக்கவும், வேறு தொழில்களை இயற்றவுமான வலிமையுடன் திகழுவதே **கோளங்கள்** எனப்படும். இவை, நுண்ணிய நாடிகள்,

நாளங்கள், விசர்க்கக் குழல்களால் திரளப்பட்டும், பயறு முதல் பனங்காயளவு வரையிலும் இருக்கும். எடுத்துக்காட்டாக - ஈரல், மண்ணீரல், முலை, பிருக்கம், மாசயனி, உமிழ்நீர்க் கோளங்களைக் கூறலாம். சுரப்பிக்கும் தொழிலோடன்றி - உடலுக்குத் தேவையற்ற பொருளை சோஷணக் குழல்களால் உறிஞ்சி, அவற்றின் மூலம் குருதியில் சேர்த்து, கோளங்கள் வழியாக அந்தந்த விசர்க்கமாய் கழித்து விடுவதுமுண்டு. இவற்றுள், மாசயனி - சுவேத - நிண - குழல் - குழலற்ற - தேவதாரு-சுழுமுனை-விசுத்தி-கேடய-ஆசன - உமிழ்நீர் - கன்ன - தந்த-கண்ட - குடல் - கழிவு - சிறு - பாசகநீர் - சினை - மயிர்க்கால் - கண்ணீர்-முலை-பருவபக்குவ - திராக்ஷைக்குலை - பிரிவினை - குறி - யோனி - கருப்பை கோளங்கள் எனப் பலவுண்டு. இவற்றின் சுரப்பிகள் வெளியேறாவிடினும் - மாசுக்கள் தடைப்படினும் பிணிகள் பற்ற வழிபிறக்கும்.

### ★ 69. சாலம் (சிற்றறை) என்றால் என்ன?

மனித உடல் நாதம் அல்லது சினைப்பையிலிருந்துதான் தோன்றுகிறது. ஆகவே, இப்பையிலுள்ள நாதத்தையொத்த சிறு கண்ணறைகளே பை (செல்ஸ்) அல்லது **சாலம்** எனப்படும். இதிலுள்ள சிறிய கொப்புளங்களே, உயிருடம்பின் ஆதி மூலப் பொருளாகிய **பீச அணுவாகும்**. இதற்கும், வெண்கருச் சத்துக்கும் வேறுபாடில்லை. இது ஒன்றே பிரிந்து பலவாக மாறும். சாலங்களே தசை வடிவாகி ஒவ்வொரு உறுப்பிலும் சேரும். தசைவடிவில், தசைமூலமும் - நரம்பு மூலமும் முக்கியமானதாகும். ஒவ்வொரு **தசைரூபமும்** ஒருசமயம், பல சாலங்கள் நிறைந்ததாகும். எனவே, கருப்பிண்டமும் ஆரம்பத்தில் சாலங்களின் தொகுப்பேயாகும். பொதுவாக, சிற்றறைகள் என்பன ஒளி ஊடுருவும், நிறமற்ற, கூழ் போன்ற நுண்ணிய சீவாதார உட்கரு அடங்கிய **மாமிசப் பிண்டமேயாகும்**. இவை தாவர - உயிரினங்களின் கட்டமைப்பிற்கும், வளர்ச்சிக்கும் ஆதாரமாயுள்ளவையாகும். **சிற்றறைகள்** - உருண்டை, கூம்பு, கனசதுரம், கோளம், ஊசி முனைக் கதிர், அரை வட்டம், நீள்வட்டம், நீள்சதுரம் போன்ற பல்வேறு வடிவிலும் - சிறியதாயும், பெரியதாயும் - மிகநெருங்கியும், மிகத்தள்ளியும் - ஒட்டியும், ஒட்டாமலும் - தட்டையாக ஒன்றுடனொன்று சேருவதாயும் - குமிழியாகவும், திடமாகவும் பல விதத் தோற்றத்தில் இருக்கும். இவையின்றி தாதுக்களின் தோற்றமோ, வடிவமோ, வளர்ச்சியோ, **வாழ்க்கையோ** கிடையாது.

## ★ 70. கபாடச்சவ்வு என்பன யாவை?

உடலிலுள்ள குழாய்களின் வழியாகச் செல்லும் குருதி முதலிய திரவப் பொருட்கள் பின்வாங்காமல் ஒரே பக்கமாக ஓடுமாறு அமைக்கப்பட்ட கதவு போன்ற சதைமடிப்புகளே - **கபாடச்சவ்வு** எனப்படும். இது மூன்று பிரிவாகவும், பல வகையாகவும் இருக்கும். அவை **(1) அர்த்தசந்திரக் கபாடம்** - இருதயத்தின் கண்டரைத்துவாரத்தில் பொருந்தியது. **(2) சிரவச்சடரக்கபாடம்** - இருதயத்தின் கீழ் - மேலறைகளைச் சார்ந்தவை. **(3) துவய கபாடம்** - இருதயத்தின் இடது கீழ் - மேல் அறைகளின் நடுவிலுள்ளது. **(4) வலச்சிரவ பிறைக் கபாடம்** - இருதயத்தின் வலது மேலறையினுள், கீழறைக்குச் செல்லும் வழியிலுள்ளது. **(5) மகுட கபாடம்** - இருதயத்தின் வலது மேலறைத் தமனியின் நுழை வாயிலில் உள்ளது. **(6) குல்லாக் கபாடம்** - இருதயத்தின் இடது கீழ் - மேலறைகளின் நடுவிலுள்ளது. **(7) சுவாசாசயக் கபாடம்** - இருதயத்தின் வலது கீழறைக்கும், நுரையீரலுக்கும் இடையே சேரும் வழியிலுள்ளது. **(8) அர்த்தசந்திரக் கபாடங்கள்** - இருதயம் மற்றும் நுரையீரலின் நுழைவாயிலின் காவலாக உள்ளவை. **(9) திரி கபாடம்** - இருதயத்தின் வலது மேலறையிலிருந்து, கீழறைக்கு வரும் வழியின் திறப்பினை சரி செய்வது. **(10) வர்ச்சனி கபாடம்** - குடலின் நுழைவாயிலில் உள்ளது. **(11) பெருங்குடற் கபாடம்** - பெருங்குடல் நுழைவாயிலில் உள்ளது. **(12) கண்ணீர்ப்பைக் கபாடம்** - மூக்குத்தொளையின் மேலும், கண்ணீர்ப் பைக்குக் கீழும் உள்ள நுழைவாயிலில் உள்ளது முதலியனவாகும்.

## ★★ 71. குருதிச் சுழற்சி பற்றி விளக்கவும்?

**கருமை நிறமுள்ள அசுத்த இரத்தம்** இருதயத்தின் வலது புறமேலறையினின்று கீழறைக்குச்செல்ல, அதனை நாடிக்கிளைகள் சுவாசப் பைகளுக்குக் கொண்டு சென்று, அங்குள்ள சிறிய குழல்களில் சுவாசத்தின் மூலமான பிராணவாயுவை கொள்வதால், **சிவப்புநிற சுத்த இரத்தமாகி** சுவாசப்பை நாளங்களில் கூடி அதன்மூலம் இருதயத்தின் இடதுபுற கீழறைக்குச் செல்லும். இங்கிருந்து சுத்தரத்தம் கண்டரை நாடிக்குள் பாய்குழல் மூலம் தள்ளுண்டு அதன் கிளைகள். கப்புகள் மூலம் உடலெங்கும் பின்னியுள்ள தந்துகிக் குழல்கள் முடிய உடல் முற்றும் பாய்ந்து ஓடி உயிரணுக்களுக்கு உணவைக் கொடுத்தபின், கழிவுகளைத் திரட்டிக் கொண்டு மீண்டும் இரத்த சுத்திக்கென நாளங்கள் மூலம் இருதயத்தை அடையும்.

## ★ 72. உடலின் நீர்ப்பொருளின் அளவு யாவை?

உடலில் நீர்-10, சாரம்-9, குருதி-8, மலம்-7, கபம்-6, பித்தம்-5, சிறுநீர்-4, தசைநீர்-3, கொழுப்பு-2, மஜ்ஜைநீர்-1, மூளை-1/2, சுக்கிலம் 1/2, ஓஜஸ்-1/2, ஆகிய அஞ்சலி அளவில் (இரு கரமும் கிண்ணி போலமைத்து அளப்பது) நீர்ப் பொருட்கள் உள்ளன.

## ★ 73. உடலின் உயிர் நிலைகள் யாவை?

உடலிலுள்ள தலை - கழுத்து - இருதயம் - தொப்பூள் - ஆசனம் - சிறு நீர்ப்பை - ஓஜஸ் - சுக்கிலம் - குருதி - தசை ஆகிய **10 உயிர்நிலைகளில்** முதல் ஆறுக்குக்கேடு விளைந்தால் மரணம் நேரும். இங்ஙனமே, தசை - தசைநார்-நாடி - எலும்பு - பொருத்து இவற்றில் முறையே 11-41-27-8-20 ஆக 107 இடங்கள் **மர்மத்தானம்** என்றும்; இவை கை - கால்-வயிறு - மார்பு - முதுகு - கழுத்தின் மேல் பகுதி இவற்றில் முறையே 44-12-14-37 இடங்களில் இருக்குமெனவும் பிரித்துள்ளனர் இவைகேடுற்றாலும் மரணம் விளையும்.

## ★ 74. உடலுக்குரிய குறைபாடுகள் யாவை?

உடல் பல காரணங்களால், தலையோ வேறு உறுப்புகள் இல்லாமலோ - மிகக்குட்டை - மிகநெட்டை - கூன் - குருடு - செவிடு - ஊமை - மருள்-பேடி - எலும்புகளின் தாறுமாறான வளர்ச்சி ஆகிய குறைகளுடனோ அமைவதுண்டு. மற்றும். உடலில் தோன்றும் குற்றங்களாக, நெட்டைவிடல் - கொட்டாவி - வியர்த்தல்-வளைதல்- குறுகுறுத்தல் - நட்டுவிழல் -நடுங்கல்-சிலிர்த்தல்-நரை-திரை-பயம்-பசி-தாகம்-சினம்-துக்கம்-மகிழ்ச்சி ஆசை நினைவு-தூக்கம்-மதம்-பிணி - இன்பம் -அதிசயித்தல்-கையுறவு-பிறப்பு-மரணம், ஆகியவற்றையும் கூறலாம். (இவைய்டன் 96 - தத்துவங்களும் உட்பட்டதாகும்.,

## ★ 75. ஒன்று முதல் ஆறறிவுவரை வகைப் படுத்தவும்?

பூவுலகின் அசையும் - அசையாப் பொருள் யாவும் **உயர்திணை-அஃறிணை** என இரு பிரிவினுள் அடங்கும் இவற்றுள் 1. தாவர இனம் யாவும் - உடலை மட்டும் கொண்டு - தொட்டதும் உணரக்கூடிய வாயுவின் அம்சமான ஓரறிவு

மட்டும் கொண்டவையாகும் 2. நத்தை, முரள், கிளிஞ்சல் முதலியன - உடலும், நாவும் கொண்டு - உணரவும். சுவைக்கவும் கூடிய வாயு - நீர் அம்சமான ஈரறிவு மட்டும் கொண்டவையாகும். 3. கரையான், ஈசல் முதலியன - உடல், நாக்கு, மூக்கு கொண்டு - உணர, சுவைக்க, நுகரக்கூடிய வாயு-நீர்-மண் அம்சமான மூன்றறிவு மட்டும் கொண்டவை யாகும். 4. நண்டு, தும்பி முதலியன உடல், நாவு, மூக்கு, கண் கொண்டு - உணர, சுவைக்க, நுகர, பார்க்கக்கூடிய வாயு - நீர்-மண்-தீ அம்சமான நான்கறிவு மட்டும் கொண்டவையாகும். 5. மிருகம், பறவை இனம் யாவும் - உடல், நாவு, மூக்கு கண், செவி கொண்டு - உணர, சுவைக்க, நுகர, பார்க்க, கேட்கக் கூடிய வாயு - நீர் - மண் - தீ - ஆகாயம் அம்சமான ஐந்தறிவு மட்டும் கொண்டவையாகும். 6. மனித இனம் யாவும், மேற்கூறிய ஐந்தறிவுடன் அஃறிணைப் பொருட்களுக்கு இல்லாத, பகுத்தறிந்து - சிந்தித்து - பேசக்கூடியதான ஆறாவது அறிவையும் பெற்று ஆறறிவுடன் திகழ்பவர்களாகும்.(ஆக, உயிர்களனைத்திலும் மிகமேலான சிறப்புடன் திகழுபவர் மனிதர் மட்டுமேயாகும்)

**ஐஞ்சுண்ணக் குகையின் பெருமை!**

வாதமஞ்சி யிதைக் கண்டால் வாயைப்பொத்தும்
வாதிக்கு யிதைவிட்டால் சுண்ணாம்பில்லை,
போதவஞ்சுக் குகைக்குள்ளே சூதம் நீறும்
பொன்னீறும் வெள்ளிமுதல் போக்குநீறும்
நாதமஞ்சும் உபரசங்களெல்லாம் நீறும்
நாதவிந்து முதல் நீறும் நாட்டில்காணே

(கொ.வா.சூ.)

கற்பத்தையுண்டால் காயமழியாது
கற்பத்தினாலே காணலாம் கைலையை
கற்பத்தினாலே காணலாம் சோதியை
கற்பத்தினாலே காலையுங் கட்டிடே

## III. அக மருந்து - புற மருந்து

### ★ 1. மருந்து செய்முறைப் பிரிவு யாவை?

வைத்திய - வாத - இரசாயன முறைகளின்பட மருந்துகளைச் செய்து முடிக்கும் வகைகள் பலவாகும். அவை - இலேகியம் கிளறல், உருக்குப்பாய்ச்சல், கிராவணம் ஊஞ்சலேற்றல், ஊதுதல், கலிக்கமாட்டல், களங்காக்கல் களிம்புசெய்தல், கூட்டுதல், கற்பம் தயாரித்தல், காரசா. மேற்றல், கிராசமிடல், குடோரிவைப்பு, சத்தெடுத்தல் சாறுபிழிதல், சாரணைதீர்த்தல், குருவாக்கல், குழம்பாக்கல் சிந்தூரித்தல், சுண்ணமாக்கல், சிராவணம், சுடரெண்ணெட வடித்தல், சுத்தித்தல், சுரசம்பண்ணல், சுருக்கிடல், சூரணித்தல் சூடுபோடல், செயநீராக்கல், திராவகமிறக்கல், தைலட வடித்தல், நீராக்கல், நீர்வாங்கல், நீற்றல், பதங்கித்தல் பற்பமாக்கல், பிரித்தல், புடமிடல், எரித்தல், மணியாக்கல் மயனமாக்கல், மருந்துவைப்பு, மாத்திரை உருட்டல் மாற்றுயர்த்தல், மைசெய்தல், வாலையிடல், வெட்டையாக்கல் வெண்ணெயாக்கல், கியாழமிடல், குழிபுடமிடல், பூமியி புதைத்தெடுத்தல், வேதையாக்கல், முப்புமுடித்த போன்றவையாகும்.

### ★ 2. மருந்து செய்முறை பாகம் யாவை?

மருந்துகள் செய்முறை பாகம் என்பன பல வகைப்படும் அவை; கைபாகம் (அனுபவம்) - செய்பாகம் (நூல்முறை) அரைப்புப்பாகம் - (அரைக்கும் முறை) - கலப்புபாகட (கலக்கும் முறை) - புடபாகம் (தீயினளவு) - கொள்பாகட (சரக்குத்தேர்வு) - தைலபாகம் (எண்ணெய்வடிபதம்) இலேகியபாகம் (இளகல்பதம்) - மதுபாகம் (மணப்பாகுமுறை - கிருதபாகம் (நெய்பதம்) - இராசயனபாகம் (வலுவூட்டுட முறை)-கியாழபாகம் (குடிநீர்வடித்தல்) - வடக பாகம் (வற்ற முறை)-சூரணபாகம் (பொடியாக்கல்) போன்றவையாகும் இவற்றோடு, சாசன - உருசி - கூந்தற் - சித்த - பீம - ந - தேவ பாகங்களையும் கூறப்படும்.

### ★ 3. மருந்து செய்முறை எத்தனை வகைப்படும்?

சித்தமுறைப்படி மருந்து செய்முறைகள் பலவகைப்படும்

அவை; புடமிடல் - எரிப்புத்திட்டம் - கிளறுதல் - குழம்புபாகம் - கட்டுமுறை - சுத்திமுறை - வாலையிடல் - சுருக்கிடல்-கைபாகம்,செய்பாகம் - சுயரசமிறக்கல் - இடித்தல், வடித்தல்-சீலைமண்செய்தல், வெய்யிலிலுலர்த்தல்- புதைத்து வைத்தல் - புனற்பாகம் - மறுவுலை பாய்ச்சல் - பிட்டுமார்க்கம் - பதங்கித்தல் - குப்பிஎரிப்பு - வைப்புமுறை - வாதமுறை - கற்பமுறை-கிராசமிடல்-களங்குமுறை-ஊத்துமுறை- அரைப்புத் திட்டம் - வேதைமார்க்கம்-புகைகாட்டல் - வேதுபிடித்தல் - ஒத்தடம் - துவாலையிடல் - தலைமுழுக்கிடல், பற்றுப்போடல் - கலிக்கமிடல் - சிகிச்சைமுறை போன்றவையாகும். இவை செய்முறையும் - வெளிப்பயனுமாகும்.

## ☆☆ 4. சரக்கு முடிக்கும் காலம் யாவை?

சித்த முறைப்படி மருந்துச்சரக்குகளை இன்னின்ன காலங்களில்தான் செய்து முடிக்க வேண்டுமென வகுத்துள்ளதே - **சரக்கு முடிக்கும் காலம்** எனப்படும். குறிப்பிட்ட பருவகால மாதங்களில் முடிக்கப்பெறாத குறிப்பிட்ட மருந்துகள் - முறைபிறழாமல் செய்யப்படினும் கூட, மூலப்பொருட்களின் குணபேதத்தால் - பயனின்றிப்போகவோ, சிறந்த குணம் தராமல் போகவோ கூடும். மருந்து செய்ய ஏற்ற காலங்களாவன - **(1) தை–மாசி (சனவரி–பிப்ரவரி)** - இந்த மாதங்களில் - பற்பம், சுண்ணம் முதலிய குருமருந்துகளைச்செய்து முடிக்க வேண்டும் **(2) பங்குனி – சித்திரை (மார்ச் – ஏப்ரல்)** - இதில், செயநீர் வாங்கவும். **(3) வைகாசி–ஆனி (மே–சூன்)** - இதில், இரசகுளிகைக்கு சாரணை ஏற்றலாம். **(4) ஆடி–ஆவணி (சூலை–ஆகஸ்டு)** - இதில், வாலையில் திர.ாவகம் வடிக்கலாம். **(5) புரட்டாசி–ஐப்பசி (செப்டம்பர்– அக்டோபர்)** - இதில், செந்தூரம் முடிக்கலாம். **(6) கார்த்திகை – மார்கழி (நவம்பர்–டிசம்பர்)** - இம்மாதங்களில் - உருக்கினங்களைச் செய்யலாம். மேற்கூறியவாறு முடிக்கப் பெறும் மருந்துகள் முழுப் பயனையும் நல்கும்.

## ☆ 5. மருந்து நன்கு முடிய அவசியமானவை யாவை?

பெரிய மருந்து வகைகளையோ-வகாரத்தையோ பயனுள்ள வகையில் முடிக்க 10- முக்கிய செயல்முறைகளைக் கூறி, அவற்றில் குறைவிட்டால் பலன் கிட்டாது எனவும் கூறியுள்ளனர். அதாவது, 1. காரம் விட்டால் **உருக்கினம்** போச்சு. 2. வீரம் விட்டால் **நீற்றினம்** போச்சு. 3. புடம்

விட்டால் **சாரணை** போச்சு. 4. உப்பை விட்டால் **கட்டு** போச்சு. 5. இரசம் விட்டால் **வாதம்** போச்சு. 6. சாரம் விட்டால் **செயநீர்** போச்சு. 7. துருசு விட்டால் **குருவே** போச்சு. 8. கெந்தி விட்டால் **வர்ணம்** போச்சு. 9. சிராவணம் விட்டால் **சத்து** போச்சு. 10. ஊதுதல் விட்டால் **சுண்ணம்** போச்சு, என்று கூறியுள்ளதால் அவ்வவற்றின் முக்கியத்தை **உணரலாம்** (இங்ஙனமே, சித்து நிலையில் வெற்றி பெறவும் **முறை**யே 1. இலட்சியம் விட்டால் **யோகம்** போச்சு. 2. குண்டலியை விட்டால் **அட்டசித்தி** போச்சு. 3. மனம் விட்டால் **ஞானம்** போச்சு. 4. வாசி விட்டால் **தேகம்** போச்சு எனக்கூறி உணர்த்தி உள்ளனர்.)

### ★ 6. பஞ்சபூத எடைபாகம் என்றால் என்ன?

பொதுவாக, உலோக-உபரச-காரசார-பாடாண வகைகளைச் சேர்த்து மருந்துகள் செய்யும் பொழுது, அவ்வவற்றின் பஞ்சபூதப் பிரிவுகளின் அளவிற்கேற்பவே சேர்க்க வேண்டுமெனக் கூறுவதே - **பஞ்சபூத எடைபாகம்** எனப்படும். அவை, **மண்–1½, நீர்–1¼, நெருப்பு–1, காற்று–¾, வெளி–½** என்றுள்ள அளவாகும். இந்த அளவுகளின் அடிப்படையில் அந்தந்தச் சரக்குகளின் எடையளவைக் கணக்கிட்டு இணைத்து செய்தால் தான் பெரிய மருந்துகளாக முடியும் எனக் கூறப்பட்டுள்ளது.

## அகமருந்து - 32

### ★★ 7. அக மருந்து எத்தனை வகைப்படும்?

**அகமருந்து**, முறையே சுரசம்-சாறு-குடிநீர்-கற்கம்- உட்களி அடை-சூரணம்-பிட்டு-வடகம்-வெண்ணெய்-மணப்பாகு-நெய்-சுவைப்பு-இலேகியம்-எண்ணெய்-மாத்திரை-கடுகு-பக்குவம்-தேன்ஊறல்-தீநீர்-மெழுகு-குழம்பு-இரசபதங்கம் - செந்தூரம்-நீறு-கட்டு-உருக்கு-களங்கு-சுண்ணம்-கற்பம்-சத்து-குரு குளிகை என 32 வகைப்படும். (இவை உட்கொள்ளக்கூடியதாகும்)

### ★ 8. அகமருந்து எச்செயலில் அடங்கும்?

**அகமருந்துகள்** முறையே, கருக்கல் - அரைத்தல் - கசக்குதல் - கலக்குதல் - வறுத்தல் - கழற்றுதல் - உருக்குதல் - இறுத்தல் - உலர்த்தல் - உறைத்தல் - குழப்புதல் - உடைத்தல் - நறுக்குதல் - உருட்டுதல் - நகர்த்துதல் - நசுக்குதல் - பொசுக்குதல் - நனைத்தல் - எடுக்குதல் - எரித்தல் - வழிக்குதல்

- இறுக்குதல் - இழைத்தல் - குழைத்தல் - ஆகிய 24-விதச் செயல் முறைகளில் அடங்கும்.

**★ 9. அகமருந்துகளின் வன்மைக் கால அளவு என்ன?**

**அகமருந்துகளுள்,** 1) சுரசம், சாறு, குடிநீர், கற்கம், உட்களி அடை இவை - 3 மணிநேரமும், 2) சூரணம், பிட்டு, வடகம், வெண்ணெய் இவை - 3 மாதமும், 3) மணப்பாகு, நெய், சுவைப்பு, இலேகியம் இவை - 6 மாதமும், 4) தைலம், மாத்திரை, கடுகு, பக்குவம், தேனூறல், தீநீர் இவை ஒரு வருடமும், 5) மெழுகு, குழம்பு இவை 5 வருடமும், 6) இரசபதங்கம் - 10 வருடமும், 7) செந்தூரம் - 75 வருடமும், 8) பற்பம், கட்டு, உருக்கு, களங்கு இவை 100 வருடமும் 9) சுண்ணம் - 500 வருடமும், 10) கற்பம், சத்து, குரு குளிகை இவை மிக்க வருடமும் முறையே உரிய சக்தியுடன் திகழும் (பின்னர், தத்தமது வலிமை குன்றும்.)

**★★ 10. குடிநீர் (கியாழம்) வகை யாது?**

மருந்துச் சரக்குகளைச் சிதைத்து அதனதற்குக் கூறியுள்ள அளவு தண்ணீர் விட்டுக் காய்ச்சி வடித்துக்கொள்வதே '**கியாழம்** ஆகும். இவற்றுள் முறையே, பருகும்புனல் - 1/8 (1/4); வாந்திக் குடிநீர் - 1/2; பேதிக்குடிநீர் - 1/8; கண்ணில் விடும் கியாழம் - 1/6; குளிப்பு; குடித்தற்குரியது - 1/3; கொப்புளிக்கும் கஷாயம் - 1/5; வியர்வையுண்டாக்குவது - 1/8; விரணம் கழுவும் மருந்துநீர் - 1/12; முகம் கழுவும் கியாழம் - 1/9; ஆசன வழிக்கஷாயம் - 1/7 ஆகிய பங்கு அளவாகக் குறுக்கி வடித்தெடுக்க வேண்டும்.

**★ 11. கியாழத்தின் சில பிரிவுகளைக் கூறவும்?**

**கியாழம்,** கஷாயம் அல்லது **குடிநீர்** என்பது பச்சை மூலிகைப் பொருள், அல்லது உலர்ந்த சம்பைச்சரக்குகளை நீரில் ஊறவிட்டு, சுண்டக்காய்ச்சி வடிப்பதாகும். இது பலவகைப்படும். அவற்றுள் சில - **(1) பாண்டம்** (வெந்நீர்க்கியாழம்) - இது, ஒரு பங்கு மூலிகைச்சூரணத்தை, 8-பங்கு சுடுநீரில் இரவு முற்றுமோ, 12-மணி நேரமோ ஊறவிட்டபின் காய்ச்சுவதாகும். **(2) சீதக்கியாழம்** - இது, ஒருபங்கு சரக்கை, 6-பங்கு குளிர்ந்த நீரில் இரவில் ஊறவிட்டு, காலையில் வடிப்பதாகும். **(3) பாணியம் (இலகுகியாழம்)** - இது ஒரு பங்கு மூலிகைச்சரக்கை 32-பங்கு நீரிலிட்டு

கொதிப்பித்து பாதியளவாய் சுண்டிய பின் வடிப்பதாகும். இது, தேவைக்கேற்ப மருந்தாகவும் - தாகம் தணிப்பதாகவும் பயன்படும். (4) **பிரமத்தியை** - இது, மூலிகை அல்லது கடைச்சரக்குகளை நசுக்கிக் கடைந்து அல்லது இடித்துப் பொடித்து, அதற்கு 8-மடங்கு நீரிலிட்டு, கால்பாகமாக சுண்டவிட்டு வடிப்பதாகும். இது, தேன் கலந்து பருகுவதாகும். (5) **சீரபாகம்** - இது, ஒருபங்கு மருந்தை 8-பங்கு பால், 32-மடங்கு தண்ணீர் இவற்றுடன் கலந்து காய்ச்சி, அதிலுள்ள நீர் முற்றும் வற்றி, பால் மட்டும் நிற்கும் சமயம் வடித்து எடுப்பதாகும்.

### ★★ 12. சூரணத்திற்குரிய சுத்தி முறை யாது?

மருந்துச் சரக்குகளை முறைப்படி உலர்த்தியோ - வறுத்தோ தனித்தனியே பொடித்துச் சலித்துக் கலந்து கொள்வதே **சூரணம்** ஆகும். இதனை சுத்தி செய்தற்கு சூரணத்தை சிறிது பசுவின் பால் விட்டுப் பிசையவும். ஒரு மண் சட்டியில் பசுவின் பாலும் - நீரும் சமன் கலந்து ஊற்றி, சட்டியின் வாயில் ஒரு தூய்மையான துணியை சிறிது பள்ளமாயிருக்குமாறு கட்டி, அதில் பிசைந்த சூரணத்தை பிட்டுமாவு போல் வைத்து, மேல் சட்டிமூடி சந்துவாயில் ஆவிபோய் விடாதபடி துணிசுற்றி அடுப்பிலேற்றி பால் சுண்ட எரித்தெடுக்கவும் பின் அப்பிட்டை வெய்யிலில் உலர்த்தி மீண்டும் இடித்துத் துணியில் சலித்தெடுத்துக் கொள்ளவும்.

### ★ 13. கிருதம் தயாரிப்பது எப்படி?

குறிப்பிட்ட இலைகள், கிழங்குகள் இவற்றின் சாறும், கற்கங்களும் கூட்டியோ - அல்லது சரக்குகள், பச்சிலைகளின் குடிநீர்ச்சாறு இவை கூட்டியோ ஒரு மண் சட்டியிலிட்டு - இதன் அளவிற்கு 2 பங்கு (வடித்தபின் கல்கம் தேவையெனில் -4 பங்கு) பசுவின் நெய்விட்டு, வெண்ணிற நுரை எழும்பி அடங்கும் வரை காய்ச்சி நெய்ப்பதத்தில் வடித்தெடுப்பதே **கிருதம் (நெய்)** ஆகும்.

### ★★ 14. இலேகியம் தயாரிப்பது எப்படி?

குடிநீர்கள், சாறுகள் இவற்றை தனித்தோ, கலந்தோ பாண்டத்திலிட்டு உரிய அளவு சர்க்கரை கூட்டி அடுப்பிலேற்றி சிறு தீயாக எரித்து சாறு சுருங்கி (பாகு நார் போன்ற தந்து பதத்தில்) மணம் வரும் சமயம், முன்பே சூரணித்துள்ள சரக்குத்

தூளை அதில் சிறுகச்சிறுகத் தூவிக்கிண்டி; விட வேண்டிய நெய்யை முன்னரும், தேனைப் பின்னருமாக விட்டுக்கிளறிப் பக்குவத்தில் எடுத்துக்கொள்வதே '**இலேகியம்**' ஆகும். (பொதுவாக, சூரணத்திற்கு 2 பங்கு சர்க்கரையும், இதில் 1/2 பங்கு நெய்யும், இதில் 1/2 பங்குதேனும் மற்றும் நீர், பால் குடிநீர் இவை தனித்தோ, மொத்தமாகவோ சர்க்கரையின் அளவில் 4 பங்கும் சேர்த்தல் நலம்.)

### ★ 15. தைலம் எத்தனை வகைப்படும்?

மருந்துச்சரக்குகள் - மூலிகைகள் இவற்றின் விழுது, குடிநீர், சாறு இவற்றை அளவுப்படி எண்ணெயிலிட்டு தக்க பதத்தில் காய்ச்சி வடித்தெடுப்பதே **தைலமாகும்**. இது, கொதி நெய் - உருக்கு நெய் - புடநெய் - தீநீர்நெய் - ஆதவநெய் - மண்நெய் - மரநெய் - சிலைநெய் - நீர்நெய் - ஆவிநெய் - சுடர்நெய் - பொறிநெய் என்று 12 வகைப்படும். (இவை முடி நெய், குடி. நெய், பிடி நெய், தொளை நெய், சிலை நெய் என்ற ஐவகைப் பயனில் அடங்கும்.)

### ★ 16. குழிப்புடத்தைலம் என்பது என்ன?

**குழிப்புடத் தைலம் (புடநெய்)** என்பது அடியில் சிறு தொளைகளிட்ட ஒரு குடத்தில் சேங்கொட்டை, சிவனார் வேம்பு முதலியவற்றை முறைப்படி நிரப்பி, மேல்மூடி, வாய்க்கு சீலைமண் செய்து ஒரு குழி தோண்டி அடியில் சிறு பீங்கானையோ, சட்டியையோ வைத்து மேலே சரக்குப் போட்ட குடத்தை வைத்துப்புடமிடுவதால் அடியிலுள்ள சட்டியில் தைலம் இறங்கியிருப்பதாகும்.

### ★ 17. சுடர்த் தைலம் எடுப்பது எப்படி?

**சுடர்த்தைலம்** எடுப்பதற்கு - கந்தகம் முதலிய சரக்குகளை எந்த எண்ணையில் செய்யக் கூறியுள்ளதோ அதனால் அரைத்து, ஒரு புதுத் துணித்துண்டை நீரில் அலசிக் கசக்கி அதிலுள்ள கஞ்சிப் பசையைப் போக்கி உலர்த்தி, அதில் தடவி இரும்புக் கதிரில் சுற்றிக் கட்டி ஒரு முனையில் கொழுத்திப் பிடிக்கச் சுடருடன் தைலம் இறங்கிவிடும்.

### ★ 18. தைலத்திற்குரிய பதம் என்ன?

தைலத்துடன் உள்ள கல்கத்தை அகப்பையில் எடுத்துப்

பார்க்க, அவ்வண்டல் நீருடன் மெழுகுபதமாயிருப்பின் **'மிருது'** பாகமென்றும் (வாத உடலினர்க்கு) - வண்டலை விரலால் திரட்டக் கையில் ஒட்டினால் **'சிக்கு'** பாகமென்றும் (பித்த உடலினர்க்கு)-வண்டல் மிதக்காமல் மணலைப் போல் காணப்பட்டால் **'கரகரப்பு'** பாகமென்றும் (கப உடலினர்க்கு) கூறப்படும். இதில் மிருதுக்கு முன்னும், கரகரப்புக்குப் பின்னுமுள்ள பாகம் பயனின்றி தீமையும் நல்கும் ( தைலம் பதத்தில் சடசடவென்ற ஒலி அடங்கி, பசுமை நிறம்மாறி, வெண்ணிற நுரையுடன் காணும். தைலத்தில் நீர்ச்சத்து இருப்பின் எண்ணெயை சில துளிகள் தீயிலிட சிடசிடவெனத் தெரிக்கும்.)

## ★ 19. மடக்குத்தைலம் என்றால் என்ன?

ஒரு தைலத்தை முறைப்படிக் காய்ச்சி வடித்த பிறகு - முதல் தடவை எந்தச் சரக்குகளினின்று கியாழம் வடிக்கப்பட்டதோ, அதேயளவு சரக்குகளினின்று கியாழமிட்டு, முன் தைலத்திலிட்டுக் காய்ச்சி வடித்து, இப்படியே தேவைக்கேற்ப மீண்டும் மீண்டும் மடக்கிச்செய்து முடிவில் வடித்துக் கொள்ளுவதே - **மடக்குத்தைலம்** எனப்படும். மடக்கி மடக்கிக் காய்ச்சுவதால் எண்ணெய் வற்றி விடுமாகவே, முதலிலேயே அதிக அளவில் எண்ணெய் கூட்டித்தயாரிக்க வேண்டும். இவ்வகைத்தைலத்திற்கு வீரியம் அதிகமாகும். இவை - வாதம், சூலை, பிடிப்பு, முடக்கு, மேகவாயு போன்றவற்றுக்கு நலமூட்டும். (இங்ஙனமே, முன் திராவகத்துடன் ஒவ்வொரு முறையும் முன் அளவு சரக்கைக் கூட்டி வடிக்கும் வாலை வடிநீரை - **மடக்குத்திராவகம்** எனக்கூறப்படும். இது மிகவும் காரமுடனிருக்கும்.)

## ★ 20. தைலத்திற்குரிய விதிமுறை யாவை?

பொதுவாக **தைலம் காய்ச்சி முடிப்பதற்கு** முன் கடைப்பிடிக்க வேண்டிய வரிசைக்கிரமப்படியுள்ள விதிமுறைகள்ாக பின்வருவனவற்றைக் கூறப்படும். அவை - சரக்குகளைப் பார்வையிட்டுத் தேர்தல், அவற்றை சுத்தி செய்தல், தழைகளைப் பச்சையாக இடித்தல், சரக்குகளை வறுத்தோ - உலர்த்தியோ இடித்தல் - தூளாக்கல், அனைத்தின் அளவுகளையும் மதித்துக்கணக்கிடல், குடிநீர்-நெய்-சாறு - ஆற்றுநீர் - பால் முதலியவற்றின் அளவைக் காணல், மருந்துத் தொகையறிதல், நிறுத்துப்பார்த்தல், கலந்தரைத்தல், நீரில்

கரைத்தல், அடுப்பேற்றல், எரித்தல், துழாவுதல், பக்குவம்காணல், வடித்தல், தானியப்புடமிடல், கரும சாந்திசெய்தல், குருகூட்டி பத்திரப்படுத்துதல் ஆகியனவாகும்.

**★★ 21. சினேக பாக விதிமுறை என்றால் என்ன?**

ஒரு மருந்து செய்யும் பொழுது, அவற்றுடன் சேரக்கூடிய **எண்ணெய், நெய், கொழுப்பு** ஆகிய திரவப்பொருட்களின் சேர்மானம் பற்றிய விபரங்களைக் கூறுவதே - **சினேக (நெய்ப்பொருள்) பாக விதிமுறைகள்** எனப்படும். அவை - (1) கடைச் சரக்குகளின் அளவைவிட, எண்ணெய் 4-பங்கு அதிகம் இருக்கவேண்டும். (2) சரக்குகள் - மிருதுவானவை களாயின் அவற்றுக்கு 4-பங்கும்; கடினமாயிருப்பின் 8-பங்கும்; மிகவும் கடினமானதாயிருப்பின் 16-பங்கும், அதிகமாக தண்ணீர் விட்டு கொதிப்பித்து ஒரு பங்காகக் குறுக்கிப்பிசைந்து வடிகட்டிக் கொள்ள வேண்டும். (3) கியாழங்களுக்கும், சுரசங்களுக்கும், 1/4-3/8-1/2 என்ற அளவுகளில் எண்ணெய் சேர்க்கலாம். (4) பால், தயிர், மோர், ரசம் முதலியவை தைலத்தில் சேருகையில் அவைகளுக்கு சமஎடையாகச் சேர்க்கவும். (5) சுரசங்களைத் தைலத்தில் கலக்கும் போது அவை 1/8-பங்குக்கு மேல் இருக்கக் கூடாது. இவைதவிர, **தைல விஷயத்தில்** - நெருப்பு நடுத்தரமாக இருக்க வேண்டும்- இளகுபதமாயிருக்க வேண்டும் - தீயிலிட சப்தம் இருக்கக் கூடாது - திரண்ட பதம் கண்டு நீர்க்கசிவு உள்ளதாவென திரியிட்டுப் பார்க்கவும்-ஆறியபின்பே புட்டியிலடைக்க வேண்டும் - புடபாகம் தேவைப்படின் அதையும் செய்ய வேண்டும்.

**★ 22. முக்கூட்டு நெய்யின் அளவு யாவை?**

**ஆவின்நெய்-சிற்றாமணக்கெண்ணெய்- நல்லெண்ணெய்** ஆகிய மூன்றும் **முக்கூட்டுநெய்** எனவும். இவற்றுடன் குறிப்பிட்ட சாறுகளும் - சரக்குகளும் சேர்த்துக்காய்ச்சி வடிப்பது **முக்கூட்டுத்தைலம்** எனவும் கூறப்படும். இவை, உடலின் தன்மைக்கேற்ப சேர்க்கப்படவேண்டும். அதாவது, மேற்கூறிய மூவகை நெய்களையும் முறையே பின் வரும் கிரமப் படியான அளவில்தான் கலக்க வேண்டும். அவை; **வாத உடலினருக்கு - 1-3-2** என்ற பங்குவீதமும், **பித்ததேகிகளுக்கு -3-2-1** ஆகிய பங்காகவும்; **கபஉடலினருக்கு - 2-1-3** ஆகிய அளவிலும் சேர்த்தே **முக்கூட்டெண்ணெய்** தயாரிக்கப்பட

வேண்டும் என்பதாகும். இந்த அளவுகள் மாறினால் உரிய பயன் கிட்டாது.

**★★ 23. மாத்திரை அரைக்கும் விதி என்ன?**

மருந்துச்சரக்குகளைச் சூரணித்து, முறையில் கூறியுள்ளபடி பச்சிலைகள், இவற்றின் சாறுகள், தண்ணீர், கியாழம், முலைப்பால் இவற்றிலொன்றில் பிசைந்து திரட்டிக் கல்வத்தின் கீழ்ப்புறம் வைத்து அதே திரவத்தினால் சிறிது சிறிதாக மேற்புறம் ஏறுமாறு தள்ளி அரைத்து, பின் மீண்டும் அங்கிருந்து கீழ்ப்புறத்திற்கு வாங்க வேண்டும். இப்படி குறிப்பிட்ட காலம் வரை அரைக்க, மருந்து கல்வத்தில் பற்றாமல் குழவியுடன் புரண்டு வருவதே நற்பதமாகும் (முதலில் கடினப்பொருளையும், பின் இலேசானவற்றையும், முடிவில் வாசனைப் பொருட்களையும், கூட்டியரைத்தல் நலம்) பின் வழித்து பல அளவுகளில் உருட்டி நிழலில் உலர்த்திக் கொள்ள வேண்டும்.

**★ 24. சத்தி நீர் முறை பற்றி விளக்குக?**

**சத்தி நீரில்,** சரக்குகளை வாலையிலிட்டு இரு பங்கு நீர்விட்டு எரித்து (புகை மணமின்றி) இறக்குவது **'தீநீர்'** எனவும் - உப்புக்களை நீர் சேர்க்காது எரித்து (உப்பு பட படவென வெடிக்கும் வரை) இறக்குவது **'திராவகம்'** எனவும் கூறப்படும் (திராவகத்தை தரையிலிடப் பொங்கும். இதனை வடிக்க நன்கு சீலை செய்யாவிடில் ஆவியாகிவிடும். எனவே இதனை கல்கார்க் சீசாவில்தான் அடைக்க வேண்டும்). சத்தி நீரினை குறிப்பிட்ட அளவே அருந்தவேண்டும்.

**★★ 25. செந்தூர செயநீர் பற்றிக் கூறவும்?**

**செந்தூர செயநீர் :** ஐந்தாங்காய்ச்சல் வெடியுப்பு -10. அட்டுப்பு -5, சீனம் -5, சாரம் -5, வெள்ளை -5, கந்தகம் -3 எவட்சாரம் -2¼, அன்னபேதி -2, கொட்டை, கோது நீக்கிய புளி -15 ஆகிய பங்கு வீதம் கூட்டி மெழுகாக்கி, சிறு வில்லை செய்து உலர்த்தி - புதுப் பானையோட்டிலிட்டு அடுப்பேற்றி தென்னை ஓலையால் எரித்தெடுத்து, துணியில் முடிந்து பீங்கான் பாத்திரத்தில் தொங்கவிட்டு, இதனை வேறொரு மண் சட்டியினுள்ளிட்டு, வாய்மூடி 7-சீலை செய்து, சதுப்பு நிலத்தில் ஒரு மண்டலம் புதைத்தெடுக்க - பீங்கானில் செயநீர் படிந்திருக்கும். (பனிக்காலமாயின் இரவு பனியிலிடலாம்.

இதனை விட்டரைத்துப்புடமிட சகலமும் செந்தூரமாகும் - குருவாகும்.

### ★★ 26. எழுவகைச் செயநீரின் செய்முறை என்ன?

**எழுவகைச் செயநீர்** :- வீரம், பூநீறு, கல்லுப்பு, அமுரியுப்பு, சிப்பிச் சுண்ணம், சூடனுப்பு, கபாலச் சுண்ணவுப்பு வகைக்கு 1-பலம்; புனுகு, உரம், குருவண்டு, கருநாவி, இந்திரகோபம், மின் மினிப்பூச்சி வகைக்கு 1-கழஞ்சு; இவற்றை வெள்ளெருக்கம் பாலில் முட்டையின் வெண்கருவை விட்டுத் தெளிந்த நீரில் 6-சாமம் அரைத்து, வில்லைத்தட்டி உலர்த்தி, முறைப்படி புடமிடச் சுண்ணம் ஆகும். இச் சுண்ணம், கடல் நுரை, இந்துப்பு, வெடியுப்பு, சீனம், சூடன் இவை சமன் கூட்டி மேற்படி நீரிலரைத்துப் புடமிடச் சுண்ணமாகும். இதற்கு பாதியளவு சாரம் கூட்டிப் பனியில் வைக்க செயநீராகும். இதில் சகல சரக்கும் உருகும், கட்டும், மெழுகாகும், நீறும்.

### ★★ 27. மெழுகின் வகையினைக் கூறவும்?

**மெழுகு** - இரசபாடாணாதிகளையோ, உப்புக்களையோ தனியாகவோ, கடைச்சரக்குகளைக் கூட்டியோ, சாறுகளிலோ, தேனிலோ-முலைப்பாலிலோ அரைத்து மெழுகு பதமாக்குவது, **அரைப்புமெழுகு'** எனவும் - சரக்குகளை மூலிகைச் சாறுகளிலோ, நொய்ப்புப் பசையுள்ள தைலங்களிலோ 'சுருக்கு' கொடுத்து அவை இளகி மெழுகு பதமாகையில் எடுத்து கல்வத்திலிட்டு பக்குவமாய் அரைத்து எடுப்பது **சுருக்கு மெழுகு** எனவும் இரு வகைப்படும். (மெழுகை ஆறு மாதம் வைத்திருந்து இரசபாடாண வேகம் தணிந்த பின்பே பயன் படுத்த வேண்டும். அளவையும் குறைத்தும், இடைவெளி விட்டு உடல்நிலை கண்டும் கொடுக்க வேண்டும்).

### ★ 28. பதங்கம் எடுக்கும் முறை என்ன?

**பதங்கம்** எடுப்பதற்கு - ஒரு மண் சட்டியில் உப்பும், செங்கல் மாத்தூளும் போட்டு, அதன் மீது தனி வீரத்தையோ, இரசக்கலப்புள்ள மருந்துகள் கூட்டியோ; அதனை அப்படியே யாவது, ஒரு மூசையிலிட்டாவது வைத்து, மேலே உப்பு போட்டு மூடி, மேல்சட்டி மூடி சீலை மண் செய்து, அடுப்பேற்றி குறிப்பிட்ட நாழிகையும், தீயும் ஒழுங்குற எரித்து - பின் அசையாமல் கீழிறக்கிப் பிரித்து மேற்சட்டியில் ஏறியுள்ள மருந்துகளை (பதங்கம்) பக்குவமாய் வழித்து எடுக்க வேண்டும்.

## ★ 29. பற்ப - செந்தூரங்களை ஒப்பிடவும்?

உலோக - பாடாண - உபரசங்களை இலைச்சாறுகள், உப்புப்புகை நீர், செயநீர் இவற்றிலரைத்து புடமிட்டோ, வறுத்தோ, எரித்தோ, ஊதியோ நன்கு வெண்மை நிறமாகுமாறு செய்து எடுப்பது **பற்பம்** ஆகும். உலோக பாடாணங்களை சாறுகள், திராவகம், செயநீர் இவற்றிலரைத்து புடமிட்டோ, எரித்தோ, வறுத்தோ, அரைத்தோ, குகையி லிட்டு ஊதியோ, வெய்யிலிலிட்டோ நல்ல சிவப்பு நிறமாகுமாறு செய்து எடுப்பது **செந்தூரம்** ஆகும் இவ்விரண்டிலும் தங்கத்தின் நிறம் மட்டும் மஞ்சளேயாகும் பொதுவாக பற்ப செந்தூரம் இரண்டின் செய்முறையும் இணைந்தே காணும். (இங்ஙனமே, இரச பாடாணாதிகளை செயநீர், புகைநீர், சாறுகளிலரைத்து உருட்டி உலர்த்தி மூசை யிலிட்டு சீலை செய்து உலர்த்தி கரி நெருப்பிலிட்டு ஊதி எடுத்து ஆறிப்பூத்தபின் எடுப்பது **சுண்ணம்** ஆகும். இது மஞ்சளுக்குச் சிவக்கும்).

## ★ 30. கட்டு என்றால் என்ன?

இரசபாடாணங்களை தனித்தோ - கலந்தோ, சில சரக்கு களினாலான புகைநீர், செயநீர், குடிநீர், புடநெய், இலைச் சாறுகள், முலைப்பால், தேன் ஆகியவற்றினால் சுருக்குச் கொடுத்து ஒரளவு புகைந்தோடாது கட்டிக்கொள்வதே **கட்டு** ஆகும் (சில சரக்குகளை தனித்தோ, பற்ப - செந்தூரங் களாக்கியோ கூட்டி சாறுகளிலோ, முலைப்பாலிலோ அரைத்து உருட்டிக் கொள்வதுமுண்டு).

## ★ 31. கட்டு வகைத் தேர்வு என்றால் என்ன?

பொதுவாக, தங்கம், இரும்பு, செம்பு உள்ளிட்ட சில பொருட்களைத் தவிர, மற்றவை பெருநெருப்பில் நிற்காமல் புகைந்தோடி விடும். **வகாரப் போக்கில்** வெற்றி பெற வேண்டுமாயின், பாடாண-காரசார - உபரசங்கள் போன்றவை தீயிலிடப் பொன் போல் உருகிக் கண்விட்டாடுமளவிற்கு இறுக்கிக் கட்டிப் படுத்தப்பட வேண்டும். அதனதற்குரிய சாறு - செயநீர் - வடிநீர்-இணைப்பொருட்களின் உதவியால் அவற்றைக் கட்டலாம். அப்படி **கட்டிய பொருட்களுக்குரிய தேர்வு முறைகளாவன** : கல்லுப்பு உருகியாடும் - வெடியுப்பு தந்தம் போலாகும் - சீனம் உருக்கு மணிபோலாகும் - வெங்காரம் பொங்கி உருகியாடும் - இந்துப்பு வெடிக்காது

சாரம் உரோமம் போல் புகையும் - சூடன் எரியாது - துரிசு இளகாது - வீரம் உருகும் - இலிங்கம் மணிபோலுருகும் - கந்தி புகையாது - இரசம் மணி போலாகும். பாடாணம் ஊசிப் புகையாகும் - நாகம் பொன் போல் கண் விட்டாடும். இங்ஙனம் நெருப்பில் நின்றாடினால் தான் **வாதம் கைகூடும்.** (இதனைப் புரிந்து செய்யாமல் அழிந்து போகும் வாதிகளுக்கோர் எல்லையில்லை)

## ★ 32. சுருக்குக் கொடுத்தல் என்றால் என்ன?

ஒரு அடுப்பில் சுற்றிலும் நெருப்பு வெளியேறா வண்ணம் நன்கு பொருந்துமாறு - ஒரு அகலை வைத்து, அதில் வீரம், பூரம், இலிங்கம் போன்ற பாடாணங்களையிட்டு கமலாக்கினியாக எரித்துப் பழுக்கவைத்து, அதனதற்குரிய சாறுகள், முலைப்பால், தைலம், புகைநீர், செய்நீர், சுண்ணம் முதலியவற்றை அளவுப்படி சிறுகச்சிறுக விட்டுவர அவற்றை 'சுருக் -சுருக்' என வாங்கி உள்ளடக்கிக் கொண்டு பாடாணம் ஓரளவு கட்டிக்கொள்வதே **சுருக்குக் கொடுத்தலாகும்.** (இதில் சரக்கு உலர்ந்து விடாது சாற்றை இடைவிடாது விட்டுவரா விடில் சரக்கு புகைந்தோடிவிடும்).

## ★ 33. சாரணையேற்றல் என்றால் என்ன?

பொதுவாக, நெருப்பில் புகைந்தோடும் **இரசத்தை** முறைப்படி கட்டி, தீயினை வெல்லுமாறு செய்து, வாத பௌதீக முறைகளின்படி - இலகு புடங்களின் மூலம் புதிய சக்திகளையும் புத்துயிரையும் அடைய வைப்பதே **சாரணையேற்றல்** எனப் படும். இதனால், 1. மட்டமான உலோகங்களை பொன்னாகவும், உயர் மாற்றுத் தங்கமாகவும் செய்யலாம். 2. காயசித்தியடைந்து நரை, திரை, மூப்பு, பிணி, சாக்காட்டை வெல்லலாம். 3. நூறுமுறை சாரணை தீர்த்தால் (கவுனக்குளிகை) ஆகாயத்தில் பறக்கலாம். 4. இருநூற்றொரு தரம் சாரணை தீர்த்தால் (கமலினிக் குளிகை) மேரு முதல் திரியலாம். உலகம் முழுவதும் சுற்றலாம். 5. ஏழுதரம் சாரணை தீர்த்தால் நீர், நெருப்பு, காற்று இவற்றை வெல்லலாம். 6. பதினோரு தடவை சாரணை தீர்த்தால் அட்டமா சித்தி உண்டாகும். 7. பல நூறுமுறை சாரணை தீர்த்தால் (சொரூப குளிகை) உடலை கணத்தில் மறையவும், மீண்டும் தோன்றவும் செய்யலாம் (ஈசன் விந்து என அழைக்கப்பெறும் இரசத்தை சுத்தி செய்து - கட்டி - சாரணை ஏற்றி பயன்பெறும்

வகையிலான பலவித மூலிகை மற்றும் செய்முறை முதலிய விளக்கங்களை சித்தர் நூற்களில் காணலாம்).

## ★ 34. சரக்குகளைக் கொல்லுதல் என்றால் என்ன?

பொதுவாக உலோகம் - உபரசம் - பாடாணம் - காரசாரம் முதலியவற்றுக்கு இயற்கையில் அமைந்துள்ள இழிந்த பண்புகளை நீக்குவதுடன், - அவற்றுக்கு புதிய வடிவு - நிறம் பண்பு ஆகியவற்றையளித்தும் - புத்துயிரும், புதுவலிமையும் தந்து அவை எடுத்துக் கொண்ட செயலுக்கு முழுமையாகப் பயன்படுமாறு செய்வதற்கென, அவ்வவற்றுக்குரிய மாற்றுப் பொருளை இணைத்து செயல்படுவதே ஒரு சரக்கை **கொல்லுதல் (மடித்தல்)** எனப்படும். உதாரணமாக, வெள்ளைப் பாடாணத்தை - கருவூமத்தையும், சிலாசத்தை - கவுதும்பையும், கந்தியை - விராலியும், தாளகத்தை - கண்டங்கத்திரியும், பூரத்தை - முசு முசுக்கையும், சங்கு பாடாணத்தை- எருக்கம்பாலும், வெடியுப்பை - சித்திரமூலமும் வெள்வங்கத்தை - பூவரசு மூலியும், உப்பை- மாந்துளிரும் மடிக்கும் எனப்படும். இங்ஙனமே, வெள்ளீயத்தை - தாளகமும் - காரீயத்தை - மனோசிலையும், உருக்கை - இலிங்கமும், செம்பை - கந்தியும், வெள்ளியை-மாட்சிகமும், பொன்னை - நிமிளையும் கொல்லும் என அறியவும்.

## ★ 35. சரக்குவைப்பு முறை என்றால் என்ன?

சித்தர்கள் முறைப்படி சில மூலப் பொருளை இணைத்து செயற்கையாக வேறு பொருளைத் தயாரித்து மருந்துவகையில் கூட்டும் முறையே **சரக்குவைப்பு** எனப்படும் இதனால் புதிய வடிவு, பண்புகளுடன் சில பொருள் உருவாவது மட்டுமின்றி மூலப் பொருள். கிட்டாதபோது ஏறத்தாழ அதே குணமுடைய **வைப்புச்சரக்கை** பயன்படுத்திக் கொள்ளவும் வழியேற் படுகின்றது. இதில் கிட்டுதற்கரிய சில மூலிகையினம் உட்பட, சகல பொருளும் இயற்கை - செயற்கை என்ற பிரிவினுள் அடங்கும். உதாரணமாக **1. பாடாணத்தில்** வீரம், பூரம், இலிங்கம், கந்தி, துருசு, சங்கு, சூதம், தொட்டி, தீமுருகல், கௌரி ஆகியனவும், **2. பதங்கத்தில்** இரசம், நாகம், வெள்ளைப்பாடாணம் இவையும், **3. இரத்தினத்தில்** கெம்பு, பச்சை, வைரம் போன்றவையும், **4. சரக்கில்** கஸ்தூரி, கோரோசனம், காயம், அபினி, குங்கிலியம் ஆகியனவும். 5. **உலோகத்தில்** செம்பு, தரா, பித்தளை, வெண்கலம் முதலி

யனவும், **6. திராவகத்தில்** வெடியுப்பு, சாரம், கந்தகம், உப்பு, ஓமம், சீரகம் முதலியனவும். **7. மூலிகையில்** கருவூமத்தை, கருநெல்லி, கருநொச்சி, கருங்கரப்பான் முதலியனவும் கூறப்படும் (இன்னும் வைப்புச் சரக்குகள் பலவுண்டு)

### ★★ 36. கடின மூலிகையில் சாறு எடுப்பது எப்படி?

**சாறு எடுப்பதற்கு** :- ஒரு படி நாயுருவிச் சாம்பலை பாண்டத்திலிட்டு, அதில் 4-படி வாழைக் கிழங்கு நீர் விட்டுக் கரைத்து, தேற்றான் விதைச் சாந்தை அதிலிட்டு தெளியவைத்து - தெளிவில் ஒரு பலம் பூரத்தைப் போட்டு நீண்ட நேரம் எரிக்க பூரஉப்புகிட்டும். இச் சுண்ணத்தை சாறுவரா மூலி கைகளில் சிறிது விட்டுக் கசக்கிப் பிழிய சாறு வரும்.

### ★ 37. பஞ்சமித்திரன் என்றால் என்ன?

தேன், நெய், வெல்லம், குன்றிமணி, வெங்காரம் (சிலர் குங்கிலியமும் சேர்ப்பர்) ஆகிய 5-பொருட்களின் சேர்க்கையே **பஞ்சமித்திரன்** எனப்படும். சகல லோக பற்ப செந்தூரங்களை யும் பஞ்சமித்திரன் சிறிது கூட்டி உருக்கினால் - மருந்தில் குற்றமிருப்பின், உலோகம் மீண்டும் செனித்து விடும். இப்படி உலோகச் சத்து இருப்பதாகத் தெரிய நேர்ந்தால் - மருந்துடன் சமனெடை கந்தகம் கூட்டி குமரிச் சாற்றிலரைதது்ப் புடமிட்டால், மீண்டும் பிறவாது மருந்து நன்கு முடியும்.

### ★★ 38. ஐந்து சுண்ணக் குகை என்றால் என்ன?

ஐந்து விதமான பொருட்களை சுண்ணாம்பாக நீற்றிச் சேர்த்து செய்த மூசையே **ஐந்து சுண்ணக் குகை** எனப்படும் அதாவது *(1)* கடல் நுரை, சூடன், கல்லுப்பு, வெடியுப்பு, சீனம் - *(2)* கடல்நுரை, கிளிஞ்சில், குக்குடம், வலம்புரி, வெள்ளைக்கல் - *(3)* நண்டு, நத்தை, சங்கு, வெடியுப்பு, கடல்நுரை - ஆகிய இவற்றுள் ஒரு பிரிவை முறைப்படி தனித்தனியே ஊதி நீற்றி சேர்த்தரைத்து செய்த குகையாகும் இதனுள், வேதைக்குரிய உலோக - உபரசங்களையிட்டு உருக்க - நீற்ற இயலும். "வாதமஞ்சி யிதைக் கண்டால் வாயைப் பொத்தும் - வாதிக்கு யிதைவிட்டால் சுண்ணாம் பில்லை - போத வஞ்சுக் குகைக் குள்ளே சூதம் நீறும் - பொன்னீறும் வெள்ளி முதல் போக்கு நீறும் - நாதமஞ்சும் உபரசங்க ளெல்லாம் நீறும் - நாதவிந்து முதல் நீறும் நாட்டில் காணே" என்பது **கொங்கணவரின்** கூற்றாகும்.

## ★ 39. ஆறாதாரச் சரக்கின் பயன் என்ன?

உடலுக்கு மூலாதாரம் உள்ளிட்ட **ஆறுநிலைகள்** எப்படி சிறந்த ஆதாரங்களாக உள்ளதோ அதேபோல் பயனளிப்பதான ஆறுபொருளின் கூட்டே - **ஆறாதாரச் சரக்கு** எனப்படும். அவை - துரிசு, வெடியுப்பு, வெங்காரம், நவச்சாரம், கறியுப்பு, சீனம் ஆகியனவாகும், இது, சிடிகையினால் ஒன்றோடொன்று கட்டிப் போகும். இதனால் அனைத்துப் பொருட்களும் நீறும். மேலும், இதனால் - பற்பம், செந்தூரம், களங்கு, செயநீர், திநீர், திராவகம் ஆகிய யாவும் கிட்டும். மற்றும், **வேதையில்** - திரை, சவுடு, களிம்பு, ஊறல், சவளை, நமுகல் போன்ற குற்றங்கள் நீங்கிய உயர் மாற்றுப் பொன் செய்யலாம் எனவும் கூறப்பட்டுள்ளது.

## ★ 40. குரு மருந்து என்றால் என்ன?

**குருமருந்து** என்றால் அனைத்திலும் மேலான **முதன்மை மருந்து** எனப் பொருளாகும். இது பெரும்பாலும் **கடுங்காரச் சுண்ணமாக** நீறியிருப்பதாகும். இதனால் உடலில் காணும் அனைத்து கடும் பிணிகளும் அறவே நீங்குவதோடு, இவற்றுள் சில **கல்பமாகவும்** பயன் படும். எந்தவொரு மருந்து இழிந்த உலோகங்களை பொன்னாக மாற்றக் கூடியதோ அம்மருந்தே சகல நோய்களையும் போக்கி, உடலையும் வலுப்படுத்தி பொன்னைப் போலாக்கும் என்பது சித்தர்களின் கொள்கையாகும். எனவேதான், சித்தர்தம் நூற்களில் இத்தகைய குருமருந்துகளைச் சோதிக்க வேண்டியே பொன்செய்யும் **வாத முறைகளையும்** சேர்த்துக் கூற வேண்டியதாயிற்று. மற்றபடி தனிப்பட்ட முறையில் அவர்களுக்கு தங்கத்தின் மீது நாட்டமுமில்லை - அவர்கள் உடலே பொன் மயமானதால் - அவர்களுக்கு அது தேவையுமில்லை. குருமருந்தை முடிப்பதற்கு, வாத முறைப்படி - சுருக்குக் கொடுத்தல், புடமிடுதல், கொல்லுதல், கட்டுதல், செயநீர் வாங்குதல், திராவகம் வடித்தல், கிராசம்கொடுத்தல், பதங்கமேற்றல், காரசாரம் கூட்டல், மாற்றுயர்த்தல், சாரணைதீர்த்தல், ஊத்துமுறை போன்ற பல்வேறு முறைகளை அந்தந்த மருந்துகளுக்கேற்ப கையாள வேண்டும். இத்தகைய, வேந்தனுக்கு ஒப்பான குருமருந்துகள் ஏராளமாகக் கூறப்பட்டுள்ளன. அவற்றுள், பூநீர்குரு, கல்லுப்புகுரு, தங்ககுரு, வங்ககுரு, தாம்பரக்குரு, அப்பிரகக்குரு, துரிசுக்குரு, சூதக்குரு, கந்தகக்குரு, பூரகுரு ஆகியன சிலவாகும்.

### ★ 41. அனுபானம் என்பதன் பயன் என்ன?

பொதுவாக, **அனுபானம்** என்பது **துணைமருந்து** எனக் கூறப்படும். அதாவது, ஒரு நோய்க்குரிய மருந்தைக் கொடுக்கையில் அம்மருந்தின் வீரியத்தைக் கூட்டவோ, மிகு வேகத்தைக் குறைக்கவோ செய்வதற்கும் - பிணி நீங்குவதற்குரிய வாய்ப்புகளை மேலும் அதிகரிக்கச் செய்வதற்கும் - ஒரே மருந்தையே பல்வேறு பிணிகளுக்கும் பயன்பெறச் செய்வதற்கும், தலைமை மருந்துடன் சேரும் பொருளை 'துணை மருந்து (அனுபானம்) எனப்படும். இதன் உதவி இன்றி தனியாகக் கொடுக்கையில், பெரிய மருந்துகளின் சக்திகூட வீணாகி விடுவதுடன், பின் விளைவுகள் ஏற்படும் வாய்ப்பு முள்ள தால் அனுபானம் என்பது, சில சமயம் மருந்தைவிடச் சிறந்ததெனக் கருதப்படும், (உதாரணமாக, பற்ப, செந்தூர, சுண்ணம் முதலிய மருந்துகளை முழுப்பயனளிக்கச் செய்ய - பால், நெய், தேன், குடிநீர், சூரணம், இளகம், மூலிகைச்சாறு, சர்க்கரை போன்ற அனுபானத்தில் கொடுப்பதைக் கூறலாம்.) நிற்க அனுபானம் என்பது மருந்துடன் சேர்த்தோ அல்லது மருந்து உண்ணுதற்கு முன்போ-பின்போ; அல்லது சிகிச்சையின் பொழுதுள்ள உணவு வகைகளின் போதோ பிணிக்கேற்ப தரப்படும். குறிப்பாகக் கூறினால் அனுபானம் என்பது, ஒரு 'அரசன்' நல்வழி செல்ல துணைநிற்கும் 'அமைச்சருக்கு' ஒப்பானதாகும்.

### ★ 42. முப்பு செய்முறை விளக்கம் பற்றிக் கூறவும்?

**"உப்பில்லாப் பண்டம் குப்பையிலே** என்பது போல **''முப்பில்லா மருத்துவம் முழுமை பெறாது''** எனக் கூறுமளவில் சிறப்புப் பெற்ற **முப்பூ** என்பது, சித்த வைத்தியத்திற்கே இன்றியமையாத ஒரு **குருமருந்து** ஆகும். இதன் துணையால் சகல புகைச்சரக்கும் தீயில் கட்டுப் படுவதுடன் - வகாரம், காயகல்பம் முதலியன கைகூடும் எனவும் - இது சேர்ந்த சகல மருந்தும் பன்மடங்கு வீரியம் பெறும் எனவும் - மேலும் பல சிறப்புகளுண்டு எனவும் கூறப்படும். இதன் செய்முறை பலவாறாகவும், பரிபாசையிலும் கூறப்பட்டுள்ளதால், இது இன்னதென திட்டமாய் அறியாமல் - இது ஒன்றேயெனவும், மூவுப்புச் சேர்க்கையெனவும் கருதுவதுடன்-பலர் அண்டத்திலும் (பூமி) சிலர் பிண்டத்திலும் (உடல்) தேடியலைந்தும் வாடிநிற்பதே உண்மை, எனவே, இதுவே சரியான **முப்புச்சுண்ணம்** என அறுதியிட்டுக்

அனுபவத்தில் ஓரளவிற்கு மருத்துவப் கூறவியலா திருப்பதால் - பயனுக்காவது ஒத்துவரக் கூடியதான முப்புக்குரு பாகத்தையே ஏற்றுக்கொள்ள வேண்டியதாயுள்ளது. அத்தகையதொரு எளிய மிகச்சிறந்த முறையைக் கூறியுள்ளோம்.

**முப்பு செய்முறை விபரம் :-** கடல்நுரைக் கட்டியைப் பொடித்து நன்கு கழுவி கவுச்சி நீக்கி உலர்த்தி, சிற்றண்ட வெண்கருவால் இரு சாமமரைத்து, வில்லை செய்து உலர்த்தி, மூசையிலடக்கி மூடி 7-சீலை செய்து, துருத்தியினால் குகையழுக ஊதி, மறுநாள் திறந்து பார்க்க சுண்ணமாய் மலர்ந்திருக்கும். இச்சுண்ணம்-1. பூநீர்-1/2, வெடியுப்பு - 1/4 பலம் வீதம் கூட்டி - வெடியுப்பு, சீனம், வெங்காரம் - சாரம், கறியுப்பு, துருசு இவை சமனாய் இடித்து. பீங்கானிலிட்டு 20 நாள் பனியில் வைத்தெடுத்த - **அறுவகை செயநீரால்** இருசாம மரைத்து வில்லை செய்து உலர்த்தி, அகலிலிட்டு மூடி 7-சீலை செய்து, 5 - எருவில் புட மிட **முப்புச் சுண்ணம்** பூர்த்திருக்கும். இதனால் உரிய பலனைப் பெற இயலும்.

## ★ 43. சம்பைச்சரக்குகள் என்பன யாவை?

பொதுவாக கடைகளில் விற்கப்படும் மருத்துவ குணமுடைய உலர்ந்த - மூலிகை, உலோகம், பாடாணம். காரசாரம், உபரசம், சீவயினம் முதலிய யாவுமே கடைச்சரக்கு அல்லது **சம்பைச்சரக்கு** எனப்படும். எனினும், **சம்பைச்சரக்கு –64** எனப்படுவது பொதுவாக தாவர வகைப் பொருட்களையே குறிக்கும். அவை - சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய். தான்றிக்காய், நெல்லிவற்றல், ஓமம், சீரகம், கருஞ்சீரகம். சதகுப்பை, வெந்தயம், கொத்துமல்லி, வசம்பு, கடுகு, மஞ்சள். கடுகுரோகணி, அதிவிடயம், சிறுதேக்கு, கிச்சிலிக்கிழங்கு கற்கடகசிங்கி, கார்போகரிசி, வாய்விடங்கம், அதிமதுரம் அரத்தை, வாலுளுவை, பெருங்காயம், அ்ரக்கு, சேங்கொட்டை தாளிசபத்திரி, கிராம்பு, சிறுநாகப்பூ, சடாமாஞ்சில், கோட்டம் மெழுகு, குங்கிலியம், குந்திரிக்கம், கூகைநீறு, கஸ்தூரி கோரோசனை, குங்குமப்பூ, சந்தன்க்கட்டை, சாதிக்காய் சாதிப்பத்திரி, பாக்கு, சித்திரமூலம், திப்பிலி மூலம், யானைத் திப்பிலி, புளி, கொருக்கைப்புளி, கருங்கொடிவேலி, செவ்வியம் காட்டுசதகுப்பை, கடுக்காய்ப்பூ, வெண்கடுகு, மரமஞ்சள் மஞ்சிட்டி, சிறுவாலுளுவை, செஞ்சந்தனம், ஏலக்காய் தாமலபத்திரி, நிலாவிரை, தூணிப்பிசின், நேர்வாளம், பிஞ்சுச் கடுக்காய் ஆகியனவாகும். (இதில் சில மாறுபடவும் கூடும்)

### ★ 44. வேதைக்கு உதவும் பொருள் யாவை?

பொன் செய்யும் கலையாகிய **வேதைமார்க்கத்திற்கு** உதவும் பொருட்கள் ,பலவாகும். அவற்றுள் சிலவற்றை முக்கியமான **ஆதிப் பொருட்களாகக்** கூறுவதுண்டு. அவை- ***(1) பேதிப்பதற்குரிய மூலப்பொருட்கள் - 18;*** கந்தி, கவுரி, தாளகம், சிலை, சிங்கி, வீரம், இலிங்கம், வெள்ளை, தொட்டி, பொன்னம்பர், கபரி, கோழித்தலைக் கந்தி, நிமிளை, இராசவர்த்தம், கார்முகில், குதிரைப்பல், பஞ்ச பட்சி, எருமைத்தொட்டி. ***(2) நீற்றினத்திற்குரிய ஆதிப்பொருட்கள் - 9;*** புனுகு, வீரம், குருவண்டு, உரம், சூதம், சூடன், கார்முகில், சவர்க்காரம், சுண்ணம். ***(3) செந்தூரத்திற்குரிய ஆதிச்சரக்குகள் -5;*** நவலோகம், பாடாணங்கள், சூதம், காரம், உபரசங்கள். ***(4) சத்துச் சரக்குகள்-7;*** கந்தி, கவுரி, சிலை, துத்தம், தாளகம், அப்பிரகம், வெடியுப்பு. ***(5) வர்ணத்திற்குரிய மூலப் பொருட்கள்-4;*** உப்பு, நாதம், தங்கம், நிமிளை ஆகியனவாகும். இவை தவிர மேலும் பலவும் - இவற்றை குருவாக முடிக்க உதவும் **செயநீர் - திராவகம் - சாறு -** சத்து போன்றவையும் பலவுண்டு.

### ★ 45. வேதை மார்க்க நுட்பம் யாவை?

உலோகங்களை உருக்கி, குரு மருந்தைத் தந்து பொன்னாக்குவதே - **வேதை** எனப்படும். இதில், சிடிகை - இரச-மாற்றுயர்வு - இலவண - பரிசன - மகாகுரு - மாரண -தொந்த-குளிகை.வேதைகள் எனப் பல வகையுண்டு. வேதைக்கு உதவும் பொருட்களையும் - அவற்றின் பயன்களையும் கூறுவதே **வேதை மார்க்க நுட்பம்** ஆகும். அவற்றுள் சில; **(1) சாரம்** விட்டால்-செயநீரில்லை, **காரம்** விட்டால் - உருக்கினமில்லை, **தாரம்** விட்டால் - களங்கு இல்லை, **வீரம்** விட்டால் - மணிகள் இல்லை, **பூரம்** விட்டால் - குருவுகள் இல்லை. **செம்பு** விட்டால் - வாதம் பொய்யாம், **சவுக்காரம்**, **துருசு** விட்டால் - நீற்றினம் போகும், **தங்கம்** விட்டால் - கனகம் இல்லை, **கல்லுப்பு** விட்டால் - நாதங்கள் இல்லை என்பனவாகும். மேலும் **(2) தாளகம்** - வெள்ளியத்தையும், **மனோசிலை** - காரீயத்தையும், **இலிங்கம்** - உருக்கையும், **கந்தகம்** - செம்பையும், **மாட்சிகம்** - வெள்ளியையும், **நிமிளை** - பொன்னையும் மாரணம் (முடிதல்) செய்யும். இங்ஙனமே *(3)* வாதத்தில் சித்தி பெற உப்புக்கட்டு, பூரவுப்பு, சவர்க்காரகுரு,

தாளக நீறு, வங்கச் சுண்ணம், துருசுகுரு போன்ற ஏராளமான கட்டு - களங்கு - குரு - செயநீர் - வடிநீர் போன்ற பாகங்களும் நுட்பமாகக் கூறப்பட்டுள்ளன.

## ★ 46. பஞ்சசுத்தி என்பன யாவை?

தமிழ் மருத்துவத்தில் கூறியுள்ளபடி **மருந்துகளை** ஐவகையாக தூய்மைப்படுத்தும் முறைகளே **பஞ்சசுத்தி** எனப்படும் அவை - (1) பூமி, நெல், தானியங்கள் இவற்றில் புதைத்து வைத்தல் (2) தண்ணீர், பால், இளநீர், கியாழம், திராவகம், செயநீர், காடி இவற்றால் ஊறவிடுதல், கழுவுதல் அல்லது கொதிப்பித்தல். (3) நெருப்பிலிட்டு அவித்தல், எரித்தல், புடமிடல், சூடுண்டாக்கல், வாட்டுதல் (4) காற்றில் உலர்த்தல், ஆவிபோகச்செய்தல் (5) சூரிய ஒளியில் அல்லது வெளிச்சத்திலிடல் ஆகியனவாகும். இங்ஙனமே, **சிவ நெறியாளர்களுக்கு** உரிய சுத்திகளாவன- (1) குளித்தல், துணி துவைத்தல் (2) ஆத்மசுத்தியோடு தியானித்தல் (3) பூசைக்குரிய சாமான்களை விதிப்படி கழுவுதல் (4) இலிங்கத்தை சுத்தித்து வணங்குதல் (5) ஓம்-எனும் மந்திரம் உச்சரித்தல், பஞ்சாட்சரம் ஓதல், வணக்கம் கூறல். ஆகியனவாகும். (ஐவகை சுத்தி - ஆத்துமசுத்தி, இலிங்கசுத்தி, திரவியசுத்தி, பூதசுத்தி, மந்திரசுத்தி.)

## ★★ 47. மருந்துகளின் சோதனை முறை என்ன?

மருந்துகள் உரிய முறைப்படி நன்கு முடிக்கப்பட்டுள்ளதா என்பதை சில பரிசீலனைகளின் மூலம் உணரலாம். அதாவது, (1) **அயச்செந்தூரம்** - தண்ணீரில் தூவ மேலே மிதக்க வேண்டும். அடியிலிறங்கினால் இரும்புத்தூள் இருப்பதாய் அறியலாம். (2) **வங்க பற்பம்** - இதில் சிறிதளவை கரண்டியிட்டு, சிறிது எண்ணெய் கூட்டிக் காய்ச்ச உலோகச் சத்திருப்பின், ஈயம் அடியில் தங்கும். (3) **தாம்பர பற்பம்** - இதில் சிறிது தூளை உரித்த வாழைப்பழத்தினுள் செலுத்தி வைக்க, பழம் கட்டையைப் போல் கடினமானால் மருந்தில் மாசில்லை என அறியலாம். (4) **இலேகியங்கள்** - இவற்றில் நீர்ச்சத்து இருப்பின், மேற்புறம் வெண்ணிற ஆடை படிந்து பூத்து விடும். (5) **பாடாணக் கட்டுகள்** - இவற்றைத் தீயிலிட புகையாது உருக வேண்டும். (6) **நாகம், ஈயம்** முதலிய கட்டுகள் புகையாது உருகிக் கண்விட்டாட வேண்டும். (7) **உப்புக் கட்டுகள்**- இவற்றை தீயிலிட சடசடவென வெடிக்காமலும், எரிந்து போகாமலும், உருகி

மணியாகியிருக்க வேண்டும். (8) தைலங்கள்-இவற்றில் நீர்ச்சத்து இருப்பின், சில துளிகளை நெருப்பிலிட சிடசிடவெனத் தெரிக்கும். (9) பற்ப - செந்தூரங்கள் - தளுக்கின்றியும், உரிய நிறத்திலும் இருப்ப துடன், உள்ளங்கையிலிட்டுத் தேய்க்க நெரடு தட்டாமலும் நொய்மையாய் இருக்க வேண்டும்.

## புடம் - தீயின் விதி

### ★★ 48. புடமிடுதற்குரிய விதி என்ன?

புடமிடுகையில் வரட்டி கூடிவிடின் மருந்துகளில் சில உருகியும் உருகாமலும், கடினமாகவும், சிட்டமாகவும், புகைந்தும் போய் அவற்றை மீண்டும் பக்குவப்படுத்த இயலாமற் போய்விடும். இங்ஙனமே எரு குறையுமாயின் மருந்துகள் தக்க அளவில் மென்மையும், வெம்மையும், சிவப்பும், பூத்தலுமின்றிக் கருத்துப் போய்விடும் (இவற்றை மீண்டும் அரைத்துப் புடமிடப் பயனுண்டு) - மேலும் புடத்தின் மீது காற்று மோதினால் தீயின் ஒழுங்கு மாறி சீரான பக்குவம் கிட்டாது. எனவே தக்க அளவு குழிதோண்டி அதனுள் எருவை அடுக்கிப் புடமிடுவதே நற்பயன் தரும்.

### ★ 49. எருவின் அளவு என்ன?

எருவில், காட்டில் கிட்டும் இயற்கை வரட்டி - 2 பலம் எடையிலும், நாமே தட்டி உலர்த்தும் செயற்கை வரட்டி - 12'' X ½'' அளவிலும் இருக்கவேண்டும். ஆயின் சீரான அளவு கிட்டாதபோது ஒரு வரட்டியை 15 ரூபாய் எடையளவில் கொண்டு தேவையான எருவின் எண்ணிக்கைக்கேற்ப பெருக்கி வீசையாக மாற்றி நிறுத்தெடுத்துக் கொள்ளல் நலம். (பசு அல்லது ஆட்டின் சுத்தமான தனி சாணத்தினாலான வரட்டிகளே மருந்துக்கு தீங்கின்றி சக்தியூட்டுபவை ஆகும்.)

### ★★ 50. புடபாகம் எத்தனை வகைப்படும்?

வரட்டியின் உதவியால் எரிக்கப்படும் எரிப்புத் திட்டமாகிய புடம் ஏழு வகைப்படும். அவை, **காடைப்புடம்** (1-எரு)- **கவுதாரிப்புடம்** (3-எரு) **குக்குட புடம்** (10-எரு)- **வராக புடம்** (50-எரு) **மணல் மறைவுப்புடம்** (90-எரு)- **கனபுடம்** (800-எரு)- **கெஜப்புடம்** (1000-எரு) ஆகியனவாகும். மற்றும்

**பூமிப்புடம்** - ஆட்டெரு அகலம். விரற்கடை நீளமாகும் இவையன்றி, **உமிப்புடம் - தானியப்புடம் - சூரியபுடம் - சந்திரபுடம் - அம்மாவாசைப் புடம் - பருவப்புடம் - பனிப்புடம் - பட்டைப்புடம்** ஆகியனவும் பயனில் உள்ளன

**★★ 51. நெருப்பின் அளவு யாவை?**

மருந்துகளைச் செய்வதற்குரிய நெருப்பின் அளவு 4 வகைப்படும். இதில், விளக்கின் சுடரைப் போலுள்ள தீக்கு **தீபாக்கினி** (1 விறகு) என்றும் - மலர்ந்த தாமரைப் பூவைப் போலுள்ள தீக்கு **கமலாக்கினி** (2-விறகு) என்றும் - வாழைப் பூவைப் போலுள்ள தீக்கு **கதலியாக்கினி** (3-விறகு) என்றும் - இந்த அளவுகளுக்கு மிகுதிப்பட்ட தீக்கு **காடாக்கினி** (4 விறகு) என்றும் பெயராகும். (விறகு இருவிரற் கடையளவில் ஒரு சான் நீளத்திலுள்ளதாகும்).

**★ 52. மருந்தெரிக்கும் விறகு யாவை?**

அடுப்பேற்றிய மருந்துகளைக் காய்ச்ச, வறுக்க, நீற்ற - சில குறிப்பிட்டவகை **விறகுகளை**, அதுவும் **ஒரேசாதியாகவே** பயன்படுத்தவேண்டும் எனக் கூறப்பட்டுள்ளது. அவை, புளி -சதுரக்கள்ளி-வெட்பாலை- வேங்கை - உதிரவேங்கை - வெள் வேல்-காசா-ஆவாரை-வல்லாரை - வேம்பு முதலியனவாகும். மற்றும், **துளை - குடித்தைலங்களுக்கு** - உசிலை, இலந்தை; **பிடித்தைலத்திற்கு**-புளி, இலுப்பை; சுரம் முதலியவற்றுக்குரிய **உயர் வகை த்தைலங்களுக்கு** - ஆவாரை, சிற்றாமுட்டி ஆகிய விறகு அல்லது அவ்வவற்றின் அடுப்புக்கரிகளைப் பயன் படுத்த வேண்டும்.

## புற மருந்து - 32

**★★ 53. புற மருந்து எத்தனை வகைப்படும்?**

புற மருந்து முறையே, கட்டுதல் - பற்று - ஒற்றடம் - பூச்சு-வேது - பொட்டணம் - தொக்கணம் - புகை - மை - பொடிதிமிர்தல்-கலிக்கம்-நசியம்-ஊதல்-நாசிகாபரணம்-களிம்பு-சீலை-நீர்-வர்த்தி-சுட்டிகை-சலாகை-பசை-களி-பொடி -முறிச்சல்-கீறல்-காரம்-அட்டைவிடல்-அறுவை-கொம்புகட்டல் -உறிஞ்சல்-குருதிவாங்கல்-பீச்சு என 32 வகைப்படும். (இவை வெளிப் பிரயோகத்திற்குப் பயன்படக் கூடியதாகும்).

★ 54. புற மருந்துகளின் வன்மைக்கால அளவு என்ன?

புற மருந்துகளுள் : (1) நீர், பொடி, வர்த்தி, நாசிகாபரணம் முதலியன - 3 மாதமும், (2) சீலை, களிம்பு முதலியன - 6 மாதமும் (3) மை, நசியம், கலிக்கம், பசை, பீச்சு முதலியன - 1 வருடமும் முறையே உரிய சக்தியுடன் திகழும். (பின்னர் தத்தமது வலிமை குன்றும்).

★ 55. கட்டுதல் என்றால் என்ன?

இது இலைகள், பட்டைகள், பறவைகள் இவற்றை நன்கு இடித்தோ - அரைத்தோ - வதக்கியோ - புளித்த நீர் இவற்றில் வேகவைத்தோ நோயுற்ற இடத்திலிட்டுக் கட்டுவதாகும். இவை தவிர பாடாணம் முதலியவற்றைக் கட்டுதலுமுண்டு. (இவற்றிலொன்றை சன்னிக்கு - தலையிலும், கண்ணோய்க்கு- கண்ணிலும், கைகாலெரிவுக்கு-உள்ளங்கை, உள்ளங்காலிலும், கடுவனுக்கும் கால் வீக்கத்திற்கும்-காலிலும், விதை வீக்கத்திற்கு -விதையிலும், அரையாப்புக்கு-அரையிலும் கட்டுவதாகும்.)

★ 56. பொட்டணம் என்பது என்ன?

இது, சரக்குகளைப் பொடித்து துணித்துண்டால் பொட்டலமாகக் கட்டி-சுடவைத்த எண்ணெய்களில் நனைத்து நோயுற்ற இடத்தில் ஒற்றடமிடுவதாகும் மேலும், பெண்களுக்குப் பேறு காலத்தில் பெருங்காயத்தை முடிந்து காதிலும்; வங்குவாசல் தளர்ச்சிக்கு துவர்ப்புப் பொடிகளை முடிந்து யோனியிலும், மூக்கு நோயினர்க்கு மூக்கிலும் - ஆசன நோயினர்க்கு ஆசனத்திலும் மருந்து முடிச்சுகளை வைப்பதற்கும் **பொட்டலம்** என்று பெயர்.

★ 57. புகை என்றால் என்ன?

இது, மயிலிறகு, சீரகம் முதலியவற்றை துணித் துண்டில் இட்டுத் திரி கொழுத்தியாவது - விலங்குகளின் குழம்புச் சீவல்; மாடு, எருமை இவற்றின் கொம்புச் சீவல், நல்ல பாம்புச் சட்டை, பன்றிப் புட்டை இவற்றை நெருப்பிலிட்டாவது - அகத்தியர் குழம்பு, கௌசிகர்மை இவற்றை துணியில் தடவி திரித்து விளக்கெண்ணெயில் நனைத்துக் கொழுத்தியாவது புகை உண்டாக்குவதாகும்.

★ 58. மை தயாரிப்பது எப்படி?

இதற்கு, சரக்குகளை அஞ்சனக் கல் முதலியவற்றோடு

சேர்த்து, உலர உலர இலைச்சாறு விட்டு அரைத்து காயவிட்டோ - சரக்குகளைக் கருக்கியோ. தேன் விட்டு **மைபோல்** அரைத்தெடுக்க வேண்டும். (சில சரக்குகளையும் - களாப்பூச்சாறு முதலியவற்றையும் கூட்டி தேன்விட்டு காய்ச்சிக் கொள்வதுமுண்டு.)

**★ 59. ஊதல் மற்றும் கலிக்கம் என்றால் என்ன?**

சில இலைகள், உப்புச் சரக்குகள் இவற்றிலொன்றை வாயில் இட்டு மென்று காது முதலியவற்றில் செலுத்தி ஊதுவது **ஊதல்** என்றும் - சரக்குகளைச் சாறுகளால் அரைத்து உருட்டி மாத்திரைகளாக்கிக் கொண்டு, தேன், முலைப்பால், அல்லது வேறு சாற்றில் உரைத்துக் கண்ணிலிடுவது **கலிக்கம்** என்றும் கூறப்படும்.

**★ 60. நசியம் - நாசிகாபரணம் பற்றி கூறவும்?**

இவ்விரண்டில், **நசியம்** என்பது, குறிப்பிட்ட மாத்திரைகளைத் துணியில் முடிந்து முலைப்பாலிலோ, வேறு சாற்றிலோ ஊறவைத்தும்; தனி இலை, பூக்களை கசக்கியும் மூக்கில் பிழிவதும்; தைலம் முதலியவற்றை மூக்கிலிடுவதுமாகும், (இவை திரவ ரூபமாகும்) - **நாசிகாபரணம்** என்பது சரக்குகள், வேர்களைத் தனியாகவோ, சாறுகள், பால்களில் ஊற விட்டோ நிழலிலுலர்த்திப் பொடித்துச் சலித்து மூக்கிலிடுவதாகும். (இவை தூள் ரூபமாகும்)

**★ 61. பீச்சு - சலாகை என்பது என்ன?**

ஆசன வழியாக, சுடு நீர் அல்லது வழுவழுப்பான நீர்ப் பொருளை குழாயின் மூலம் பீச்சுவதனால், இறுகியமலத்தை உடைத்து வெளியேற்றும் செயலுக்கு **பீச்சு** என்றும் - சதை, கல், வாயு இவற்றாலான நீரடைப்பை நீக்கும் பொருட்டு பயன்படும் மெல்லிய சிறிய முனைமழுக்கமான தொரு கருவிக்கு **சலாகை** என்றும் பெயராகும். (இதனால் புண் புரைகளின் ஆழத்தையும் அறியலாம்).

**★★ 62. அட்டைவிடல் - உறிஞ்சல் - குருதிவாங்கல் இவற்றை ஒப்பிடவும்?**

இவற்றுள், நோவுள்ள வீங்கிய இடத்தில் முறைப்படி அட்டையைப் பற்றும்படி விடுவதனால், அது அங்கு கடித்து

அங்குள்ள தீய இரத்தத்தையெல்லாம் குடித்து விடுமாறு செய்து வீக்கத்தை வற்றச் செய்வது அட்டைவிடல் என்றும் - உரிய கருவிகளை வாயில் வைத்து உறிஞ்சி, விரணங்களிலுள்ள சீழ், குருதியினை வெளியேற்றுவது உறிஞ்சல் என்றும்-கார் இரத்தக் குழாயினைக் கீறி நோயாளியின் உடலிலுள்ள மிகு ரத்தத்தை வெளிப்படுத்துவது குருதிவாங்கல் என்றும் கூறப்படும். எனவே, இம்மூன்றின் செயல்முறை வேறாயிருப்பினும் குறிக்கோள் இரத்தத்தை வெளியேற்றுவதே என்பது புலனாகிறது.

**★★ 63. வர்த்தி - சீலை - காரம் இவற்றை ஒப்பிடவும்?**

இவற்றுள் நச்சுச் சரக்குகளைப் பொடித்து சாறுகளிலரைத்துக் குழம்பாக்கி அதில் துணியை நனைத்தோ; மருந்துத் தூளை துணியிலிட்டுத் திரித் திரித்தோ ஆறாத விரணங்கட்கு வைப்பது வர்த்தி எனவும் - நச்சுச் சரக்குகளை நீரிலோ, சாற்றிலோ அரைத்துக் குழம்பாக்கி, அதில் துணியை நனைத்து புண்களிலிடுவது சீலை எனவும் - நச்சு மருந்துகளைக் கூட்டி புண்ணை ஆற்றவோ, ஆக்கவோ வைப்பது காரம் எனவும் கூறப்படும். எனவே இம்மூன்றின் பயனும் ஒன்றேயாகும்.

**★ 64. முறிச்சல் - கொம்பு கட்டல் என்றால் என்ன?**

உடலின் கைகால் முதலியன பிறழ்ந்து நிலைமாறிபிருக்கையில் அதைச் சரியாகத் தள்ளுவதற்குத் தெரிந்து செய்யுமொரு தொழிலே முறிச்சல் என்பதாகும் - இங்ஙனமே, உடைந்து போகும் உடலுறுப்புக்களை இணைத்து, மீண்டும் ஒட்டிக் கொள்ளுமாறு செய்வதற்கென அங்கு கொம்பு வைத்துக் கட்டுவதே கொம்பு கட்டல் என்பதாகும்.

## கருவி வகைகள்

**★ 65. கருவி வகைகளின் விபரம் யாது?**

சித்த மருந்துகளைச் சிறப்புடன் செய்து முடிப்பதற்கு குறிப்பாக, கல்வம்-சுரண்டி-அகல்-குப்பி-அடைப்பான்-சலாகை -சட்டி-மூசை-அடுப்பு-துருத்தி-புலமினுக்கி-மட்கலம் - உலோக பாத்திரங்கள்-குந்தணை-உரல்-உலக்கை-சில்லியடை-அம்மி -

குழவி-மூழி-பிடிச்சீலை-பற்றகற்றி-வடிகருவி-நீராடு தொட்டி -புரியணை-ஊதுகுழல்-குறடு-நீர்காறு - கரண்டி-பனை- கத்தி - வெட்டரம்பு-அரம்-விசிறி-பதி விளக்கு-பிடிசாவி - வாள் - உளி -அகல்- சாணைக்கல் - மருந்தை பத்திரப்படுத்தும் பாத்திரம்-சீலை-வரட்டி-மணல்-விறகு - சுண்ணாம்பு - கரி - குழி - புடம் -பொறி முதலிய கருவிகள் தேவையாகும்.

## ★ 66. கல்வம் - குழவி பற்றி விளக்குக?

**கல்வம்** என்பது கல்லினாலான முட்டைவடிவமான குழியுள்ள அம்மியாகும். இதில் பொடி, கற்கம் தவிர நீர்ப் பெருக்குள்ள பொருட்களை அரைக்கலாம். இதில் நடைமுறை யிலுள்ள **கருப்புக் கல்லினால்** செய்யப்பட்ட கல்வம் தேய்ந்து மருந்துடன் கலவாதாகவே அதில் அரைத்த மருந்துகள் நற்பயன் தரும். (**சிவப்புக் கல்லிலானது** சன்னி பாத நோய்க்குரிய மருந்துக்கு நல மூட்டும் - **வெள்ளைக் கல்** மருந்தின் வேகத்தை அழிக்கும் - **மஞ்சள் கல்** மருந்துக்குப் ப்பயன் தராது - **பச்சைக்கல்** அனைத்திலும் மேலானதாகும்.)

## ★★ 67. மூசை (குகை) என்பது என்ன?

சுண்ணம், களங்கு முதலியன செய்தற்குப் பயன்படும் சிறிய கருவியே **மூசை** எனப்படும். இதில், மணல், கரி, சாம்பல், களிமண், தேங்காய் நார் இவை சேர்த்துச் செய்வது-**மண் மூசை** என்றும் - களி மண், அயக்கிட்டம், சணல், தார், உமிக்கரி, அடுப்புக்கரி, சுண்ணாம்பு இவை சேர்த்துச் செய்வது **வச்சிர மூசை** என்றும் கூறப்படும். (இவை தவிர **உருக்குக்குகை, பஞ்ச சுண்ணக்குகை, பஞ்சபூதக் குகை** என்ற வேறு சில மூசைகளு முண்டு).

## ★ 68. உரல் - உலக்கையின் அமைப்பு என்ன?

இவை, கருங்கல், இரும்பு, வெண்கலம் இவற்றால் தனித் தனியே **உரல்களும்** - ஒரு முனை பலாமுட்களைப் போல் பற்களையுடையதாகவும், மறுமுனை சம்மாகவுமுள்ள இரும்புலக்கையும் - இடித்த சரக்குகளை கிளற, வழிக்க, ஒருமுனை கொலுவைப் போலவும், மறுமுனை அகப்பையைப் போலும் அமைத்த சிறிய **கடப்பாரையும்**, வயிரம் பொருந்திய மரத்தினாலும் உலக்கையுமாகச் செய்யப் பட்டவையாகும்.

## ★★ 69. சீலை மண் என்றால் என்ன?

**சீலை மண்** என்றால், ஒரு சுத்தமான முரட்டுத் துணியில் நன்கு அரைத்த புற்று மண்ணை (அல்லது வேறு சில பொருளை) ஒருபுறம் தடவி - குப்பி, அகல் மற்றும் சீரான இரு சட்டிகளின் வாய் ஒன்றோடொன்று பொருந்துமாறு மட்டமாய்த் தேய்த்து, அதனுள்புடமிடும் மருந்து வில்லைகளை வைத்து, இடைவெளியின்றிப் பொருத்தி - மருந்தின் ஆவி முதலியன வெளியேறாவண்ணம், கவசத்திற்கேற்ப பல சுற்றுகள் சுற்றி அழுத்தமாக கட்டப் பயன்படுவதாகும்.

## ★★ 70. பொறிகளின் வகை யாவை?

பலவித **மருந்துத் தயாரிப்பு சாதனங்களான பொறிகள்,** அவியந்திரம் - துலாயந்திரம் - தூபயந்திரம் - மெழுகுத்தைல இயந்திரம் - சுடர்த்தைலக்கருவி - குப்பிபுடக்கருவி - குழித்தைலக் கருவி - செந்தூரம் எரிக்கும் கருவி - பதங்கக்கருவி - வாலுகாயந்திரம் - திராவக வாலையந்திரம் எனப்பலவகை படும்.

### வாழ்நாளில் முக்குற்றக் காலம்!

தானவனும் அமைத்தபடி வயது நூறு
சகலருக்கும் இளமையிலே சிலேத்துமமாகும்
ஆனநடு வயது பித்தம் அப்பால் வாதம்
ஆறஞ்சு மூவாண்டு மாதம் நான்கு
ஈனமுற மூவருமே மூன்று பங்காய்
இப்படியே நடந்துகொள்வார் இறைவன் முன்னால்
ஏனமுறவமைந்த வண்ணம் ஆண்டு மாதம்
இயைவான் நாள்க்ள்தப்பி மறிப்பதாலே

(வை.ச.)

# IV. மருந்துகளின் சுத்தி முறைகள்

## ★★ 1. மருந்துகளை ஏன் சுத்தி செய்ய வேண்டும்?

ஒவ்வொரு மருந்திலும் அதனதன் தன்மைக்கேற்ப நற்குணத் துடன், தீக்குணமும் இணைந்தேயிருப்பதால் அவற்றை ஒன்று சேர்க்கையில் ஒன்றின் தீக்குணத்தினால் மற்றொன்றின் சக்தி குன்றுவதோடு, வேறு தவறுகளும் விளையுமாகவே, சகலத்தை யும் பயன் படுத்து முன் அதனற்குரிய முறை அல்லது மாற்று மருந்துகளினால் **தீக்குணத்தை மட்டும் நீக்கி சுத்தி செய்த பின்பே** பயன்படுத்த வேண்டும். இப்படி தூய்மை படுத்திய மருந்துகளே முழுப்பயன் தரும்.

## ★ 2. பனிநீர் - கோநீர் - காடியின் சுத்தி யாவை?

இவற்றுள், **பனிநீரை** எடுக்க தூய மெல்லிய துணியை கசக்கிப் பிழிந்து தூசியின்றி உலர்த்தி, நெற்பயிர் அல்லது அறுகம் புல்லின் மீது இரவில் விரித்து, காலையில் சூரிய உதயத்திற்கு முன் எடுத்து அதில் படிந்துள்ள பனிநீரை சுத்தமான பாத்திரத்தில் பிழிந்து வடிக்க வேண்டும் - **கோநீரை** (பிற மிருகங்களின் நீரைக்கூட) புதுச் சட்டியிலிட்டு, மத்தினால் அரை நாழிகை கடைந்து, வரும் நுரைகளை நீக்கி, முரட்டுத் துணியில் ஏழுமுறை வடிக்க வேண்டும் - **காடி நீரை** பானையின் வாயை மூடி கடும் வெய்யிலில் மூன்று நாள் வைத்த பின் வண்டலை நீக்கி வடிக்க வேண்டும்.

## ★ 3. பால் வகையின் சுத்தி என்ன?

இதில், **முலைப்பாலை** சிறிது தும்பைப் பூவையிட்டு கால் நாழிகை சென்ற பின்னும் - **வெள்ளாட்டுப்பாலை** முரட்டுத் துணியில் ஏழுமுறையும் - **பசுவின்பாலை** (கன்றின் வாய்பட்ட வேகம் தணிந்த பின் கழுவி) கறந்து நுரையடங்கிய பின்னும், முறையே வடித்துக் கொள்வதே சுத்தியாகும்.

## ★ 4. நெய் வகையின் சுத்தி என்ன?

இதில், **விளக்கெண்ணெய்** முதலிய நெய்களை குப்பியில் இட்டு கால் குப்பி மறைய மணலில் புதைத்து இருதினம்

'வாதுமை நெய்க்கு 2-சாமம்) ரவி புடமிட்டுத் தெளிவை வடிக்கவும் - **வேம்பின் நெய்க்கு** வேப்பம் பட்டைக்கியாழமும், **இலுப்பை நெய்க்கு** எழுத்தாணிப் பூண்டுக்குடிநீரும்; **புங்கு அல்லது தெங்கின் நெய்க்கு** அதனதன் பாலும் சமனளவாகக் கூட்டிக் காய்ச்சி வடிக்க வேண்டும்.

**★ 5. வேர் முதலியவற்றின் சுத்தி யாவை?**

பொதுவாக, **வேர் வகையினை** ஆற்று நீரில் கழுவுதலும் - **இலை வகையினை** நீரில் கழுவாது, துணியில் துடைத்து பழுப்பு, அழுகலை நீக்குதலும் - **மலர் வகையினை** காம்பு, புல்லிதழ், மகரந்தம் முதலியவற்றை நீக்குதலும் - **பட்டை வகையினை** துடைத்து மேற்புறணியைச் சீவிக்கழித்தலும் - **கிழங்கு வகையினை** கழுவி மேற்றோலும், உள் நரம்பும் நீக்குதலும், முறையே அதனதற்குரிய சுத்தி முறைகளாகும்.

**★ 6. திரிகடுகுவின் சுத்தி முறை என்ன?**

திரிகடுகுவில், **சுக்கின்** எடைக்கு இருபங்கு சுண்ணாம்புக்கல் கூட்டித் தாளித்து, ஒருசாமம் சென்று கழுவி உலர்த்தி மேற்றோலைச் சீவிக்கழிக்கவும் - **மிளகை** புளித்த மோரில் ஒருசாமம் ஊறவிட்டுப் பின் வெய்யிலில் உலர்த்தவும் - **திப்பிலியை** கொடி வேலியிலைச் சாற்றில் ஒரு நாழிகை ஊறவிட்டுப் பின் ரவியில் உலர்த்தவும்.

**★ 7. திரிபலையின் சுத்தி முறை என்ன?**

திரிபலையில் **கடுக்காயை** கழுநீரில் ஊறவிட்டு மஞ்சள் நீரையும் விதையையும் நீக்கவும் - **தான்றிக்காயை** தாழை விழுதுச் சாற்றில் ஒருசாமம் ஊறவிட்டுவிதையை நீக்கவும் - **நெல்லி** வற்றலை பாலில் வேகவிட்டு விதையை நீக்கவும்.

**★★ 8. எட்டி-சேங்கோட்டை - அபினியின் சுத்தி என்ன?**

**எட்டிக் கொட்டையை** நெல்லுடன் சேர்த்தவித்து, சிறு கீரைச்சாற்றில் ஒருசாமம் ஊறவிட்டுக் கழுவவும் - **சேங் கொட்டையை** மூக்கைவெட்டி கழுநீரிலும், எருமைப்பாலி லும் ஒவ்வொரு சாமம் ஊறவிட்டுப் பின் வெய்யிலில் உலர்த் தவும் - **அபினியை** சிறிது நெய்கூட்டி மத்தித்து வெற்றி லையில் தடவி அனலில் வெதுப்பிக் கொள்ளவும்.

★ 9. காயம் - குங்கிலியம் - கூகைநீறின் சுத்தி என்ன?

பெருங்காயத்தை கரிநெருப்பிலிட்டுப் பொரித்தெடுக்கவும் - குங்கிலியங்களை திரிபலாதிக் குடிநீரில் தோலாந்திரமாகக் கட்டி இரு சாமம் எரிக்கவும் - கூகைநீறை ஏழு முறை நீரில் கரைத்துக் கழுவி தெளிந்த பின் வடித்து வெய்யிலில் உலர்த்தவும்.

★★ 10. நேர்வாளத்தின் சுத்தி முறை என்ன?

நேர்வாளத்தை எருமைச்சாணிக் கரைசலிலிட்டு வேகவைத்து கழுவி - பின், மேல்தோடு, உள்தோல், நஞ்சுமுளை இவற்றை நீக்கி, எலுமிச்சம் பழச் சாற்றில் ஒரு நாள் ஊறவிட்டு அலம்பி உலர்த்தி - பின், பசுவின் பாலில் சுண்ட வேகவைத்து அலம்பி உலர்த்தி - பின் சிறிது விளக்கெண்ணெய் கூட்டி வறுத்தெடுக்க வேண்டும்.

★ 11. பூநீறு - இந்துப்பு - சீனத்தின் சுத்தி என்ன?

பூநீறை நாலு பங்கு நீரில் கரைத்து தெளிவிருத்து, வாயகன்ற பாத்திரத்திலிட்டு வெய்யிலில் உலர்த்தவும் - இந்துப்பை காடியில் மூன்று நாள் ஊறவிடவும் - சீனக்காரத்தை (வெங்காரத்தையும்) பொரித்து எடுக்கவும்.

★★ 12. வெடியுப்பின் சுத்தி முறை என்ன?

வெடியுப்பை நாலுபங்கு நீரிலிட்டு எரித்துக் கொதிக்கையில் கோழி முட்டையின் வெண்கருவிட்டுக் கலக்கி, மேலேபடியும் அழுக்கை சில்லியகப்பையால் வழித்து எறிந்துவிட்டு, பின் வேறு சட்டியில் துணிகட்டி வடித்து, காற்றுப்புகாத இடத்தில் அசையாதிருத்தி, மறுநாள் வடித்து, பீங்கானில் வார்த்து கடும் வெய்யிலில் உலர்த்தவும். இப்படி ஏழுமுறை செய்யவும்.

★★ 13. தாம்பிரம் - வங்கம் - நாகம் - அயத்தின் சுத்தி என்ன?

தாம்பரத்தை தகடாக்கி புரசு, விராலி, மருதோன்றி, சரக்கொன்றை, முருங்கையின் வேர் - வித்து இவற்றின் குழித்தைலத்தில் நவச்சாரத்தூளைக் கலந்து, அதிலிட்டுப் பத்து முறை காய்ச்சித் தோய்த்தெடுக்கவும் - கருவங்கத்தை நல்லெண்ணெயில் உருக்கி, பின் பிரண்டை விழுது கலந்த

கோநீரில் ஏழுமுறை சாய்க்கவும் - நாகத்தை இலுப்பை நெய்யில் பத்துமுறை உருக்கி, பின் கோநீரில் சாய்க்கவும் - இரும்பை ராவிப் பழச்சாற்றில் 3 - நாள் ஊறவிட்டு அரைத்துக் கழுவி எடுக்கவும்.

**★ 14. பூநாகம் - காந்தம் - மயிலிறகு - காவியின் சுத்தி என்ன?**

பூநாகத்தை பசுவின் பாலில் மூன்று சாமம் போட்டு மண்ணைக்கக்கியபின் கழுவவும் - காந்தத்தை வரகு வைக் கோலில் எரிக்கவும் - மயிலிறகைச் சட்டியிலிட்டுக் கருக்கவும் - காவிக்கல்லை இளநீரிலரைத்துக் கரைத்து வடித்து பீங்கான் தட்டிலிட்டு வெய்யிலில் உலர்த்தவும்.

**★ 15. சிப்பி - கிளிஞ்சல் - புற்று - பலகறை - கடல் நுரை - உவர்மண் இவற்றின் சுத்தி முறை என்ன?**

இவற்றுள், முத்துச்சிப்பியை பூநீர்க் கரைசலிலும்; கிளிஞ்சலை உவர்மண் கரைசலிலும்; பவளப்புற்றை ஆவின் பாலிலும் கொதிக்கவைத்தெடுக்கவும் - பலகறையை நெருப்பனலில் சுடவும் - கடல்நுரையை கிளிஞ்சல் சுண்ணத்தில் தாளித்துக் கழுவவும் - உவர்மண்ணை தண்ணீரில் கரைத்து தெளிவைக் காய்ச்சி வெய்யிலில் உலர்த்தவும்.

**★★ 16. சிலாசத்து - அன்னபேதி - ஆமையோடு - சங்கு - மான் கொம்பு - கல்நார் - பவளம் இவற்றின் சுத்தி என்ன?**

இவற்றுள் கற்பூர சலாசித்தை கற்றாழைச் சாற்றில் ஒரு சாமம் அரைத்து உலர்த்தவும் - அன்னபேதியை புது ஓட்டிலிட்டு சிவக்க வறுக்கவும் - ஆமையோட்டை தியனலில் சுடவும் - சங்கை பசுவின் மோரில் ஏழு நாள் ஊறவிடவும் - மான்கொம்பை கோநீரில் மூன்று நாள் ஊறவிடவும் - கல்நாரை கோங்கிலவம் பட்டைச் சாற்றில் ஒரு நாள் ஊறவிடவும் - பவளத்தை எலுமிச்சம் பழச்சாற்றில் ஒரு நாள் ஊற விடவும்.

**★★ 17. கந்தி - அப்பிரகம் - தாளகம் - துருசுவின் சுத்தி என்ன?**

கந்தகத்தை நெய் விட்டுத் தீப்பற்றாமல் எரித்து உருக்கி

பசுவின் பாலில் ஏழுமுறை சாய்க்கவும் - **கிருஷ்ணாப் பிரகத்தை** காடியிலரைத்து, தெளிவிருத்துப்பின் கழு நீரில் கழுவி, பத்தில் ஒரு பங்கு கொடி வேலிவேர் கூட்டியரைத்து, குடுவையிலிட்டு சீலை செய்து கனபுடமிட்டெடுக்கவும் - **தாளகத்தை** கழுதை நீர், கற்சுண்ணம், உவர்மண் கலவையில் தோலாந்திரமாகக் கட்டித் தொங்க விட்டு, நீர் சுண்ட எரித்து, சுடு நீரில் கழுவி உலர்த்தவும் - **துருசுகளை** தயிரிலரைத்து அடைதட்டி ஒட்டிலிட்டுக் காய்ச்சி வடிக்கவும்.

## ★ 18. வெள்ளை-கவுரி - மனோசிலை - மிருதார்சிங்கு -கெருடப்பச்சை-நாபி இவற்றின் சுத்தி யாவை?

**வெண்பாடாணத்தை** மிதிபாகல் சாற்றில் கொதிக்க வைக்கவும் - **கௌரியை** பன்றி நெய்யில் சுருக்கிடவும் - **மனோசிலையை** பழச்சாற்றில் கொதிப்பிக்கவும் - **மிருதார்சிங்கை** வெள்ளாட்டு நீரில் கொதிப்பித்து, பின் வெள்ளாட்டுப் பாலிலும், முலைப்பாலிலும், ஒவ்வொரு நாள் ஊறவிடவும் - **கெருடப்பச்சையை** தட்டி, குமரிச்சாற்றில் கடுக்காய்த்தூளை யிட்டுப் பிசைவதால் வடியும் நீரிலிட்டுக் கொதிப்பிக்கவும் - **நாபியை** நாயின் சிறு நீரில் ஊறவிடவும்.

## ★★ 19. பஞ்ச சூதத்தின் சுத்தி முறை யாவை?

பஞ்சசூதங்களுள், **இரசத்தை** நாலுபங்கு செங்கல் தூள் - கூட்டி அரைத்து, பின் உப்பு, ஒட்டடை, வெல்லம், மஞ்சள், திரிகடுகு இவற்றில் தனித்தனியே நாலுமணி நேரம் அரைத்து கழுவவும் - **இரசச் செந்தூரத்தை** முலைப்பாலில் முப்பது நாழிகை ஊறவிடவும் - **வீரத்தை** முட்டை வெண் கருவில் சுருக்கிடவும் - **பூரத்தை** முலைப்பாலில் சுருக்கிடவும் - **இலிங்கத்தை** முலைப்பால், மேனிச்சாறு, பழச்சாறு இவை சமன் கூட்டிய கலவையில் சுருக்கிடவும்.

## ★★ 20. பொதுசுத்தியின் முறை என்ன?

ஒரு படி சிறு கீரைச்சாற்றில் ஒரு பலம் மிளகுத் தூளையிட்டு, அதில் சுத்திக்குரிய பாடாணங்களை, தோலாந்திரமாகக் கட்டித் தொங்கவிட்டு சாறு சுண்ட எரித்து எடுத்து சுடு நீரில் அலம்பிக் கொள்ளவும் - இங்ஙனமே, தப்பைமேனி, கரப்பான், மிளகுதக்காளி, எலுமிச்சம்பழம்,

ஊமத்தை இவற்றின் சாறு; காடி, அமுரி ஆகியன வகைக்கு ஒருபடி கூட்டி, அதில் வெடியுப்பு, சீனம், பூநீறு, கறியுப்பு இவற்றின் சுண்ணம் வகைக்கு ஒரு பலம் கூட்டி அதில் சுத்திக்குரிய பாடாணங்களை தோலாந்திரமாகக் கட்டிப் போட்டு ஒரு மண்டலம் சென்று எடுக்கவும். (இம்முறையினால் சகலமும் சுத்தியாகும்.)

## பொழுதுகளின் வகை!

''கூதிர் யாமம் முன்பனி என்றிவை
ஓதிய குறிஞ்சிக் குரியவாகும்''

''வேனில் நண்பகல் பின்பனி என்றிவை
பான்மையின் உரிய பாலை தனக்கே''

''மல்குகார் மாலை முல்லைக் குரிய ''

''இருள்புலர் காலை மருதத்திற் குரித்தே''

''வெய்யோன் பாடு நெய்தற் குரித்தே''

''மருதம் நெய்தல் என்றிவை யிரண்டற்கும்
உரிய பெரும்பொழு திருமூன்றுமே''

-நம்பி அகப்பொருள்

## திருமூலர் திருமந்திரம் - 8000

''உடம்பினை முன்னம் இழுக்கென்றிருந்தேன்
உடம்பினுக்குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்பினுள் உத்தமன் கோவில் கொண்டானென்று
உடம்பினை யான் இருந்து ஓம்புகின்றேனே''

# V. நச்சும் - முறிவும்

## ★★ 1. உடலில் நச்சுத்தன்மை எப்படி விளைகிறது?

சகல மருந்துப் பொருட்களையும் கையாளுமுன் அதனதற்குரிய சுத்தி முறைகளை முறைப்படி செய்யாததாலும் - மருந்துகளை பக்குவப்படி முடிக்காமையாலும் - மருந்துகளை அளவு மீறியும், அனுபானம் மற்றும் பத்தியமின்றியும் உட்கொள்வதாலும் உடலில் நச்சுத்தன்மை ஏற்படுகிறது. மேலும், கொலைக்கோ, தற்கொலைக்கோ நஞ்சுகளை வழங்குதல் - கருச்சிதைவுக்கென அகக்கருவியிலும், புறவுறுப்புகளிலும் சில பொருட்களைச்செலுத்துதல் - பிறரைத்தன் வழி திருப்ப இடு மருந்தை இடுதல் - நஞ்சையொழிக்க நஞ்சுப் பொருள் வேண்டாவிடத்து அப்பொருளை வழங்குதல் - நச்சுயிர்கள் தீண்டுதல் ஆகிய சில காரணங்களினால் உடலில் விஷத்தினாலான தீங்குகள் விளையும்.

## ★ 2. நஞ்சுகளின் செயல் முறை யாவை?

தாவர - தாது - சீவ இனங்களின் நஞ்சுகள் உள் - வெளி வழிகளின்மூலம் உடலினுட் செல்லுகையில் கிரமப்படியோ, அமைதியாகவோ செயலாற்றாமல் அவற்றுக்குரிய இயற்கையான, உக்கிரமுள்ள, கூரிய தன்மையால், தாதுக்கள் - தோடங்கள் - கழிவுகள் இவற்றை நீர்மூலமாக்கி, உடனடியாக உயிரைப்போக்க முயலுவதே - நஞ்சுகளின் செயல்முறை ஆகும். நஞ்சுகள் எளிதில் செரிமானமாகவோ, உடலோடு ஒன்றிப்போகவோ செய்யாததோடு - தோடங்களைத் தூண்டி சீர்குலைத்தும் விடும். இவை, முதலில் வாயுக்குற்றத்தைத் தூண்டி, குருதியைக்குழப்பமுறச் செய்து, வெப்பம் தரும் பித்தத்தையும் முடுக்கிவிடும். அடுத்து, மூளையைத்தாக்கி உணர்விழக்கச் செய்வதோடு - தசையையும், உள்ளுறுப்புகளையும் கெடுத்தும் - மயிரணுக் குழாய்களையும் கூட ஊடுருவிக் கட்டழிக்கும். சுவாசத்தடையுண்டாகி, மூச்சும் திணறுவதால் மயக்கமுண்டாகிவிடும். இதன் கொடும் வீரியத்தால், மற்ற சாதாரண மருந்துகளின் சக்திகள் அடங்கிவிடும். இவற்றின் மிக விரைந்து ஊடுருவிப் பரவும் தன்மையால் உடல் முற்றும் கெட்டு, விரைவில் உயிருக்கு ஆபத்தும் ஏற்பட்டுவிடும். சிலவகை

நஞ்சுகள் உடலில் சார்ந்து நின்று பின்னாளில் கெடுதி செய்யும். (நஞ்சுகளின் வகைக்கேற்ற மருந்துகளைத்தரவும்)

### ★ 3. அக்கினி விடபாகம் என்றால் என்ன?

**அக்கினி விடபாகம்** என்றால் குருதி நச்சுத்தன்மை அடைவது எனலாகும். உடலில் நச்சு புகுவதால் குருதி முறிந்து, முத்தோடம் மீறி அதனால் வயிறுளைதல், வாந்தி, கோழை, மூர்ச்சை, வாநீரொழுகல், வீக்கம், அரட்டல், புரட்டல், இருமல், பக்கநோவு,. சருமப்பிணி, உடல் சோர்ந்து மெலிதல், பிரமை முதலியனவும்; முடிவில் அசாத்தியமாகி மரணமும் நேரிடும். இது - மீன்முள், நெல்லின் வால், காடிநீர், புணர்ச்சி, புழு, சமைத்தழிந்த பண்டம், செம்பின் ஊறல், வெண் பாடாணம், மது, இடுமருந்து போன்றவற்றால் ஏற்படும். இது - வாதம், பித்தம், கபம், முக்குற்றம், எரிவு, காந்தல், சன்னி, அக்கினி என எண்வகைத் துன்பங்களாக வரும்.

### ★ 4. நஞ்சுண்ட குறியும் சிகிச்சையும் யாவை?

**நஞ்சு கலந்த** உணவு முதலிய பொருட்களை முறையே **1. தொடுவதால்** - தினவு, எரிச்சல், அழற்சி, கொப்புளம், வீக்கம், வலி, பரிச உணர்விழத்தல், நகமும் மயிரும் உதிரல், சுரம் ஆகியன காணும் - இதற்கு சந்தனம், வெட்டிவேர், சீந்தில், தாமரைக் கிழங்கு, வெண்கருங்காலி, தாளிசபத்திரி, இலவங்கப்பத்திரி, கோட்டம் இவற்றின் கல்கத்தை இலேபனம் செய்யலாம். **2. சுவைப்பதால்** - உமிழ்நீர் பெருகல், நாவும் உதடும் உணர்விழத்தல், அழற்சி, தினவு, காரல், பற்கூச்சம், சுவையறியாமை, தாடை அசைக்கவியலாமை இவை காணும் -இதற்கு முன்கூறியுள்ள மருந்தின் கியாழத்தால் வாய் கொப்புளிக்கலாம். **3. உட்கொண்டு விடுவதால்** - மிகு வியர்வை, மூர்ச்சை, எரிச்சல், பலநிறவாந்தி, வயிறு பொருமல், மாரடைப்பு, பார்வை குன்றல், அடிக்கடி சிறு நீர் கழிதல், உடலில் ஒரு வகைத்தழும்பு, கழிச்சல், சோம்பல், இளைப்பு, வெளுப்பு, பலவீனம், மகோதரம் ஆகியன காணும் - இதற்கு, முதலில் வாந்தியும் - கழிச்சலும் செய்விக்கவும். அடுத்து, மஞ்சள், மரமஞ்சள், முள்வாகை, வெல்லம், அவரை, ஆவாரை, மூங்கில் குருத்து, அம்மான் பச்சரிசி வேர், கோழி முட்டை, ஆட்ட லாங்கொடி, இங்கு பத்திரி இவற்றை நசியம் - அஞ்சனம் - குடிநீர் போன்ற வழியில் பயன்படுத்தலாம். (மேலும் தாம்பரம் - தங்கம் முதலியபற்பத்தை தேனுடன் உட்கொடுக்கலாம்.)

## ★★ 5. விஷகடி மருத்துவரின் திறமை யாவை?

நச்சுயிர்க் கடியினாலும், விஷமருந்துகளை உட்கொள்வதாலும் உடலில் ஏற்படும் நச்சுத்தன்மையை, விஷமுறிவு மருந்துகளாலும், மாந்திரீகத்தாலும் நீக்கிக் குணப்படுத்தும் முறைக்கு - விஷவித்தை அல்லது **சாங்கலி** எனவும்; இதில் தேற்சிபெற்றோர்-விஷவைத்தியர் அல்லது **சாங்கலிகன்** எனவும் கூறப்படும். பொதுவாக, ஒரு விஷவைத்தியருக்கு பலவித நஞ்சுகளின் குறி குணங்களும்-அவை இன்னதெனக் கண்டறியும் திறனும்- அதனதற்குரிய சிகிச்சை, மருந்து முறைகளும் தெரிந்திருக்க வேண்டும். சித்தமுறையின்படி, மருத்துவமும் - மாந்திரீகமும் அறிந்திருப்பர். மேலும்; சிலருக்கு, தனக்குள்ள **ஞானதிருட்டி சக்தியின்** மூலம் - நோயுற்றவனின் பெயர், முகவரி, நச்சுயிர் தீண்டிய நேரம் முதலிய தகவல்களை மட்டும் வைத்தே, அவனை இன்னதுதான் தீண்டியுள்ளது எனக் கண்டறிந்து, தனது இருப்பிடத்திலிருந்தே, வெகு தொலைவிலுள்ள நோயாளியை நேரில் பார்க்காமலேயே குணப்படுத்தி விடும் சக்தியுண்டு. சிலருக்கு, தனக்குரிய **காந்த சக்தியினாலும், மனோ சக்தியினாலும்** செயல்பட்டு நச்சுத்தன்மையை நீக்கிக்குணப் படுத்த முடியும். பலரால் அறியப்படாத இம்முறையை **மூமியா** என்பர். அருள்வாக்கு பெற்ற சிலரது பெயரைக்கூறி ஆணையிட்டாலே கடிவிஷம் மேலேறாது; பிறகு சிகிச்சை செய்வதுண்டு. பொதுவாக, மாந்திரீக முறையின்படி இரகசியமான மந்திர உச்சரிப்புகளினாலும் - உள்வெளி மருந்துகளினாலும் ஆக இரு வழியிலும் நஞ்சுண்டோரைக் காக்கும் முறைகள் நமது மருத்துவத்தில் உள்ளன.

## ★ 6. இரசநஞ்சின் குறியும் - முறிவும் யாவை?

**இரசநஞ்சினால்** வாயில் அக்கரம் போன்ற சிவந்த புண், ஈறு கட்டல். வாயும் தொண்டையும் வெந்து வீங்கல், வாநீர் பெருகி பனங்கள் போல் குழம்பல், வாய்நாற்றம், பசிக்குறைவு வயிறும் குடலும் புண்ணாதல், காரம்படவொட்டாமை, பக்க சூலை போன்றவலி, வயிற்றின் மேல் பட்டை பட்டையாய் தேமல் போல் படருதல், பாதங்களில் வெடித்து நீர்கசிதல், நீரடைப்பு, விக்கல், வியர்வை, இரத்த பேதி, போகங்கெடல், உடல் வெளுப்பு, சிரங்கு, புண், படை, நடுக்கல், ஒலியும் ஒளியும் குன்றல் ஆகிய குறிகளும் - மற்றும் அறிவு மாறி பித்தனின் செயல் முறைகளும் தோன்றும் - **இரசநஞ்சு முறிய**

வெள்ளை முட்சங்கனிலைச் சாற்றை அரை ஆழாக்களவில் தினமிருவேளையும் கொள்ளவும்.

### ★★ 7. வீரநஞ்சின் குறியும் - முறிவும் யாவை?

**வீரநஞ்சினால்** வாநீரூறல், களிம்புச்சுவை. வாய் - தொண்டை - இரைப்பை புண்ணாகி நோதல், எச்சில் கூட விழுங்கவியலாது தொண்டை நோதல், முகவீக்கம், தோல் வெடித்து சிலை நீர்வடிதல், மிகுதாகம், விக்கல், மூர்ச்சை மயக்கம், வலி, இரத்தபேதி, வாந்தி, இவையும் மரணமும் விளையும் - **வீர நஞ்சுமுறிய** கோழி முட்டை வெண்கருவை பாலுடன் கலந்து அடிக்கடி கொடுக்கவும்.

### ★ 8. பூரநஞ்சின் குறியும் - முறிவும் யாவை?

**பூரநஞ்சினால்** வாய் - நா - வயிறு - ஈறு - தொண்டை புண்ணாதல், விழுங்கவியலாமை. நாவில் நாற்றமுள்ள நீர்கசிதல் முகத்தில் செவ்வாப்பு போல் பருவும் - குருவும் தோன்றல் மார்பில் பருகண்டு புண்ணாதல், இடுப்புவலி, பீசம் வீங்கல் குருதி பேதி இவை விளையும் - **பூரநஞ்சு முறிய** அவுரி வேர்ப் பட்டையை சுடுநீர் விட்டரைத்து சுண்டையளவில் தினமிரு வேளையும் கொடுக்கவும்.

### ★★ 9. இலிங்க நஞ்சின் குறியும் - முறிவும் யாவை?

**இலிங்க நஞ்சினால்** வாய் - நாவு - குரல்வளை - மார்ட - பெருங்குடல் இவை வெந்து புண்ணாகி வெய்யிலில் கசங்கிய பருத்திப்பூ போலிருக்கும், காரம்படவியலாது, பேச இயலாது வாயில் துர்நாற்றம், வயிற்றில் எரிவு, அரோசகம், வாநீர் புளித்த கள்போல் வெளுத்துக்குழம்பியோ, காடிநீர் போன்றோ காணல் ஆகியன விளையும் - **இலிங்க நஞ்சு முறிய** சாதிக்காய் வால்மிளகு, செம்பருத்தி வேர்ப்பட்டை இவை சமன் கூட்டி குடிநீரிட்டு, அதில் கற்கண்டு தூளையிட்டு அருந்திவரவுப் (இரசசெந்தூர நஞ்சின் குறியும்-முறிவும் இலிங்கத்திற் குரியனவேயாகும்.)

### ★ 10. கந்தக நஞ்சின் குறியும் - முறிவும் யாவை?

**கந்தக நஞ்சினால்** உடல்பீர்க்கம்பூ நிறமுற்று - முகம் வெளுத்து - கண் மஞ்சளித்து - பல் கறுத்து - பாசியடைந்து விகாரமடையும்; சகதி நீர்போன்ற மஞ்சள் நிற வியர்வை

சாமந்திப்பூ நிறமுள்ள மலம், ஆட்டினது போன்ற சிறுநீர், வாயில் புகை நாற்றம், பொய்ப்பசி, வயிற்றுப்பிசம் - வலி, உடலில் வியர்க்குரு முதலிய குறிகள் காணும் - **கந்தக நஞ்சு** முறிய மிளகு, சீரகம் நீலிவேர் இவை சமன் கூட்டி குடிநீரிட்டு அருந்தவும்.

## ★ 11. தாளக நஞ்சின் குறியும் - முறிவும் யாவை?

**தாளகநஞ்சினால்** நகக்கண்ணில் குருதி சுவரிப்பக்குகட்டிப் புண்ணாகி சீழ் வடிதல், குரல்மாறல், வயிற்றில் எரிவு, மூக்கில் குருதிவடிதல், வாயிலைப்பு, உணவில் வெறுப்பு, சுவையின்மை, தலையில் அரிப்புடன் மயிர் முனை தீபோல் சிவத்தல், சுவாசத்திணறல், பிரமித்தல், இடையினருகில் வலி, அடி வயிறு வீங்கல் முதலிய குறிகள் தோன்றும் - **தாளக நஞ்சு முறிய** நீலிவேர், ஆவரம்பூ, வெட்டிவேர், சீரகம், காசினிவேர், மாதுளை விதை, தென்னங்குரும்பை இவை சமன் கூட்டிக் குடிநீரிட்டு அருந்தவும்.

## ★★ 12. வெள்ளை நஞ்சின் குறியும் - முறிவும் யாவை?

**வெண்பாடாண நஞ்சினால்,** இரத்தம் முறிந்து உடலில் சிரங்கு - கொப்புளம் - வீக்கம் காணல், விரல்கள் வலித்துக் குரங்கினுடையது போலாதல், நாளுக்கு நாள் முகம் வீங்கல், வாய் - உதடு புண்ணாதல், வாய் கசப்பு - களிம்புச்சுவை, மூக்கு அதைத்தல், தொண்டை நோதல், வயிறெரிவு, கவிச்சிவாடையுடன் வாந்தி, குருதிபேதி, நீரடைப்பு, மிகுதாகம், கைகால் வியர்த்துத் திமிர்த்தல், அறிவு மயங்கல், தலைநோய், உடலில் நமையுடன் சொறி போல் பக்கு விழுதல், காமாலை முதலிய குறிகள் காணும் - **வெள்ளையின் நஞ்சு முறிய** ஏலம், முசு முசுக்கைவேர் வகைக்கு 1-விராகன் கூட்டிக் குடிநீரிட்டு; அதில் படிகாரம், வெண் சர்க்கரை வகைக்கு 1-விராகன் சேர்த்து தினமிரு வேளையாக அருந்திவரவும். **(இவை, சங்கு பாடாணத்திற்குமாகும்)**

## ★ 13. கௌரி நஞ்சின் குறியும் - முறிவும் யாவை?

**கௌரி நஞ்சினால்,** உடலில் தடிப்பு-திமிர்-சூடு, பின்னங்கால் கெண்டைச் சதையில் பருக்கள், உள்ளங்கால் மார்புப் பள்ளங்களில் வீக்கம், நடுவயிறு புடைத்துக் கட்டல், உள்ளங்கை தோலுரிதல், கண் சிவப்பு, ஈறுகளில் குருதி, இருமல், உப்புசம், வெள்ளோக்காளம் ஆகிய குறிகள் காணும்

- கௌரி நஞ்சு முறிய முன்னை வேர்ப்பட்டையை குடிநீரிட்டு அதில் பனங்கற்கண்டும், சோற்றுப்பும் கூட்டி இருவேளையும் அருந்திவரவும். (எலிப்பாடாண நஞ்சின் குறியும் - முறிவும் கௌரிக்குரியனவேயாகும்.)

## ★ 14. உப்பு நஞ்சின் குறியும் - முறிவும் யாவை?

சோற்றுப்பு, வெடியுப்பு, படிகாரம் முதலிய சகல உப்புக்களின் நஞ்சினால், வாந்தி, பேதி, வயிற்றெரிவு, நீர்ப் பெருக்கு, உடல் தளர்ச்சி போன்ற குறிகள் காணும் - **உப்பு நஞ்சுகள் முறிய** தாழை விழுதுச் சாற்றை அரை ஆழாக்கு வீதம் அருந்தவும்.

## ★ 15. திராவக நஞ்சின் குறியும்-முறிவும் யாவை?

உப்புக்களினாற்செய்த பலவித திராவகங்களின் நஞ்சினால் தொண்டை - நாவு புண், வயிறு - குடல் தாபிதம், கறுப்பான சில சமயம் குருதிகலந்த வாந்தி, பல நிறத்திலும் - குருதியுடனும் பேதி, உடல் தளர்ச்சி, நாடிமங்கல், மரணம் ஆகிய குறிகள் நேரும் - **திராவகங்களின் நஞ்சு முறிய** குங்கிலியம் - சிலாசத்து பற்பங்களை, முட்டை வெண்கருவில் உட்கொள்ளவும்.

## ★ 16. சூடன் நஞ்சின் குறியும் - முறிவும் யாவை?

**கர்ப்பூர நஞ்சினால்,** வயிற்றினுட்கருவிகள் வேக்காடு வயிறெரிவு, சூடன் மணமுடன் ஏப்பம் - வாந்தி, குருதிபேதி, தலைகனத்து நோதல், உடல் சோர்வு, தொண்டை முதல் ஆசனம் வரை கடுத்து எரிதல், அரட்டல் - புரட்டல், நாடிகனத்து - துடித்து - படபடத்தல், வியர்வை, இசிவுகண்டு ஆகாயத்தில் பறப்பது போலிருத்தல், மயக்கம், அறிவு தவறி நீர்போதல் ஆகிய குறிகள் காணும் - **சூடநஞ்சு முறிய** ஒருபலம் காசுக்கட்டியை எலுமிச்சம் பழச்சாற்றிலரைத்து பசுமோரில் கரைத்துக் கொடுக்கவும்.

## ★ 17. தாம்பிர நஞ்சின் குறியும் - முறிவும் யாவை?

**தாம்பிர நஞ்சினால்,** உரிய நலன்கள் மாறல், மனத்திகில், கடும் இருமல், விக்கல், வாநீரூறல், மிகுபசி, மார்பெரிவு,

பிதற்றல், அறிவு மயக்கம், தொண்டையுலரல், தலை திரும்பிப்போதல் முதலிய குறிகள் காணும் - **தாம்பிர நஞ்சு முறிய** எலுமிச்சம் பழச்சாற்றில், சுக்குத் தூளையிட்டுக் கொடுக்கலாம்.

★ **18. துருசு நஞ்சின் குறியும் - முறிவும் யாவை?**

**துருசுகளின் நஞ்சினால்** வாயில் களிம்புச் சுவையுடன் குமட்டல், வாநீரூறல், தாகம், நாற்றமுடன் குருதியும் - நீலநிறம் கலந்தும் வாந்தி, வயிற்றுப்பொருமல் - எரிவு - கடுப்பு, தொண்டையுலர்தல், நீரடைப்பு, காமாலை, பாரிசவாயு, கண் சொருகி நீர் வடிதல், பசிக்குறைவு, மரணம் ஆகியன விளையும் - **துருசு நஞ்சு முறிய** தேன், இஞ்சிச்சாறு, சர்க்கரை இவை கூட்டி அருந்தலாம்.

★ **19. வங்க நஞ்சின் குறியும் - முறிவும் யாவை?**

**வங்கங்களின் நஞ்சினால்** பல்லீறு கறுத்தல் - நீலநிறமாதல், வயிறு நோவு, கொப்பூழ் வலி, மலக்கட்டு, உப்பிசம், கைகால் சோர்வு, பக்கவாயு, காமாலை, இளைப்பு, ஈளை, உடலில்சொறி முதலிய குறிகள் காணும் - **வங்க நஞ்சு முறிய** காட்டுப் புளியரணை வேரின் விழுதை சுண்டையளவாக இரு வேளையும் கொடுக்கவும்.

★ **20. அப்பிரக நஞ்சின் குறியும் - முறிவும் யாவை?**

**அப்பிரகநஞ்சினால்** நெஞ்சில் கோழிக்குஞ்சு - கின்னரவாத்திய ஒலிகள் தோன்றல், சயம்போல் இருமி சளியைத் துப்பல், சுவாசத் தடையினால் சங்கடம், வயிற்று இரைச்சல் - பொருமல், உப்பிச நோயுடன் மரணம் ஆகியன விளையும் - **அப்பிரக நஞ்சு முறிவுக்கு** வெற்றிலை - இஞ்சிச் சாறுகளை சமன் கூட்டி அரையாழாக்கு வீதம் காலை - மாலையில் கொடுக்கவும்.

★ **21. சுண்ண நஞ்சின் குறியும்-முறிவும் யாவை?**

**சுண்ணாம்பு நஞ்சினால்** வாய் - நாவு - தொண்டை தாபிதமுற்று பின் அக்கரம் போல் வாய் சிவந்து மெல்லிய தோல் வெந்து புண்ணாகும்; வயிறெரிவு, பேதி, வாந்தி காணும் - **சுண்ணாம்பு நஞ்சு முறிவுக்கு** மஞ்சளையரைத்து நீரில் கரைத்து வடித்த நீரை அருந்தலாம்.

★ 22. வைர நஞ்சின் குறியும் - முறிவும் யாவை?

வைரம்-மாணிக்கம்-கண்ணாடி இவற்றின் பொடியினால் ஆமாசயங்களை அறுத்து புண்ணாய் நோதல், குருதியுடன் மலம், வயிற்று வலி, மரணம் ஆகியன விளையும். இவற்றினாலான தீங்கிற்கு வாழைப்பழம், விளக்கெண்ணெய் முதலியன கொடுத்து வயிற்றைக் கழிக்க வேண்டும்.

★ 23. குன்றி நஞ்சின் குறியும் - முறிவும் யாவை?

குன்றி மணிப்பருப்பின் நஞ்சினால் வாந்தி, வயிற்றுக் கடுப்பு, மயக்கம், உடல் அழற்சி, வயிற்றெரிச்சல், பேதி, மந்தம் முதலியனவும், மரணமும் விளையும் - குன்றியின் நஞ்சு முறிய அரை விராகன் பொரித்த வெங்காரத் தூளை நீரில் கரைத்து அருந்தவும்.

★ 24. கள்ளிப் பாலின் குறியும் - முறிவும் யாவை?

இதில் 1. கொடிக் கள்ளிப் பாலின் நஞ்சினால் வாய் குமட்டல், தொண்டை கரகரப்பு, பேதி, வாந்தி, வாய்ப்புண், ஆசனக் கடுப்பு ஆகியன விளையும் - இதற்கு முறிவாக கோவைச் சாற்றை அருந்தவும். 2. சதுரக் கள்ளிப் பாலின் நஞ்சினால் பேதியதிகரித்து நிற்காமையால் குருதியும் போதல், வாந்தி, மயக்கம், கைகால் குரக்கு வலித்தல், ஏப்பம், கண் சிகப்பு, உப்புசம், செரியாமை ஆகியன விளையும் - இதற்கு முறிவாக ஆவாரையிலையை விழுதாக்கி தினமிரு வேளையும் உட் கொள்ளவும்.

★ 25. எருக்கு - தில்லைகளுக்கு முறிவு என்ன?

இதில் 1. எருக்கம்பாலின் நஞ்சினால் இது பட்டவிடத்தில் விரணமும், உட்கொள்ள வாய் - வயிறு புண்ணாகி, வாந்தி பேதியும் காணும். இதற்கு முறிவாக பருத்தியிலையைக் காடியிலரைத்து பாக்களவில் கொடுக்கவும். 2. தில்லைப் பாலின் வாடை உடலில் படுவதால் உடல் பூதம் போலூதல். உடற்சூடு மிகுந்து அதனால் பித்தம் கூடி வாய்வறளல், தாகம் சுவைமாறல், பசிக்குறைவு, பேதி, வாந்தி ஆகியனவும்; இப்பாலை உட்கொள்ள சகல உறுப்புகளும் வெந்து புண்ணாதல், வாய் நாற்றம், உணவில் வெறுப்பு, சுரம்

ஆகியனவும், மரணமும் விளையும் - இதற்கு முறிவாக எறுமைச் சாணிப் பாலை அருந்தலாம்.

★ 26. வாள நஞ்சின் குறியும் - முறிவும் யாது?

நேர்வாள நஞ்சினால் வாய் குமட்டல் - கசத்தல் - நீரூறல் - வறளல், வாந்தி, பேதி, வயிற்றில் புண், கண் சொருகி மங்கல், மயக்கம், களைப்பு, வியர்வை, கண்டைச் சதையில் ஒருவித வலிப்பு, உடலில் அனல், மூர்ச்சை, பல்கறுத்தல் ஆகியனவும், மரணமும் நேரிடும் - நேர்வாள நஞ்சு முறிவுக்கு வசம்பு - புளியங்கோது இவற்றின் சாம்பல் சமன் கூட்டிக் குடிநீரிட்டு, இருமணிக்கொரு முறை காலாழாக்கு வீதம் கொடுக்கவும்.

★ 27. சித்திரமூல - கரியபோள முறிவு யாவை?

இதில் 1. சித்திரமூல வேர்ப்பட்டையை சிதைத்து உடலில் தடவ .தோல் சிவந்து - எரிந்து - புண்ணாகும், யோனியினுட் செலுத்த கருப்பை வாய்வரை புண்ணாகிவிடும்; அதிகம் உண்ண வயிற்றில் எரிவு-அழற்சியுண்டாகும். மரணமும் நேரிடும் - இதற்கு முறிவாக பேய்ப்பீர்க்கும், கோரைக் கிழங்கும் கூட்டி குடிநீரிட்டுக் கொடுக்கவும். (2) இரத்த போள நஞ்சினால் உடலின் மேல் வெந்து - சிவந்து - புண்ணாதல், உள்வேக்காடு, வாந்தி, சுவைமாறல் முதலியன விளையும் - இதற்கு முறிவாக பேரரத்தையைக் குடிநீரிட்டு அருந்தவும்.

★ 28. எட்டி நஞ்சின் குறியும் - முறிவும் யாவை?

எட்டிக் கொட்டை நஞ்சினால் வாநீரூறல் - கைப்புச் சுவை, விறுவிறுப்பு, வாந்தி, பேதி, மூச்சடைப்பு, இசிவு, கண்மணி அகன்றிருத்தல், தனுர்வாதம் போல் வளைதல், கைகால் முடங்கி குரக்குவலி, உடல் தளர்ச்சி, அறிவு திகைத்தல் ஆகியனவும் மரணமும் விளையும் - எட்டி நஞ்சு முறிய - கடுக்காய்த் தோலை குடி நீரிட்டு வீசம்படியளவில் அருந்தாலம்.

★ 29. சேங்கொட்டை நஞ்சுக்கு முறிவு என்ன?

சேங்கொட்டை நஞ்சினால், வாய் - வயிறு - குடல் புண்ணாகி மந்தம் - எரிச்சல்-வாந்தி பேதி காணும், உடலூதும், உடற் சூடு மிகுந்து வியர்க்குரு போன்ற கொப்புளங்கள் காணும்

- உறக்கம் கெடும். மரணமும் விளையும். சேங்கொட்டைப் பால் உடலில் பட்டவுடன் வேக்காடு கண்டு விரணமாகும். பொதுவாக இதில் இரசத்தின் வலிமையிருப்பதால் இதனாலான துன்பங்கள் சூதத்தின் குற்றத்திற் கொப்பாகும் - **சேராங்கொட்டை நஞ்சு முறிய** புளியிலையைச் சிதைத்து நீர்விட்டு, அதில் ஒரு இளநீரைப் போட்டு வேகவிட்டு அத் தேங்காய் வழுக்கையைத் தின்று, அந்நீரையும் உட்கொள்ளவும் - உடற் புண்ணுக்கு கோரைக் கிழங்கு, சந்தனம், எள், ஏலரிசி சமன் கூட்டி நீரிலரைத்து தேனிற் கலந்து பூசலாம் - உடலூதலுக்கு வறுத்த செங்கற் தூளை ஒற்றிடமிட்டு; மெழுகும் - நல்லெண்ணெயும் கூட்டிக் காய்ச்சிப் பூசவும்.

## ★ 30. ஊமத்தை - இடுமருந்தின் முறிவு யாவை?

இதில் *1.* **ஊமத்தை** நஞ்சினால் பிதற்றல்; மயக்கம், தலை சுற்றல், தொண்டை வறட்சி, நடை தடுமாறல், கண்மணி அகன்று பார்வை குன்றல், முகம் சிலுசிலுத்தல், சுவாசம், வயிறு பொருமல், வெறி நோய்க்குறிகள் ஆகியனவும், மரணமும் விளையும் - **ஊமத்தை நஞ்சு முறிய** தாமரைக் கிழங்கை காடியிலரைத்து உட்கொள்ளவும். **2. இடு மருந்து** நஞ்சினால் இளைப்பு நோயின் குறிகள் யாவும் விளையும் - இந்நஞ்சுக்குறிகள் நீங்க பெரும் பூசனியும், கடலையும் கூட்டி சமைத்து தாளிப்பின்றி உண்ணவும்.

## ★ 31. அபின் - கஞ்சாவுக்குரிய முறிவு யாவை?

இதில் *1.* **அபினி** நஞ்சினால் ஒருவித களிப்புக்குப் பின் உடல் உணர்ச்சி கெடல், தலை சுற்றல், சோம்பல், மந்தம், மலக்கட்டு, கடின மூச்சு, உடல் கறுத்து - முகம் வெளுத்து - வியர்வை விடல், கண்மணி குறுகி விரிதல், வாந்தி, இழுப்பு, முகமும் வாயும் கோணல், சித்தப்பிரமை ஆகியனவும் மரணமும் நேரிடும்.

*2.* **கஞ்சா** நஞ்சினால் ஆகாயத்தில் பறப்பது போல் மயக்கம், ஆடல் பாடல் - பேசாதிருத்தல், கண்மணி விசாலித்து எரிதல், மார்பிலும் அடிவயிற்றிலும் வலி - எரிச்சல், மாரடைப்பு, வாயும் நெஞ்சும் உலரல், வாந்தி, உறக்கம் ஆகியனவும் சாவும் நேரிடும் - **அபின் கஞ்சா நஞ்சுகள் முறிய** இலைக் கள்ளிவேர், கோரைக்கிழங்கு, சுக்கு, வசம்பு இவை சமன் கூட்டிக் குடிநீரிட்டு அருந்தி வரவும்.

## ★ 32. நாபி நஞ்சின் குறியும் - முறிவும் யாவை?

**நாபி நஞ்சினால்** வாய் - நாவு - முகம் விறுவிறுத்துத் திமிர்த்தல், நமைச்சல், உடல் புகை நிறமாதல்; அடிபட்டது போல் வலி, வயிற்றுக் கடுப்பு, அரோசகம், வாந்தி, கடும் மூர்ச்சை, நாடிகுன்றல், பல விதக் கனவு கண்டு கலக்கத்துடன் தூங்கல், அடிவயிறு கனம், விக்கல், கடுப்புடன் குருதி கலந்த பேதி ஆகிய குறிகள் தோன்றும் - **நாபி நஞ்சு முறிய** மயில் துத்தத்தை முலைப்பால் விட்டரைத்து உட்கொள்ளவும்.

## ★ 33. இடுமருந்து என்றால் என்ன?

பொதுவாக, ஒருவர் மற்றொருவரை தன் விருப்பத்திற்கு இணங்கச் செய்வதற்கென தயாரித்தளிக்கும் ஒருவகை நச்சுத்தன்மையுள்ள மருந்தே - மருந்தீடு, வசியமருந்து, கரவிஷம் எனக் கூறப்படும் - **இடுமருந்து** ஆகும். இது, சில பிராணிகளின் பித்து, மண்டையோடு, பலவகை சிறுநீர், உடலின் அழுக்கு - சுக்கிலம் - சுரோணிதம் - வியர்வை - கண்பீளை - காதுகுறும்பி - சளி, சிலவித மூலிகைகள், உயிரினங்கள் போன்றவற்றின் கலவையால் தயாரிக்கப்படும். **இலக்கக் கல்கிசக்கிரியையின்** படி தயாரித்த மருந்துடன், ஐம்மலத்தைக் கூட்டியரைத்தும் செய்வதுண்டு. இந்த மயக்கு மருந்து, சிறிது சிறிதாக உடலில் நச்சுத் தன்மையை உண்டு பண்ணி உடலையும், மனதையும் கெடுத்துவிடும். இதனை உணவு, தின்பண்டம், தாம்பூலம் போன்றவற்றுடன் மறைத்துத் தருவதுண்டு. இதனால், சயநோய்க்குறிகள், உடலிளைத்து மெலிந்து வாடல், உண்டவை செரியாமை, மதிமயக்கம், பிரமை, கழிச்சல், பலவீனம், எதிலும் ஈடுபடவியலாமை போன்ற குறிகள் காணும். சரியாகக் கவனிக்காவிடில் விரைவில் மரணமும் நேரும். (இதற்கு முறிவாக, விளாம்பழ ஓட்டைச் சுட்டுக்கரியாக்கி தேனுடன் தரலாம் - அப்பிரக, பலகறை பற்பங்களும் பயன்தரும்)

## ★★ 34. தாவர நஞ்சின் தோற்றங்கள் யாவை?

**தாவர இனங்களின் நஞ்சுகளின்** குறிகளும் - வீரியமும் ஏழு வகையாகக் கூறப்படும். அவை -**(1)** நாவு கருத்து மரத்தல், வாந்தி, பிரமை, ஆயாசம்; **(2)** நடுக்கல், வியர்வை, தாகம், தொண்டையில் வேதனை, மார்புநோய், தாடை உலரல்; **(3)** கண்கள் கருப்பாதல் - மஞ்சளாதல், வயிறு, குதத்தில் வலி - இரைச்சல் - பொருமல், விக்கல்; **(4)** தலை நோவு, வாயில் நுரை தள்ளல், முகம் மாறித் தோன்றல்; **(5)** சகல கீல்களிலும்

துன்பம்; (6) தோள்-முதுகு - இடுப்பு இவற்றில் நோவு, நினைவு நீங்குதல்; (7) நஞ்சு சுக்கில-சுரோணித தாதுவைப் பற்றி ஏறுதல் ஆகியனவாகும். இவற்றுள் கடைசி இரு நிலைகளும் அசாத்தியமாகும். (ஒருவருக்கு - நஞ்சு வைப்பவனுக்கு வாயுலரல், கொட்டாவி, உடல் மரத்தல், வியர்த்து நடுங்கல், பயம், நடக்கையில் கால் தத்தளித்தல், சுற்று முற்றும் பார்த்தல் முதலிய குறிகள் தோன்றும்.)

## ★★ 35. பொதுவான முறிவு முறைகள் யாவை?

இவற்றுள் 1. கடைச்சரக்குகளினாலான பெருமருந்தின் குற்றங்களை நீக்க மிளகைக் குடி நீரிட்டு அருந்தவும் 2. அயம் தவிர மற்ற லோகங்களிலான பற்ப செந்தூரங்களினாலான நச்சுத்தன்மையை அயச் செந்தூரம் - பற்பம், அயக்கலப்புள்ள மாத்திரை ஆகியன நீக்கும் 3. குடிநீரினாலான தோட முறிவுக்கு உத்தா மணிச்சமூலக் குடிநீரை அருந்தவும். 4. உணவு பேதங்களினாலான அசீரணம், மந்தம் போன்றவற்றை நீக்க குளிர்ந்த நீரே போதும். 5. பலவித நீர்களினாலான நீர்க்கோவை, பீனிசம், சீதளம், தலைகனம் - வலி, தொண்டைவலி, சளி, இருமல் ஆகியவற்றை நீக்க தேனும் - நீரும் கலந்து விளாவிய பானத்தை அருந்தவும். 6. அனுபான தோடத்தினாலான பிணிகளை விலக்க இஞ்சிச்சாற்றைக் கொள்ளவும்.

## விஷக்கடியும் - மருந்தும்

## ★ 36. நச்சுயிர்களின் தொகை என்ன?

நச்சுயிர்களுள் சர்ப்பம் - 8, விரியன் - 6, வழலை - 4, மூக்கன்-2, சுருட்டை-4, சாரை-5,கொம்பேறி-2, நாகம்-5, பச்சைப்பாம்பு-1, சவுடு-2, மண்ணுளி-1, புடையன்-16, மன்றெலி -16, இருதலைமணியன்-1, துன்பம் தரும் எலி-16, நச்செலி-1, சுண்டலி-1, செய்யான்-6, ஆறுகால் பூச்சி-4, சிலந்திப் பூச்சி-8, புலிமுகப்பூச்சி-1, பல்லி-16, பூரான்-8, வண்டு-120, ஓந்தி-10, செவ்வட்டை-8, அரணை-4, தேள்-12, நட்டுவாக்காலி -4, தவளை-10, அட்டை-6, முதலை-3, புலி-5, பூனை-5, பேய் நரி - பேய் நாய்-பேய்க்கீரி, நாய் - நரி, இவை-330, நீர்வாழ்வன -கணக்கின்மை ஆக நச்சுயிர்கள் எண்ணற்றவையாகும்.

## ★ 37. கடிவாய் மணத்தின் இயல்பு என்ன?

பாம்பு கடித்துப் பல்லழுந்திய இடத்தை முகர தாழைமலர் மணம் கமழின் நல்லபாம்பு; பாதிரிப்பூ மணம் வீசின்-வழலைப் பாம்பு; புளியம்பூ மணம் வீசின்-விரியன் பாம்பு; மல்லிகைப் பூ மணம் வீசின் - மண்டலிப் பாம்பு, சுக்கு மிளகு இவற்றின் மணம் வீசின் - சிறிய பாம்பு என்று கணிக்கலாம். இவற்றுள் எம்மணமும் வீசாவிடின் பாம்புக் கடியல்லவென உணர்ந்து, மற்ற செந்துக்களின் கடி இலக்கணங்களினின்றும் ஆய்ந்தறிய வேண்டும்.

## ★★ 38. சுவை மூலம் விஷக்கடியை அறிவது எப்படி?

தீண்டிய நச்சுயிர்கள் காணாவிடில், கடியுண்டவனுக்கு சில பொருட்களைக் கொடுத்து அதன் சுவை மாற்றத்தின் மூலம் தீண்டியவற்றை அறியவாம். அதாவது, பாம்புக்கடி பட்டவனுக்கு ஆடுதின்னாப்பாளை வேரை உண்ணும்படி கொடுக்க, அதன் சுவை மாறி தித்திப்பின் - நல்ல பாம்பு, முன் இனித்து உடனிலைப்பின்-மூக்கன், மிகவும் புளித்தால் வழலைச்சாதி; வழுவழுத்துப் புளித்தால்-கருவழலை. மயக்கத்துடன் காரமாயிருப்பின் - மயக்கரவு; நினைத்த சுவை தோன்றின் - புடையன், முட்கீரைச் சுவையிருப்பின் - மண்டலி, புளித்துப் பின் காரமாயிருப்பின்-பெருவிரியன், தலை நடுக்கினால்-விரியன் சாதி, நா கடுகடுத்தால் - கொம்பேறி மூக்கன், நாவு சுருட்டினால்-சுருட்டை, உண்ணாவு சரசரத்தால்-சாரை, கண் மறைத்து நெஞ்சடைட் பின்-கல் நெஞ்சன், தூக்கமின்றி நெஞ்சு படபடப்பின்-சவடி, சுரணையற்றிருப்பின் - இரு தலை மணியன், பல் கடுத்தால் - செய்யான், சலசலவென மூக்கு எரிந்தால்-எலிச்சாதி, மேல் நாவு நொந்தால்-நச்செலி, வாந்தியானால்-அரணை; கண்காது அடைத்தால்-சில்விடம் முதலியன முறையே தீண்டியுள்ளன என்றும்; கசந்தால்—ஒருவித நஞ்சுமில்லை என்றும் உணரலாம். (ஆடு தின்னாப்பாளை- ஆகாசக்கருடன்-நாகதாளிக்கிழங்கு இவை வைத்திருக்குமிடத்தில் கொடிய நச்சுயிரிகள் அண்டாது)

## ★ 39. நல்ல பாம்பு கடிக்கு மருந்து என்ன?

சகல நல்லபாம்பு கடிவிஷத்திற்கும் வசம்பு - பூண்டு

காயம், வெங்காரம் - வாளம் - அரிதாரம் - கந்தகம் இவை சமன் கூட்டி; அவுரி - உத்தாமணி - மேனிச் சாறுகளிலரைத்து மாத்திரைகளாக்கவும், இதில் ஒரு மாத்திரையை மெல்லிய துணியில் முடிந்து சிறுநீரில் ஊறவிட்டு அதை கடியுண்டோன் மூக்கில் பிழிவதால் நஞ்சுகள் தீரும். (கரப்பான் பொருள் - உப்பு, புளி இவை நீக்கி; இரவு பகல் தூங்காதிருந்து: பாசிப்பயரும் பச்சரிசியும் பசும் பாலிலிட்டுக் காய்ச்சி சீனி கூட்டி உட்கொள்ளவும்.)

## ★ 40. விரியன் கடி நஞ்சுக்கு மருந்து என்ன?

பதினாறு வகை விரியன் கடிநஞ்சும் தீர ஒரு ஆழாக்கு பசுவின் நெய்யுடன், உழக்களவு பெருவாகைப்பட்டைச் சாறுகூட்டி, அதில் ஒரு பலம் மிளகுத்தூளை சேர்த்து; தக்க அளவும் - நாளும் கொடுக்கவும் (இதோடு மணித்தக்காளியிலை - அவுரியிலை - நாயுருவியிலை இவை சமன் கூட்டியரைத்து கடிவாயில் பூசுதலும் நலம்).

## ★ 41. விஷ கடிக்கு அப்பிரகத்தின் பயன் என்ன்?

அப்பிரக பற்பத்தை அளவுப்படி, இலைக்கள்ளிச் சாற்றில் கொள்ள - எலிகளின் விஷமும்; மலை வேம்புச்சாற்றில் கொடுக்க - மூஞ்சுறு, பெருச்சாலிகளின் விஷமும்; கையாந்தகரைச் சாற்றில் கொடுக்க-செய்யான்களின் விஷமும்; உத்தாமணிச் சாற்றில் கொடுக்க - பூரான்களின் விஷமும் - எருக்கிலைச் சாற்றில் கொடுக்க குளவிகள், தேள்களின் நஞ்சும்; வெள்ளறுகுச்சாற்றில் கொடுக்க நாட்டுவாக் காலிகளின் விஷமும்; குப்பைமேனிச் சாற்றில் கொடுக்க, ஈக்களின் நஞ்சும்; வெட்பாலைப்பட்டைச் சாற்றில் கொடுக்க வண்டுகளின் நஞ்சும்; ஓரிலைத் தாமரைச் சாற்றில் கொடுக்க நரிகளின் நஞ்சும்: வன்னியிலைச் சாற்றில் கொடுக்க - நாய்களின் நஞ்சும், முறையே நீங்குமென உணரவும் (மேற்படி கடி விஷங்களுக்கு வேறு பல துணை மருந்துகளும் உண்டு).

## ★★ 42. விஷ கடிக்கு பலகறையின் பயன் என்ன?

பலகறை பற்பத்தை அளவுப்படி 1, கல்லாலின்சாற்றில் கொடுத்து, கொள்ளுக்கஞ்சியுண்ண-செயற்கை வெறி நாய் நஞ்சும்: நிலப்பனைச் சாற்றில் கொடுத்து, காராமணிப் பருப்புக்கஞ்சியுண்ண-இயற்கை வெறி நாய் நஞ்சும்; 2. கீழாநெல்லிச் சாற்றில் கொடுத்து, சிறுபயற்றங் கஞ்சியுண்ண -செயற்கை வெறி நரிநஞ்சும்; மூங்கிலின் சாற்றில் கொடுத்து,

துவாரம் பருப்புக் கஞ்சியுண்ண-**இயற்கை வெறி நரி நஞ்சும்;** 3. நாயுருவிச் சாற்றில் கொடுத்து, வரகரிசிக் கஞ்சியுண்ண - **செயற்கை வெறிப் பசு நஞ்சும்;** வெற்றிலைச் சாற்றில் கொடுத்து, சாமையரிசிக் கஞ்சியுண்ண-**இயற்கை வெறிப் பசு நஞ்சும்;** 4. வன்னியிலைச் சாற்றில் கொடுத்து, புல்லரிசிக் கஞ்சியுண்ண-**செயற்கை வெறி எருமை** நஞ்சும்; கோரைக் கிழங்குச் சாற்றில் கொடுத்து, தினையரிசிக் கஞ்சியுண்ண - **இயற்கை வெறி எருமை** நஞ்சும்; 5. பாகலிலைச் சாற்றில் கொடுத்து மூங்கிலரிசிக் கஞ்சியுண்ண-**செயற்கை வெறிப் பன்றி** நஞ்சும்; பேய்ப்புடல் சாற்றில் கொடுத்து, கோதுமைக் கஞ்சியுண்ண-**இயற்கை வெறிப் பன்றி** நஞ்சும்; 6. நரிப்பயற்றங் கொடிச் சாற்றில் கொடுத்து அவரைப் பருப்புக் கஞ்சியுண்ண - **செயற்கை வெறி மனிதர்** நஞ்சும்; செருப்படைச் சாற்றில் கொடுத்து, உளுந்தங்கஞ்சியுண்ண-**இயற்கை வெறி மனிதர்** நஞ்சும் முறையே நீங்கும். (மேற்கண்ட கடி விஷங்களை முறிக்க வேறு பல துணை மருந்துகளுமுண்டு.)

### ★★ 43. நாய்க்கடிக்கு மருந்து என்ன?

**நாய்க்கடியுண்டவனுக்கு,** கடிவாயில் - நன்னாரி, நாறாக்கரந்தை, செந்நாயுருவி இவற்றின் இலையும், எள்ளும், புகையூரலும் கூட்டியரைத்து - அல்லது, சுண்டையிலையும் உப்பும் கூட்டியரைத்து-அல்லது, கோவையிலையை அரைத்து கடிவாயில் பூச நாய்க்கடியினாலான நஞ்சு நீங்கும். இதற்கு, மணத்தக்காளிச்சாறு 1/4 படி வீதம், 3 தினம் உட்கொடுக்கலாம். சர்ப்பகந்தி மாத்திரையும் பயன்தரும் (உப்பில்லா பத்தியம்.)

### ★★ 44. நீலகண்டக் குளிகையின் செய்முறை என்ன?

**நீலகண்டக் குளிகை:** சுத்தித்த வாளம்-1, துருசு-1: வெங்காரம்-1/4, வீரம்-1/4, நவச்சாரம்-1/4, பூரம்-1/4, கந்தி-1/4, இரசம் -1/4 ஆகிய பலம் வீதம் கூட்டி, வெற்றிலைச் சாற்றால் 3 நாள் மெழுகாய் அரைத்து, விராகனெடையளவு மாத்திரைகளாக்கிக் கொண்டு, தக்க அளவில் சுடுநீருடன் கொள்ள சகல கடி விஷமும் நீங்கும்.

### ★★ 45. ஏகாந்தத் தைலத்தின் செய்முறை என்ன?

**ஏகாந்தத் தைலம் :** அழிஞ்சில், புன்னை, எட்டி, விழுதி, வேம்பு, வாளம், பேய்ப்பீர்க்கு, சேங்கொட்டை முதலிய

விதைகளை சமன் கூட்டி, முறைப்படி குழித்தைலமிறக்கியும்- கழுதைலத்தியை உலர்த்திக் குழித்தைலம் இறக்கியும் சமனாய்க் கலக்கவும். கடப்பம் கொட்டையும் - கந்தகமும் சமன் கூட்டிப் பொடித்து; இதில் காசெடையளவு தூளும், அதே அளவு தைலமும் கூட்டி இருவேளையும் 7 நாள் உண்ண **வண்டு கடியும்**, 10 நாள் உண்ண **அட்டை விஷமும்**, 15 நாள் உண்ண **இலட்சக்கணக்கான** விஷங்களும், 1 மாதம் உண்டால் **செவ்வட்டை விஷமும்** பறந்தோடி விடும். (இதனை 1 மண்டலம் கொள்ள உடல் வன்மையும், 2 மண்டலம் கொள்ள உடலில் எவ்விஷமும் ஏறாத தன்மையும் ஏற்படும்.)

## ★★ 46. விஷக்குழம்பின் செய்முறை என்ன?

**விஷக்குழம்பு** : சுத்தித்த கரு நாபி, வெண்காரம், இந்துப்பு, கருஞ்சீரகம், நிர்விடம், கந்தகம், இரசம், மனோசிலை, நேர்வாளம் இவை வகைக்கு 1 பங்கும்; நவச்சாரம் ½ பங்கும் சேர்த்து உத்தா மணிச் சாற்றிலும், தேங்காய்ப் பாலிலும் மும்மூன்று சாமம் மை போலரைத்து, பின் சிரட்டைக்கரியும், கருப்புக் கட்டியும் கூட்டி அரைத்து மெழுகாக்கிக் கொள்ளவும். இதில் குன்றியளவில் கொடுக்க **சகல கடி விஷங்களும் நீங்கும்.**

## ★ 47. விஷ கடியில் உயிரிருப்பதை அறிவது எப்படி?

**அரவம் முதலிய கொடி நச்சுயிர்கள்** தீண்டியவன் மயங்கிக் கிடக்கையில் அவன் உடலில் உயிர் உள்ளதா - இல்லையா என்பதை சில குறிகளால் அறியலாம். அதாவது 1. விழி மேல் அல்லது கீழ் நோக்கியோ, பக்கத்தில் ஒதுங்கியோ இருப்பினும் - விரலில் சுடக்குப் பரியினும் - கீறிய இடத்தில் சிவப்புக் குருதி வடியினும் - நகக் கண்ணில் உதிர மோடினும் - அடித்த இடம் தடித்துச் சிவந்து வெதும்பினும் - கொடுத்த மருந்து எதிரெடுப்பினும் - தண்ணீரில் முங்கினாலும் - எருக்கு அல்லது தை வேளைச் சாற்றை ஒரு காதில் விட, அது மற்றொரு காதில் வராதிருப்பினும் **உடலில் உயிர் அடங்கி உள்ளதென** உணர்ந்து, குடோரி முதலிய சிகிச்சைகளைச் செய்ய உயிர் திரும்பும். (ஆயின், மேற்படி குறிகளுக்கு மாறான குறிகளுடன் - விழி நிலைத்து, தாது நின்று, உடல் குளிர்ந்து, பல் கறுத்திருப்பினும் விஷ கடியுண்டவன் இறந்து விட்டானென அறியலாம்).

## ★ 48. சலத்துவேச ரோகம் என்றால் என்ன?

வெறிநாய் அல்லது ஓநாய் முதலிய கடிவிஷத்தினால் சன்னி கண்டு தண்ணீரைப் பார்த்தால் மனம் கலங்கி, அச்சமுடன் வெறுத்து, நாய் போல் குரைத்து, தொண்டையடைத்து மரணத்தை உண்டாக்கும் ஒருவித விஷநோயே - **சலத்துவேச ரோகம்** எனப்படும். இது, கண்டறியவியலாத நுண்ணணுக் கிருமிகளால் வருவதாகக் கருதப்படும். இதில், சுவாச உறுப்புத் தசைகளின் இசிவு, மூச்சுத் திணறல், தொண்டையடைப்பு இவற்றால் - திரவப்பொருளின் மீது வெறுப்போ, அல்லது விழுங்கவியலாமையோ ஏற்படும். ஆரம்பநிலையில் - அசவுகரியம், ஊக்கமின்மை, காயத்தில் வீக்கமும் ஊனீரும் காணல், வாந்தி, சுரம், மனக்குழப்பம், கட்டியான எச்சிலும் குழகுழத்த ஊனீரும் பெருகுதல் முதலிய குறிகள் காணும் கண்காணிப்பிலுள்ள 1-முதல் 6-மாத காலத்தில், நீர் மேல் வெறுப்புக்குறி ஏற்பட்டு, 2-முதல் 5-நாளில் மரணம் ஏற்படும் (இதற்கு வெறிநாய்க் கடிவிஷ மருந்து தரலாம்)

## ★★ 49. விஷகடியின் அசாத்தியக்குறிகள் யாவை?

பொதுவாக, பைத்திய சன்னிக்குக் காரணமான வெறி நாய்க்கடி - மற்றும் குருதியை முறித்து நச்சுத்தன்மையை உண்டாக்கும் புலி, கரடி, சிங்கம், ஓநாய் போன்ற கொடிய மிருகங்கள், விஷப்பாம்புகள் போன்ற நச்சுயிர்கள் இவற்றாலான **கடி விஷங்கள் அசாத்தியமெனவும்** - அதிலும் குழந்தை, முதியோர், கருப்பிணி, பலவீனர், மெலிந்தோர் குன்மம், மேகம் முதலிய கடும்பிணியாளர் போன்றவர்களுக்கு ஏற்படும் கடிவிஷம் கூடுமேயொழிய, குறையாது எனவுப் கூறப்படும். இதில், கடியுண்ட உடலின் பாகத்தின் தன்மையையும், உட்சென்ற விஷத்தின் அளவையும் கணக்கிட்டு தீரும், தீராதென முடிவு செய்யலாம். நிற்க **கடிவிஷத்தால்** - நகம், உதடு, உடல் இவை கருத்தல்; முகம் வேறுபடல் நாடிமெலிதல், மூர்ச்சை, கொடிய வயிற்றுவலி, கைகால் சில்லிடல், மேல்மூச்சு, விக்கல், தொண்டையடைப்பு, தலை தொங்குதல், மூக்குச்சில்லிடல், வாயில் நுரைதள்ளல் படுக்கையாய்க் கிடத்தல், கடிவாய் வீங்கிக் கன்னிப்போதல் போன்ற குறிகளிருப்பின் அவை அசாத்தியமெனக் கொள்ளலாம்.

## ★ 50. நஞ்சுண்டோரை பாதுகாப்பது எப்படி?

வாழைக்காய் - மாங்காய் முதலியவற்றை பழுத்தற்கென ஒரு அறையில் அல்லது பானையிலிட்டு காற்று நுழையாமற் செய்து உப்பலிற் போட்டு ஊதல் கொடுத்தால், எப்படி அவைகள் அடங்கியொடுங்கிப் போமோ; அப்படியே கடி நஞ்சுற்றோரை வெளியில் வராதபடி காவல் வைத்து, அங்கு காற்றும் நுழையாமற்படி செய்தால் நலன் கிட்டும். அன்றில் திருவதும் திராது கெட்டுப் போய் மருந்துகளின் நற்குணங்களையும் கெடுத்து, தீக்குணங்களையே நல்கும். (உணவு விதிகளிலும் உரிய கட்டுப் பாட்டினைக் கடைப்பிடிக்க வேண்டும்.)

## எவற்றை நீக்கினால் எவை கெடும்?

பாரப்பா சவுக்காரம், வங்கம் ரெண்டும்
படாதிருந்தால் துருசுக்குப் பிராணனில்லை
சேரப்பா கெந்தகமும், சூதம் போனால்
சேர்ந்திருந்த செந்தூரம் சேரப் போச்சு
நேரப்பா வெடியுப்பு, சினம் போனால்
நேரான திராவகத்தின் நிறைதான் போச்சு
கூரப்பா அமுரியுட கூர்மை போனால்
கூட்டோடே யெல்லாமும் கொள்ளை போச்சே
போச்சப்பா உருக்கினந்தான் காரத்தோடே
புகழான வீரம் விட்டால் நீறும்போச்சு
ஆச்சப்பா புடம்விட்டால் சாரணையும்போச்சு
அந்தந்தயினம் தப்பில் வர்ணம் போச்சு
நீச்சப்பா தங்கம் விட்டால் வாதமில்லை
நேராக ரசம்விட்டால் எல்லாம் போச்சு
போச்சப்பா இனிஎன்ன, எண்ணிப்பாரு
பொட்டான தொழிலில்லை யின்னூல் தானே.

# VI நோய்களைக் கணிக்கும் முறை

## ★ 1. நோய் என்றால் என்ன?

**நோயறியும் விதிப்படி**-உடலில் பல விகல்பங்கள் கண்டு, அதன் வலிமை கூடும்போது, அதனை எதிர்க்க உடல் இயல்புக்கு இயலாதுள்ள தன்மையே **நோய்** எனப்படும் பிணியாகும். **தத்துவ விதிப்படி** - உடலையோ, உயிர் வாழ்வையோ, இரண்டையுமோ தாக்குவதாகும். இந்நிலை, உடல், மனோபாவம் அல்லது தெய்வீகம் இவற்றின் குணத்தைப் பற்றியே நிற்கும். **முக்குற்ற விதிப்படி** - உடலிலுள்ள வாத - பித்த - கப தோடங்கள் தத்தமது இயற்கை அளவினின்று விகாரப்படுவதால் உடலுக்கு ஏற்படும் திங்கு ஆகும். அக - புறச்செயல்களினால் மேற்படி தோடங்கள் தன்னிலை மாறிச்சினமுறுவதால், உடற்தாதுக்களின் தொழில் மாறி, அவ்வவற்றின் தன்மைகள் கூடியும், குறைந்தும் போவதால் இந்நிலை ஏற்படும். **கன்மவிதிப்படி** முற்பிறப்பில் செய்த வினைகளுக்கேற்ப, இப்பிறப்பில் ஏற்படும் உடல் - மனத்துன்பங்களையும் நோய் எனப்படும்.

## ★ 2. ஐவகை நிலத்தில் காணும் பிணிகள் யாவை?

இவற்றுள், (1) **குறிஞ்சி** (மலை நிலம்)யில் வசிப்பவர்களுக்கு குருதியை உறிஞ்சும் சுரம், வயிற்றில் ஆமைக்கட்டி, கபமிகுதி முதலிய பலவகை நோய் காணும். (2) **முல்லை** (கால்நடை மிகுந்த இடம்) நிலத்தில் வசிப்பவர்களுக்கு பித்த நோயும், வல்லை நோயும், வாதக் குற்றப் பிணிகளும் காணும். (3) **மருத** (நீர்வளமிக்கது) நிலத்தில் வசிப்பவர்களுக்கு முக்குற்ற நோய்களும் நீங்கி, நலம் கிட்டும். (4) **நெய்தல்** (கடல் நிலம்) நிலத்தில் வசிப்பவர்களுக்கு ஈரல் பெருக்கம், குடல்வாயு கீழ்க்குடல் பிதுக்கம், வாதப்பிணி, உடல் பருத்தல் ஆகியன விளையும். (5) **பாலை** (வறண்டபகுதி) நிலத்தில் வசிப்பவர் களுக்கு வாத-பித்த-கபப் பிணிகள் பெருகி துன்பம் விளையும்

## ★ 3. பிணிகளை அறியும் முறைகள் யாவை?

மருத்துவன் ஒரு நோயாளிக்குச் சிகிச்சை செய்யுமுன் **பொறியால் தேர்தல் - புலனால் அறிதல் - வினாதல்** ஆகிய விதிகளைக் கடைப்பிடிக்க வேண்டும். (இவை எண் வகைப்படும்) இதன்படி, மருத்துவன் (1) நோயாளியின் நடை

தட்பவெப்பம், உறுப்புகளின் தன்மை இவற்றை விரலால் தொட்டு - தடவி - ஊன்றி - அழுத்தி - அளந்து அறிதல் வேண்டும். (2) நோயாளியின் குடும்ப வரலாறு-வயது - வலிமை - மனஉறுதி - பண்பு - செரிப்புத்தன்மை - உணவு - தொழில் - வாழுமிடம்; நோயின் வயது - தோன்றிய காலம் - இடம்; நோய்க்கு முன் அவனது நிலை முதலியவற்றை கேட்டறிதல் வேண்டும். (3) நோயாளி பொருட்களின் சுவை - மணம் - காட்சியினை எப்படி அறிகின்றான்; ஒரு பொருளை தொட்டு - தடவி - அழுத்தி உணரும் அவனது உணர்ச்சி எந்நிலையிலுள்ளது; தான் கேட்ட ஒலியை பிறருக்கு இயற்கையாகவோ மாறுபட்டோ தெரிவிக்கின்றானா என்பதை அறிவதுடன்-தன் காதால் சுவாசாசயம், இருதயம் முதலியவற்றின் நிலை, பேச்சின் ஒலிக்குறிப்புகளையும் உணர வேண்டும் (4) நோயாளியின் ஐம்பொறிகளின் இலக்கணங்களையும், கழிவுப் பொருட்களின் தன்மைகளையும் கண்டும் - முகர்ந்தும் - சுவைத்தும் அவற்றின் தன்மையினை அறிய வேண்டும்.

### ★ 4. பொறி - கழிவுகளின் தன்மை என்ன?

பிணியறியும் சோதனையில் (1) **மலத்தின்** நிறம், நுரை, இறுகல், இளகல் (2) **நீரின்** நிறம், எடை, மணம், நுரை, எஞ்சல் (3) **சுக்கிலத்தின்** நிறம், இளகாதித் தன்மை (4) **கண்ணின்** நிறம், ஒளி, பீளை, நீர் (5) **காதின்** குறும்பி, சீழ், குருதி, அழுக்கு, மலினநீர் (6) **மூக்கின்** சளி, குருதி, அழுக்கு, மலினங்கள் (7) **நாவின் (வாய்)** நிறம், எச்சில், கோழையின் நிறம்-கனம், பேச்சின் தன்மை (8) **மெய்யின்** நிறம், தன்மை, வியர்வை. (9) **மயிரின்** நிறம், வளர்ச்சி, வெட்டு, வெடிப்பு, உதிர்ப்பு (10) **நகத்தின்** நிறம், கீற்று, வெடிப்பு வளர்ச்சி, வழவழப்பு, மினுமினுப்பு (11) **உதட்டின்** நிறம், உருவம், வெடிப்பு (12) **நெற்றியின்** நிறம், ஒளி, சுருங்கல் (13) **பல்லின்** நிறம், ஒளி, உடைச்சல், மாசு, சொத்தை, தேய்வு (14) **புருவத்தின்** ஏற்றம், இறக்கம் (15) **அண்ணத்தின்** நிறம், மற்ற நிலை ஆகிய குறிகளனைத்தையும் நன்கு பகுத்தறிய வேண்டும்.

### ★ 5. உடல் நிறத்தின் அசாத்தியக் குறிகள் யாவை?

அசாத்திய நிலையிலுள்ள நோயாளியின் **உடலானது** - சூரியனைப்போல் சிவந்த நிறமுடன் பளபளப்பாயிருப்பின்-2; சந்திரனைப்போல் வெண்ணிற ஒளி வீசினால்-3; செவ்வாயைப்

போல் நெருப்பு நிறமுடன் மினுமினுத்தால் -4; இரணியனைப் போல் பொன்னிற ஒளி வீசினால் -5, சுக்கிரனைப் போல் மிகு வெண்மையுடன் மினுமினுப்பின் - 6, சனியைப் போல் கறுத்து மினுமினுத்தால்-7, பார்வதியைப் போல் கரும்பசுமை கலந்த சாமள நிறத்தில் ஒளி வீசினால் -8 ஆகிய மாதங்களில் முறையே **மரணமடைவான்** என அறியலாம்.

## ★ 6. சருமத்தின் அசாத்தியக் குறிகள் யாவை?

அசாத்திய நிலையிலுள்ள நோயாளியின் **உடலைத் தொட்டு உணருகையில்** (1) அவனது **சருமம்** முதலையின் தோலைப் போல் அறுக்குமாயின் -12; ஆமையின் ஓடுபோல் வறண்டு கடினமாயிருப்பின் -56, மீனின் வால் போல் சுரசுரப்பா யிருப்பின் -45 ஆகிய நாட்களில் சாவான். (2) அவனது **உடல்** சந்திரனின் ஒளியைப் போல் குளிர்ச்சியாயிருப்பின் -12; மத்திமமான சீதோஷ்ணமாயிருப்பின் -56; சூரிய ஒளி போல் மிகு வெப்பமாயிருப்பின் -45 ஆகிய சாமங்களில் சாவான். (3) உடலின் **மிருதுவான முக்கிய உறுப்புகள்** யானைத்தோல் போல் வலிமையாயிருப்பின் -12, மரக் கட்டையைப் போல் திடமாயிருப்பின் -56, கருங்கல்லைப்போல் கடினமாயிருப்பின்-45 ஆகிய நாழிகைகளில் சாவான். (4) மேற்கூறிய **மிருதுவான உறுப்புகளே**, தாமரைப்பூவின் முள்ளைப் போலிருப்பின்-12, உளியைப் போல் கூர்மையா யிருப்பின்-56, அரத்தைப் போல் கடுங்கூர்மையாயிருப்பின்-45 ஆகிய வினாடிகளிலும் சாவான் என உறுதியாய்க் கூறலாம்.

## ★ 7. சுவையின் அசாத்தியக்குறிகள் யாவை?

அசாத்திய நிலையிலுள்ள நோயாளியின் **நாவின் சுவை (உருசி)** - களுள், கசப்புச்சுவையுள்ள பொருட்கள் கசக்காமல் மற்ற பொருட்கள் கசந்தால் -7, இனிப்புச்சுவையறியாது மற்றவை இனிப்பின்-30, புளிப்புச் சுவை தெரியாது வேறு புளிப்பின்-15, காரமான பொருட்களுக்குப் பதில் மற்றவை காரமாயிருப்பின்-½, உப்புக்கரிக்கும் பொருளைத்தவிர மற்றவை கரிப்பின்-1 ஆகிய நாளிலும்; துவர்ப்புச் சுவையுள்ள பொருட்கள் சுவைக்காமல் மற்றவை துவர்த்தால் - 1 நாழிகையிலும் மரணமடைவான் என உணரலாம்.

## ★ 8. மணங்களின் அசாத்தியக்குறிகள் யாவை?

அசாத்திய நிலையிலுள்ள நோயாளியின் **நுகரும்**

**மணங்களுள் (கந்தம்)** - மூங்கில் மலரினை நுகருகையில் அதற்குரிய மணம் தெரியாமல் வேறுமலரின் மணம் வீசினால்-7 வினாடி; வேங்கை மலரின் மணமறியாமல் வேறு நாற்றமிருப்பின்-7 நாழிகை; தாழை மலருக்குப் பதில் பிற மணமிருப்பின்-4 சாமம்; ஆத்தி மலருக்குப் பதில் வேறு மணம் கமழின்-7 நாள்; கொன்றைப்பூவின் மணம் மாறி வேறுபூவின் வாடையிருப்பின்-30 நாள்; சிறு செண்பகப்பூவின் நாற்றம் மாறி வேறு வாசனையிருப்பின்-60 நாள்; தாமரை மலருக்குரிய மணம் தெரியாமல் வேறுமலரின் மணம் வீசினால்-6 மாதம் ஆகிய நாளளவில் மரணமடைவான் என அறியலாம்.

## ★ 9. நோயாளியின் மலம்-நீரின் தராதரம் யாவை?

பொதுவாக ஒரு நோயாளியின், **(1) மலமானது** - வெள்ளாட்டுப் புழுக்கையைப் போல் முறுகிக் கறுத்துக் கடினமாயிருப்பது - **அதமம்;** இலைச்சாறு போல் நீர்மயமாயிருப்பது-**மத்திமம்;** சிவந்த பாகு போலிருப்பது - **உத்தமம்;** செம்பின் நிறத்தில் குழகுழப்பாயிருப்பது - **மிகுஉத்தமம்** எனக் கூறப்படும். இங்ஙனமே, நோயாளியின் **(2) சிறுநீர்** - மாணிக்கத்தைப் போல் செந்நிறமாயிருப்பது - **அதமாதமம்;** பால் போல் வெண்மையாயிருப்து - **அதமம்;** தேன் போன்ற நிறமாயிருப்பது - **மத்திமம்;** வைக்கோல் போல் மஞ்சள் நிறமாயிருப்பது - **உத்தமம்** எனக்கூறப்படும். (இத்தகைய தராதரங்களைக் கண்டு பிணியின் சாத்தியாசாத்திய நிலையினை உணரலாம்)

## ★ 10. நோயாளியின் எச்சிலின் தராதரம் என்ன?

பொதுவாக, ஒரு நோயாளியின் **எச்சிலானது** - இளநீரைப்போல் களங்கமற்றிருப்பது - **உத்தமம்;** பால்போல் சற்றுக் குழம்பி வெள்ளையாயிருப்பது - **உத்தம மத்திமம்.** வெண்ணெய்போல் அழுந்தி வெளுத்திருப்பது - **மத்திம உத்தமம்.** தயிர் போல் சற்றழுந்திய நீர் மயமாய் வெளுத்திருப்பது - **மத்திம மத்திமம்;** குதிரை வாயில் ஒழுகும் நுரைபோலிருப்பது-**அதம உத்தமம்;** களியைப் போலிருப்பது -**அதமமத்திமம்;** அடைமாவு போலிருப்பது-**அதமாதம மத்திமம்;** கட்டி மாவு போல் வறட்சியாயிருப்பது - **அதமாத மத்தினும் அதமம்** எனவும் அறிந்து அதற்கேற்ப பிணியின் தீரும் தீரா நிலையினை அறியலாம்.

### ★ 11. நோயாளியின் விந்துவின் தராதரம் என்ன?

பொதுவாக, ஒரு நோயாளியின் **விந்துவானது** (இந்திரியம்) -சுத்தமான சளியைப் போலிருப்பது-**உத்தமோத்தமம்**; தயிர் போலிருப்பது-**உத்தமம்**; பால் போலிருப்பது-**மத்திம உத்தமம்**; மோர் போலிருப்பது - **மத்திம மத்திமம்**; தேன் போலிருப்பது-**அதமோத்தமம்**; நெய் போன்றிருப்பது - **அதம மத்திமம்**; கள் போன்றிருப்பது-**அதமாதமோத்தமம்** நீர் போலிருப்பது-**அதமாதமத்தினும் அதமம்** எனவும் அறிந்து அதற்கேற்ப பிணியின் தீரும் தீரா நிலையினை உணரலாம்.

### ★ 12. குரலொலியின் அசாத்தியக் குறிகள் யாவை?

அசாத்திய நிலையிலுள்ள நோயாளியின் **குரலொலி யானது (சப்தம்)**-வீணையின் நாதம்-சங்கின் ஓசை- புல்லாங் குழலின் இசை-பாச்சிகையின் ஒலி-விருதாப் பறவையின் சப்தம் - மலையடிவாரத்திலிருந்து பேசுவது போன்ற சப்தம்-கிணற்றுக் குள்ளிருந்து பேசுவது போன்ற தொனி - தாரையின் ஒலி -பேரிகையின் ஓசை போன்று ஒலித்தால்; கிரமப்படி முறையே, *1-நாழிகை, 1½-சாமம், 1¾-நாள், 16¾-நாள், 33½-நாள், 50-நாள், 66¾-நாள், 83½-நாள், 100-நாள்* ஆகிய கணக்கின் படியான காலக் கெடுவில் மரணமடைவான் என அறியலாம்.

### ★ 13. மலத்தின் குறியறிவது எப்படி?

**நோயுற்றோரின் மலம்** முறையே (1) கறுத்துச்சிக்கலா யிருப்பின் **வாதப்பிணி** எனவும்; (2) வெளுத்து, சிவந்து மஞ்சளாயும், சிறுத்து மிருப்பின் - **பித்தப்பிணி** எனவும்; (3) சீதமாகவும், வெளுத்துமிருப்பின்-**சீதளப்பிணி** எனவும்; (4) எல்லா நிறமும் கலந்திருப்பின் - **தொந்தப்பிணி** எனவும் அறியலாம். (இங்ஙனமே, மலம் ஆட்டுப் புழுக்கையை விட உலர்ந்து கடினமாய் வறண்டு, பிணவெடி நாறினால் நோயாளி மரிப்பான் என அறியலாம்.) நிற்க, மலம் சிறிது பக்குவமான குழம்பு அல்லது இலைச்சாறு போலிருப்பின் நன்மையும் - கடினமும் தளர்ச்சியுமின்றி செம்பாகமாயிருப்பின் மிகவும் நன்மையும் - முன் மலத்தைவிட மிகவும் செம்பையொத்த செந்நிறமாயிருப்பின் நடுத்தரமெனவும் உணரலாம்.

### ★ 14. சிறுநீரின் நெய்க்குறி பரிசீலனை முறை என்ன?

**சிறுநீரில் நெய்விட்டுப் பிணியறியும்** பரிசீலனைக்கு

முறையே உண்ணும் அறுசுவைப் பொருளும், ஏற்றதாழ்வும், காலம் தவறுதலும், கூடுதல் குறைதலுமின்றி, பசிக்கேற்ற அளவில் உட்கொண்டு, உறங்கி விடியுங்காலத்தில் எழுந்து, ஒரு படிக பாத்திரத்தில் நீரைப் பிடித்து, ஆவிபோகுமுன் (3 ¾ நாழிகைக்குள்) அதன் நிறத்தையும்; அதில் எண்ணெய்விட்டுப்பார்த்துக் காணும் குறிகளையும் அறிந்து பிணிகளையும், தீரும் தீராக் குறிகளையும் அறிய வேண்டும். (கடும் நோய்க்கு இம்முறை பயன்படாது) படிக பாத்திரத்திலுள்ள நீரில் ஒரு துளி நல்லெண்ணெய் விட்டுப் (காற்றுப் புகாமல் வெய்யிலில் வைத்து) பார்க்க, எண்ணெய்த்துளி பாம்பைப் போல் நீண்டால் - **வாதம்;** மோதிரம் போல் இடைவிட்ட வட்டமாயிருப்பின் - **பித்தம்;** முத்துப் போல் அப்படியேயிருப்பின் - **கபம்;** பாம்பில் மோதிரமும், மோதிரத்தில் பாம்பும், பாம்பில் முத்தும், மோதிரத்தில் முத்தும் இப்படி இரண்டிரண்டு குறிகளாயிருப் பின் - **தொந்தம்;** நீரிலிட்ட நெய் அழுந்தினும், முக்குற்றத்தின் குறிகளும் இணைந்திருப்பினும் - **முக்குற்றம்** ஆகிய பிணிகள் என்றும்; மற்றும் நீரிலிட்ட நெய் வட்ட வட்டமாய் மெல்லப்பரவினால் - **பிணி தீரும்;** அதுவே விரைந்து பொங்கி நீர் முற்றும் பரவுதல்; கடுகைப் போல் சிதறுதல், நீருடன் கலத்தல், உள்ளே அழுந்துதல் இங்ஙனமிருப்பின் **பிணிதீராது** என்றும் முறையே அறியவும்.

## ★ 15. நோயின் போது நாவின் தோற்றம் என்ன?

வயிற்று நோய்களில் நாவு சிவந்தும் - வயிற்றில் புண்ணானால் நாவுவெந்தும் - அசீரணக் கோளாறில் நாவு புண்ணாகியும் - மலச்சிக்கலின் போது நாவில் வெண்ணிற மாவு படிந்தும் - குருதி ஓட்டத் தடையில் நாவு நீல நிறமாயும் - சன்னி பாத சுரத்தில் நாவு உலர்ந்தும்; பித்தசுரம், ஈரல் நோய்களில் நாவின் ஓரமும், உதடுகளும் காய்ந்தும்; அக்கர நோயில் நாவுவெந்து, மாசுபடிந்து, முள்ளுண்டாகி, சுரசுரப்பாயும் தோன்றும். நோயற்ற நிலையில் நாவு எவ்விதக் குற்றமுமின்றி சுத்தமாக இருக்கும்.

## ★★ 16. சிசுக்களின் பிணியைக் கண்டறிவது எப்படி?

குழந்தைகளின் நோயை பின்வரும் குறிகளால் அறியலாம். அதாவது. (1) குழந்தை தன்னுடலின் எப்பகுதியை அடிக்கடி தொடுகிறதோ - அல்லது நாம் எந்த இடத்தில் தொடுகையில்

வீறிட்டு அழுகிறதோ, **அப்பகுதியில்** நோவு உள்ளதென அறியலாம். (2) குழந்தை அச்சமுடன் பல திசைகளையுப் நோக்கினால் **குய்யம் – அடிவயிறு** இவற்றில் நோயுள்ளதாக அறியலாம் (3) சிசு அடிக்கடி கண்களை மூடினால் **தலையில் வேதனை** உள்ளதாக அறியலாம். (4) குழந்தைக்கு நீர்மலக்கட்டு, கக்கல்,குடலிரைவு, உப்பிசம், முதுகை வளைத்தல், பக்கங்களில் எடுத்துப் போடுதல், தாயின் முலைக்காம்பை கடித்தல் இவற்றின் மூலம் **வயிற்றில் நோய்** உள்ளதென அறியலாம் (5) மார்பு, விலாவில் தட்டிக் கொண்டு அறிவு மாறிப் பேசினால் - அல்லது இரவு படுக்கையில் பற்களை நறநறவெனக் கடித்தால் - அல்லது எவ்வளவு உணவு கொண்ட போதும் மெலிவுற்றேயிருந்தால் **வயிற்றில்கிருமிப் பூச்சிகள்** இருப்பதாக அறியலாம்.

## ★★ 17. குழந்தைப் பிணியில் தீரும் – தீராக் குறிகள் என்ன?

**தீரும் தீராக் குறிகள்:** குழந்தைகளின் நோயில் உடலில் சோர்வு - பலவித துர்நாற்றம், விழி சிவந்து கண்ணீர் வடிதல் நாவறட்சி, கபம் கட்டிப்படுதல், ஆகிய குறிகள் இல்லாதிருப்பின் **சாத்தியமாகும்**. ஆயின், கண்கள் திறவாமை தீயாய்ச் சிவத்தல், அடிக்கடி கழிதல், சதா அழுகை, உழலை உச்சியில் குழி விழுதல், கை கால்கள் குளிர்ந்து சில்லிடுதல் மயங்கிச் சோர்ந்து விழுதல் ஆகியன கண்டால் அக்குழந்தை 51 - நாளில் **மரணமடையும்**.

## ★★ 18. தீரும் – தீராக் குறிகளின் பொது நிலை என்ன?

கடும் நோய்களின் **தீரும் – தீராக்குறிகள்** (சாத்திய - அசாத்திய நிலை) தனித்தனியே கூறப்பட்டிருப்பினும், குறிப்பாக (1) எவ்வித மருந்தையும் ஏற்கவல்ல உடல் நிலையும் - எதிலும் அவாவுறும் சபலமின்றி, **அறிவுத்தெளிவும்** தைரியமும் கொண்டவர்களுக்கும்; பெண்களைவிட வாலிபர்களுக்கும் நோய் எளிதில் நீங்கும், மற்றும் மர்மத்தானங்களில் இல்லாமலும் பிணியின் தொடக்கமும் குறிகுணமும் மிகக் குறைவாயும் வேதனையின்றியும் இருப்பதுவும் எளிதில் தீரும், மேலும் வாழுமிடம், காலநிலை, உடற்தாதுக்கள், முக்குற்றங்கள் இவை எதிரிடையாக இல்லாமலும் - கிரகநிலை, மருந்துகள் தோடங்கள் தொந்திப்பின்மை இவை ஒத்திருப்பினும் பிணி எளிதில் நீங்கும். (தீரும் தீராக் குறிகள் சமமாயிருப்பினும்

அறுவை கிகிச்சைக்கு உரியதும் கடின சாத்தியமாகும் - குறிகள் எதிரிடையாயினும். ஆயுள் பலமிருப்பின் உணவு செயல்முறை கட்டுப்பாடுகளினால் மரண பயத்தைத் தவிர்க்கலாம்). (2) எவ்வகையிலும் ஏற்புடையதல்லாத கடின நிலையிலுள்ளதும் - சில விஷயங்களில் திடீரென மிக்க ஆவலைத் தூண்டுவதும்-மிக்க அறிவின்மையைத் தருவதும் -அமைதியைக் குலைத்து அலட்டி விடுவதும் - பொறிபுலன் குன்றச் செய்வதும்-மரணக்குறிகளைக் காட்டுவதும், மற்றும் ஆயுள் பலம் குன்றியிருப்பினும் அவ்வகை நோய் தீராது.

## ★★ 19. பிணிகளின் அசாத்தியக் குறிகள் யாவை?

நோய்களின் போது குறிப்பிட்ட குறிகள். தோன்றினால் அந்நோய் **தீராதென** அறியலாம். அதாவது (1) பிரமேகம், வாதசூலை, நீரிழிவு, குன்மம், சுக சன்னி, காமாலை, பாண்டு சோகை, கபநோய்கள், குலைநோவு, பைத்தியம், பித்தம் இவற்றின் போது **அதிசாரம்** உண்டாயினும்; (2) வீச்சு, சன்னி தோடம், கடும்சுரம், விஷசோகை, கிராணி, அதிசாரம், குன்மம், எலும்பு சுரம், வயிற்றுளைவு, மேகம், நீரிழிவு, சுவாசம், சயம், கணை, இளைப்பு, இருத்து ரோகம் இவற்றின் போது **வீக்கம்** ஏற்படினும்; (3) நீரிழிவு, மேகம், சூலை, சுரம், வீச்சுசன்னி, வலி, மாந்தம், கிராணி, அதிசாரம், வாதம், விஷபாகம், மகோதரம், பாண்டு, சோகை, பெரும்பாடு, மஞ்சள் நோய், வாய்வு, இரத்தபித்தம் இவற்றின் போது **இளைப்பும், சுவாசமும், விக்கலும்** ஏற்படினும் (4) விஷபாகம், வீக்கம், சோகை, சூலை, வாதம், நீரிழிவு, மேகம், இளைப்பு, இருமல், சுவாச காசம், சயம், சன்னி, விஷமாந்தம், கப நோய், குன்மம், அஸ்திசுரம், காமாலை இவற்றின்போது **வயிற்றுளைச்சல், சீதபேதி** கண்டாலும்; (5) நீரிழிவு பிளவை, ஈளை, மந்தாரகாசம், கபம், இரத்த பித்தம், உளைச்சல், அதிசாரம், சன்னி, நாட்பட்ட சுரம், இரத்த பிரமேகம், வீக்க நீர், கருப்பச் சூலை, வீச்சுவலி, பெரும்பாடு, மூலவாயு இவற்றின் போது **கொழுத்த வாயு** தோன்றினாலும் முறையே பிணிகள், அசாத்திய முற்று மரணம் நேரிடும்.

## ★ 20. மணிக்கட்டுப் பரிசீலனை என்றால் என்ன?

நோயாளியின் கை மணிக்கட்டுக்கு மேல் நான்கு விரல் தூரம் தள்ளி கையின் சுற்றளவை ஒரு கயிற்றினால் அளந்து

- வரும் நீளத்தை அவரவர் கை விரல்களினால் அளந்து, எவ்வளவு நீளம் வருகின்றதோ அதற்கேற்பப் பற்றும் பிணிகளை அறிவதே **மணிக்கட்டுப் பரிசீலனை** என்பதாகும். (இதில் கயிற்றின் நீளம் 6 விரலளவுக்கு குறையின் மரணம் நேரும் - அதிக அளவு 10 விரலளவு இருக்கும்.)

### ★ 21. பிணி பற்றும் - என்பதை அறிவது எப்படி?

ஒருவனுக்கு கடுமையான நோயோ, அல்லது பிணியினால் மரணமோ விரைவில் பற்றும் என்பதை, உடலுறுப்புக்களில் காணும் சில பொதுக் குறிகளின் மூலம் அறியலாம். அவை **1. மயிர்கள்** உடலிலும் - தலையிலும் எண்ணெய் தடவாமலேயே, நெய்பூசியது போல் தோன்றும். **2. கண்கள்** மிக உருண்டு ஆடி அல்லது அசைவற்று குழிவிழுந்து காணும் அதிகமாக வெளிப்பிதுங்கியுள்ளதாகவோ, வக்கிரமாகவோ காணும் - மூடிய கண் திறவாமலும், திறந்தவை மூடாமலும் காணும் - பொருட்கள் புலப்படாமல் மந்தமாக அல்லது தத்தளித்துக் காணும் - கண்ணீர் பெருகி, இமை மயிர் உதிரும் - கீரி, புறா, தீ இவற்றின் கண் போல் காணும். **3. மூக்கு** மிக விரிந்து அல்லது சுருங்கியும், வீங்கியும், வாடியும், மடிப்பு அல்லது கொப்புளங்களுடனும் காணும். **4. உதடுகள்** மிகவும் கீழே தொங்கி அல்லது மேலே உயர்ந்து நிற்கும் - நாவல் கனி போல் காணும். **5. பற்கள்** காரை கட்டும். **6. நாக்கு** வக்கிரமாக - வெளுத்து - உலர்ந்து - தடித்து - பெருத்து - கருத்து - மாவுபடிந்து - நாமுள் பாய்ந்து - கொப்புளம் கண்டு - சொள்ளுநீர் வடிந்து காணும். **7. கழுத்து - முதுகு** இவை முறையே தலையையும் -உடலையும் தாங்கும் வலிமை யற்றுக் காணும். **8. தவடை** வாயிலிட்ட உணவை மெல்ல திறனற்று அசைவு குன்றும். **9. உறுப்புக்கள்** யாவும் திடீரென மிக்கக் கனமாகவோ - இலேசாகவோ ஆகிவிடும். **10. நவத்துவாரங்களில்** குருதியோ, துர்நீரோ கசியும். **11. பீசகோசங்கள்** மிகத் தாழ்ந்து தொங்கும். (இது போன்ற பலவகை தோற்றங்களில் இருந்தும் - மேலும் சில குறிப்பிட்ட நோய்க் குறிகளிலிருந்தும் ஒருவனுக்கு பிணித்துன்பம் நேருமென அறியலாம்.)

### ★ 22. மூவகை நோய்கள் என்பது என்ன?

பொதுவாக, நோய்களை அது தோன்றும் காரணம் கொண்டு மூவகையாகப் பிரிக்கலாம். அவை 1. முற்பிறப்பில்

செய்த **தீவினையால்** (கர்மம்) விளைவது. இதில், காரணத்தை அறிய முடியாமலேயே திடீரென நோய் காணும். இவை நோயாளி கர்மத்தை அனுபவித்து - தீவினையை முடிக்கும் பொழுதுதான் குணம் அடையும். 2. இப்பிறப்பில் செய்த **தீயசெயல்களால்** (தோடங்கள்) உண்டாவது. இதில், நோயின் தோற்றக் காரணமும் - குறிகுணங்களும் சாத்திரவிதிப்படியே காணும். இவை அந்நோய்க்கு எதிரிடையான குணமுடைய மருந்துப் பொருள். சிகிச்சை முறைகளினால் நீங்கும். 3. மேற்கூறிய **தீவினையும், தீயசெயலும்** சேர்ந்ததால் (கர்மமும் - தோடமும்) உண்டாவது. இதில், நோய் ஏற்படும் காரணம் சாதாரணமாயிருப்பினும், குறி குணங்கள் மிகக் கடுமையாயிருக்கும். இவை சிகிச்சைக்கு வசப்படினும், தோடமும் கர்மமும் முற்றாக ஒழிந்த பின்னரே குணமடையும். எனவே, மேற் கூறிய மூவகைப் பிணிகளின் வேற்றுமைகளை அறிந்த பின்னர், உரிய வழிகளைக் கடைப்பிடித்தலே நலம் பயக்கும்.

### ★ 23. சிகிச்சை முறை எத்தனை வகைப்படும்?

பொதுவாக, நோய்களைப் பரிகரிக்கும் முறைகள் பலவகைப்படும். அவைகள், தெய்வ சிகிச்சை - மந்திர சிகிச்சை -திரிதோட சிகிச்சை-மானத சிகிச்சை-தோட நிவர்த்தி சிகிச்சை - சத்திர சிகிச்சை - மருந்து சிகிச்சை - தடை சிகிச்சை - சுத்த சிகிச்சை-பத்திய சிகிச்சை - ஒப்புறை சிகிச்சை - சுகாதார சிகிச்சை - நோய் பரிமாண சிகிச்சை - உபசாந்தி சிகிச்சை - தைல சிகிச்சை - வேது சிகிச்சை - அட்டை விடு சிகிச்சை - இரத்தம் விடு சிகிச்சை - எதிருறை சிகிச்சை - உடன் சிகிச்சை - தற்கால சிகிச்சை - பலவிருத்தி சிகிச்சை - தாதுவிருத்தி சிகிச்சை - சூதக சிகிச்சை-கருப்பை சிகிச்சை - பிரசவ சிகிச்சை -பாலசிகிச்சை என்பனவாகும். இவை **தெய்வகண-மனித கண -இராட்சதகண சிகிச்சைகள்** எனும் முப்பிரிவினுள் அடங்கும். (இவை யாவற்றுக்கும் தனித் தனி செயல் முறைகள் உண்டு.)

## நாடி பார்க்கும் முறை

### ★ 24. நாடித்துடிப்பு எப்படி ஏற்படுகிறது?

நமது **இருதயத்தின்** இடது சடரம் குவியும் பொழுது இரத்தம் தள்ளப்பட்டு கண்டரையின் மூலம் சகல

நாளங்களுக்கும் பாய்வதால் **நாளங்கள் விரியும்** - மீண்டும் இடது சடரம் விரியும் பொழுது குருதி இழுக்கப்படுவதால் **நாளங்கள் சுருங்கும்.** இவ்விதம் இருதயம் விரியவும் - சுருங்கவும் இருப்பதால் இதனைச் சேர்ந்த நாடி நரம்புகளும் விரிந்து சுருங்கும் தன்மையுடையதாக இயங்கி, இருதய நடையின் மாறுதல்களைத் தெரிவிக்கின்றது. இருதயத்தின் நிலையும் உடல் நிலைக்கேற்ப மாறுபாடடைவதால் அவற்றை நாம் நாடித் துடிப்பின் மூலம் அறிய முடிகிறது.

## ★ 25. நாடி பார்க்கும் இடமும் முறையும் யாவை?

**நாடித்துடிப்பினை** தசநாடி இருப்பிடங்களிலும் உணரலா மெனினும் இதில் **கரமே** எளிதிலும் - தெளிவுடனும் பார்க்கத் தக்கதாகவே **கைகளில் அறிவதே நலமாகும்.** எனவே - **ஆண்களுக்கு** வலது கரத்திலும், **பெண்களுக்கு** இடது கரத்திலுமாக - முன்கையின் ஆரை எலும்பின் மேற்புறமுள்ள பெரு நாடியை - மணிக்கட்டிற்குக் கீழே ஒரு அங்குலம் தள்ளி - மூவிரலால் மாறிமாறி மெதுவாக அழுத்தியும் தளர்த்தியும் பார்க்க வேண்டும். அவ்வமயம் நமது ஆள்காட்டி விரலில் உணர்வது **வாதம்** எனவும், நடுவிரலில் உணர்வது **பித்தம்** எனவும் - மோதிரவிரலில் உணர்வது **சிலேத்துமம்** எனவும் அறியவும் (மற்றும் **பூத நாடி** பெருவிரல் - சிறு விரலிலும்; **குருநாடி** ஐந்து விரல்களில் சேர்ந்தும் நிற்கும். இதில், நாடியின் எண்ணிக்கை-நடை-அழுத்தம் - தன்மை - எழுச்சியின் அளவு இவற்றை அறிய வேண்டும்.

## ★★ 26. நாடியின் எண்ணிக்கை அளவு என்ன?

**நாடித்துடிப்பின்** எண்ணிக்கை வயதிற்கேற்ப மாறுதல் அடையும். அதாவது ஒரு நிமிடத்திற்கு பிறந்த குழந்தைக்கு - *140*; குழந்தைகட்கு - *100*; பாலப்பருவத்தில் - *120* முதல் *130* வாலிபத்தில் - *90*; முழுப்பருவ ஆணுக்கு- *70* முதல் *75* முழுப்பருவப் பெண்ணுக்கு - *75* முதல் *80*; தளர்ந்த பருவத்தில் - *80*; வயதானபின் - *75*; ஆகிய தடவையும் - மற்றும் அமர்ந்திருப்பின் - *40*; நின்றால் - *79*; படுக்கையில் - 6; தடவையும் வீதம் சாதாரணமாக நாடி துடிக்கும்(இதில் **கோதுமையின்** அளவுள்ள ஒரு மாத்திரை அளவில் **வாத நாடியும்;** மேற்படி அரை மாத்திரையளவில் **பித்த நாடியும்** மேற்படி கால் மாத்திரையளவில் **கப நாடியும்** நடத்தலே நலமாகும். இதில் காணும் மாறுதல்களினின்று பற்றும் பிணியினை அறியலாம்.)

## ★ 27. நாடி பார்ப்பதற்கு உரிய காலம் என்ன?

**நாடித்துடிப்பினை** சித்திரை, வைகாசியில் **-உதயத்திலும்;** ஆனி, ஆடி, ஐப்பசி, கார்த்திகையில் - **மதியத்திலும்;** மார்கழி மாசியில் - **மாலையிலும்;** பங்குனி, ஆவணி, புரட்டாசியில் - **இரவிலும்** முறையே தெளிவாக அறியலாம். மேலும், காலை மணி 6 முதல் 10 வரை **வாதமும்,** பகல் 10 முதல் 2 வரை **பித்தமும்;** மாலை 2 முதல் 6 வரை **கபமும்** மிக்க எழுச்சியுடனிருக்கும், ஆகவே அந்தந்த நேரத்தில் அவ்வவற்றைக் கண்டறிதல் சுலபமாகும். (இங்ஙனமே மாலை 6 முதல் காலை 6 மணி வரை உள்ள இரவு நேரத்திற்கும் கிரமப்படி கண்டறிதல் வேண்டும்.)

## ★ 28. நாடி நடைகளின் மாறுதல் யாவை?

**நாடி நடைகளுள் (1)** அதிக நடையினால் களைப்பு, சூடான அல்லது அதிகமான உண்டி, புகை - மதுக்கொள்ளல், கவலை, தூக்கமின்மை, பலவீனம், குருதிவடிதல், கடும் வெய்யில், சுரம், பயம், அதிர்ச்சி ஆகியவற்றால் **நாடிவிரைந்து படபடத்து** நடக்கும் (2) மிகு தூக்கம், பசிக்கவலை, குளிர், தலைமுழுக்கு இவற்றால் **நாடி நடை குறையும் (3)** பாலர், விருத்தர், தரித்திரர், நீரில் மூழ்கியோர், சயரோகி, நஞ்சுண்டோர், யோகியர், சிற்றின்பம் செய்தோர், அடிபட்டோர் இவர்களது நாடியின் **உண்மை நிலை புரியாது (4)** நாடி பார்க்குமிடத்திற்கு மேல் கட்டுக் கட்டியிருப்பினும் காலைக் கட்டிக் கொண்டிருப்பினும், பூமியில் கையை ஊன்றிக் கொண்டிருப்பினும், நாடி நடை புலப்படாது.

## ★★ 29. நாடிகளின் நடை உதாரணம் யாவை?

நாடி நடையினை மாத்திரையளவில் கூறியிருப்பினும் பாமரர் எளிதில் புரிந்து கொள்ளுமளவில் சில **உயிரினங்களின் இயல்பான நடைக்கு** ஒப்பிட்டுக் கூறியுள்ளனர். அதாவது, **(1) ஆண்களுக்கு வாத நாடி** அன்னம், கோழி, குயில், கொக்கு, ஓணான், இவற்றின் நடையினை ஒத்தும் - **பித்த நாடி** அட்டை, ஆமை, புழு, இவற்றின் நடையினை ஒத்தும் - **கப நாடி** பாம்பு, தவளை, வெட்டுண்ட அரணைவால் இவற்றின் நடையினை ஒத்தும் நடக்கும் **(2) பெண்களுக்கு வாத நாடி**

பாம்பு போலும், **பித்த நாடி** தவளை போலும், **கபநாடி** அன்னம் போலும் மாறி நடக்கும். (சன்னி பாதத்தில் மூன்று நாடியும் ஒன்றாக எழும் அல்லது அடங்கும் - பிணி நீங்கும் நாடியில் புழுப்போல் நெளியும். சூடு கொள்ளும், பஞ்சுபோல் மெதுவாக இருக்கும். அல்லது அன்னம் போல் நடக்கும்.)

### ★ 30. நாடித்துடிப்பின் பொதுப் பண்பு யாவை?

**நாடித் துடிப்பின்** பொதுத் தன்மை முக்குற்ற இயல்புகளுக்குகேற்ப மாறுபடும். அவை முறையே, புழுப்போல் ஊரல் - பதறி ஓடல் - குமுறி ஓடல் - ஓடம்போல் ஓடல் - குதிரை ஓட்டம் - ஆடு போல் துள்ளல் - தெறித்து வீழல் - தளர்வாய் ஓடல் - குன்றிப் போதல் - பின்னித் துடித்தல் - பொலிவறத் தோன்றல்-தூரற நடத்தல் - புரட்டிக் காணல் - உள்ளூற வாங்கல்-கதித்து நிற்றல்-பதறி நிற்றல்-மந்தமாய் நடத்தல்-மெலிவுற நடுங்கல்-விழல்-தூங்கி ஓடல்-மெலிந்து நிற்றல்-விட்டில் போல் பதைத்தல்-அரணைவால் துடிப்பு மயங்கி நிற்றல் - பதுங்கிநிற்றல்-அடுத்து ஓடல்-தவளை போல் குதித்தல் - மீறிக்காணல்- எழும்பிநிற்றல் - தனித்து நிற்றல் - மெலிந்து நடத்தல்-துடித்து நிற்றல் என வகைப்படுத்தப்படும். இவற்றை மிக உன்னிப்பாய் கண்டறிதல் வேண்டும்.)

### ★ 31. நாடிநடையின் பிரிவுகள் யாவை?

நாடி நடை பொதுவாக, **வாதநாடி – பித்தநாடி –சிலேத்தும நாடி – பூதநாடி – குருநாடி** என ஐவகைப்படும். எனினும். இவற்றின் பிரிவாகவும், மற்றும் நாடி நடைகளின் அமைப்பு, செயல்முறை, பண்பு இவற்றிற்கேற்பவும் முறையே, தீவிரநாடி-துள்ளுநாடி-வன்னாடி-அபலநாடி- நெருங்கிய நாடி-நிறைநாடி-கதிநாடி-தடங்குநாடி-இடைவிடுநாடி-தளம்புநாடி-ஒழுங்குநாடி-கூர்நாடி-மென்னாடி-நுன்னாடி -கம்பிநாடி-மரணநாடி-விகல்பநாடி-பூத்த மங்கைநாடி - சன்னிநாடி-ஒடுங்குநாடி-துடிநாடி - உதரநாடி - குதிரை ஓட்ட நாடி-தெறிக்குநாடி-இரட்டைநாடி-கருப்ப நாடி - சாத்தியநாடி - அசாத்தியநாடி எனவும் பலபிரிவாக வகுத்துக் கூறப்படும்.

### ★ 32. பிணிகளில் கலப்பு நாடியின் நடை யாவை?

நோய்களின் போது முறையே **(1) வாத பித்த கபம்** ஆகிய "மூன்று நாடியும்" வாய்வு, மந்தத்தின் போது அமர்ந்து.

தளர்வாயும்; வயிற்றுவலியின் போது உள்ளுறவாய் வாங்கியும்; கிரந்தி நோயின் போது கரையுடைந்த அருவி போலும்; பாண்டு, சோகை, விஷநீரின் போது முகவீணை போல் மீட்டும்; பசியின் போது தூங்கியும்; சன்னியின் போது படபடத்தும்; நீர்மேகத்தின் போது பலம் குன்றி ஏரிமீது புரளும் புழுப்போல் புரண்டும் (குரு நாடி சீறியும்) முறையே நடக்கும். ஆயின் பாம்பு விஷத்தின் போது அடங்கி நிற்கும். இங்ஙனமே **(2) வாத, பித்த, கபம்** ஆகிய மூன்று நாடிகளும் கூடி நிலைதவறி ஓடினால் 1 - மண்டலத்திலும்; தேள்கொடுக்குப் போல் ஆடி ஓடம் போல் நாடந்தால் 30 - நாளிலும்; அரணைவால் போல் துடித்தல் 1-நாளிலும்; வீணையைப் போல் தெரித்தால் -3 நாளிலும்; மற்றும் சாவுக் குறிகளுடன் மூன்று நாடியும் விட்டிலைப் போல் துடித்தாலும் மரணம் ஏற்படும் என அறியலாம்.

## ★ 33. சிகிச்சை முறை எத்தனை வகைப்படும்?

சிகிச்சை முறை மூவகைப்படும். இதில் **(1) தேவமருத்துவம்** என்பது இரச, கெந்தக, பாடாண, உப்பு, உலோகங்களினாலான பற்பம், செந்தூரம், சுண்ணம், கட்டு, களங்கு, மாத்திரை, மெழுகு ஆகிய உயர்ந்த மருந்துகளால் சிகிச்சையளிப்பதாகும். **(2) மானிட மருத்துவம்** என்பது தாவரங்களினாலான குடிநீர், சூரணம், சுரசம், பிட்டு, வடகம், இளகம், மாத்திரை, மணப்பாகு இவற்றினால் சிகிச்சை செய்வதாகும். **(3) நிசாசர மருத்துவம்** என்பது மேற் கூறிய முறைகளால் தீராத பிணிகளை அறுவை, கீரல், சுட்டிகை, அட்டைவிடல், சலாகை, குருதி வாங்கல், கொம்பு கட்டல் ஆகிய வகையினால் செய்வதாகும்.

## ★ 34. பிணிகளை வகுப்பது எத்தனை வகைப்படும்?

**பிணிகளை வகுப்பது** முறையே **(1) பற்றும் காரணம்** கொண்டு வகுத்தல் (உதாரணம் : வாத, பித்த, கபநோய்கள்) **(2) நோயின் குறி குணம்**, தாக்கப்பட்ட தாதுக்களின் நிறை கண்டு வகுத்தல் (உ-ம் : வெப்பு, சுரம், அசிரணம், அதிசாரம், காசம், சுவாசம், குன்மம், பீலிகை, சருமநோய் முதலியன) **(3) நோயின் பரிகார வழி** நோக்கி வகுத்தல் (உ.ம் : வாந்திக் குரியன, பேதிக்குரியன, சூருறைக்குரியன முதலியன) என்று மூவகைப்படும்.

## ★★ 35. பேதி-வாந்தி-பட்டினிக்குரிய பிணிகள் யாவை?

இதில் *(1)* **பேதிக்குக்** கொடுப்பதை சகல பிணிகளிலும் பயன்படுத்தலாம். முதுவேனிற் காலத்தில் பேதிக்குரிய குடிநீர் கற்கம், எண்ணெய்களையும்-முன்பனி, பின்பனி, கார் காலத்தில் வாளம், கள்ளிப்பால், சூதம், உப்பு இவற்றாலான பேதி மருந்துகளையும் கொடுக்கவும். **(2) வாந்திக்குக்** கொடுப்பதை காசம், சுவாசகாசம், கபவாத சுரம், குன்மம் இவற்றில் பயன் படுத்தலாம். (கர்ப்பிணிக்கும், குருதி வாந்தி, அடித்தள்ளல் குடல்வாயு நோய்களிலும் கொடுக்கக் கூடாது) **(3) பட்டினி** கிடப்பதால் பல பிணி தீருமெனினும், நாடிநிலை, பட்டினி விதி, உடல் வலிமை இவையறிந்தே உட்படுத்த வேண்டும் (சயம், பேதி, கண்ணோய், முதுமை, இளைப்பு, மது, பிணியின் நலிவு, பலவீனம், மிகுபோகம், கவலை இவற்றிலும், கர்ப்பிணி குழந்தைகட்கும் பட்டினி கூடாது) பட்டினியினால் வாதசுரம்-7 பித்தசுரம்-6, கபசுரம்-9, தொந்தசுரம்-10 சன்னி-3, நளிர் சன்னிசுரம்-13 ஆகிய நாளில் தணியும். திராவிடில் மருந்தும் கஞ்சியுணவும் கொள்ள வெஞ்சுரங்களும் தீரும்.

## ★ 36. குருதி வாங்குவதற்குரிய பிணி யாவை?

**குருதியை வெளிப்படுத்த** அட்டை விடல், கீறல், கொம்பு புறிஞ்சல், குருதிவாங்கல் இவற்றைக் கையாளலாம். இதனால் வெறி, தலைவலி, சூலை, வீக்கம், பிளவை, இரத்த பித்தம் வாதம், கண் - காது - வாய் - மூக்கு நோய் ஆகியன தீரும் மேகம் கம்மல், காற்று வீசல், குளிர்ச்சி மிகுதல் இச்சமயத்தில் குருதியை வெளிப்படுத்தக் கூடாது. அவ்வமயம் குருதி சரிவர வராது. வரினும் விரைவில் உறைந்து அதனால் குருதி அடைத்து வெட்டு வாயில் குற்றம் காணும். மேலும், சயம், காசம் காமாலை, பாண்டு, காக்கைவலி, உடல் முற்றும் வாதநோய் இவற்றின் போதும்; குடியன், வெறியன், கூத்தாடி, குழந்தை முதியோர், அலி, புணர்ச்சியிலீடு பட்டோர், பிணி நீங்கியவர் ஆகியோருக்கும் குருதியை வெளிப் படுத்தக் கூடாது. (ஆயின் விஷக்கடியினால் உயிருக்கு ஊறு நேரும் சமயம் பாகுபாடு தேவையில்லை)

## ★ 37. மருந்துகளை வழங்கும் முறை யாவை?

பொதுவாக, **வாத உடலினர்க்கு** உணவிற்கு முன்பும் **பித்த உடலினருக்கு** உணவின் நடுவிலும், **கப உடலினர்க்கு**

உணவிற்குப் பிறகும் மருந்துகளை வழங்குதல் சிறப்பு. (அனுபவத்தில் எம்மருந்தையும் உணவிற்கு முன்போ, பின்போ அரைமணி நேர இடைவெளியில் ஏற்றல் நலம் எனத் தெரிகின்றது) மேலும், எம்மருந்தாயினும் அதை விட எட்டு மடங்கு அளவுள்ள தொரு அனுபானத்தில் தருதலே நலம். உதாரணமாக, வெப்ப வீரியமுள்ள மருந்துகளை தேனுடன் கலந்தும், சீத வீரியமுள்ளதை பால், வெண்ணெய், நெய்யுடனும்; ஒன்றும் கூறாவிடத்து தேன் அல்லது பிணிக்கேற்ற துணைமருந்துடனும் கொடுக்கலாம். அதோடு, மிக்க வீரிமுள்ள மருந்துகளை அளவு குறைத்தும், இடைவெளி விட்டு விட்டும்; நச்சு குணமுள்ள மருந்துகளினால் தோடங்கள் வெளிப்படுகையில் உடன் அதை நிறுத்தி விட்டு உரிய முறிவுகளைக் கொடுத்த பின்னரும்; மற்றும் சுரம், சன்னி, பேதி, வாந்தி, விக்கல் போன்றவற்றைத் தவிர மற்ற பிணிகட்கு தினமிரு வேளைமட்டும் மருந்து வழங்கினால் போதும். பொதுவாக பேதி மருந்துகளை காலையிலும்; கண் - காது தலை நோய் மருந்துகளை மாலையிலும், மலமிளக்கி - தூக்கமின்மை மருந்துகளை இரவு படுக்கு முன்பும், பசிதீபன மருந்துகளை உணவிற்கு முன்பும், செரிப்பிக்கும் மருந்துகளை உணவிற்குப் பின்பும் தரலாம். (அற்ப வீரியமுள்ளவை - நீடித்து அருந்துபவை - உடல் வலுவிற்குக் கொள்பவை போன்ற மருந்துகளுக்கு பத்திய முறை தேவையில்லை.)

### ★ 38. மருந்து கொடுக்கும் அளவு என்ன?

நோயாளிக்கு பின் வரும் அளவுப்படி மருந்து கொடுத்தல் நலம். அதாவது **வாலிபருக்கு** ஒரு வேளை மருந்தின் அளவு *60-* உளுந்து (ஒரு வராகன்) எடையானால்; மற்றவர்களுள், ஒரு வயது வரை-*5*, இரண்டு வயது வரை-*8*, மூன்று வயது வரை-*10*, நாலு வயது வரை-*15*, ஏழு வயது வரை-*20*, பதினாலு வயது வரை-*30*, இருபது வயது வரை-*40*, அறுபது வயது வரை-*60*, எண்பது வயது வரை-*40*, நூறு வயது வரை-*30* ஆகிய **உளுந்து எடை** வீதம் மருந்தை வகுத்தளிப்பதே தீங்கற்ற பயன் நல்கும்.

### ★★ 39. பத்தியத்திற்குரிய விதி முறை என்ன?

**மருந்துண்டு பத்திய மிருக்கையில்** *(1)* பகலுறக்கம் கொள்ள தூக்க வெப்பம், சூரிய வெப்பம், மருந்து வெப்பம், பத்திய வெப்பம் ஆகியன கூடி அளவு கடந்த பிணியனுகு

மாகவே பகல் தூக்கம் கூடாது. (2) மிகுகடும் பத்தியத்தில் புது மட்கலத்தில் அரிசியைப் போட்டு உப்பின்றிச் சமைத்துண்ண வேண்டும். உப்புநீர், புளியமர நிழல், கடற்காற்று இவை உடலில் படவும் கூடாது. உவர் மண்ணைக் கையினாலும் தொடக் கூடாது. (3) நீடித்த மருந்துண்ணுகையில் பத்தியமில்லையெனக் கூறினும், முத்தோட உடல்நிலைக் கேற்பவும் முக்குற்ற பிணிக்கேற்பவும், காலத்திற்கேற்பவும் ஆகும் - ஆகாப் பொருட்களை அறிந்து சேர்க்கவும். தள்ளவும் வேண்டும். (ஆயின் பொதுவாக எப்பிணிக்கும் உடலுறவு மட்டும் கூடாது.)

## ★ 40. மருந்துண்ணும் விதி முறை என்ன?

**மருந்துகளை** கண்ணாடிப் பாத்திரத்திலிட்டு, வாத நோயினர்-உணவிற்கு முன்னும், பித்தநோயினர் உணவின் நடுவிலும், கப நோயினர்-உணவிற்கு பின்னும்; மற்றும் காலையில் சூரியன் உதித்த சிறிது நேரத்திலும், மாலையில் சூரியன் மறைந்தவுடனும் உட்கொள்ள வேண்டும். மேலும், இலேகியத்தை நக்கியும். கோஷியத்தை உரிஞ்சியும், காதிபத்தை மென்றும், பேபங்கைக் குடித்தும் உட்கொள்ள வேண்டும். மருந்துண்ட பின் வெற்றிலைக்காம்பு, கிராம்பு, பழைய நெற்பொரி முதலியவற்றை வாயிலிட்டுக் கொள்ளலாம். பொதுவாக ஒருவன் ஆயுளில் 30 - ஆண்டுவரை எண்ணெய், 40-வரை இலேகியம், 60-வரை செந்தூரம், 20 - முதல் 100 - வரை பற்பம் என முறையே உண்ணலாம். (மருந்துகளை கண்ணாடிக் குப்பியில் பத்திரப்படுத்தல் நலம்.)

## ★ 41. பிணி நீங்கும் கால அளவு என்ன?

தக்க மருந்துகளை, **கூறியுள்ள விதிப்படி கொடுப்பின்** முறையே அறிவுக் கெடுதி, இரைப்பு, பைத்தியம், விந்து நட்டம் இவை - 12; கல்லடைப்பு, நீரடைப்பு, விரணம், நீரிழிவு இவை - 10; உதர வர்த்த நோய் - 7; வாதம், விப்புருதி, கட்டிகள், நாட்பட்டசுரம் இவை - 6; மூலம், பவுத்திரம், திமிர், குன்மம், குருதிக்கட்டி, உதிரச்சூலை, படை, சயம், சுருக்கு சூலை இவை - 4; மூர்ச்சை, இருதய நோய், கிரந்தி, பித்தம், உட்சூடு, அதிசாரம், சோம ரோகம், சீதளம், மகோதரம், தொண்டைக் கட்டு இவை - 3; காமாலை, பாண்டு, இழுப்பு, சோகை, இவை - 2; விக்கல், வாந்தி, கணம், மாந்தம், பேதி இவை 1½ ஆகிய மாதங்களில் நீங்கிவிடும்.

## ★★ 42. பிணி நீங்குவதை எப்படி அறியலாம்?

**பிணி நீங்குமுன்** பொதுவாக வலது உள்ளங்கால் சுட்டு இடது உள்ளங்கால் குளிர்ந்து, உச்சி வியர்த்து, உடல் கனலாயிருப்பினும் - புருவம், நெற்றி, இடது உள்ளங்கை சுட்டு, இடது நாசியைத் தேய்க்கும் பொழுது சிவப்பினும் - உடல் முற்றும் வெதும்பினும் நோய் திருமென உணரலாம்..

## ★★ 43. சில மரணக்குறிகளைக் கூறவும்?

**நோயாளிக்கு** பின்புறம் நின்று, திடுக்கென அவன் செவியினைக்கிள்ள அவன் தோள்கள் துடிக்காவிடினும்; அறிவுமாறி மூதாதையருடன் பேசினும்; படுக்கையை வெறுத்துப் புரண்டு மண்ணிற் படுப்பினும்; நீருக்குமுன் மலங்கழிப்பினும்; மலம் கருத்து நீர் நெய்போல் தடித்து எரியினும்; காது - மூக்கு விறைத்துச் சில்லிட்டு, மார்பு உயர்ந்து புயங்கள் சரிந்திருப்பினும்; தனது கை மணிக்கட்டைப் புருவ நடுவில் நாசியுடன் பொருந்த வைத்துப்பார்க்க தனதளவில் பெருத்துக்காணினும்; முதுகு-கை-கால் வீங்கி மார்புவரை செல்லினும்; குதமும் கோசமும் வீங்கிச் சில்லிடினும்; நாவின் மூச்சு குளிர்ந்து வாயின் மூச்சு சூடாயிருப்பினும்; முகம் நீண்டு, உடல் நரம்பு தோன்றி கண் பஞ்சடைத்து இருட்டாயினும்; விசை நரம்பு குளிர்ந்து தளர்ந்து பற்கள் நெறு நெறுத்து நடுங்கினும்; எச்சில், அருகில் விழுதல் அல்லது வாயுடன் லயித்து நிற்பினும்; கர்ப்பிணி; பிரசவித்தவர்க்கு அசாத்திய பேதிகாணினும்; நாற்றமுள்ள வெண்ணிற சூதகத்துடன் படபடத்த மேல் மூச்சு, கபம், இருமல், மயக்கமிருந்து உடல்நிலை குன்றினும் விரைவில் **மரணம்** நேரும் என அறியவும்.

## ★★ 44. மரணமும் - அவத்தையும் பற்றிக் கூறவும்?

**மரணமடைவதற்கு** முன் மூன்று நாடியும் வெட்டுண்ட அரணைவால் போல் துடிக்கும். மற்றும் உடல் மாறுபட்டுக் குளிரும். முகத்தைக் கையால் தடவும். மனிதரை ஆவலாய் நோக்கும். ஏங்கிப்பெருமூச்சு விடும். விலா இளைக்கும் தொண்டையில் கபம்கட்டி இரையும். கண்ணீர் வடியும் எடுபிடியென எழுந்துவிழும், உடல் மயங்கும். மூக்கு நீளும் வியர்வை காணும், விழியும் பல்லும் கறுக்கும், கபமேலோடி மூடிச்சுவிழும். கண் சுழன்று பல பேச்சாகும். சீவன் மயங்கும்

- மேலும், இறக்கு முன் 10 அவஸ்தைகள் ஏற்படும். அதாவது, முதலில் பிணவெடி நாறும், 2-வது நலம்பேசி வேற்றுமை கூறும். 3-வது அறிவு கலங்கும், 4-வது இளைத்து மேல்மூச்சு வாங்கும், 5-வது முகடு பார்க்கும், 6-வது உடல்குளிரும், 7-வது அன்னம் விரும்பும், 8-வது கண் பஞ்சடையும், 9-வது உடல் வெளுக்கும், 10-வது மரணம் நேரிடும்.

## ★★ 45. செயற்கை இறப்பின் குறிகள் யாவை?

பல வித **துர்மரணங்களைப்** பின்வரும் குறிகளால் அறியலாம். அதாவது **(1) ஆண் குறியின் விரையை நசுக்கியும்,** மூச்சைப் பிடித்தும் கொன்றிருப்பின் கை காலில் அடிப்புறம் நிறம் மாறியும், வயிறு விம்மி, இலிங்கம் தன்னிலை விட்டு அடிப்புறம் தாழ்ந்து உள்விதை வீங்கி, விந்து வெளிப்பட்டும்; பேதி, கன்னம் பொறுமி - முகம் வெளுத்து சுண்டல், நாவைக் கடித்தல், கண் கலங்கி - கருவிழி பிதுங்கி கிழே தாழல் ஆகிய குறியும் காணும் **(2) பெண்ணின் கருவழிக்க** அல்குலில் திரிவைத்து அதனால் மரணமுற்றால், முகம் இருண்டு, உடல் நிறம் மாறி, பற்களும், கண்களும் பஞ்சடைந்து வாயும், ஆசனமும் வெந்து, குடல் புண்ணாகி நாறும். பெண் குறியினுள் வெந்து, வீங்கி, நாற்றமுள்ள சூதகமும், நாதமும் பெருகி ஓடும் **(3) தூக்கிட்டுச் செத்த பிணத்தின்** முகம் கறுத்து, அல்லது நீலநிறமுற்று விகாரமாயும் கழுத்து நீணடும், சங்கு பூட்டுவிட்டு நாவு வெளித்தள்ளி, கண்கள் கிழ் நோக்கிப் பிதுங்கியும், குறி உள்ளிழுத்து கோழைபோல் விந்து பாய்ந்தும், கை - கால் கட்டை போல் நீண்டும், தோள்கள் சரிந்து, உடலில் பிசுபிசுத்த ஊன் பற்றியும், கழுத்தில் கயிறு இறுக்கிய அடையாளமுடனும் காணும். **(4) நீரில் மூழ்கி இறந்து இருப்பின்** உடலின் சூடுநீங்கி, குளிர்ந்து, வெளுத்து விகாரமாய் ஊதியும், வயிறு உப்பி உயர்ந்தும், கை கால்கள், விரல்களில் சுருக்கங்களுடன் தளர்ந்து, சோர்ந்தும், வாய் பிளந்து, கண்ணடைத்தும், இரைப்பை புப்புசங்களில் நீர் நிறைந்தும், சருமம் பஞ்சு போல் மினுமினுத்து வெடிப்புற்றும், உடல் நீரினுள் மிதப்பதாயும் காணும் **(5) பாடாண அமிலங்களால் இறந்திருப்பின்,** உணவுக்குழல் அழன்று, இரைப்பை சிவப்பு அல்லது கருப்பு நிறமாயும், பூந்தசைகள் வெந்து வெளிரியும், உடல் தன்மைக்கேற்ப நிறமுற்றும், குடல் முதலியவற்றில் துளை விழுந்தும், வாய், ஆசனவழி முதலியனவற்றில் குருதி கழிந்தும், பொதுவாக உடல் முற்றும் நொந்தும், கடுத்தும், கன்றியும்

காணும். (6) இங்ஙனமே, **தீ விபத்திலான** சாவில் உடலில் நீர் கோர்த்த கொப்புளங்கள் காணும் - **காயங்களினாலான** சாவில் காயம் வீங்கித்தடித்தும், குருதி ஒழுகிய அடையாள முடனும் காணும் - **துப்பாக்கிச் சூட்டினாலான** சாவில் குண்டு நுழைந்த காயம் ரவையின் அளவில் சிறியதாகவும், வெளியேறிய பகுதி ஒழுங்கீனமுடன் பெரியதாகவும் காணும்.

## ★ 46. இறந்து பிறந்த - பிறந்து இறந்த சிசுவின் குறி என்ன?

**சிசுக்களின் மரணம் :** சிசுக்களின் மரணத்தின்போது அது "இறந்து பிறந்ததா - பிறந்தபின் இறந்ததா" என்பதைப் பின் வருமாறு அறியலாம். அதாவது (1) உதரவிதானத்தின் நிலை 4-5 வரிச்செலும்புகளுக்கு நடுவில் இருப்பின் சிசு **இறந்து பிறந்தது** எனவும்; 5-6 வரிச் செலும்புகளுக்கு இடையிலிருப்பின் **பிறந்து இறந்தது** எனவும் அறியலாம். (இச் சோதனையை வயிற்றுப் பகுதியை மேல் நோக்கி மார்புக் கூடுவரை கிழித்துப் பார்ப்பதால் காணலாம்) (2) ஒரு பெரிய பாத்திரத்தில் நீர்விட்டு அதில் நுரையீரலை விட்டுப் பார்க்க அதில் காற்று புகுந்ததின் அடையாளமாக மிதக்கும் நீல நிறச் சிவந்த பகுதிகள் கண்டால் சிசு மூச்சு விட்டதென அறியலாம். (3) இறந்து பிறந்த சிசுவின் நுரையீரல், கல் போன்ற தன்மையுடனும், பிறந்து இறந்திருப்பின் மெதுத் தன்மையுடனும் இருக்கும். (4) சாதாரணமாக சிசுக்களின் வயிற்றில் கண்ணாடி போன்ற வெண்ணிற திரவம் காணும். வயிற்றில் பால் இருப்பதாகக் கண்டால் சிசு சுமார் 3 தினம் உயிரோடு இருந்தது என அறியலாம்.

## ★ 47. ஒருவன் இறந்து விட்டதை எப்படி அறியலாம்?

ஒருவன் விபத்து, பிணி அல்லது வேறு வகையில் **மரணம் அடைகையில்,** அது பற்றிய ஐயம் ஏற்படும்போது, உயிர் பிரிந்து விட்டதை, திண்ணமாய் அறிந்து கொள்ள வேண்டும். (மூச்சும், குருதியோட்டமும் நின்று விடுதலோ, உடல் குளிர்ந்து விடுதலோ மட்டுமே திட்டமான மரணக்குறியல்ல) சாவை அறிவதற்கு (1) முதலில் நாடித்துடிப்பின் மூலம், இருதயத் துடிப்பினை அறிய வேண்டும். (2) ஒரு இருட்டு அறையில் விளக்கு அல்லது, மெழுகு வர்த்தியை ஏற்றி மரணமுற்றதாகக் கருதப்படுபவரின் கைவிரல்களை ஒன்று சேர்த்து, விளக்கிற்கும் நமது கண்களுக்கும் இடையில் வைத்துப் பார்க்க உயிர்

இருப்பின் சிவப்பு நிறம் காணும். *(3)* ஒரு விரலை கயிற்றினால் இறுகக் கட்டிவைத்திருக்க உயிர் இருப்பின் சிறிது நேரத்தில் விரல்நுனி சிவந்தும் வீங்கியும் காணும். (4) தோலுக்கடியில் சிலதுளி அமோனியா திரவத்தைச் செலுத்தினால், உயிரிருப் பின் சிவப்பு நிறம் காணும். (5) இறந்த உடலில் ஒரு தூய ஊசியைக்குத்தி வைத்து இருக்க அரைமணி நேரத்தில் துருப்பிடித்த நிறம் காணும். இச்சோதனைகளால் ஒருவனது மரணத்தை உறுதிப் படுத்தலாம்.

## ★ 48. மருத்துவத்திற்குரிய காலம் எது?

மருத்துவம் செய்வதற்குரிய மற்ற இலக்கணங்களைப் போன்றே **மாதம் – நாள் – நட்சத்திரம் – திதி – இலக்கினம்** இவற்றையும் கவனிக்க வேண்டும். அதாவது **சிகிச்சை** செய்வதற்கு (1) **மாதங்களுள்** சித்திரை - வைகாசியில், உடலின் அசுத்த மாசுக்கள் வெளிப் புறம் நோக்கித் தாமே இளகி, வெளியேறும். ஆகவே, அவ்வமயம் மருந்துண்பதால் இயற்கை உதவி. செயற்கையுதவி இரண்டும் கிட்டும். எனவே இது **உத்தமமாகும்.** அடுத்து ஆனி, ஆடி **மத்திமமாகும்.** (மற்ற மாதங்களில் மாசுக்கள் வெளிப்படாமையால் அவை **அதமம்** ஆகும்.) (2) **நாட்களுள்** ஞாயிறு - திங்கள் **உத்தமமும்,** செவ்வாய் - வியாழன் - வெள்ளி **மத்திமமும்;** புதன் - சனி **அதமமும்,** ஆகும். (நிற்க, காலை - மாலை - நடுப்பகல் - முற்பகல் - நடுநிசி இவற்றிலும்; **இராகு – கேது** உதிக்கும் சமயத்திலும் அவ்வமயம்; நாட்டு நிலையும், காலமும் குறிப்பிட்ட நோயினைக் கூட்டுவதாயிருப்பினும் மருத்துவன் சென்று பிணியாளனைப் பார்க்காதிருப்பதே நலம்.)

## ★ 49. அஷ்டமி வியாதி நாசினி - என்றால் என்ன?

பௌர்ணமியன்று **சந்திரனும், சூரியனும்** நேரிடையாக **எதிர்க்கும்** - அமாவாசையன்று **ஒன்றுகூடும்.** இக் கூட்டுச் சேர்க்கையின்படி - நமது உடலின் இரசாயனச் சேர்க்கையும் கடலின் உப்புச்சத்தும் ஒன்றெனக் கூறப்படும். அமாவாசைக்கு 8-ம் நாள் கடலும், நமது உடலும், அமைதியாக இருக்கும் இதையே **'அட்டமி வியாதி நாசினி'** எனப்படும். இது சூரிய சந்திரனுக்கும் - மனிதனுக்கும் உள்ள தொடர்பை விளக்குகிறது

## ★★ 50. பொதுவான சிகிச்சை விதிகள் யாவை?

பொதுவாக, **சிகிச்சை செய்யும்பொழுது** சில விதிமுறை

களைக் கடைப்பிடித்தல் அவசியமாகும். அவை, (1) சகலநோயும் ஒப்புறை மருந்துகளினால் அதிகரிக்கவும்-எதிருறை மருந்துகளினால் தணியவும் செய்யும் என்பதை அறிய வேண்டும். (2) நோயை முற்றாகக் குணப்படுத்த, யுக்தி, அனுபவ முறைப்படி நோய் அல்லது மூல காரணத்தைக் கருதி எதிரிடை மருந்துகளினாலோ சிகிச்சைக் கிரமப்படியோ, அல்லது இரண்டிற்கும் வேறுபாடாகவோ மருந்துகளை நல்க வேண்டும். (3) முக்குற்றம் அல்லது தாதுக்களின் நிறை குறைவுகளினாலான கோளாறுகளை அறிய வேண்டும். (4) நோய்க்குக் காரணமான மருந்துகளைக் கொண்டோ - பிணிக்கு எதிரிடையான மருந்துகளைக் கொண்டோ - எது கெடுதலின்றி உடலுக்கு ஏற்குமோ அதனையே தரவேண்டும். (5) நோயிருக்கும் நிலையும், குறிகுணமும், சாத்தியா சாத்தியமும், கால நேரமும் மற்ற வாய்ப்புகளையும் நன்குணர்ந்து, பல வகைப்படும் சிகிச்சை முறைகளுள் ஏற்றதையே தேர்ந்தெடுக்க வேண்டும். (6) காரணம் அறியவியலாத நோய்களை தற்போதைய தோட நிலைக் கேற்பவும் .- பத்தியம், அனுபானக் குற்றத்தினாலானதை அவற்றையே கொண்டும் - கண்டிப்பாக எட்டு விதப் பரீட்சையைக் கடைப்பிடித்தும் - இயன்றவரை கத்தி முதலியவற்றாலான அறுவை முறையை தவிர்த்தும் சிகிச்சை செய்ய வேண்டும். நிற்க, மேற்கூறிய விதிமுறைகளையுணர்ந்து செயல்பட்டால் நிச்சயம் வெற்றி பெறலாம்.

## ஒன்றான எழுத்து - சிகாரம்!

ஒன்றான எழுத்தாலே வாசியாச்சு
ஓகோகோ சடமாச்சு அண்டமாச்சு
ஒன்றான எழுத்தாலே சிவனுமாச்சு
உற்பனமும் ஒடுக்கினமும் இரண்டுமாச்சு
ஒன்றான எழுத்தாலே கோபமாச்சு
உள்ளடங்க சோதியைப் போல் ஒளியுமாச்சு
ஒன்றான எழுத்தாலே நந்தி நந்தி
உத்தமனே உரைத்திட்டேன் ஊணிப்பாரே

(கொ.வா.கா.)

# VII. நோயும் - சிகிச்சையும்

## ★ 1. குழந்தையின் கிரந்திக்கு மருந்து என்ன?

பிறந்து மூன்று திங்கள் வரை முக்குற்றக்கலப்பால் குழந்தைகளுக்கு **கிரந்தி நோய்** பற்றுகிறது. இதில் விடாது அழுது தொண்டைகட்டி பூனைபோல் குரலிடல், வயிறூதி கையில் தங்காமல் துள்ளுதல், சிவப்பு நிறக் கொப்புளங்கள், வாய் வறண்டு உதடு கறுத்து வருந்தி அலறல், முகம்வாடி உடலை முறித்து விம்முதல், முலையுண்ணாமை முதலிய குறிகள் காணும். (இது 12-வகைப்படும்.)

**கிரந்திக்கு மருந்து** :- விளக்கெண்ணெய், தேங்காய்ப் பால், செம்பருத்திச்சாறு வகைக்கு 1-படி கூட்டிக் காய்ச்சி வடித்து, அதில் சுக்கு திப்பிலி, கிராம்பு, ஏலம், பூரம், மிளகு வகைக்கு 1- விராகன் பொடித்துக் கலந்து அரைச்சங்களவில் கொடுக்க சகல கிரந்தியும் திரும்.

## ★ 2. தோடத்திற்கு மருந்து என்ன?

குழந்தைகளுக்கு ஒரு வயது வரை காணும் தோடப் பிணியில் உடல் மெலிந்து வாடித் தளர்ந்து நிறம் மாறல் சீறிச் சீறி அழுது பாலும் - நீருமுண்ணாமை, வயிறு உப்பி இரைந்து நீராகப் பேதியாதல், தலை தூக்க வொட்டாது கனத்து நோதல், செரியாவாந்தி, தலையுச்சியில் பள்ளம் மூச்சுத்திணறல், தாயை அருவெறுப்புடன் நோக்கி முலையுண்ணாமை, சக குழந்தைகளையே பார்த்தல், கண்வறண்டு பீளைகட்டித் திறக்க வியலாமை, வியர்வை, பொருமுதல் தாகம், சுரம், இளைப்பு, காது கேளாமை, சீதக் கழிச்சலுடன் அண்டி தள்ளல், மார்பு கூடு போலாதல், முகம் சூம்பிச் கண்குழிவிழுதல், நாவுலர்தல் - பலவீனம் முதலிய குறிகள் தோன்றும். (இது 25 - வகைப்படும்.)

**தோடத்துக்கு மருந்து** : அதிமதுரம், அதிவிடயம், மஞ்சள் முத்தக்காசு, வசம்பு கடுக்காய், தேவதாரம் இவை சமன் கூட்டி பொடுதலைச் சாற்றிலரைத்து, குன்றியளவு மாத்திரைகளாக்கிக் கொண்டு, தேன் - முலைப்பாலில் கொடுக்க சகல தோடமும் தீரும்.

## ★ 3. மாந்தத்திற்கு மருந்து என்ன?

பிறந்து மூன்றாண்டுவரை குழந்தைகட்குத் தொடரும் மாந்த நோய் - தாய் மிக்க கரப்பான், மந்தகுணப் பொருட்களையுண்ட நிலையில் பாலூட்டுவதால் காணுகிறது - இதில், உடல் இளைத்தல் - கறுத்தல் - வெளுத்தல் - ஊதல்-நொந்து கடுத்தல் - வியர்த்து வெப்பு நாற்றம் வீசுதல் - வெம்பிக் காய்தல், கண் சொருகி குழி வ்விழுந்து மருண்டு பார்த்தலுடன் சுழன்று விழிசிவத்தல், கையில் தங்காமல் அழுது தவித்து மிரண்டு துள்ளல், திடுக்கிட்டுச் சோர்தல், முலையுண்ணாமை, கொட்டாவி, கைகால் சில்லிட்டுப் பின்னிக்கொள்ளல், பலமுறை வாந்தியுடன் வயிறு பொருமி - இரைந்து - வலித்து - பல நிறத்திலும் - சீதமுடனும் - பால் நீர் போன்றும் - செரியாமலும், நாற்றமுடனும் கழிதல், நாவறண்டு தாகம், குரல்கம்மல், நீர்கடுத்துச் சிவந்திறங்கல், விடாசுரம் முதலிய குறிகள் தோன்றும் (இது 3- வகைப்படும்.)

**மாந்தத்திற்கு மருந்து :-** (1) இஞ்சி-சுக்கு-சின்னி-கரந்தை பொன்னாங்காணி இவற்றின் சாறுகளும், விளக்கெண்ணெயும் சமன்கூட்டிப் பதமுறக் காய்ச்சி வடித்துக் கொண்டு, ஒரு கரண்டி அளவில் கொடுத்துவர சகல மாந்தமும் தீரும். (2) ஆமையோடு பற்பம், காக்கண - பூரமாத்திரைகள், அண்டத் தைலம் முதலியனபயன்தரும். (இதற்கு மந்தமான உணவுகளை நீக்கவும்).

## ★ 4. அக்கரத்திற்கு மருந்து என்ன?

குழந்தைகளுக்குக் காணும் அக்கரநோயில் மூலாதாரச் சூட்டின் விளைவால் நாவுவெந்து மாவுபோல் வெளுத்து அடையாகப் பற்றி உலர்ந்து புண்ணாகி வெடிப்பு கண்டு குருதி வடிவதுடன், ஆவி கிளம்பி தலையில் முட்டி மூக்கு நீராய் வடிதல், நா வழுவழுத்து வெள்ளை நீர் சுரத்தல், வாயில் வறண்டு வெந்து - நாறி, கூசி - கைத்து-சொள்ளு நீர்வடிந்து துணியை நனைத்தல், வயிற்றினுள்ளும் - புறமும் எரிதல், உடல் கைகால் கறுத்து பூட்டுகள் கடுத்தல், நாவு சிவந்தும் - பல்லழுக்குப் போலும் படிந்து பலவாறு குத்தலுடன் வெள்ளாவியின் மணம் வீசல், காரம் படவொட்டாமை, நாடி துடித்தல், தொண்டையில் காடிச் சோறு போல் பொங்கி குரல் நெறிதல், நெஞ்சடைத்து எரிவுடன் கரித்தல், ஆசனத்தில் சுருக்கெனக் குத்தல், உண்ணாவுவளருதல், நாவுமுள்ளுண்டாகி

சுரசுர வென வலித்தல், பொறி - புலன் கலங்கிச் சோர்தல், சுரம், தூக்கம், இருமல், ஓக்காளம் முதலிய குறிகள் காணும் (இது 8-வகைப்படும்.)

**அக்கரத்திற்கு மருந்து** :- கருஞ்சீரகம், கடுகுரோகணி, கடுக்காய், காட்டுமல்லிகை வேர் வகைக்கு -1 விராகன், இண்டங் கொழுந்து ஒரு பிடி, உள்ளி - 2 பலம் இவற்றை சிதைத்து; விளக்கெண்ணெய் - 1/8 படி, முலைப்பால் 1/32 படி இவற்றில் கலந்து மெழுகு பதமாய்க் காய்ச்சி வடித்து, அதில் 2 - விராகன் கோரோசனைத்தூளையிட்டுக் கொண்டு; கரண்டியளவில் கொடுத்துவர அக்கரவகை தீரும்.

## ★ 5. சன்னி வலிக்கு மருந்து என்ன?

மிக்க குளிர்ச்சியினால் கபம் மிகுந்து நெஞ்சில் சிக்குவதாலும், உணவு செரியாது வயிற்றில் மந்த முற்று புளிப்படைவதாலும் குழந்தைகளுக்கு சன்னிவலி நோய் (நாய்க்கணை) காணுகிறது. இதில் வாய், கண், நா - புருவம், கை-கால் இவை வலித்துக் கோணிக்கோணி இழுத்தல், கண்கள் மூடித்திறந்தும் - விழிகள் ஒரு புறம் சொருகி நிலைத்தும் காணல், ஆகாயத்தை நோக்கி மருண்டு பார்த்தல், பற்கிட்டி நறநறத்தல், நெஞ்செலும்பு எழும்பித்தணிந்து மூச்சுவிடத் திணறல், மார்பில் குர் குர் என்ற ஒலி, உள்ளங்கைகால் சில்லிட்டு விறைத்தல், விலாவில் குழி, வயிறு கனத்து மலஞ்சிக்கல், பாலுண்ணாமை, உறக்கமின்மை, உடல் மஞ்சள் நிறமுடன் காய்தல், பெரு மூச்சு இவற்றுடன் விரைவில் கபத்தையும் மலத்தையும் வெளியேற்றாவிடில் மரணமும் விளையும்.

**சன்னிவலிக்கு மருந்து** :- குட்டி விளாவேர், தூதுவளை வேர், நாய்வேளை வேர், சீரகம், கஸ்தூரி மஞ்சள், வெங்காயம், சிற்றரத்தை, மரமஞ்சள் இவை வகைக்கு 1/4 பலம் வீதம் பசுவின் பாலிலரைத்து, 1/2 படி வேப்பெண்ணெய்யிலிட்டு பதமுறக்காய்ச்சி வடித்துக் கொண்டு; ஒரு உச்சிக் கரண்டி யளவில் உட்கொடுக்க சன்னி வகை தீரும். (இதற்கு, புளி - மந்த உணவு நீக்கவும்)

## ★ 6. கணத்திற்கு மருந்து என்ன?

குழந்தைகளுக்கு பன்னிரு வயது வரை காணக்கூடிய கணம் நோயில் உடல் கூறவியலாதபடி பலவாறு மாறுபட்டு உட்சுரமுடன் உடல் அனலாய் கணகணத்து எரிந்து - வற்றி

- மெலிந்து சோர்ந்து - துவளுதல், நாவறண்டு - வெந்து புண்ணாதல், தொண்டை கட்டி குரல் கம்மி கர்கர் என ஒலித்து புகையிருமல், கண் நிறம் மாறி - பஞ்சடைத்து - வெளுத்து, விழி சுழன்று வெருண்டு நோக்கல், மலம் கழியாது தீய்ந்து இறுகல்; சிறுநீர் கடுத்துச் சுருங்கல், முகத்தில் வியர்வையுடன் நிறம்மாறி மினுமினுத்தல், மார்பு கூடாய்எழும்பிக் காய்தல், வயிறூதி - நொந்து-இரைந்து பலவாறு கழிதல், கைகால் முகம் கருத்து எரிதல் - குளிரல்-வீங்கல், வயிறு - ஈரல் - நெஞ்சு - தொண்டை வெந்து, முகம் - மார்பு கழுத்து - வீங்கல், மூக்குநீர் வடிந்து வாய்நாறல், தாயையே அண்டியிருத்தல், அழுகை, தவிப்பு, ஆயாசம், கிறுகிறுப்பு, விட்டு விட்டு சுரம், பலவீனம் முதலிய குறிகள் காணும். (இது 24 வகைப்படும்.)

**கணத்திற்கு மருந்து :-** (1) ஏழுமுறை கழுவிய கற்றாழைச் சோறு -1 தேங்காயளவு, வெந்தயம் -1 துட்டெடை, வெங்காயம் -1 பலம் இவற்றை 1-படிவிளக்கெண்ணெயிலிட்டுக் காய்ச்சி 2 வேளையும் ஒரு கரண்டியளவில் கொடுத்துவர சகல கணமும், வெட்டைசுரமும் தீரும். (2) பால சஞ்சீவி மாத்திரை, ஆமையோடு - சிருங்கி-சிலாசத்து பற்பங்கள், மகாவில்வாதி - வெண்பூசனி லேகியங்கள் பயன் தரும். (இதற்கு குளிர்ச்சி தரும் உணவு நல்லது)

## ★ 7. குழந்தையின் கரப்பானுக்கு மருந்து என்ன?

மூன்று முதல் ஏழு வயது வரை வரும் **கரப்பான் நோயில்** உடலை முறுக்கித் துள்ளி விழுதல், நாவறட்சி, முகம் வாடல், மூக்கு தொண்டையில் அரித்துப் புண்ணாதல், அறிவுகுன்றி செயலிழத்தல் உடல் ஊதி - கனத்து - கடுத்து - கன்றி - நிறம்மாறி - மெலிந்து - காய்தல். ஆங்காங்கு துண்டு துண்டாய் வீங்கித் தடித்துப் புண்ணாகித் தீயாய் எரிந்து சிறிது நேரத்தில் குளிர்ந்து சிலை நீர் வடிதல், சிரங்கும் - கட்டிகளும் கள்ளிப்பூ - நெற்பொரி போல் கண்டு தினம் வெடித்து சீழும் - நீரும் - குருதியும் கசிதல், திமிர், தினவு, சொறி, கீல்கள் வீங்கி நொந்து நீட்டமடக்க வியலாமை, இருமலுடன் குரல் கம்மி ஏங்கி அழுதல், நரம்பில் வலித்துத் தெரித்தல், பாலுண்ணவும் - பேசவும் இயலாமை, தூக்கமின்மை, வாயில் கள் மணம், காது சீழ் வடிதல், மலநீர்க் கட்டு, கண்டத்தில் தடித்து வெடித்துப் புண்ணாகி நீர் வடிந்தும் வற்றியும் நாறுதல் முதலிய குறிகள் தோன்றும். (இது 18-வகைப்படும்.)

**கரப்பானுக்கு மருந்து :** இலைக்கள்ளி, திருகுகள்ளி, சதுரக் கள்ளி, விடத்தலை, மாவிலிங்கு, சங்கு, தாழை, கொமுட்டி, குப்பைமேனி, அவுரி, பொடுதலை, நிலக்கடம்பு, ஆமணக்கு, இரு எருமை, ஆட்டாங்கொடி, நொச்சி இவற்றின் சாறுகளும்; நல்லெண்ணெயும் வகைக்கு 1/4 படி வீதம் கலந்து அதில், கடுகு, சீரகம், கோரங்கிழங்கு, குந்துருக்கம், குக்கில், திரிகடுகு, தேவதாரம், கருஞ்சீரகம் வகைக்கு 1- பலம் வீதம் அரைத்துக் கலந்து காய்ச்சி வடித்து உடலில் பூசிவர சகல கரப்பானும் நீங்கும். (இதற்கு கரப்பான் பொருள் நீக்கவும்.)

## ★ 8. கக்குவானுக்கு மருந்து என்ன?

கக்குவான் இருமலில் ஒருவிதமாகக் கூவித்ததும்பி மிகுதியான இருமல் - கேவல், இளகியும் - கட்டியாகவும் - நுரைத்தும் சளி வெளிப்படல், பற்களைக் கடித்தல், ஆண் பெண் மல்லுக்கட்டுவது போல் துன்பம், பெண்ணைவிட ஆண் பிள்ளைக்கு அதிகத் தொல்லை, மூன்று மாதம்வரை கொக்குக் கொக்கென ஒலித்துக் கோழையுடன் இருமுதல் ஆகிய குறிகள் காணும்.

**கக்குவானுக்கு மருந்து :** பசுவின் நெய்யும் - தூதுவளைச் சாறும் ஒருபடி வீதம் கலந்து, அதில் ஒரு பலம் கோஷ்டத்தைட் பொடித்துத் தூவிப்பதமுறக் காய்ச்சி வடித்து உச்சிக்கரண்டி அளவில் இருவேளையும் கொடுக்கவும் (இதற்கு கட விருத்திகளை நீக்கவேண்டும்)

## ★ 9. அடித்தள்ளல் என்றால் என்ன?

குழந்தைகளுக்கு ஓயாத கணைக்கழிச்சலாலும், உடல் கொதிப்பு - மெலிவினாலும் ஏற்பட்ட ஆசனக்கடுப்பால் அடிக்கடி முக்கி மலங்கழித்தலினால் ஆசனவாய் பெருத்து அழன்று - கீழே வெளித்தள்ளுவதும்; மலக்குடலின் கடைப்பகுதி பிதுங்குதலும் **அடித்தள்ளல்** எனப்படும். இதில் மலக்கட்டுடன் வலிமை குன்றிக்கடுத்தல், மலத்துடன் குருதி கழிதல், சோர்வு முதலிய குறிகள் காணும்.

**அடித்தள்ளலுக்கு மருந்து :-** ஒரு தலைப்பூண்டு, வசம்பு வகைக்கு 3 -விராகன்; பொடுதலை, வீழி, சிறு புள்ளடி வகைக்கு ஒருபிடி இவற்றைத்தட்டி 1/4 படி விளக்கெண்ணெயி லிட்டு காய்ச்சி சங்கு அளவில் கொடுத்து வரவும். (இதற்கு இனிப்புப் காரமும் நீக்கவும்)

## ★ 10. வயிற்றுப்பூச்சிக்கு மருந்து என்ன?

குழந்தைகளுக்கு வயிற்றில் கிருமிகளிருப்பின் சீதமாக -நீராக, பாலாக, கத்திரிக்காய் கசங்கியதுபோல, பலவாறும் -வயிறு வலித்தும் மலங்கழிதல், மார்பு - விலாவில் தட்டிக் கொண்டு அறிவு மாறிப்பேசல், கண் கருமஞ்சளாதல், தலைவலியுடன் மயக்கம், பலவீனம், கைகால் -நாவு - கண் - புருவத்தைக் குவித்தல், மலவாய் வெளித்தள்ளல், வயிறு பெருத்து தொப்பூள் மலர்ந்து சுரமுடன் ஓக்காளித்து வாந்தியாதல், உடலிளைப்பு - சோர்வு முதலிய குறிகள் காணும்.

**வயிற்றுப்பூச்சிக்கு மருந்து** :- முருக்கம் விதை, ஓமம் வேப்பீர்க்கு, பிரண்டை இவை வகைக்கு 1/2 பலம் பொடித்து மூன்று ஆழாக்கு நீர் விட்டு கால் பங்காகக் குறுக்கி வடித்து மூன்றுநாள் ஆறுவேளை கொடுத்து; பின் பேதிக்குக் கொடுக்க கிருமிவெளியேறும் (இதற்கு இனிப்பும் - மாவுப்பண்டமும் - மாமிசமும் நீக்கவும்)

## ★ 11. பெரும்பாட்டின் குறிகள் என்ன?

மிக்க உணவு - மது - புணர்ச்சி - குருதிப்பெருக்கு, கருச் சிதைவு, சீதள மாறுபாடு, வேறு பிணிகள் தொடர்பு இவற்றால் பெண்களுக்கு வளியழல் கூடி பெரும்பாடு நோய் காணுகிறது - இதில் உடல் - தலை வலி, இடுப்பு - முதுகு குடைச்சல் - குத்தல், உடல் வெளுத்து - இளைத்து - வெதும்பிக்காய்தல்; கருப்பு - மஞ்சள் - வெள்ளை நிறத்திலும், கட்டிகட்டியாகவும், துர்நாற்றமுடனும், சிக்கலுடனும், மிகுதியாகவும் சூதகம் வெளிப்படல், மயக்கம், சோர்வு, வாநீரூறல், அடிவயிற்றில் நோவு, உணவு செல்லாமை, கைகால் அசதி, தாகம் ஆகிய குறிகள் காணும். (இது 4 -வகைப்படும்.)

**பெரும் பாட்டுக்கு மருந்து** :- (1) பொரித்த படிகாரமும், பூங்காவியும் சமன் கூட்டி அரைத்து திரிகடியளவாக வாழைப் பூச்சாறு, வெண்ணெய், கழுநீர் இவற்றில் கொடுக்கவும். (2) சிலாசத்து - படிகார பற்பங்கள், ஏலாதிச்சூரணம் முதலியன பயன்தரும் (இதற்கு மிகு காரமும்-அலைச்சலும் நீக்கவும்.)

## ★★ 12. மலடு நீங்க மருந்து என்ன?

கருக்குழியில் சதை - கொழுப்பு - பாசம் - சோரி பற்றல் கலவியில் பூவொதுங்கல், கர்ப்பப்புழு - சூலை, மேகம், உவர் கடும்பிணி இவற்றால் பெண்களுக்கு மலட்டு நோய்

காணுகிறது - இதில், உடலும் உள்ளூறுப்புகளும் நோதல், மாதவிடாய்ச் சிக்கல், பலவித நிறமாயும் கடுத்தும் நீரிறங்கல், பலவிதமாகவும் - சிறுத்தும்சூதகம் வெளிப்படல், பலவிதக் கனவு, சுரம், இளைப்பு, பெருமூச்சு, மயக்கம், கழிச்சல் முதலிய குறிகள் காணும். (இது 11 - வகைப்படும்.)

**மலடுக்கு மருந்து :-** (1) மலை வேப்பிலை, வரிக்குமட்டிக்காய், வெங்காயம், எலுமிச்சம்பழம் இவற்றின் சாறு, விளக்கெண்ணெய் இவை சமன் கூட்டிப் பதமுறக் காய்ச்சி வடிக்கவும், இதில் 1 அவுன்ஸ் வரை நீராகாரத்துடன் கலந்து - மாதவிடாயின் 3 நாள் மட்டும் உட்கொள்ள பலவித மலடும் நீங்கும். (2) நவவுப்பு - குமுட்டி - மகாவீர மெழுகுகள் முதலியனவும் பயன் தரும். (இதற்கு கொழுப்பு - வாயுப் பொருளைக் குறைக்கவும்.)

## ★ 13. சூதகச் சிக்கலுக்குரிய மருந்து என்ன?

அழலும் - வாயுவும் மிகுவதால் பெண்களுக்கு **சூதகச்சிக்கல் நோய்** காணும் - இதில் சூதகம் கட்டியாகித் திரண்டு சிசுபோல் புரண்டு, அடிவயிறு நோதல், வாயு பரவி பொருமி இடுப்பு - தொடை-விலா-முதுகு-வயிறு வலித்தல் - உளைதல், தலைவலி, கைகால் சோர்வு, பலவீனம், மலமிறுகி புழுக்கையாதல், கருவழிதல், வயிறு ஊதல், உடல்பருத்தல் - மெலிதல் - வெளுத்தல், யோனியில் நீர்கசிதல், பசியின்மை, சினம், வெறுப்பு, மாதக்கணக்கில் மாதவிடாயின்மை, கர்ப்பக்குறிகள், கறுத்தும் - பலநிறத்திலும் - இறுகிக் கட்டியாகவும் - துர்நாற்றமுடனும் - சிறிய அளவிலும் - வலியுடனும் - சிக்கலுடனும் சூதகம் காணல், பலவீனம் முதலிய குறிகள் காணும். (இது 6 - வகைப்படும்)

**சூதகச்சிக்கலுக்கு மருந்து :-** (1) 20 - பலம் பூண்டைச் சிதைத்து, ½ - படி குடி நீரிட்டு. அதில் இந்துப்பு, கடுக்காய், தான்றிக்காய். நெல்லிவற்றல், தேவதாரம், கொடுவேலி, காயம், சுக்கு, மிளகு, திப்பிலி, சிவதைவேர் இவை வகைக்கு 1-கழஞ்சு வீதம் கூட்டி குடி நீரிலரைத்து; விளக்கெண்ணெய்-½ கள்ளிப்பால்-½, வெள்ளாட்டுப் பால் - ¼ படி வீதம் கூட்டி அதிலிட்டுக் காய்ச்சி, வடித்துக் கொண்டு-இரு வேளையும் கரண்டியளவில் உட்கொள்ள சூதகக் கோளாறுகள் தீரும் (2) பஞ்சசூதம் - குமுட்டி - அகத்தியர் மெழுகுகள், மலைவேம்பாதித் தைலம், சண்டமாருதம் முதலியனவும் பயன் தரும். (இதற்கு வாயுப் பொருட்களை நீக்கியுண்ணவும்.)

## ★★ 14. சுரத்தின் குறியும் - சிகிச்சையும் யாவை?

மிகு புணர்ச்சி, நாட்பட்ட கபம், உணவுக்கேடு, நஞ்சுகள் சினம், கடும் வெய்யிலில் அலைதல், கடும்பசியைப் பொறுத்தல், உண்டிமேல் உண்டி, கடும் உழைப்பு, தலை முழுகியதினம் புணரல், காயங்கள், தீய எண்ணம், வேகங்களை அடக்குதல் இடமாறுதல், வேறு பிணிகளின் தோற்றம் இவற்றால் சூடு மிகுந்து-**சுரநோய்** காணுகிறது. இதில், உணவில் வெறுப்பு உடல் நிறம் மாறி கனத்து - நடுங்கிக் குத்தல் - குடைச்சல், உடல் துவைத்தது போல் கடுத்து எப்பொருள் பட்டாலும் கூசல், கண் சிவந்து கடுகடுத்து நீர்முட்டி வழிதல், வியர்வை, எதிலும் வெறுப்பு, சுவையின்மை, தொடை - கெண்டைச்சதை நோதல், கொட்டாவி, மயக்கம், அரட்டல், புரட்டல், சோர்வு, நாவறட்சி, சுற்றத்தை வெறுத்தல், இளைப்பு, நா கசப்புடன் புளிப்பு - உப்பு - இனிப்பை நாடல், கிறுகிறுப்பு, மலநீர் கடுத்துச் சிவந்து சுருங்கிக் கழிதல், தொடர்ந்தும் - விட்டு விட்டும் - அனலாய்க் காய்தல், தோல் வறண்டு சுரசுரத்தல், வாநீரூறல், நீர் நிறைந்தது போல் தலை கனத்தல் - வலித்தல், உடல் குளிர்ந்து - மயிர் சிலிர்த்தல், நெஞ்சுவலி - எரிவு திணறல், எலும்புகள் குடைதல், முகம் கறுத்துக் கொடு கொடு வென தாடை தொங்கல், பூட்டு வீக்கம், சீதக்கழிச்சல், நாவில் முள் பாய்ந்து மாசு படிதல், உதடு வறண்டு வெடித்தல், இருமுதல், மிரளல், சஞ்சலம், பிதற்றல், அலறி அச்சமுறல், சூடான மூச்சு, காதில் ஓசை, தலையில் ஊறுதல் போல் இருத்தல், வாந்தி, தொண்டை கட்டல், குறி கறுத்துச் சுருங்கல், வலி, பொறிபுலன் மயங்கல் முதலிய குறிகள் காணும். (இது 64 - வகைப்படும்.)

**சுரத்திற்கு மருந்து** :- (1) சிற்றாமுட்டி, பேராமுட்டி, சிறு காஞ்சொறிவேர், சீந்தில் தண்டு, சுக்கு, மிளகு, திப்பிலி, கோட்டம் இவை சமன் கூட்டிய குடிநீரால் - **வாத சுரமும்**; சீந்தில், பற்படாகம், சந்தனம், விலாமிச்சம்வேர், சுக்கு, இருவேலி, சிற்றாமுட்டி, கோரைக்கிழங்கு இவை சமன் கூட்டிய குடிநீரால் - **பித்த சுரமும்**; சீந்தில், மரமஞ்சள், சிறுபஞ்சமூலம், திராட்சை, செவ்வியம், சிறுகாஞ்சொறி, பற்படாகம், கத்தரிவேர் இவை சமன் கூட்டிய குடி நீரால் - **கபசுரமும்** தீரும். (2) விட்ணுசக்கரம் - வசந்தகுசுமாகரம் - பிரமானந்தபைரவம் முதலிய மாத்திரைகளும்; முத்து - பவளம் - வெள்ளி - கிளிஞ்சல் - வங்க பற்பங்களும்; அன்னபேதி - இலிங்கம்-சண்டமாருதம் -கௌரிசிந்தாமணி செந்தூரங்களும்;

கஸ்தூரி-கோரோசனை-தாளகக்கருப்புகள்; சிவனார் அமிர்தம் முதலியனவும் பயன்தரும். **(3)** பட்டினி கிடத்தலும்; கலிக்கம் பற்று-நசியம்-ஆவி பிடித்தல் முதலியனவும்; மயில்-பனை-வெட்டி வேர் விசிறிகளும்; கம்பளிப் போர்வைகளும்; புளி நீக்கிய கஞ்சியுணவு-இளநீர்-பழச்சாறு முதலியனவும் சுரத்தைத் தணிக்க உதவும்.

## ★ 15. சன்னியின் குறியும் - சிகிச்சையும் யாவை?

பிணியுற்ற போது கபத்தை அதிகரிக்கும் உணவு - செயல்முறை - மாறுபாடான உடலுறவு, கட்டி, தீப்புண், சுரப்பிணியில் பத்தியத்தினைக் கைவிடல், தலை முழுகிய தினம் தயிருண்டு புணரல் முதலியவற்றால் முத்தோடம் மிகுந்து **சன்னி நோய்** காணுகிறது - இதில் - கடும்சுரம், படுக்கையினின்றும் எழுந்து ஓடல் - ஆடல் - பாடல், பிதற்றல், மூக்கு, கைகால் சில்லிட்டு - கண் பஞ்சடைத்து ஒளிகுன்றல், காதடைப்பு, கைகால் வீக்கம், சுற்றத்தை விழித்துப்பார்த்துக் கண்ணீர் விடல், தன்னுடலையும் - துணி மணிகளையும் தொட்டுப் பார்த்தல், தூங்காது சுரணையின்றிக் கிடத்தல், மனம் கெட்டு அறிவு கலங்கல், முக்குற்ற நாடி படபடத்தோ மெலிந்தோ நடத்தல், மார்பில் கபம் கட்டி மூச்சுத்தடுமாறி உடல் கனத்து வியர்த்துச் சில்லிட்டு நடுங்கல், நாமுள் பாய்தல், வலிமை குன்றி கண்ணைத்திறவாது - வாய் பேசாதிருந்து பெருமூச்செரிதல், முகவாய் மெலிந்து மூக்கு நீளல், இரைப்பு, கழிச்சல், பற்கடித்தல், கைகாலை எடுத்தெடுத்துப் போடல், மிகுதாகம், மூர்ச்சை, தினவு, விக்கல், வாந்தி அழற்சி, கைகால் சுண்டி வெட்டியிழுத்தல், உதடு வறண்டு வெடித்தல். குறிப்பிட்ட நாளில் மரணம் நேரல் ஆகியன விளையும். (இது 13 - வகைப்படும்)

***சன்னிக்கு மருந்து : (1)*** வேப்பம் பட்டையை சிதைத்து நீரிட்டுப் பிசைந்து காய்ச்சி வடித்து, குழம்பு பதமாக்கவும். ஏலம், சுக்கு, இந்துப்பு ,மிளகு, அதிமதுரம், கொத்துமல்லி, காடுக்காய் இவை சமன் கூட்டி, புளியம் பட்டை உட்தோலை இடித்து பிழிந்த சாற்றால் அரைத்து, அதற்கு சமனெடை வேப்பம் பட்டைக் குழம்பும் கூட்டிக் கொள்ளவும். இதில் சிறிது எடுத்து நாவில் தடவியும்-வறுத்த அரிசியுடன் சிறிது சுக்கும் கூட்டி துணியில் முடிந்து முடிக்கஞ்சி காய்ச்சி ஏழு நாள் இரு வேளையும் கொடுத்தும் வர வேண்டும். **(2)** ஆனந்தபைரவம் - பூபதி - கஸ்தூரி - பூரணசந்திரோதயம்

- சிராவண - வச்சிராயுத - வருணா - தாளக - பிரமாத்திர மாத்திரைகளும்: தாளகம் -இரசம் - வெண்பாடாணம் - முத்து-பவளம் - கௌரி - அடலை பற்பங்களும் பயன்படும் (இதற்கு புளி - கடுகு தாளிப்பு,போகம், புகையிலை, மது ஆகியன நீக்கி, வறுத்த உப்புக் கூட்டிய எளிய உணவே நலம்.)

## ★★ 16. அம்மையும் - சிகிச்சையும் பற்றிக் கூறவும்?

உடல் சூடுற்று பித்தம் கூடுகையில், கபக்குற்றம் இணைவதால் **அம்மை நோய்** காணுகிறது - இதில் உடல் காய்ந்து மூக்கு நீர் வடிதல், தலை - முதுகு - பூட்டுகளில் வலி, வாந்தி, கண் சிவப்பு, அடி வயிறு - தொடையிடுக்குகளில் குருத்தோன்றி சிவத்தல், முகத்தில் தோன்றி மெல்லக் கீழிறங்கல், பரு காணுமிடம் சிவந்து - கனத்து பெருத்து- சீழ் கோர்த்துக் காணல், மிகுதாகம், கொப்புளம் வாடாவிடில் பழுத்து குழிப்புண் போல் புண்பட்டு சீழ்வடிதல், அரிப்பு கண்டு சொறிய சீழ் பட்டவிடங்களிலும் புண்ணாதல், வலிமை குன்றல், விடாசுரம், குருதிக்கேடு, மூர்ச்சை, ஐம்பொறிகளையும் தாக்கிச் செயலிழக்கச் செய்தல், கழலைகள், பக்கு பக்காய் உதிரல், முகம் கடுகடு வென்றிருத்தல், அரட்டல், புரட்டல், தூக்க மின்மை, விகாரம், மலநீர் சுருக்கம், வெறிக்குணம், உடலில் மோசமான வடுக்களை உண்டாக்கல் முதலிய குறிகள் தோன்றும் (இது 16 வகைப்படும். இது ஒரு தொற்று நோயாகும்.)

**அம்மைக்கு மருந்து: (1)** பற்படாகம், சீந்தில், பேய்ப்புடல். கண்டு பறங்கி, பேராமுட்டி, சிற்றாமுட்டி, இவை சமன்கூட்டி குடி நீரிட்டு இருவேளையும் கொடுக்கவும் **(2)** கஸ்தூரிக் கருப்பு, துளசிக்குடிநீர், ஆடாதோடைக் குடிநீர், பூங்காவிச் செந்தூரம், பவளபற்பம், சிருங்கிபற்பம், கட்டுவாதி மாத்திரை, ஊழிமெழுகு, முதலிய மருந்துகளைக் கொடுக்கலாம். **(3)** அறுகு, மஞ்சள். வேப்பிலை கூட்டி மோரில் அரைத்து உடலில் பூசி ஊற வைத்து காய்ந்தாறிய நீரில் ஒரு நாள் விட்டு ஒரு நாளாக மூன்று முறை முழுக பக்குகள் விழுந்து புண் ஆறும். **(4)** கலைமான் கொம்பை ஊறவிட்டுக் கழுவி உலர்த்தி ராவிப் பொடித்து சுடுநீரில் ஊற விட்டு, நீரை அருந்த தாகம் அடங்கும்.

**அம்மை தடுப்பு மருந்து : (1)** ஆள் காட்டிக் குருவி முட்டையின் கருவை சட்டியிலிட்டு, அதில் சம்பா அரிசியைப் போட்டு கரு சுவரிப் போகுமளவில் - கருகாமல் பொரித்து சுரம் கண்டவுடன் ஒருபிடி தின்னக் கொப்பளங்கள் வாடிவிடும்.

(2) குன்றியளவு புலிக் கொழுப்பை பேயன் வாழையில் பொதிந்து கொடுக்க அம்மை மிகாது. (3) தாழம்விழுதுச் சாற்றில் சர்க்கரை கூட்டிக் காய்ச்சி வீசம்படியளவில் உட்கொள்ள அம்மை பரவாது நீங்கிவிடும்.

**உணவு விதி :** சுரத்தின் போது அரிசி - பார்லி - கூகை மாவுக் கஞ்சிகள் கொடுத்து, சுரம் தணிந்ததும் குருணையும் - கேப்பையும் கூட்டிக் கூழாக்கி, வெங்காயம் கலந்துங் கொடுக்கலாம். பொதுவாக குளிர்ச்சியூட்டும் பால் - நெய் - வெண்ணெய், காய்கறி; பயறுகளைக் கொடுக்க வேண்டும் (அம்மையுற்றோரை ஈ, எறும்பு அணுகாமலும், வேப்பிலை பரப்பியதுமான மென்மையான படுக்கையில் கிடத்தல் வேண்டும்.)

## ★ 17. வாதநோய்க் குறிகளும் - மருந்தும் என்ன?

உடலின் வளிக்குற்றம் தன்னளவில் மிகுவதால் **வாதநோய்** காணுகிறது. இதில், உடலில் நோதல்-பிளத்தல் போலிருத்தல் நரம்பு முதலியன குன்றல்-நடுக்கல்-இறுக்கமாதல், நீர்ப்பசை யின்மை, சதை நரம்புகள் அசைதல் - இளைத்தல்-குடைதல்-அடிபட்டதுபோல் வலித்தல், கைகால் விட்டுப் போதல், பூட்டு வீங்கல்-நழுவல், உறுப்புகள் தளறுதல் - மரத்துப் போதல், கைகால் முதலியன நீட்ட - முடக்க-அசைக்க முடியாதிருத்தல், மலநீர் தீய்தல், தாகம், தோல் - கண் - மலம் கறுத்தல், எலும்புக்குள் குத்தல்-குடைதல், ஐம்பொறிகளில் வலிகண்டு செயலிழக்கச் செய்தல், சருமத்தில் பூச்சி ஊர்வது போலிருத்தல், உள்ளங்கை கால்களில் சுரணையின்றி மெத்தென்றிருத்தல், தாக்கப்படும் கை, கால், நாவு, கண், வாய் முதலிய உறுப்புகள் இழுத்துக் கோணலுற்று அசையாது துவண்டு நின்றுவிடல், உடல்-தலை நடுங்கல்-உதறல், வாய்குழறி வார்த்தை சிதறல், திமிர், முறுக்கி வலித்தல்-கடுகடுத்தல், மயங்கித் தள்ளாடி விழுதல், படுக்கையில் அசைவின்றிக் கிடத்தல், குரல் வளையில் நோக்காடு, உடல் குளிர்ந்து சில்லிடல், உரக்கப் பேசல் - புணர்தல் - கடித்தல் இவற்றில் வாய்கோணல், மயிர்க் கூச்சம், கண்ணிமைக்கவியலாமை, உணவில் வெறுப்பு, சுவையின்மை, அசதியுடன் தூங்குதல். கொட்டாவி, குறிகளில் நோவு, விரை வீக்கம், குடல் பிதுங்கித் தள்ளல், நாவழுவழுத்து கோழை கக்கல், தலைமயிரூறல், ஆண்மையின்மை, நாளங்கள் புடைத்துக் காணல் முதலிய பல குறிகள் தோன்றும். (இது 80-வகைப்படும்)

**வாதத்திற்கு மருந்து :-** (1) வாதநாச - கழற்சி - மேகநாத இரசவாத - கேசரி - மெருகுள்ளி - சித்தாதி முதலிய தைலங்களினால் வயிற்றைக் கழிக்க வேண்டும். (2) நவவுப்பு - வான் - இரசகந்தி - மகாவீரம் - பஞ்சசூத - சேங்கோட்டை முதலிய மெழுகுகள்; இடிவல்லாதி, நந்திமை இவற்றை தக்க அளவில் தினமிருவேளையும் கொடுக்க வேண்டும். (3) சூலைக்குடாரி - உளுந்து - மெழுகு - சாரணைக்கள்ளி - எருக்கு - எட்டி விதை இவற்றாலான தைலங்களை உடலில் பூசி; நொச்சி - தழுதாழை - கழற்சிக் கொழுந்து - வாத நாராயண இலை முதலியவற்றை சுடுஎண்ணெயிலிட்டு ஒற்றிட மிட்டு; கொள்ளு - உளுந்து - கறுப்பரிசி இவற்றின் மாவை கூழாக்கித் தேய்த்து குளிக்கச் செய்யவும். (இதற்கு, வாயுவை அதிகரிக்கச் செய்யும் பொருட்களை நீக்கிவிட்டு, செரிக்கத் தக்க எளிய உணவே கொள்ள வேண்டும். குளிர்காற்று வீசாமலும், ஈரமில்லாமலும் உள்ள வெப்பமான இடத்தில் படுக்கச் செய்ய வேண்டும். உடலுறவு கூடாது.)

## ★ 18. பித்தநோயின் குறிகள் யாவை?

மிக்க காரம் - புளி - உப்பு, மனத்துயர், நெருப்பு - வெய்யிலில் அதிகம் ஈடுபடல், அடிக்கடி சினத்தல் - தூக்கமின்மை, மிகுபுணர்ச்சி, வேகாதஉண்டி இவற்றால் அழல் மிகுந்து பித்தநோய் காணுகிறது. இதில், வாநீரூறிக்கைத்தல், விக்கல், மிகுதாகம், உடல் அனலாய் எரிதல் - இளைத்தல் ஒளிகுன்றல் - படபடத்தல், கற்றாழை நாற்றம், தோல்வறளல், தினவு, குரு, சொறி, சிரங்கு, கண் பச்சை - மஞ்சளாகி ஒளிகுன்றல், முகம் வெளுத்து மஞ்சளாதல், சிறுநீர் கட்டி எரிதல், அடிக்கடி கிருமியுடன் கழிதல், பித்தவாந்தி, செரியாமை, புளியேப்பம், பருகிய தண்ணீர் எதிர்த்து பித்தநீருடன் வருதல், கண்காந்தி எரிதல், நீர் - மலம் மஞ்சளித்தல், சுற்றிலும் நோக்கிக் கூவிக்கூத்தாடல், எழுந்தோடல், கிறுகிறுப்புடன் மயக்கம், சதாவிழித்திருத்தல். தலைகனத்து நடுங்கல், பலமுறை அழைப்பினும் பேசாதிருத்தல், கண் புகைந்து இரைச்சலுடன் மறைத்து மின்மினிப்பூச்சிபோல் சுழன்று கண்ணீர் சொரிதல், தும்மல், எதிலும் வெறுப்பு, மனம் கலங்கல், இரைப்பிருமல் போல் மேல் மூச்சுடன் வயிறூதல். மலந்தீய்ந்து புழுக்கையாதல், பெண்ணிச்சை, பெருமூச்சு, ஈரல்களில் எரிச்சலுடன் குத்தல், போதையிலி ருப்பது போலிருத்தல் முதலிய குறிகள் தோன்றும் (இது 42 -வகைப்படும்)

**பித்தத்திற்கு மருந்து :-** *(1)* பேய்ப்புடல், சீந்தில், பற்படாகம், கொட்டை முந்திரி, பன்னீர்ப்பூவிதழ், அத்திப்பழம், காக்கண வேர், மருக்காரைவேர். இவை சமன் கூட்டிக் குடிநீரிட்டு அருந்த கழிச்சல், வாந்தியினால் அழல் குறையும். *(2)* வல்லாரை - சீந்தில் - தண்ணீர் விட்டான் கிழங்கு நெய்கள்; முத்து-பவளம்-சிலாசத்து - வெள்வங்க பற்பங்கள் முதலியன பயன்தரும். (இதற்கு மீன் முதலிய உஷ்ணப்பொருளை நீக்கி, குளிர்ச்சியுணவு கொள்ளவும் - இலவம் பஞ்சு படுக்கையே நலமாகும்.)

### ★ 19. கப நோயின் குறிகள் யாவை?

மிக்க குளிர்ச்சியூட்டும் உணவு - செயல், இனிப்பு - புளிப்பு பழையசாதம், நிலத்தின் குளிர்ச்சி முதலியவற்றால் ஐயம் மிகுந்து **கபநோய்** காணுகிறது - இதில் உடலில் குளிருண்டாகி முகத்தில் நீரேறி தளதளத்தல், மார்பில் சளிகட்டி இளகி இனிப்பாய் வெளிப்படல், உடல் வெளுத்து - வியர்த்து - வீங்கி - அழன்று - கனத்து நோதல், விலாப்புறம் இரைச்சல், மார்பும் நெஞ்சும் வலித்தல், மூக்கடைத்துத் திணறி இருமிக் காறித்துப்பல், தன்னையறியாது மலநீர் கழிதல், குறட்டையுடன் மூச்சு வாங்கல், வாந்தி, கண்களை உருட்டி விழித்தல், ஊமை போலிருத்தல், பற்களை நறநறத்தல், சோர்வு, இயல்புக்கு மாறான செயல்முறை, மார்பில் குர்குர் என்ற ஒலி, தொண்டைப் புண்ணாகிச் சீழும் சளியும் கலந்து வெளிப்படல், அரிதில் தீரும் புண்ணிலிருந்து கவிச்சு நாற்றமுள்ள சீழ்-குருதி காணல், விழுங்க முடியாமை, வெறிப் பிணிக்குறிகள், சுவையின்மை, நாவழுவழுப்பு ஆகிய குறிகள் காணும். (இது 21-வகைப்படும்.)

**கபநோய்க்கு மருந்து :-** *(1)* இலைக்கள்ளிவேர், காக்கட்டான் வேர், தாளிசபத்திரி, சீந்திற்தண்டு, கண்டுபரங்கி, திப்பிலி, மிளகு இவை சமன் கூட்டிக் குடிநீரிட்டு. ஆழாக்களவு கொடுக்க, வாந்தி - கழிச்சலின் மூலம் கபம் குறையும் *(2)* அயம் - இரசம் - வெண்பாடாண பற்பங்கள்; கஸ்தூரி - கோரோசனைக் கருப்புகள், திப்பிலி - அகத்தியர் - தூதுவளை ரசாயனங்கள் முதலியன பயன்தரும் (இதற்கு குளிர்ச்சியூட்டும் பொருள்களைத் தவிர்க்கவும்.)

### ★ 20. தொண்டைக் கட்டுக்குரிய மருந்து என்ன?

மிகு குளிரில் ஈடுபடல், மிக்க குளிர்ந்த - சூடான நீர் -

உணவு, சதைவளரல், நஞ்சுகள், குத்துதல், புண், இருமல் இவற்றால் **தொண்டைக்கட்டு நோய்** காணுகிறது-இதில் தொண்டையில் ஏதோ பூசியதுபோலும், தொண்டை இறுக்கியது போலும் தோன்றி இருமித் தொண்டை நொந்து சிவந்து கோழை குருதியுடன் துப்பல், மூக்கு நீர்வடிதல், தும்மல், குரலொலி மெலிந்து மாறுதல், கனைத்தல், விழுங்க வியலாமை, சுரம், தலைவலி-கனம், கண்ணெரிவு, தொண்டைப் புறத்தில் கட்டிகள், காதில் சீழ்வடிதல், வாய்நாற்றம் மூச்சுத்தடை முதலிய குறிகள் காணும் (இது 6 -வகைப்படும்)

**தொண்டைக்கட்டுக்கு மருந்து :-** (1) வேளைக்கு, 8 - மிளகும், 2-ஆடாதோடை இலையும், சிறிது திப்பிலியும் வீதம் கூட்டி அரைத்து, காலை மாலையாக உட்கொள்ளவும். (2) தாளிசாதி வடகத்தை சுவைத்து-கஸ்தூரிக் கருப்பை குன்றி யளவில் வெற்றிலையிலிட்டு மென்றும் விழுங்கப் பயனுண்டு. (இதற்கு குளிர்ச்சியூட்டுவன நீக்கி - சத்துணவு கொள்ளவும்).

## ★ 21. பீனிசநோயின் விளக்கம் என்ன?

குளிர்ந்த நீர் - காற்று - பனி, புழுதிக்காற்றை நுகரல், உடற்சூட்டின்போது கபத்தை அதிகரிக்கும் செயலை திடீரெனச் செய்தல், யோகநிலை, மேகத்தொல்லை இவற்றால் **பீனிசம்** காணுகிறது. இதில் மூக்கில் ஒருவித எரிச்சலும் நமைச்சலும் கண்டு, அதனால் மூக்கு முனையை சிவக்கத் தேய்ப்பதால் கண் சிவந்து நீர்வடிதல், மூக்கடைத்த பேச்சு, நமையுடன் காதடைப்பு தலைநோவு, தும்மல், கடின சுவாசம், மூக்கில் நீர் - குருதி-சீழ்-சிறாய்-சளி முதலியன ஒழுகல், மணமறியாமை முதலிய குறிகள் தோன்றும். (இது 9 - வகைப்படும்)

**பீனிசத்திற்கு மருந்து :-** (1) சுக்கு, மிளகு திப்பிலி, மஞ்சள் தும்பைப்பூ, சோற்றுப்பு இவை சமன்கூட்டி, கண்டங்கத்திரி இலைச்சாற்றில் மைபோல் அரைத்து துணியில் தோய்த்து - திரித்து உலர்த்திக் கொண்டு, வேண்டிய போது தீயிவிட்டுப் புகையை நுகரச் செய்யலாம். மேலும் (2) சுக்கு - நொச்சி - பீனிசத் தைலங்களினால் முழுகிவரலாம். முத்து - பவளம் - கஸ்தூரி இவற்றாலான மருந்துகளை உட்கொடுப்பதுடன், பற்று - பொடி முதலியவற்றையும் அளிக்கலாம் (இதற்கு குளிர்ச்சியூட்டாத, வெப்பமூட்டும் உணவுகளே நலம்.)

## ★ 22. இரத்த பித்த நோயின் விளக்கம் என்ன?

சதாவெய்யிலில் அலைதல், சூட்டைத்தரும் உணவுகளை

மிகவுண்ணல், மிக்க கலவி, யோகநிலை முதலியவற்றால் பித்தம் மிகுந்து ஈரல்கள் - இருதயம் - குடல்கள் முதலியன வெதும்பி வறண்டு குருதி கேடுற்று **இரத்தபித்த நோய்** காணுகிறது இதில் தலைகனம், உணவில் வெறுப்பு, உடல் மெலிந்து வறண்டு தோல் சுருங்கல் - மஞ்சளித்தல், வாநீரூறி கவிச்சு நாற்றம், அதிகமான பித்தம் - குருதியுடன் குமட்டி வாந்தியாதல், சுவையின்மை, புளிப்பில் அவா, தொண்டை - வாய் புண்ணாய் எரிதல். சிணுக்கிருமல், சிறு இரைப்பு, உடலுறுப்புகள் வீங்கல், முடிவில் பாயலில் கிடக்கச்செய்தல் முதலிய குறிகள் காணும். (இது, குருதி மேல்நோக்கிப் போதல் - கீழ்நோக்கி வெளியேறல் - இருபுறமும் வெளிப்படல் - உடல் முற்றும் வெளியேறல் என்பது உட்பட 8 வகைப்படும்.)

**இரத்த பித்தத்திற்கு மருந்து :-** (1) சிற்றண்ட வெண்கருவுடன் காய்ச்சிய பசுவின் பால்கூட்டி நன்கு அடித்து நுரை நீக்கி, அதில் சீனாக்கற்கண்டு - இலவம் பிசின், புளியங் கொட்டைத் தோடு - ஏலரிசி இவற்றின் தூளும், துணிசுட்ட சாம்பலும் வகைக்கு ஒரு சிட்டிகை கூட்டி; அதில் முத்து - பவளம் - சிலாசத்து பற்பங்களில் ஒன்றை தக்க அளவு கலந்து கொடுக்கவும். (2) நாகம் - சங்கு - பலகறை - அயபற்பங்கள்; வில்வாதி-இம்பூரல் - நாரத்தை லேகியங்கள்; சீந்தில் - ஏலாதி - பறங்கிப் பட்டை சூரணங்கள் முதலியனவும் பயன்தரும். (இதற்கு உணவாக, குளிர்ச்சியூட்டும் பொருட்களையே கொண்டும், மிகுகாரம் - புளி-உப்பு நீக்கியும், பால் - மோர் -நெய் - முட்டை இவை அதிகம் கூட்டியும் உண்ணவேண்டும்)

## ★ 23. இருமலின் குறியும் - சிகிச்சையும் யாவை?

குளிர்காற்று, வெய்யிலில் அலைதல், சுத்துதல், புழுதி - புகை - மது - மாமிசம் - தீனி முதலியதைக் கொள்ளல், பெண்ணிச்சை, சிதைந்த கவலை, இந்நோயுற்றோர் வைத்ததை உண்ணல், தீவழி நடத்தல் ஆகியவற்றால் **காசநோய்** காணுகிறது. இதில், மூக்கு - தொண்டை - மூச்சுக்குழாய் இவற்றில் வெப்புகண்டு மூக்குநீர் வடிதல், தொண்டைக்கட்டு, கண்சிவப்பு, தலைகனம் சுரம், மார்பு நொந்து வாய் ஓயாத இருமல், முதலில் கோழையின்றியும் நாட் செல்லச்செல்ல கபம் மிகுந்து நாற்றமிகுதியாய் இளகி நுரைத்தும் காணல், படுக்கவியலாமை, மூச்சுத் திணறல், உடல் வலிமை குன்றி - முகம் கறுத்து - உதடு நீல நிறமாதல், மார்பு நடு பருத்து - அடியும் நுனியும் குறுகிக்காணல் முதலிய குறிகள் தோன்றும். (இது 12 வகைப்படும்.)

**இருமலுக்கு மருந்து :** (1) சஞ்சீவி மாத்திரை, கோரோசனைக் கருப்பு, மாந்த எண்ணெய் இவற்றினால் வயிற்றைக் கழித்த பின்; தாளிசபத்திரி சூரணம் முதலியவற்றைக் கொடுக்கலாம். (2) நாட்பட்ட நோய்க்கு, தாளகம் - பவளம் -பலகறை-நத்தை-சிப்பி-முத்துபற்பங்கள்; வசந்தகுசுமாகரம் - பூரண சந்திரோதய மாத்திரைகள்; கஸ்தூரிக்கருப்பு, திப்பிலி ரசாயனம் முதலிய மருந்துகளைக் கொடுக்கலாம். (இதற்கு உணவில் கபத்தைக்கூட்டும் பொருட்களை நீக்கவேண்டும்.)

## ★★ 24. சுவாச காசத்தின் விளக்கம் என்ன?

இயற்கைக்கு முரண்பாடான உணவு - செயல், வலிமையற்ற நிலையில் கபத்தை அதிகரிக்கும் செயல் - உண்டி, புல் - பூண்டு - அரிசி - கேப்பைகளின் சுனை, ஒவ்வாத நாற்றம், குளிர்ச்சி மிக்க இடத்தில் வசித்தல், சில விஷ கடிகள் முதலியவற்றால் **சுவாச காசநோய்** காணுகிறது. இதில் காரணமின்றி மார்பை வலித்து இருமும் போது இளைப்புடன் கூடிய இருமல் போல் வலி, சுவாசத்தடை, மூச்சில் குரல்-யாழ்-வீணையின் ஒலிகள், இரைப்பு, இருமினாலும் கபம் வெளியேறாமை, மூக்கு நீர்வடிதல், விலாவில் வலி, வியர்வை, வயிற்றுப்பிசம், தூக்கமின்மை, உடல் கடுப்பு-சோர்வு, நோய் வரவிருப்பதையும் - அதன் தன்மையையும் முன்னதாகவே அறிதல், கால் - கை வீக்கம், பெருமூச்சு, வெறும் நெஞ்சு போன்ற தோற்றம், ஐம்புலனொடுக்கம், கபம் இளகி வெளியேறியதும் சமனம் முதலிய குறிகள் தோன்றும். (இது ஐவகைப்படும்)

**சுவாச காசத்திற்கு மருந்து :** (1) சிவதை - நிலவாகை - காக்கட்டான் - மூக்கிரட்டை வேர்களை சமன் கூட்டிக் குடிநீரிட்டு அரை ஆழாக்குக் கொடுத்து கழிச்சலை உண்டு பண்ணவும். மேலும் (2) பவளம் - முத்து - தாளகம் - வெள்ளி பற்பங்கள்; சுவாசக்குடோரி-பூரண சந்திரோதயம் - சாம்பிராணிப்பூ மாத்திரைகள்; அகத்தியர் - திப்பிலி ரசாயனங்கள்; பட்டு - கஸ்தூரிக் கருப்புகள்; தாளிசபத்திரிச் சூரணம்; கண்டங்கத்திரி - ஆடாதோடை நெய்கள் முதலியவற்றைக் கொடுக்கலாம். (இதற்கு எளிதில் செரிக்கத்தக்கதும், தனக்கு இயல்பானதுமான உணவு கொண்டு குளிர்ச்சியூட்டுவதை நீக்க வேண்டும்.)

## ★ 25. சயநோய்க் குறியும் - சிகிச்சையும் யாவை?

மிக்க பட்டினி - உறக்கமின்மை-உழைப்பு-வறுமை

சிறைவாசம், ஊட்டமற்ற உணவு, காற்றில்லா வீட்டில் வசித்தல், பிறபிணிகளால் நாட்பட்ட துன்பம், உடல் வலுவின்மை முதலியவற்றால் **சயநோய்** காணுகிறது - இதில், உணவில் வெறுப்பு பசியின்மை, ஏக்கம், மந்த நிலை, உடல் மிக இளைத்தல், நகம் - மயிர் மிகவளரல், மாலையில் சுரம், உடற் கட்டுக் குறைவு, குரல் கம்மல், மூக்கு நீர் வடிதல், கட்டிச் சளியுடன் கடுமையான கப இருமல், இரவில் மிகு வியர்வை, மிகு கழிச்சல், வாந்தி, ஒலி-ஒளி குன்றல், பக்கசூலை, தன்னுடலைத் தானே அடிக்கடி பார்த்தல், உணவில் மாசு படிந்துள்ளதாக எண்ணம் பயங்கரக்கனவுகள் ஆகியனவும், மரணமும் விளையும். (இது 12 வகைப்படும்.)

**சயத்திற்கு மருந்து :- (1)** சிவதை, நிலாவரை, சுக்கு, ஏலம், மருக்காரைவேர், சிற்றரத்தை, கொம்புக்கள்ளி வேர் வகைக்கு 1 பலம் கூட்டி, 2-படி நீரிலிட்டு கால் பங்காகக் குறுக்கி வடித்து; உடன் 1/2-படி நெய் கூட்டிக் காய்ச்சிக் கொண்டு; ஒரு உச்சிக்கரண்டியளவு கொடுத்துவர கழிச்சல் - வாந்தியினால் கபம் குறைவதுடன், பசித்தீயும் மிகும். **(2)** இஞ்சி, கிராம்பு, சீரகம், இலவங்கப்பட்டை, சாதிக்காய், ஓமம், சாதிப்பத்திரி வகைக்கு 1 பலம்; வரப்பு நண்டுகள்-300 இவற்றை முறைப்படி 15 படி நீரிலிட்டு 'தீ நீர்' வடித்து, கால் ஆழாக்கு வீதம் கொடுத்துவர பசியைத் தூண்டி, உணவைச் செரிப்பித்து, உடலுக்கு வலுவும் உண்டாக்கும். **(3)** முயல் - உடும்பு நெய்கள்; தாளகம் - வெள்ளைக்கல் - அயநாகம் - அடலை பற்பங்கள்; மகாவசந்த குசுமாகரம், சயக்குலாந்தக செந்தூரம், பூரணச் சந்திரோதயம் முதலியனவற்றைக் கொடுக்கலாம். (இதற்கு மிக்க சத்துள்ளதும் செரிப்புள்ளதுமான காய்கறி-கீரை; பழவகைகள், உணவுகளைக் கொடுக்க வேண்டும்.)

### ★ 26. தமரக வாயுவின் விளக்கம் என்ன?

ஒழுக்கக் கேடுகளினாலும் - வாயுவைப் பெருக்கும் பொருட்களினாலும். பிறவியினாலும் வாயுகூடுவதால் **தமரகவாயு நோய்** காணுகிறது. இதில், சிறிது நடந்தாலும்கூட பெருமூச்சு, மார்புத் துடிப்பு, தலைசுற்றல், நெஞ்சுவலி, மயக்கம், பீதி, கண்ணிருளல், முகம் - உதடு நீலநிறமாதல், உறக்கமின்மை, பிதற்றல், புகைந்திருமல், மூக்கடைப்பு, உடல்நோவு, கீல் வீக்கம், நாவறட்சி, வாநீருறல், தொண்டையடைப்பு, கைகால் சில்லிட்டு மரத்தல் ஆகியனவும், திடீரென துடிதுடித்து மரணமும் விளையும். (இது ஐவகைப்படும்)

**தமரக வாயுவுக்கு மருந்து : (1)** ஆட்டின் குண்டிக்காய்த் துண்டுகளுடன், கிராம்பு, சாதிக்காய், சாதிப்பத்திரி இவற்றின் தூளும், உப்பும் சிட்டிகையளவு கூட்டி குடிநீரிட்டுக் கொடுக்கலாம். **(2)** முத்து - அயநாகம் - கலைக்கோட்டு பற்பங்கள்; தாளிசபத்திரி - இஞ்சி - கரிசாலை - வில்வாதி லேகியங்கள் முதலிய மருந்துகள் பயன் தரும். (இதற்கு, வாயுப்பண்டங்களை நீக்கி விட்டு, எளிய, ஆனால் சத்துள்ள உணவுகளையே கொள்ள வேண்டும்.)

## ★ 27. அரோசகத்திற்குரிய மருந்து என்ன?

தோடமாறுதல், மிக்க மகிழ்ச்சி - கலக்கம் - பீதி ஆகியவற்றால் **அரோசக நோய்** காணுகிறது - இதில், சுவையில்லாதது போன்ற வாநீரூறல், உணவில் வெறுப்பு, உண்பொருளைக் காணச் சகியாமை, உண்ணுகையில் ஓக்காளம், பற்கூச்சம், குமட்டல், வாயில் புலால் மணம், சுவை தெரியாமை ஆகியன விளையும். (இது ஐவகைப்படும்)

**அரோசகத்திற்கு மருந்து : (1)** நிலாவரை, சீந்தில் பற்படாகம், திராட்சை, ரோஜாமொக்கு இவை சமன் கூட்டிக் குடி நீரிட்டுக் கொடுக்க, பேதியாகி தோடங்கள் தன்னிலை பெறும். **(2)** மாதுளை மணப்பாகு, நவரசத்துவையல், பாவனக் கடுக்காய், பிரண்டைச் சூரணம், தாளிசவடகம், சாதிசம்பீரக் குழம்பு முதலிய மருந்துகள் நலமூட்டும். **(3)** இடமாற்றமும், மந்திர தந்திரமும் மனக்கலக்கத்தைப் போக்கும். (முதலில் சுவையறிந்து உணவைக் கொடுக்க வேண்டும்.)

## ★★ 28. மூல நோயின் விளக்கம் என்ன?

வாயு - பித்தம் இவற்றை கிளப்பும் உணவுகள், சதா அமர்ந்திருத்தல் - வாகனப்பயணம், மிக்க யோக நிலை, மூச்சடக்கல், மிகு புணர்ச்சி, கர்ப்பிணிகளின் கீழ்க்குடல், அழுத்தப்படல், பெருவயிற்று நோயின் முதிர்ச்சி, பட்டினி, மலத்தையடக்கல், பரம்பரை முதலியவற்றால் **மூலமுளை** காணுகிறது - இதில், மலத்தீய்ந்து வாயுகருகல், அபானன் வெளியேறாது ஆசனம் தீயாயெரிதல், விந்து கெடுதல், வயிற்றிரைச்சல், நொந்து கழிதல், பசியின்மை, செரியாமை, புளியேப்பம், வலிமை குன்றி சோர்வு, உடல் மெலிவு, தாகம், சினம், முகம் எண்ணைப்பூசினாற் போலிருத்தல், அடித்தள்ளல், முளைநெருடல் ஆட்டுப்புழுக்கை போன்ற மலம், ஆசனத்தில் நமை - எரிவு - தினவுடன், சீழ் - குருதி - நீர் - ஊன் - சவ்வு

வடிதல், முளை முற்றிப் பழுத்து வெடித்துப் புண்ணாதல் முதலிய குறிகள் தோன்றும். (இது 21 வகைப்படும்.)

**மூலத்திற்கு மருந்து :-** (1) ஒரு பங்கு கருணைக் கிழங்குச் சாற்றுடன், இரு பங்கு பசுவின் பால் விட்டு சுண்டக்காய்ச்சி இறக்கி, ஆறியபின் காசெடை இளகத்துடன் வெல்லம் கூட்டி; உடன் நாக பற்பம் - வங்க பற்பம் முதலியன சேர்த்து தினமிரு வேளையும் உட்கொள்ளவும். மேலும் (2) குடிநீர், நெய், பற்று, புகை, ஆவி, வியர்வை முதலிய பல மருந்துகளையும் கையாளலாம். (இதற்கு மிகு காரமும் - புளியும் நீக்கி, குளிர்ச்சியூட்டவும், மலத்தை இளக்கவும் வல்ல உணவு கொண்டு, உடலுறவும் நீக்குதல் நலம்.)

## ★ 29. கல்லீரல் நோயின் விளக்கம் என்ன?

மிக்க உணவு - மது - உடலுறவு கொள்ளல், உடலுக்கு ஒவ்வாத பொருட்கள், குழந்தைகளுக்குப் பாலுணவுமாறுபாடு, சுரம் முதலிய பிணிகளின் துணை ஆகியவற்றால் பித்தம் மிகுந்து **கல்லீரல் நோய்** காணுகிறது - இதில், வாநீரூறிக் கைத்தல், சுவை - பசியின்மை, செரியாமை, முகம் சுருங்கி முக லெும்பு எடுத்துக்காட்டல், காலையில் குமட்டி பித்த வாந்தி, கைகால் சூம்பி வயிறு தினமும் பெருத்துக் கொண்டே வருதல், அடிக்கடி சுரம், கல்லீரல் நாளுக்கு நாள் பெருத்தல், உணவில் வெறுப்பு, தொடர்ந்து காமாலை-சோகை-பாண்டு-பெருவயிறு நோய்கள் காணுதல் ஆகியனதோன்றும். (இது மூவகைப்படும். **மண்ணீரல் நோயும்** - மருந்தும் இதற்கேற்ப இணைந்தே யிருக்கும்).

**கல்லீரல் நோய்க்கு மருந்து :-** (1) அரை ஆழாக்கு கீழா நெல்லிச் சாற்றுடன், ஒரு பலம் பேதியுப்பும், ஒரு விராகன் கடுகும் கூட்டிக் கொதித்த பின் ஆறவிட்டு வடித்து; மீண்டும் சிறிது வெதுப்பிக் கொடுக்க பித்து பித்தாக வாந்தியும், சிலமுறை கழிச்சலும் காணும் (2) பொன் - செம்பு-வெள்ளீயம் - நாகம் - வெள்ளி - வெள்ளைப்பாடாணம்-தாளகம் இவற்றின் பற்ப செந்தூரங்கள் பயன் தரும். (இதற்கு குளிர்ச்சிதரும் - எளிய உணவே கொள்ள வேண்டும்.)

## ★★30. பவுத்திரத்தின் குறிகள் யாவை?

மிக்க உடலுறவினால் அழல்மீறி மேகம் ஏற்படுவதால் **பவுத்திர நோய்** காணுகிறது: இதில், விரை - குறி - விரைக்கும் ஆசனத்திற்கும் நடுவிலுள்ள அடி நரம்பு - இதன் வலமிடப்புறம்

இவற்றில் பலவித முளைகள் - கட்டிகள் - புத்துக் கண்களைப் போல் தோன்றி, வேதனையுடன் அரித்து, நொந்து, பழுத்து, உடைந்து, பல கண்களுடன் சீழ் - குருதி வடிதல்; புரையோடி நரம்பு அழுகி இற்றுத் தொளை-விழுந்து அதன் வழியே மல நீர் கழிதல், ஆசனக் கடுப்பு - எரிச்சல் - வேதனை இவற்றுடன், கடும் நீர் மலச்சிக்கல், கைகால் காந்தி உளைதல், தூக்கமும் உணவுமின்றி உடல் மெலிந்து களைத்தல், சுரம், ஆசனம் விறுவிறுத்து கருணைக் கிழங்குபோல் தடித்து வாயை அடைத்தல், அழுகல் நாற்றமுள்ள சீழ் சதாவடிதல், அமரவியலாமை, வேதனையினால் மனக்கலக்கம் முதலிய குறிகள் தோன்றும். (இது 8 வகைப்படும்.)

**பவுத்திரத்திற்கு மருந்து :-** *(1)* கொன்றை, நத்தைக்சூரி கொடுவேலி வேர்ப்பட்டை இவை சமன் கூட்டி நீர் விட்டு சுண்ட அவித்தெடுத்து அரைத்து வேளைக்கு எலுமிச்சை யளவாக - கந்தகபற்பம் கூட்டி உண்ணவும். (2) காசுக்கட்டி, துத்தம், வெண்குங்கிலியம், ரசம் வகைக்கு - 1, சுண்ணாம்பு - 4, வெண்ணெய் - 8 விராகன் வீதம் கூட்டிக் களிம்பாய் அரைத்து, துணியில் தடவி விரணத்தில் கட்டலாம் (3) கருவங்கம் - நாகம் - வங்க பற்பங்களும்; மாகவல்லாதி லேகியமும் பயன்தரும் (இதற்கு குளிர்ச்சியூட்டும் உணவு கொண்டு, உடலுறவு - அலைச்சல் நீக்கவும்).

## ★ 31. வாயுவின் குறியும் - மருந்தும் யாவை?

செரியா உணவு, மலச்சிக்கல், குளிர்ச்சிப் பொருள் இவற்றால் வளிமிகுந்து **வாயுநோய்** காணுகிறது - இதில், நினைத்ததையெல்லாம் தின்ன வரும்பியும் ஏற்காது வாந்தியாதல், பசிகண்டு மந்தித்தல், வயிறு ஊதி - பொருமி - நோதல், மலம் கருகி சிறிது குருதியும் அதிக நீரும் கலந்துபோதல், கண் வெளுத்து முகம் சிவத்தல், கிறுகிறுப்பு பலவீனம், விரைகள் நரம்பு தெரிய பொருமி வலித்து மேல் நோக்கி உள்வாங்கல், சதா புளியேப்பம், காற்றுப் பரிதல், வயிற்றில் காற்று கல்போல் திரண்டு புரண்டு பின் உடலெங்கும் பரந்தோடி அடங்கல், குடல்-முதுகு - விலா - நெஞ்சு இவற்றில் வாயு திரண்டு, புடைத்து - புரண்டு - அழன்று - வலித்தல், குடலில் வாயு புரண்டு வலித்துக் குமுறி இரைதல், ஓக்காளம், வாய் நாற்றம் முதலியனவும் காணும். (இது 12 வகைப்படும்.)

**வாயுவுக்கு மருந்து :-** *(1)* சுக்கு, மிளகு, திப்பிலி, ஓமம், காயம், சீரகம், கருஞ்சீரகம் இவை வகைக்கு 1/4 பலம் வீதம்

வெதுப்பிச் சூரணிக்கவும். கறியுப்பை எருக்கம் பழுப்புச் சாற்றில் அரைத்து 6 புடமிடவும். சூரணமும் - பற்பமும் சமனளவு கூட்டிக் கொண்டு திரிகடியளவில் சுடுநீருடன் முவ்வேளையும் உட்கொண்டு வர சகல வாயுவும் நீங்கும். (2) பஞ்ச தீபாக்கினி சூரணம் - இஞ்சி லேகியம் முதலியனவும் பயன் தரும்.

## ★★ 32. மதுமேகம் பற்றிய விளக்கம் என்ன?

மிகுபுணர்ச்சி, இனிப்பு-நெய்ப்புப் பொருளை அதிகமுண்ணல், சதா கவலை - சோம்பல் - உடலுழைப்பின்மை அசீரணக்கோளாறு, மேகப்பிணியினர்க்குப் பிறத்தல் முதலியவற்றால் மூலாதாரத்தில் கனல் கண்டு **மதுமேகப்பிணி** பற்றுகிறது - இதில், மிக்கபசி, தாகம், எவ்வளவு உண்டாலும் வன்மையின்றி உடல்மெலிதல், பருகும் நீரின் அளவிற்கேற்ட சிறுநீர் கழிதல், தூக்கமின்மை, மனக்கலக்கம், பிசுபிசுத்த வியர்வை, இளைப்பு, பெருமூச்சு, மயக்கம். நாவறட்சி நெஞ்சுலர்தல், பொறிபுலன்குன்றல், சிறு நீரகக்கருவிகளில் வேக்காடு, தினவு, சொறி, சிரங்கு, காற்றை நாடல், கைகால் - உடல் - கண் அழற்சி - நடுக்கம், வாயுபரிதல் உடலெரிவு ஆகியனவும்; மூத்திரம் நெய் - பசுநீர் - சீழ் - சதைநீர் - யானைநீர் - முயல் குருதி - மூளை - இளநீர் - கள் - விந்து - கழுநீர் - தேன் - உப்புநீர் - கறிகழுவிய நீர் - பனிநீர் - சளி - தாழைவிழுதுச்சாறு - பால் - சாம்பல்நீர் - சுண்ணநீர் ஆகியன போன்று பலவித வடிவிலும் - மணத்திலும். படிக்கணக்கிலும், துணியிலிட்டுக் கொழுத்த கொழுந்துவிட்டு எரியும் தன்மையுடனும், அடிக்கடியும் கழிதல்; சிறுநீரில் இனிப்புச்சத்து அடங்கியுள்ளதால் ஈ எறும்பு மொய்த்தல், காய்ச்சினால் வண்டல் தங்கல் இவையும்; குறிப்பிட்ட ஆண்டு வரை துன்பமிளைத்து ஆளைக் கொல்லுதலும் விளையும் (நீரிழிவு நோய் 20 வகைப்படும்.)

**நீரிழிவுக்கு மருந்து :-** (1) நாவல் விதைப்பருப்பு, ஆவரம் பூ, கொன்றைப்பூ, நீர் முள்ளிப்பூ, சுத்தித்த இரும்புத்தூள் இவை சமன் கூட்டிப் பொடித்து; நாவல் பழச்சாற்றில் நன்கு அரைத்து; வாயகன்ற சட்டியிலிட்டு, வெய்யிலில் வைத்து சிறுகச்சிறுக நாலுபடி நாவல் பழச்சாறு விட்டு உலர்த்திப் பொடித்துக் கொண்டு, காலை மாலை சிட்டிகையளவாக தேனில் கொடுக்கவும். (2) வில்வாதி - இலவங்காதி - தேற்றான் விதை - இலேகியங்களும்; தங்கம் - வெள்ளி - அப்பிரகம் - வங்க பற்பங்களும் பயன்தரும். (இதற்கு சிறுநீரைப் பெருக்கும்

பொருளும் - இனிப்பும் நீக்கி, சத்துள்ள கொழுப்பில்லாத உணவுகளைக் கொள்ள வேண்டும்)

## ★★ 33. சுக்கில நீருக்குரிய மருந்து என்ன?

இளவயதிலேயே புணருதல், பெரும்பொருளை நாடிச் சிந்தித்தல், மனத்தளர்ச்சி, ஊக்கமின்மை, பெற்றோர் வழி ஆகியவற்றால் அழல் மிகுந்து ஐயத்துடன் கூடுவதால் **சுக்கில நீர்** நோய் காணுகிறது - இதில், இரவில் விந்து தன்னையறியாது வெளியேறல், கைகால் அயர்தல், நாளுக்கு நாள் உடல் மெலிந்து நடுங்கல், அடிக்கடி தடித்த நூல்போல் பிசுபிசுத்த நீரிழிதல் கண்டு உடல்வன்மை கழிவதாய் எண்ணிக் கவலை கொண்டு சோர்தல், வாந்தி, ஓக்காளம், மலக்கட்டு, தூக்கமின்மை, பிறரைக் காண நாணம், முக்காடிட்டுத் தனித்திருத்தல், உலகை வெறுத்து தற்கொலை புரிய எண்ணம் ஆகிய குறிகள் தோன்றும்.

**சுக்கில நீருக்கு மருந்து :** (1) அத்திப்பழம், அதிமதுரம், சீமைக்காசினி விதை, சதாவரி இவை சமன் கூட்டிக் குடிநீரிட்டு, அதில் பனங்கற்கண்டு சேர்த்து அருந்தவும். (2) தங்கம் - முத்து - பவள பற்பங்களை தேற்றான் லேகியத்தில் கொடுக்கலாம். (இதற்கு சத்துணவு தேவை.)

## ★ 34. கல்லடைப்பும் - சிகிச்சையும் பற்றிக் கூறவும்?

சுனைநீர் - நாட்பட தேங்கிய நீர், மாவுப்பண்டம், வாயுவைக் கூட்டும் உணவு, விந்துகட்டல், அன்னசாரத்தின் உப்புச்சத்து உறைந்து நீர்ப்பையில் தங்கி வளரல் முதலிய வற்றால் **கல்லடைப்பு** நோய் காணுகிறது - இதில், சிறுநீர் கழிக்கையில் திடீரென நீரடைத்தல், குறிமுனை வீங்கி நொந்து கடுத்தல், நீர்ப்புழைஎரிவு, இடுப்பின் பின்புறம் நோதல், நீருடன் மண் போன்ற கற்கள் - குருதி காணல் முதலியன தோன்றும். (இது 5 வகைப்படும்)

**கல்லடைப்புக்கு மருந்து :** (1) பனங்குருத்து, நெருஞ்சில், நீர்முள்ளி, சூரைவேர், வில்வவேர், காஞ்சொறிவேர், குரோசாணி ஓமம், நீர்க் கடம்பின் வேர் இவை சமன் கூட்டி குடிநீரிட்டு தின மிருவேளையும் ஆழாக்களவில் அருந்தி வரலாம். மேலும் (2) சல மஞ்சரி, பலகறை பற்பம், கல் நண்டு பற்பம், வெடியுப்புச் சுண்ணம், வெடி அன்னபேதிச் செந்தூரம் முதலியவற்றை தக்க குடிநீரிலிட்டுக் கொடுக்கலாம்.

(இதற்கு உணவில் உப்பை நீக்குதலோடு, நீரைப் பெருக்கிக் கழிக்கச் செய்யும் காய்கறி, கீரைகளைக் கொடுக்கவும்.)

**★★ 35. நீரடைப்பும் - சிகிச்சையும் பற்றிக் கூறவும்?**

மிக்க காரம் - சவாரி, சிறுநீரையடக்கல், அதிகச்சூடு - குளிர் முதலியவற்றால் **நீரடைப்பு நோய்** ஏற்படுகிறது - இதில், இறுகியன மலமும் - அளவு குறைந்து குருதி கூடி கருத்துக்கனத்த நீரும் கழிதல், கடும் எரிவு - நோவு - சூட்டுடன் நீரிறங்கல், நீர்ப்பையும் - புழையும் எரிதல், வயிறு வீங்கி நோதல், மூக்கு நீர்வடிதல், உடல் வெளுத்து ஊதல், கண்ரப்பை வீங்கி கண்ணீர் வடிதல், பெருமூச்சு, களைப்பு, செரியாமை, குறி வீங்கி வலித்தல், அடிவயிறு குத்தல், காய்ச்சிய சிறுநீர் வெண்கருபோல வெளுத்து உறைதல் முதலிய குறிகள் தோன்றும்.

**நீரடைப்புக்கு மருந்து** : (1) கற்றாழை வேர், நீர்கடம்புவேர், வெள்ளைச் சாரணைவேர், மிளகுக்கொடி, கீழாநெல்லி, பொடுதலை இவை சமன் கூட்டி குடிநீரிட்டு அரை ஆழாக்கு வரை கொடுக்கலாம். மேலும் (2) முத்து, பவளம், கல்நார், கல்நண்டு, சலாசித்து, வெங்காரம், சீனம், குங்கிலியம், வெடியுப்பு இவற்றின் பற்ப செந்தூரங்களை தக்க குடிநீர் - சூரணம், நெய் வகைகளுடன் கூட்டிக் கொடுக்கலாம். (இதற்கு, மிக்க புளி-காரம் நீக்கிய, எளிதில் செரிக்கக்கூடிய உணவுகளைக் கொடுக்கலாம். மீன் - நண்டு - காபி - டீ கூடாது. கொதி நீரில் பனங்கற்கண்டு கூட்டி அருந்துதல் நலம்.)

**★ 36. நீர்க்கட்டும் - சிகிச்சையும் பற்றிக் கூறவும்?**

நீர்க்குண்டிக்காயில் உண்டான கற்கள் அடைத்தல், புழையில் கட்டிகழலை பிறத்தல், பிறப்பில் புழை அடைப்படல், குண்டிக்காயின் தாபிதத்தால் நீரைப் பிரிக்கும் தொழில்குன்றல், மிக்கபேதி - வாந்தி-வியர்வை, நீரிழிவு, நஞ்சுண்ணல் முதலிய வற்றால் **நீர்க்கட்டு நோய்** காணுகிறது. இதில் சலாகையிட்டும் கூட சிறுநீர் சிறிதும் கழியாமை, மணிக்கணக்கிலும் நீர்ப்பை நிறையாமை, தலைசுற்றல், மயக்கம், அரட்டல், புரட்டல், கண்மணி சுருங்கல், கொருக்குவலி, கைகால் சில்லிடல், கடினமுடன் குருதிநிற நீர்கழிதழ், மூத்திரமணமுடன் பிசுபிசுத்த வியர்வை, கடின வாந்தி முதலியன தோன்றும்.

**நீர்க்கட்டுக்கு மருந்து** : (1) சீமைக்காசினி - முள்ளங்கி

- வெள்ளரி விதைகள், நெரிஞ்சிமுள் இவை சமன் கூட்டி குடிநீரிட்டு ஆழாக்களவில் அருந்த நீர்க்கட்டு உடைந்து வெளிப்படும். மேலும் (2) வெடியுப்புச் சுண்ணம், குங்கிலியம் - முத்து - இரச பற்பங்கள் முதலியவற்றையும் கொடுக்கலாம். (இதற்கு உணவாக, நீரைப் பெருக்கக்கூடிய பொரி - பார்லி கஞ்சிகள், உடல் வலுவிற்கானவை முதலிய வற்றை, மிகுகாரம் - புளி - உப்பு நீக்கிக் கொடுக்கவும்.)

## ★ 37. வெள்ளையும் - சிகிச்சையும் பற்றிக் கூறவும்?

மிகு புணர்ச்சி, வெட்டை நோயினருடன் உடலுறவு, சூட்டுப் பொருட்களைக் கொள்ளல், யோக நிலை முதலிய வற்றால் **வெள்ளை நோய்** காணுகிறது. இதில், குறியின் முனை சிவந்து, நமைத்துக் கடுத்து வீங்கி, நீருக்கு முன் நூல்போல் வெளுத்த சீழ் கழிதல், நாளடைவில் அதிக அளவில் மஞ்சள் நிறச்சீழ் கழிவதுடன் - புழை தீயாய் எரிந்து புண்ணாகிக் குருதி இழிதல், மலக்கட்டு, பசியின்மை, இடுப்பு - முதுகு-தொடை நோதல், நாளடைவில் கடும் வேதனையுடன் நீரடைத்து தண்டின் அடி - முனைகளில் பகந்திரம் போலுண்டாகி அவ்வழியே நீரிறங்கும் - பின் விந்துவும் சேர்ந்து கழியும். மேலும் வாதம் - மலடு - கண்ணோய் இவையும் கண்டு கொடுமைப்படுத்தும். (இது 21 வகைப்படும்.)

**வெள்ளைக்கு மருந்து : (1)** மேக நாதத்தைலம், தண்ணீர் விட்டான் நெய், முத்து-பவளம் - வெள்ளி - நாகம் - கந்தகம் இவற்றின் பற்ப செந்தூரங்கள். இரசகந்தி மெழுகு, சேங்கொட்டை நெய், கந்தகச் சுடர்த்தைலம் முதலியவற்றைக் கொடுக்கலாம். **(2)** மல நீரை வெளியேற்றவல்ல குடிநீர்களைக் கொடுக்கலாம். (இதற்கு குளிர்ச்சியூட்டி, நீரைப் பெருக்கவல்ல உணவுகனைக் கொண்டு; சூடு தரும் கார உணவுகளை நீக்க வேண்டும்).

## ★ 38. கரப்பானுக்கு மருந்து என்ன?

குருதிகெட்டு கிருமி உண்டாவதால் **கரப்பான்நோய்** காணுகிறது - இதில், உடலிலும் தலையிலும் விரணம் கண்டு - சினைநீர் உறைந்து - குவிந்த சிறுபக்குகள் விழுந்து - மற்ற இடத்திலும் பரவுதல், பல வடிவில் சிவந்து - நமைச்சலுடன் - நடுவில் வியர்க்குரு போல் தோன்றி - தோலுரிந்து - விரணமாகிக் குருதி வடியும் வரை சொறியத் தூண்டுதல், உடல் ஊதி உலர்ந்து - சூடுற்று - தினவுறுதல். விரல் சந்துகளில்

வெடித்துப் புண்ணாதல், கண் சொரிந்து ஊறலுடன் பீளை கட்டல், மூக்கு நீர்வடிதல், கண்டத்தில் முள் செருகியதுபோல் கரகரத்தல், குரல் கம்மல், அமர்ந்திருக்கையில் கைகால் திமிர் உடலில் பேன் ஊறுவது போன்ற உணர்வு, காதிரைச்சல் நாற்றமுள்ள சீழ் சொரிதல், சோர்வு. உணவில் வெறுப்ட பிதற்றல், அண்ணாவில் அழற்சி ஆகிய குறிகள் காணும். (இது 18 வகைப்படும்)

**கரப்பானுக்கு மருந்து :** (1) சுத்தித்த சூதம் - இரசகற்பூரப் - நீலத்துருசு - பால் துத்தம் - கந்தி - மிருதார்சிங்கி, ஏலம் சூடன், கார்போகரிசி, நீரடிமுத்து, கஸ்தூரி மஞ்சள், காட்டுச் சீரகம் இவை வகைக்கு 4 கிராம் வீதம் பொடித்து 3 லிட்டர் தேங்காய்ப்பாலுடன் கலந்து பதமுறக் காய்ச்சி வடிக்கவும் இதில் காலையில் 5 துளி வரை பாலுடன் உட்கொடுத்து - மேலேயும் தடவி வர கரப்பான், படை, சிரங்கு, சொறி கொப்புளம் ஆகியன நீங்கும் (2) பறங்கி-கந்தக ரசாயனங்களும். மத்தன் - புங்கு - விரண சஞ்சீவித் தைலங்களும் பயன் தரும் (இதற்கு - கரப்பான் பொருட்களை நீக்கி உண்ணவும்.)

## ★★ 39. கிரந்தி நோயின் குறிகள் யாவை?

மேக நீரினால் குருதி கெட்டு கிரந்திநோய் காணுகிறது - இதில், உடல் எரிவு - தினவுடன் கருப்பாய் தடித்து அதில் அடிக்கடி செம்முளை போல் நீர் கட்டி வெடித்து - வற்றி கருநிற அசரு உதிரல், நடுவில் வெண்மையுடன் செந்திட்டுகள் படர்ந்து சீழ் முளைகட்டி சருகாயுதிரல், சிரங்கு போல் கண்டு படர்ந்து மாறாத்தினவும் அரிப்பும் காணல், உடலில் கழற்சிச் காய் போல தோன்றி வெடித்துப் புணணாதல், உடலில் கள்ளிப்பூ போல தடித்து அரித்து விரணமாதல், கண்டத்தைச் சுற்றி அரித்துத் தடித்துப் புண்ணாகி சீழ்கொண்டு புரையோடல் அடிக்கடி தினவுடன் காசு போல் தடித்து சிவந்து மறைந்து மீண்டும் தோன்றல், பிளவைகளாக முற்றி கடும் புண்ணுண்டாதல், முழங்கை கால்களுக்குக் கீழ் பொரிப் பொரியாய்த் தோன்றி, அரிப்புண்டாகி, நீர் வடிந்து ஆறாதிருத்தல் ஆகிய குறிகள் தோன்றும்.

**கிரந்திக்கு மருந்து :** (1) சுக்கு, மிளகு, திப்பிலி, வாய் விடங்கம், வாலுளுவை கருஞ்சீரகம் வகைக்கு - 35 கிராம், கருடன் கிழங்கு, வெங்காயம் வகைக்கு - 420 கிராம் ஆகியவற்றைச் சிதைத்து 750 - கிராம் விளக்கெண்ணையுடன் கூட்டிப் பதமுறக் காய்ச்சி வடிக்கவும். இதில் காலையில் மட்டும்

1/2 அவுன்ஸ் அளவில் உட்கொண்டு வர கிரந்தி, புண், மேகம், குட்டம், விஷம் முதலியன தீரும். (2) இரசகந்தி - நந்தி மெழுகுகள், பறங்கி - கந்தக ரசாயனங்கள், இரச - கந்தக பற்பங்கள் முதலியன பயன் தரும். (இதற்கு, உப்பு - புளி 3 நாள் நீக்கி, மறு 3 நாள் வறுத்துக் கூட்டவும், கரப்பான் பொருள் - உடலுறவு நீக்கவும்.)

## ★ 40. மேகக்கட்டிகளுக்கு மருந்து என்ன?

நீரிழிவு நோயின் வலிமை கூடக்கூட உடலிளைப்பு - வியர்வை, தோல் சுருங்கி உலர்தல், மிகு நமை ஆகிய குறிகளைக் காட்டி; சொறிதலால் குருதி வெளிப்பட்ட இடத்திலோ; அடிபட்டுப் புண் ஆகிய இடத்திலோ, புரையோடியோ வீங்கி மேகக் கட்டிகள் தோன்றுகிறது. இதில் கட்டிகள் தடித்து - வீங்கி - பரவி - வலித்தல், கட்டி பழுக்கையில் தோல் சுருங்கிக் கருத்துப் பின் பருக்கள் கண்டு உடைந்து அரையுங் குறையுமாக சீழ் வெளிப்பட்டு உலராது நோதல், குருதிக்கேடு, பலவீனம் ஆகியன காணும். (இது 10 வகைப்படும்.)

**மேகக்கட்டிக்கு மருந்து :** (1) ஒருபலம் தேன் மெழுகை உருக்கி, அதில் ஒரு விராகன் வெண்பாடாணத் தூளைத் தூவிக் கிண்டி, மெல்லியதாய்த் தட்டி கட்டியின் மீது வைத்துக் கட்ட, பழுத்து உடையும். பின் சீழை வெளியேற்றி, சுடுநீரில் கழுவி; புங்கன் எண்ணெயில் துணியைத் துவைத்துப் புண் குழியி லிட்டுக் கட்டிவர புண் உலரும். இதோடு, சீழ் பெருகாதிருக்க பூரபற்பம் கொடுத்தல் நலம். (2) அமிர்த வெண்ணெய் - பச்சை எருவை - விரண சஞ்சீவி எண்ணெய், வீரம் - பூரம் - இலிங்கம் கூட்டிய களிம்பு ஆகியனவும் பயன்தரும். (இதற்கு நீரிழிவுக்குரிய உணவுகளே பொருந்தும்)

## ★ 41. பெருநோயின் குறிகள் யாவை?

அழுகிய மீன் - நண்டு - நத்தை, வேகாத உணவு, வயிறாற உண்டபின் யோகநிலை, தீவினைகளைக் கையாளுதல், பலரிடம். மிகு புணர்ச்சி, இந்நோயினருடன் நெருங்கிப் பழகி அவர்களது படுக்கை - உண்டியினைக் கைக்கொள்ளல், பெற்றோர்வழி, உணவுடன் பல மாசு உட்செல்லல், விஷகடி ஆகியவற்றால் பெரு நோய் காணுகிறது- இதில், முகம் - கால் - மார்பு - தொடை - காது - மூக்குத்தண்டு இவை மினுமினுத்து, தோல்கடினப்பட்டு, மயிர்க்கால்களின் இடையகன்று சுருண்டு

திரளல், மிகுவியர்வை காணுதல், நாளடைவில் மிகக்கடின முற்று, தோல் உருண்டு திரண்டு கருத்து - சிவந்து காணல் தினவு, தோலில் திமிர் - உணர்வின்மை, நோயுற்ற இடத்தில் தீயில் சுட்டாலும் ஊசியில் குத்தினாலும் தெரியாமை, தீப்புண் எளிதில் ஆறாமை, கைகால் புண்கள் ஆறாது சிலைநீர் ஒழுகல் கழலை கண்டு அழுகல், கற்றாழைநாற்றம், வெள்ளை - சிவப்பு - கருப்புநிறப்பண்டைகள், நரம்புகள் சுண்டி விரலை மடக்கல். விரல்கள் அழுகிக் குறைதல், தடிப்புகளாக எரிச்சலுடன் கரடுகட்டல், ஆசனம் - குறியில் தீயாய் எரிதல், சருமத்தில் கீறல்கள் விழுதல், உடல் நொந்து நடுங்கல், பொரிப் பொரியாய் வெடித்தல், உதடு - உள்ளங்கை - கால்களில் பலநிறப்புள்ளிகள் தோன்றல், மிகு தூக்கம், புண்ணில் குருதி ஒட்டாது தாமரையிலை நீர் போலிருந்ததல் புணர்ச்சியில் மிக்க நாட்டம். அடிக்கடி சிறுநீர்கழித்தல், மிகுகாங்கை, வெறுப்புடன் சலித்தல், மீசை - மர்மக்குறி - புருவமயிர் உதிர்தல், தாதுக்கள் கொதிப்புறுதல், நல்ல பாம்புச் சட்டம் போல் தோல் மாறுதல். பாதங்களில் குழிப்புண்கள் முதலிய குறிகள் காணும் (இது 18 வகைப்படும்)

**பெருநோய்க்கு மருந்து :** (1) சிவனார் வேம்பு, விளாம் பட்டை, பேய்ப்பீர்க்கு விதை, கழற்சிப் பருப்பு, அழிஞ்சில் விதை, குன்றிப் பருப்பு, பிரண்டைவிதை, கொடுவேலி வேர் அழிஞ்சில் வேர், உசிலம்பட்டை, கள்ளிப்பட்டை, ஆயில்யப் பட்டை வகைக்கு 5 பலம், சுத்தித்தசேங்கொட்டை 40 பலம் இவற்றை வாயகன்ற சட்டியிலிட்டு வெள்ளாட்டுப் பால்விட்டு உலர்த்தி, மீண்டும் இப்படியே 5முறை உலர்த்தி, எடுத்த எடைக்கு சமனளவு ஆட்டுப் புழுக்கை சுட்டி முறைப்படி குழித்தைல மிறக்கி வெய்யிலிவிட்டு எடுக்கவும். இதில் குறுவையரிசிமாவில் இருதுளிவிட்டு ஒரு மண்டலம் சாப்பிடவும் (2) கார்போகரிசி-1. கருஞ்சீரகம்-1/2, நீரடி முத்துப் பருப்பு-1/4, புங்குவிதை-1/8 படி வீதம் கூட்டி இடித்து 8-படி நீரிலிட்டு குழம்பு பதமாக்கி; அதில் விளக்கெண்ணெய்-2 படியும், மருக்காரை வித்து, கோட்டம், ஞாலல், கடுக்காய் தான்றிக்காய், நெல்லிக்காய் வகைக்கு 1 பலம் தூளை பால் லரைத்தும் கலந்து எரித்து தைல பதத்தில் வடித்துக் கொண்டு உடலில் பூசி 3 மணி நேரம் ஊறவிட்டு, அரப்புத் தேய்த்துக் குளிக்கவும். (3) தாம்பர-இரச பற்ப செந்தூரங்களும்; நந்தி - இரசகெந்தி - சேங்கொட்டை மெழுகுகள் ஆகியனவும் பயன்தரும். (இதற்கு, உணவில் கரப்பான் பொருள் நீக்கி ஈச்சம் பாயில் படுக்கவும்.)

## ★ 42. சூலை நோய்க்கு மருந்து என்ன?

மிகச் சூடான உணவு, சிறை வாசம், மனச்சலிப்பு, வன்மைக்கு மீறி சண்டையிடல், மிக்க புகை-போகம்-துவர்ப்பு பொருள், தீவினை புரிதல் இவற்றால் **சூலை நோய்** காணுகிறது - இதில் உடல் குளிர்ந்தது போலிருந்து மூக்கு நீர் பாய்தல். சிறிது சுரம், கண் சிவந்து பஞ்சடைத்தல், உடல் வனப்பு குறைதல். கைகால் பூட்டுகளில் சில்லிடல்-குடைச்சல்-வலி, நோயுற்ற இடம் வீங்கல், செவிட்டுத் தனம், தலைவலி பல்வலி, பிதற்றல், மயக்கம், அறிவுகுன்றல், நோயின் வலி தாங்காது உடல் வியர்த்தல், மூக்குநுனி நீண்டு போதல், வயிற்றைப் புரட்டி வலித்து குருதியுடன் வாந்தியாதல், உடலின் உள்ளூறுப்புகள் திரண்டு புரளுவதுபோல் நோதல், மலநீரடைத்தல் உருமாறிப்போதல், நரம்புகள் புடைத்து வெளித்தோன்றல், இடுப்பு - முதுகு - விலா கடுத்தல், உடல் சூடுற்று உலர்தல், சுவை கெடல், ஒரே சமயம் கீழுறுப்புகளில் கழலை போல் பெருத்து நீர்த்துளையை நெருக்கி துன்பம்தரல், எலும்புகளும் - பொறி புலன்களும் தெரித்துவிடுவதுபோல் குடைதல் ஆகிய குறிகள் காணும். (இது 15 வகைப்படும்.)

**சூலைக்கு மருந்து** :- (1) காட்டாமணக்குவேர், கருங்கொடு வேலிவேர், சிவதைவேர், கடகரோகணி, சுக்கு, அதிமதுரம், வாய் விடங்கம் இவை சமன் கூட்டிக்குடி நீரிட்டு அருந்த கழிச்சல்கண்டு சூலையின் கொடுமை தணியும். (2) சூலைபூபதி -சூலைக்குடாரம்-விட்டுணு சக்கரம் - சலோதரிமணி முதலிய மாத்திரைகளும், இரசகந்தி - நவச்சாரம் - இரச - குமட்டி மெழுகுகள்; தாம்பரம் - அயவீரம் - நவச்சார பற்பங்கள்; அகத்தியர் - கௌசிகர் குழம்புகள் ஆகியனவும் பயன்தரும் (இதற்கு உணவில் வாயுப்பண்டங்களை நீக்கவும்)

## ★ 43. அதிசாரத்தின் குறிகள் யாவை?

கெட்டுப்போன - கொழுப்புமிக்க - அதிக அளவு உண்டி, வயிற்றுப்புழு, வயிறு மந்தமாயுள்ள பொழுது புணர்ல், பயம், கவலை இவற்றால் அபான வாயு மீறி **அதிசார நோய்** காணுகிறது. இதில் உண்டதும் வாநீருறிக் குமட்டல், விக்கல், சோர்வு, உடல் வன்மை குன்றல், அடிவயிறு இழுத்துப் பிடித்தாற் போலிருத்தல், குடலிரைச்சல், கைகால் வீங்கி நீர்கோர்த்தல், உணவில் அவாவின்மை, செரியாமை, புளியேப்பம், வயிறு உப்பி - நொந்து - இரைந்து - கடுத்து

செரியாமல் கழிதல், மனந்தளர்தல், கைகால் சில்லிடல் வெகுளி, நாடிதளரல், கொருக்குவலி இவையும் நீர்க்கட்டுண்டு மரணமும் நேரும் - புத்திமட்டும் சாகும்வரை தன்னிலை நிற்கும். (இது 8 வகைப்படும்)

**அதிசாரத்திற்கு மருந்து :-** (1) மாதுளம் பிஞ்சு, சுக்கு விளாங்காய் சதை, அதிவிடயம், முத்தக்காசு, பெருமரத்தோல் இவை 2 கழஞ்சு வீதம் கூட்டி, 2 நாழி நீரிலிட்டு, 1 உழக்காய் குறுக்கி, தேன் சேர்த்து அருந்தவும். (2) தயிர்ச் சுண்டி-சுண்டை வற்றல் சூரணங்கள், கட்டுவாதி - கபாட மாத்திரைகள் பஞ்சலவண - நாகம் - நத்தை பற்பங்கள், அன்னபேதி - உப்புச் செந்தூரங்கள் முதலியன கொடுக்கலாம். (இதற்கு கஞ்சி முதலிய எளிய உணவுகளே நலமாகும்.)

## ★★ 44. கிராணி பேதிக்குரிய மருந்து என்ன?

நீடித்த பசியின்மை, ஊட்டமற்ற உணவு, பலவித நீர்கள், செரியாவுணவு இவற்றால் குடல் புண்படுவதால் **கிராணிபேதி நோய்** காணுகிறது. இதில், ஒன்றும் உண்ணாதபோதும் உண்டது போல் வயிறு மந்தமாயிருத்தல், உண்டவை வயிற்றிலேயே நீண்ட நேரம் தங்கியிருப்பது போன்ற நிலை, வாநீரூறல், வாந்திக்குரிய உணர்ச்சி, அடிவயிறு ஊதி - இரைந்து - புரண்டு - நொந்து - கடுத்து, அடிக்கடியும் - பலநிறமாயும் - நாற்றமுடனும் கழிதல், புளித்த நீரெதிர்த்தல், கழிச்சல் பல மாதம் வரை நீடித்தல், உடல் குன்றி மெலிந்து கறுத்துச் சோர்தல் ஆகிய குறிகள் காணும். (இது 11 வகைப்படும்)

**கிராணிக்கு மருந்து :-** (1) அபின், கஞ்சா, இலிங்கம் வகைக்கு 1/2 பலம் கூட்டி அரைத்து; அதில், சாதிக்காய், சாதிப்பத்திரி, அதிவிடம், சிறுநாகப்பூ, இலவம் பிசின், வில்வப்பழச்சதை, ஊமத்தன் விதை வகைக்கு 1/4 பலம் தூளைக்கூட்டி, வாழைப் பூச்சாறு விட்டு அரைக்கவும். அதனை புளிப்பு மாதுளம் பிஞ்சுகளைத் துளைத்து அதில் செலுத்தி, வாயைமூடி, எருமைச் சாணத்தால் சீலை செய்து, பிஞ்சு வேகப் புடமிட்டெடுத்து, சீலை நீக்கி, காயோடு மெழுகாயரைத்து, மீண்டும் எருமைத் தயிரின் வடித்த நீரினால் 3 தினம் மெழுகாய் அரைத்தெடுக்கவும். இதில் ஓரிரு குன்றியளவில் தக்க அனுபானத்தில் கொடுக்க சகலவித கழிச்சலும் நீங்கும். (2) நாகம் - நத்தை - பவளம் - முத்து - பலகறை பற்பங்களும் நலமூட்டும். (இதற்கு மந்த உணவு கூடாது)

## ★ 45. சீத பேதிக்குரிய சிகிச்சை என்ன?

மிக்க காரம் - புளி, செரியா உணவு, காரமுள்ள மருந்துகள் குளிர்காற்று இவற்றால் அழல் மிகுந்து **சீதபேதி நோய்** காணுகிறது - இதில் தலை தோவு, வாய் குமட்டி வாந்திக்குரிய தோற்றம், ஆசனக் கடுப்பு, வயிறு கடுகடுத்து - இரைந்து - அடிக்கடி சிறிய அளவில் சளியும் குருதியும் கலந்து கழிதல், கழியக் கழிய வயிறும் ஆசனமும் மிகு கடுப்புறுதல், இழிவதாலான வேதனை தாங்காது உட்கார்ந்த இடத்தை விட்டு எழ அஞ்சுதல், கடுப்பினால் அழுதல், முடிவில் மலமின்றி சீதமும் குருதியும் மட்டும் கழிதல் ஆகியனவும்; தினம் ஐம்பது அறுபது முறை கழிவதால் நாடி தளர்ந்து, உடல் வியர்த்து நாவறண்டு, கண் பஞ்சடைத்து, சன்னி கண்டு, மரணமும் விளையும்.

**சீதபேதிக்கு மருந்து :** (1) ஒரு சாதிக்காயைத்துளைத்து அதனுள் ஒருகுன்றி அபினியை வைத்து, துளையை சாதிக்காய்த் தூளினால் அடைத்து, ஒரு கம்பியில் குத்தி, தேனில் துவைத்துத் துவைத்து, நெய் விளக்கில் சுட்டு நன்கு வெந்த பின் அரைத்து குன்றியளவு மாத்திரைகளாக்கிக் கொண்டு; காலை மாலை ஒன்று வீதம் கொடுக்கவும். (2) கபாட - ஊழி மாத்திரைகள், நாகம் - சிலா சத்து - நத்தை - பவள பற்பங்கள், இவையும் நலமூட்டும் (இதற்கு, கஞ்சியுணவு கொண்டு காரத்தை நீக்கவும்.)

## ★ 46. வாந்தி பேதியின் குறிகள் என்ன?

வறண்ட பூமி திடீரெனக் குளிர்வதாலான உடற்கேடு. நச்சுக் காற்று, ஒருவிதக் கிருமி இவற்றால் ஐயக்குற்றம் மிகுந்து **வாந்தி பேதி** காணுகிறது. இதில், உண்டவை செரியாமை, புளியேப்பம், வயிறு இரைந்து - நொந்து - ஊதி, செரியாமலும், கழுநீர் போலவும், பலவாறு நாற்றமுடன் கழிதல், வாநீரூறல், செரியாவாந்திக்குப்பின் வெள்ளோக்காளம் போல் வாய் குமட்டி, கோழை கலந்த நீரான வாந்தி, போகப்போக அடிக்கடி கழிச்சலும்-வாந்தியும் சேர்ந்தே தொடருதல், கைகள் - விரல்கள் - கெண்டைச்சதை - அடிவயிற்றுச் சதை இவற்றில் கொறுக்குவலி, சில்லிட்டு விறைத்தல் இவையும், உடல் குளிர்ந்து சோர்ந்து மரணமும் நேரும். (இது மூவகைப்படும்)

**வாந்தி பேதிக்கு மருந்து :** (1) சுத்தித்த வீரம், பூரம், இலிங்கம், சூடன், சுக்கு, மிளகு, அபின், கஞ்சாப்பருப்பு, கஸ்தூரி, குங்குமப்பூ, வெடியுப்புச்சுண்ணம் இவை 1 கழஞ்சு

வீதம் கூட்டி; கஞ்சாக் குடிநீரில் - 2, கொடுவேலி வேர்ப் பட்டைக்குடி நீரில்-4, ஊமத்தை இலைச் சாற்றில்-2 சாமம் வீதம் அரைத்து மிளகளவு மாத்திரைகளாக்கி தக்க அனுபானத்தில் கொடுக்கவும். (2) ஒற்றடம் - மேல் பூச்சு - பற்று - தாகசாந்தி மருந்துகள் நலம். (இதற்கு, முதலில் நீர் வகை உணவும், பின் எளிய உணவுகளும் கொள்ள வேண்டும்.

## ★ 47. வலிப்பு நோயின் குறிகள் யாவை?

உடல் - மனநிலைக் கேடு, மிகு புணர்ச்சி, மேகத் தொடர்பு பெரியோரைப் பழித்தல் ஆகியவற்றால் **வலிப்பு** ஏற்படுகிறது இதில், வலிப்பு தோன்று முன் தலை சுற்றல், கைகால் தளரல் மயக்க நிலை, விரல் நுனியில் திமிர் அல்லது துடிப்பு, அறிவுத் தெளிவின்மை, கண்ணிருளல், பிரமை இமை துடிப்பு இருப்பிடத்திலேயே கிடத்தல், ஊமை போல் பேசாதிருத்தல் உடல் நோதல், தாகம், வியர்வை, வாநீர் சுரந்து சொள்ளு வடிதல் முதலியன காணும். மேலும், மிக்க சினம், வெருண்ட பார்வை, கைகால் விரல்கள் கொறுக்குவலி போல் மடங்கி துடித்தல், மரம் போல் விழுதல், கண்ணும் தலையும் ஒருபுறம் இழுத்து, வாய் கோணி பற்களை - நாவைக்கடித்தல், வாயில் நுரைதள்ளல், சிறுநீர் கழிதல், குருதி வாந்தி, உடல் அடிபட்டு வீங்கி நோதல், வலிப்பு விட்டதும் கடும் சோர்வு - தலைவலி - தூக்கம் முதலிய குறிகள் காணும். (இது 11 வகைப்படும்)

**வலிப்புக்கு மருந்து :** (1) சித்தாதி எண்ணெய், கழற்சி எண்ணெய், அகத்தியர் குழம்பு முதலியவற்றைக் கொடுத்துக் கழிச்சலுண்டாக்கி வாதக் குற்றத்தைத் தணிக்க வேண்டும் மேலும் (2) இரச - துருசு - வங்கபற்பங்கள், அயவீர சண்டமாருத செந்தூரங்கள்; வான் மொழுகு, நந்திமெழுகு பச்சோந்தி எண்ணெய், ஐங்கூட்டு நெய் முதலியவற்றையும் பூச்சு - கலிக்கம் - நசியம் - புகை மருந்துகளையும் கையாளலாம் (வலியின் போது நாக்கைக் கடிக்கவிடாது ஒரு கரண்டிக்காம்பை வாயில் பிடிக்கலாம். கையிலும் கொடுக்கலாம். கவிழ்ந்து படுப்பதால் தலையணை யினாலாவ மூச்சடைப்பினால் இறப்புண்டாகவே, இந்நோயினர் மல்லார்ந்து படுத்தல் வேண்டும்)

## ★ 48. மூர்ச்சைக்குரிய சிகிச்சை என்ன?

செரியாவுணவு, குருதி குறைந்து வலிமை கெடல், நீர்மல

கட்டு, நாடி நரம்புத் தளர்ச்சி, அருவெறுப்பு, அதிர்ச்சி, நஞ்சுகள் முதலியவற்றால் **மூர்ச்சை நோய்** காணுகிறது - இதில், தலைசுற்றல், வாநீரூறிக் குமட்டல், கொட்டாவி, கைகால் சோர்வு, தன்னைமறந்து அறிவழிதல், இருதயத்துடிப்பு, வெறும் வயிறு போன்ற தோற்றம். தலைவலி, கூறவியலாத துன்பம், மூச்சுத்திணறல் இவையும், கண்ணிருண்டு - அறிவழிந்து - சுரணையின்றி மயக்கமுற்று - மூச்சடைத்து மரம்போல் விழுதல் ஆகியனவும் தோன்றும். (இது 6 வகைப்படும்).

**மூர்ச்சைக்கு மருந்து : (1)** மயங்கியவுடன் குளிர்ந்த நீரை முகத்தில் தெளித்தும், ஈரத்துணியால் உடலைத் துடைத்தும் குளிர்ச்சியுறச் செய்யவேண்டும். **(2)** அயம் - வெள்ளி - நாகம் கலந்த பற்ப செந்தூரங்கள்; வில்வாதி - நாரத்தை - கேசரி லேகியங்கள்; ஏலாதி - இஞ்சி - சீரகம் - பஞ்ச தீபாக்கினிச் சூரணங்கள்; ஆகியன கொடுக்கலாம். (இதற்கு, மிக்க ஊட்டமுள்ள உணவுகளே நல மூட்டும்.)

## ★ 49. குடிவெறிக்கு மருந்து என்ன?

மது வகைகளை மிகுதியாக குடிப்பதால் பித்தம் வெகுண்டு நான்கு நிலைகளையுடைய **குடிவெறி நோய்** காணும். இதில், மது வருந்தியவுடன் ஒருவித மகிழ்வு-உற்சாகமுடன், வலிமை கூடியது போன்ற தோற்றம் ஏற்படும். போகப் போக அறிவு மயங்கி - மயக்கம், கைகால் தளர்ந்து உதறல்-நாவறண்டு தாகம் - கண்ணிருண்டு தலைச்சுற்றல்-மார்பு படபடத்துத் துடித்தல் ஆகியனவும்; பின் மனம் தடுமாறிப் புலம்பல், ஆடல், பாடல், வாயில் சொள்ளுவடிதல், வாந்தி, சோகம் இவற்றுடன், மயக்கம், குறட்டை, மல்லார்ந்து கைகால் நீட்டிச் சுரணையற்றுக் கிடத்தல், வியர்வை, நாடிதளர்வு, துவளல், மூச்சுத்திணறல் ஆகியனவும், சிலசமயம் மரணமும் நேரும்.

**குடிவெறிக்கு மருந்து : (1)** நாவல் பழச்சாறு, தேன், இஞ்சிச்சாறு இவை சமன்சேர்த்து ஆழாக்களவு கொடுக்கலாம். **(2)** குளிர்ந்த நீரினில் குளிப்பாட்டி, சுக்கு- அரக்கு-சிற்றாமுட்டி தைலங்களை உடலிற் பூசலாம். **(3)** ஏலம் - சுக்கு - சீரகம் இவற்றின் தூளை கரும்புச் சாற்றில் கலந்து கொடுக்கலாம்.

## ★★ 50 பயித்திய நோயின் குறிகள் யாவை?

மிகு உண்டி, மிகு பட்டினி, மிக்க மது, அடிக்கடி பயம்

சினம்-துயர் - துன்பம் கொள்ளல், பொருளில் அதிக அவா நாட்பட்டபிணிகளின் தொடர்பு, பெற்றோர் வழி, திடீர் அதிர்ச்சி, நஞ்சுகள் இவற்றால் உடல் - மனநிலை கெட்டு அழல் பெருகி **பயித்திய நோய்** காணுகிறது. இதில், மனநிலை குன்றல், எதற்கும் அஞ்சல் - துணிபு கொள்ளல், பெண்மேல் இச்சை - வெறுப்பு, மெலிந்து அல்லது உரத்து பேசல் மனச்சோர்வு, முணுமுணுப்பு, கண்டவாறு பொருளின்றி பேசல் ஆடல், பாடல், அடாது செய்தல், திட்டல், ஓடல் அடித்தல் இயற்கைக்கு மாறானசெயல், தன்னை அடக்கி நிலையாமை சதாசிந்தனை-துக்கம், உறக்க மின்மை, பட்டினிகிடத்தல் பிறரை வஞ்சிக்க-கொல்லமுனைதல், மலநீர்கழியாமை-அல்லது -தன்னையறியாது கழித்தல், உடல் சோர்ந்து-கண் மயங்கி - வலிமை குன்றல், தற்கொலை புரிய அவா, வெறித்தனம் மலங்க மலங்க விழித்தல், தலைக்கனம் ஆகிய குறிகள் தோன்றும். (இது 4 வகைப்படும்),

**பயித்தியத்திற்கு மருந்து : (1)** வெண்பூசனிச் சாறு - 2 தாழை விழுதுச்சாறு-1, தென்னம்பாளைச் சாறு-1, கற்றாழைச் சாறு-1, செவ்விள நீர்-1, பசுவின் நெய்-2, பசுவின் பால்-2 படி அளவாய்க் கலந்து : அதில், சாதிக்காய், சாதிப்பத்திரி மாசிக்காய், கடுக்காய், தான்றிக்காய், நெல்லிவற்றல், சீரகம் ஏலம், வால்மிளகு காட்டத்திப்பூ, கடுக்காய்ப்பூ, கொத்துமல்லி , குரோசாணி ஓமம் இவை வகைக்கு 4 விராகன் கூட்டி பசுவின் பால் விட்டு அரைத்துக் கலந்து எரித்துப் பதமுற வடித்து, உடன் 2 பலம் சீனாக் கற்கண்டு கூட்டிக் கொண்டு தேக்கரண்டியளவில் தினமிரு வேளையும் கொடுக்கவும் இத்துடன் அப்பிரக பற்பம் கூட்டி 10 நாள் கொடுத்தல் நலம் (2) வல்லாரைக் கீரை, அகத்திக் கீரை, வெட்டிவேர் இவை கூட்டிய தைலத்தினால் குளிர்ந்த நீரில் தலை முழுக்கிடவும். (3) பேரண்டபற்பம்-காந்த செந்தூரம் வல்லாரை - வெள்ளாட்டு மூளை நெய்கள் இவைகள் பயன்தரும். (இதற்கு, எளிய உணவு கொள்வதுடன் - மனம் தன்னிலைப் படும்படியான அறிவுரையும் தேவை)

## ★★ 51. பாண்டு நோயும் - சிகிச்சையும் யாவை?

உடலுறவு, நச்சு மருந்து, புகையிலை, பாக்கு, மண், சாம்பல் சூடன், மிக்க உப்பு - புளி இவற்றை அதிகம் கொள்ளல் குருதிக்கழிச்சல்-வாந்தி - பெரும்பாடு - காயங்களில் மிக்க குருதிவெளிப்படல், நாட்பட்ட பிணிகள் ஆகியவற்றால்

இரத்தத்தின் வன்மை குன்றி பாண்டு விளைகிறது - இதில், பொதுவாக பித்த மிகுதியினால் குருதியின் நிறமும் எடையும் குன்றி, உடல் வலுவின்றி பளபளத்து வெளுக்கும். சிறிய நடையிலும் காலோய்வு, பெருமூச்சு, உணவில் வெறுப்பு, குமட்டல், தலைச்சுற்றல், அடிக்கடி மயக்கம், மார்புத்துடிப்பு, கண் இருளல், தோல் வெளுத்துச் சுருங்கல், நகக்கண் தடித்து வெளுத்தல், நாவில் புண்ணாதல், தொண்டைகட்டல் பெண்களுக்கு மாதவிடாய்க் குறைவு, செரியாக்கழிச்சல் போன்ற குறிகள் தோன்றும். (இது 5 வகைப்படும்.)

**பாண்டுக்கு மருந்து :-** (1) நிலவிளா, பற்படாகம், நிலாவரை, சீந்தில், சிவதை இவை சமன்கூட்டி குடி நீரிட்டு, அதில் சிறிது பேதியுப்பு சேர்த்துக் கொடுக்க வயிறு கழிந்து பித்தம் குறையும். பிறகு (2) அயம், காந்தம், எக்கு, மண்டூரம், வெள்ளி, தங்கம் முதலியன கலந்த பற்ப - செந்தூரங்களை, பசியைத் தூண்டும் லேகிய - சூரணங்களுடன் கொடுக்கலாம். (இதற்கு உப்பு - புளி - காரம் குறைத்து, பசியைத் தூண்டி எளிதில் செரிக்கத்தக்க சத்துணவு கொள்ளவும்.)

## ★ 52. சோகை நோயும் - சிகிச்சையும் யாவை?

பாண்டு நோயின் தொடர்பு, சித்தப்பிரமை, சன்னி, விஷகடி நச்சுண்ணல், உணவு வேறுபாடு, சிறை - மலை - ஈரநைப்புள்ள இடத்தில் வசித்தல், மண்-சாம்பல்-தவிடு உண்ணல் முதலிய வற்றால் குருதி கேடுற்று சோகை காணுகிறது - இதில் உணவு வெறுத்து, வன்மை குன்றி, கைகால் சோர்ந்து தூக்கம். பெருமூச்சு, இருமல், இளைப்பு, மயக்கம் காணும். உடல் மிக வெளுத்து வீங்கல், விரை பெரிய பைபோல் வீங்கல், காது தூரங்கின் காது போல் மெலிந்து செவி கேளாமை, காண் காகத்தினுடையது போல் சாய்ந்தும், இருண்டும் காணல் முதலிய குறிகள் காணும். (இது 4 வகைப்படும்) இதில் வீக்கம், காலில் துவங்கி முகம் வரை மேல் நோக்கிப் பரவுவது அசாத்தியமாகும்.

**சோகைக்கு மருந்து :-** (1) நீர் முள்ளிக்குடி நீர், அடைக் குடி நீர் முதலியவற்றில் அயச்சம்பீர கற்பம், சித்தமண்டூரம், வெடியுப்பு - நவச்சாரம் - நண்டுக்கல் - சீனம் இவற்றின் பற்பசுண்ணங்கள் முதலியவற்றைக் கொடுத்து நீரை மிகுதியாகக் கழிக்க வேண்டும். மேலும் (2) அயநாகம் - அயவீரம் - காந்தம் - அயக்காந்தம் முதலிய செந்தூரங்களை கொடுத்து

குருதியைப் பெருக்கவேண்டும். (இதற்கு குருதியைப் பெருக்கவுட மல நீரைப் பெருக்கவும் வல்லதான உணவுகளை கொண்டு உப்பு நீக்கவும்)

## ★★ 53. மகோதர நோயும் - சிகிச்சையும் யாவை?

மது, சுனைநீர், வண்டு - தேரை தங்கிய நீர், அசுத் உணவு, பாடாண மருந்துகள் இவற்றை மிகக் கொள்ளல் மருந்தீடு, மேக நோய், செம்பின் களிம்பு முதலியவற்றா **மகோதரம்** ஏற்படுகிறது. இதில், வாநீரூறல் - கசப்பு செரியாமை; படபடத்த மேல் மூச்சு. குமட்டலுடன் பித் வாந்தி, உடல் வெளுத்து வலிமை குன்றல், சிறுநீர் சுருங்கல் முகத்தில் மங்கு, முக எலும்பு மோடிட்டு கண்-தாடை-உத( சுருக்கம், கணுக்கால் - முதுகு வீக்கம் முதலியனகாணுப் மேலும், வயிற்றுத் தோல் சுருங்கி மினுமினுத்து, குரு நாளங்கள் புடைத்து விம்மி, தோலில் நீல நிறத்துடன் கொப கொடியாய்த் தோன்றி வயிறு வீங்கி வந்து; நீர் பெருக பெருக மேல் நோக்கி மார்பு வரையிலும், வயிற்றின் இருபுறமுட முட்டிப் பெருகும். இதனால் வயிற்று மடிப்புகள் மா வெளுத்த கோடுகளும்; தொப்பூள் குவிந்து மெலிந் தோலுடன் தளதளத்ததும் வெளிக்காணும். வயிற்று நீ அலைமோதும். தொடை - குறி - விதை - கால்களிலும் நீ கூடி தளதளத்துக் காணும். (இது 32 வகைப்படும்)

**மகோதரத்திற்கு மருந்து** : (1) காக்கட்டான்வேர் - நெருஞ்சி முள், நீர்முள்ளி, காசினிவிரை-1/2 பலம் வீத கூட்டி குடிநீரிட்டு இரு வேளையும் கொடுத்து நீரை பிரிக்கவும், மேலும் (2) உலோக மண்டூரம், வங்கபற்பப் காந்தச் செந்தூரம், வெடியுப்புச் சுண்ணம், நவச்சார பற்பப் சலோதரிமணி, குமட்டி மெழுகு, கோடாசூரி மாத்திரை முதலியவற்றைக் கொடுக்கலாம் (இதற்கு, மலநீரைப்பெருக்கவுட எளியதுமான உணவு கொண்டு, உப்பு நீக்கவும்.)

## ★★ 54. காமாலை நோயின் குறிகள் யாவை?

பித்தத்தை அதிகரிக்கச் செய்யும் செயல் - உணவு இவற்றா குருதிகெட்டு, பித்தநீர் சதை, தோல், கண், நாக்கு இவற்றி தங்குவதால் அழல்கூடி **காமாலை நோய்** பிறக்கிறது. - இதி சுவை - மணமின்மை, வாநீரூறல், குமட்டல், நாகசப்பு, உணவி வெறுப்பு செரியாமை, உடல்வறட்சி - எரிதல், தோல் சுருங்க கண், நகம், முகம், தோல், உதடு, மலநீர் மஞ்சளாத

மாலையில் உடல் வியர்வை, உடல் வெளுப்பு, கைகால் சோர்வு நடுக்கம், இளைப்பு, மல நீர் தீய்தல், தலைகனம், தூக்கம் வாந்தி, மூக்கு - ஈறு - வாய் இதில் குருதி கழிதல், யாவும் மஞ்சளாய்க் காணல் போன்ற குறிகளும், பிறவும் தோன்றும் (இது 13 வகைப்படும்.)

**காமாலைக்கு மருந்து :-** *(1)* ஒரு ஆழக்கு கீழ்க்காய் நெல்லிச் சாற்றில், பத்து விராகன் பேதியுப்புக் கூட்டி எரித்து, உப்புக் கரைந்தவுடன் வடித்து காலை வேளைகளில் கொடுக்க, கழிச்சலும் - வாந்தியும் கண்டு பித்தநீர் வெளிப்படும். இதோடு *(2)* சிலாசத்து பற்பம், அயச்செந்தூரம், வெடியுப்புச் சுண்ணம், பஞ்சலவணச் செந்தூரம் முதலியவற்றை தக்க துணை மருந்துகளுடன் கொடுக்கலாம். (இதற்கு உப்பு - புளி - தாளிதம் - கொழுப்பு நீக்கி, கஞ்சி கொடுக்கவும்)

## ★ 55. குடற்பிடிப்பு நோயின் விளக்கம் என்ன?

கடும் உழைப்பு, செரியாவுணவு, பன்னாட்கள் பட்டினி கிடந்தபின் நிறைய உண்ணல், வயிற்றில் அடி, வயிறு-குடலின் புண்-தாபிதம் இவற்றால் வாயு மிகுந்து **குடற்பிடிப்பு நோய்** காணுகிறது. இதில், வயிறு இரைந்து - நொந்து - ஊதி - நோதல், குடல் புரட்டல், மூச்சுவிட இயலாமை, வயிற்றை இழுத்துப் பிடித்து நிமிரவொட்டாமை, ஏப்பம், வாந்தி, எதிலும் வெறுப்பு, எருகட்டி பீச்சினால் கூட மலம் கழியாமை, படுக்கையில் கிடத்தல், கைகால் தளர்ந்து கண் பஞ்சடைந்து நாடி தளரல், பிசுபிசுத்த வியர்வை, சிலவேளை குளிர், சிறு சுரம் இவற்றுடன்முப்பிணிக்குறி தொடர்ந்து மரணக்குறியும் தோன்றும். (இது 4 வகைப்படும்.)

**குடற்பிடிப்புக்கு மருந்து :** *(1)* விளக்கெண்ணெய்-பால்-தேன் சமன் கூட்டி ஒருபலமளவு கொடுத்து வயிற்றைக் கழிக்க வேண்டும். *(2)* குமுட்டியுப்பு-குன்மகுடோரி-பிரண்டை வடகம் -உப்புச் செந்தூரம், தாளிசாதிவடகம் இவை பயன் தரும்.

## ★ 56. நாவறட்சிக்குரிய சிகிச்சை என்ன?

செரியாவுணவு, உடல் நீர்வற்றல், வாந்தி, பேதி, நீரிழிவு முப்பிணி, மிகு உழைப்பு, உணவு மாறுதல், பிற நோயின் தொடர்பு இவற்றால் **நாவறட்சி நோய்** காணுகிறது - இதில், நாவறட்சியுடன் சதா தாகம், நீரைப் பருகினும் வேட்கை அடங்காமை, இளைப்பு, மயக்கம், உடலெரிவு, குரல்கம்மல், உதட்டை நக்கல், உடல் நடுங்குவது போன்ற தோற்றம்,

பலவீனம், நாவு சிவந்து முள்ளாய் எரிதல், மிகு தூக்கம், சுவையறியாமை, உணவு செரியாமை, உடல் வாடிக் கருத்தல் ஆகியன தோன்றும். (இது 6 வகைப்படும்.)

**நாவறட்சிக்கு மருந்து :-** *(1)* ஒரு பிடி ஆற்று மணலுடன், இரு ஏலம் கூட்டி சிவக்க வறுத்து, மணலைக் கொட்டிய அயச்சட்டியில் நீர்விட்டுக்காய்ச்சி வடித்துக் கொடுக்க தாகம் அடங்கும். *(2)* கஸ்தூரிக் கருப்பு, ஏலாதி மாத்திரை, நவரசத்துகையல், பாவனக்கடுக்காய் இவையும் பயன் தரும்.

## ★★ 57. செரியாமையின் குறிகள் என்ன?

கடின உணவுகளை அதிக அளவிலும் - வேளை தவறியுமுண்ணல், பூமிகுளிர்வதால் வயிறு மந்தமுறல், தூக்கமின்மை, கவலை, பயம், பேராசை, வெகுளி ஆகியவற்றால் **செரியாமை நோய்** ஏற்படுகிறது. இதில், வயிறு உப்பி - கனத்து - இரைந்து - வலித்தல், வியர்வை, விக்கல், வயிற்றின் நீர் எதிரெடுத்தல், தொண்டை உப்புக்கரித்தல், இரைந்து கழிதல், ஆசனங்கடுத்துக் காற்றுப் பரிதல், உடல்வாடி முகம் கருத்து - அறிவு மயங்கல், செரியா வாந்தி, தாகம், புளியேப்பம் ஆகிய குறிகள் காணும் (இது 4 வகைப்படும்)

**செரியாமைக்கு மருந்து :-** *(1)* சுக்கு, மிளகு. திப்பிலி, கறிவேப்பிலை, உப்பு இவை சமன் கூட்டி வறுத்துப் பொடித்து, கால் பங்கு பொரித்த காயம் கூட்டிக்கொண்டு; அதில் ஒரு கரண்டியளவு சுடு சோற்றிலிட்டு, நெய்விட்டுப் பிசைந்து உண்டபின், வழக்கமான உணவைக்கொள்ள பசித்தீ கூடும். *(2)* குன்மக்குடோரி, இஞ்சிலேகியம், தயிர்ச் சுண்டிச் சூரணம் இவை பயன் தரும்.

## ★★ 58. விக்கலின் குறியும் - சிகிச்சையும் யாவை?

மிகுகாரம்-இனிப்பு-கைப்பு உண்டி, மாப்பண்டம், மூச்சடக்கல், பசி, தாகம், நீரிழிவு, வீரியப்பொருள் ஆகியவற்றால் **விக்கல் நோய்** காணுகிறது - இதில், தொண்டை - நாவு வறளல், வயிற்றில் ஏதோ உலாவுவது போலிருத்தல், தாகம், வாய் கசப்பு, கண் சிவத்தல், உடல் கன்றிச்சுடல், சினம், அறிவு மயக்கம், கண்நொந்து தெரித்து விடுதல் போலும் - கலங்கியும் காணல், முகம் வெளுத்தல், திணறல், நெஞ்சுவலி ஆயாசம் முதலியன காணும் (இது 5 வகைப்படும்.)

**விக்கலுக்கு மருந்து :-** ஏலரிசி, சீரகம், குங்கிலியம், தேங்

காய்க் குடுமி, பட்டுக்கூண்டுக்கரி, காட்டுக்கரி, மயிலிறகுச் சாம்பல் ஆகியவற்றைப் பொடித்துக் கலந்துகொண்டு; அரை விராகனளவில் தேனில் குழைத்து, பாதாம் நெய்யுடன் கலந்து அடிக்கடி கொடுக்கவும். (கரும்புச் சாற்றில் கஸ்தூரிக் கருப்பை கொடுக்கலாம்)

## ★★ 59. வாந்திக்குரிய சிகிச்சை என்ன?

கடின உணவு, நச்சுப் பொருட்கள், சுழன்றோடல், கப்பல் பயணம், பித்தம், சூல், வேறு சில நோய்களின் தொடர்பு இவற்றால் **வாந்தி நோய்** காணுகிறது - இதில், வாநீரூறல், வாய்குமட்டி நாவுதடுமாறல், ஓக்காளம், மயக்கம், மார்பு படபடத்தல், வயிறு இரைந்து நோதல், குடல் புரட்டல், தொண்டை அருகல் - குத்தல், கண் - காது வன்மை குன்றல், விலா புடைத்தல், வியர்வை, தலைவலி, குருதி - பித்தம் - மலம் - புழு-உணவு இவற்றுடன் வாந்தி, கைகால் சில்லிடல் தாகம் ஆகியனவும், மரணமும் நேரிடும்.

**வாந்திக்கு மருந்து :-** *(1)* அத்திப்பழம் -1, கொட்டைத் திராட்சை -1, சீரகம் -1/4, அதிமதுரம் -1/4, குரோசாணி ஓமம் -1/4 பலம் வீதம் கூட்டிக் குடிநீரிட்டுக் கொடுத்து வயிற்றைக் கழிக்கவும். பிறகு *(2)* மயிலிறகு, தேங்காய்க் குடுமி, மண்புழு இவற்றின் சாம்பல்; சுக்கு, சீரகம், திப்பிலி இவற்றின் தூள் ஆகியன சமன் கூட்டி இரு சிட்டிகையளவில் தேனுடன் கொள்ள வாந்தி நிற்கும்.

## ★ 60. மாந்தத்தின் குறிகள் என்ன?

பசியில்லாத போதும், அதிக அளவிலும், கடினமான உணவுகளைக் கொள்ளுதலாலும் **மாந்தநோய்** காணுகிறது. இதில் வாநீரூறல், குமட்டல், வயிறு ஊதி - இரைந்து - புரட்டி நோதல். கண்ணிருண்டு காதடைத்தல், மேல்மூச்சு, உடல் நடுக்கம், மிகு தாகம், வாந்திக்கோ - ஏப்பத்திற்கோ முயன்றாலும் இயலாமை, உண்டவை வயிற்றிலேயே கிடத்தல், உடலை அசைக்கக்கூட இயலாமை, படுக்கையில் புரளல், தலைகனம், கைகால் சில்லிடல் முதலிய குறிகள் தோன்றும். (இது மூவகைப்படும்.)

***மாந்தத்திற்கு மருந்து :-*** *(1)* வரகு வைக்கோலால் சுட்ட வரிக்குமுட்டிக்காயின் சாற்றைக் கொடுக்க வாந்தியாகும். ***(2)*** விளக்கெண்ணெய்-1, பால்-2, தேன்-3 பங்கு வீதம் கலந்து

பீச்சுக்குழல் மூலம் ஆசனத்தில் பீய்ச்சினால் கழிச்சல் காணும் (3) சூடனும் - ஓமமும் சமன் கூட்டி சிட்டிகையளவாக மணிக்கொரு முறை கொடுக்கவும் (இதற்கு, வலி நீங்கு மட்டும் பட்டினிபோட்டும்; பின் இரசம் அல்லது மோர்ச் சோறும் கொடுக்கவும்).

## ★★ 61. குன்ம நோயின் குறிகள் யாவை?

மிகு புணர்ச்சி, மிக்க வாயு - சூடு - தூசுப்பண்டம் - மது இவற்றை கொள்ளல், செரியாவுணவும்-கலப்பட உணவும்-பலவித நீரும் கொள்ளல், மிக்க சினம்-பட்டினி-கவலை, யோக நிலை, இராவிழித்தல், அடிக்கடி உண்ணல் முதலியவற்றால் **குன்ம நோய்** காணுகிறது - இதில் பசியின்மை, பசியிருப்பினும் உணவில் அவாவின்மை, வாநீரூறி குமட்டல், தூக்கமின்மை வயிறு புரண்டு-இரைந்து-கனத்து-நொந்து - உப்பி கடுமையாய் நோதல், புளியேப்பம், நெஞ்செரிவு, உடல் மெலிந்து - குன்றி - நடக்கவியலாது சோர்தல், மயக்கம், தாகம், மலநீர்க்கட்டு சுவையின்மை, பித்து பித்தாக வாந்தி, உணவு வயிற்றில் விழுந்தால் வேதனை கூடி வாந்தியெடுத்தால் சமனமடைதல் நோவு தாங்காமல் தற்கொலை செய்ய முயலுதல் உடல்காய்தல், இரைந்துபேதியாதல், வியர்த்தல், தலைகனம் முதலிய குறிகள் காணும். (இது 8 வகைப்படும்.)

**குன்மத்திற்கு மருந்து :-** சுக்கு, மிளகு, திப்பிலி சாதிக்காய், இலவங்கப்பட்டை வகைக்கு 1 - பலம்; இந்துப்பு வெடியுப்பு, ஓமம், நவச்சாரம் வகைக்கு - 2 பலம்; வெள்ளுள்ளி கடுகு, பொரித்த காயம், சாரணைவேர், கொடுவேலி வேர்ப்பட்டை வகைக்கு பலம் - 3; சூரத்து கடுக்காய்த்தோடு -15 பலம் இவற்றைப் பொடித்து; அதில் கள்ளிப்பால் 1 படி வெள்ளாட்டு சிறுநீர் - 4 படி கூட்டிப்பிசைந்து உலர்த்திப் பொடிக்கவும். 30 - ஆற்றுத் தும்மட்டிக்காயை நான்காய்ப் பிளந்து, மேற்படி பொடியினை அவ்வாய்களுள் அடைத்து ஒரு பானையில் அடுக்கி வாய்மூடி, சீலைசெய்து குப்பை மேட்டில் 100 எருவில் புடமிடச் சாம்பலாகும். இதில் சிட்டிகையளவாக தேன் - இஞ்சிச்சாறு - இவற்றில் ஐந்து நாள் பத்து வேளை வீதம், நான்கு வாரம் சாப்பிட குன்மம் யாவும் தீரும். (இதற்கு, மோர்ச் சோறும், எளிதில் செரிக்கும் உணவுகளும், ஊறுகாய்களும் கொண்டு; கடின உணவுகளை நீக்க வேண்டும்).

## ★★ 62. கண்ணோய்க் குறிகள் யாவை?

மிகுபுணர்ச்சி, மேகநீர், தலைவறட்சி, சதா வெய்யிலில் திரிதல், அதிகம் விழித்தல், மூலச்சூடு, மழை காற்றில் அவதி, அதிகச்சுமை இவற்றால் முக்குற்றத்தினால் **கண்ணோய்** காணுகிறது-இதில் விழி வீங்கிக் கடுத்து-உறுத்தி-எரிந்து-நீர்வடிதல்; கண்ணில் சதை - மாசு படருதல், கண்ணிருண்டு பல உருத்தோன்றல், சதா பீளைகட்டல், கருவிழி விலகல், கடைக்கண்ணில் மணிபோல் எழுந்து உடைதல். மாலையானதும் கண் தெரியாமை,' கண்ணில் சதா அரிப்பு - தினவு - நோவு காணல், கண்ணின் நிறம் மாறல் - செவ்வரியோடல் - தலைவலித்துக் குடைதல், புருவமயிர் கரித்து உதிரல், உச்சி மயிரைக் குறடில் பிடுங்குவது போலிருத்தல், கண் கூசித் திறக்க வொட்டாமை முதலியன காணும். (இது 96 - வகைப்படும்.)

**கண்ணோய்க்கு மருந்து :-** (1) சிறுகீரை, கரிப்பான், வேலிப்பருத்தி, பொன்னாங்காணி, மூவிலைமின்னி, பாடாவரை, துளசி, தூதுளை, புளியாரை, விஷ்ணுகரந்தி இவைகளின் சாறுகளை ஒரு புதுச் சட்டியின் தூரில் 10 முறை உலர உலரப் பூசி, மேற்படிசாறுகளில் துணியை நனைத்து உலர்த்தித் திரித்து நெய்விட்டுத் தீபம் ஏற்றிச் சட்டித்தூரில் மை பற்ற வைத்து, துத்தம், துருசு குன்றியளவு கூட்டி பசு வெண்ணெயிலரைத்துக் கொண்டு - கண்களில் தீட்டிவர சகல கண்ணோயும் தீரும். (2) நாசிரோக நாசத்தைலம், சீரகத்தைலம், திரிபலைதைலம் முதலியவற்றால் தலைமுழுகி வரலாம் (இதற்கு அலைச்சல் - உடலுறவு - சூட்டுணவு நீக்கவும்)

## ★ 63. காதுவலிக்கு மருந்து என்ன?

வாயுக் குற்றம், காதில் அழுக்கு சேரல், காதை நோண்டுதல் கடும் ஒலி பாய்தல் இவற்றால் **காதுவலி** காணுகிறது - இதில், பிடரி - காதில் நீரேற்றம் கண்டு கனத்து, மிக்க வலியுடன் ஆப்பினாலடைத்தது போல் குடைதல், உச்சி-கண்-பல்- நெற்றி நொந்து வலித்தல், செவியில் கிரந்தி கண்டு சீழும்-குருதியும் நாற்றமுடன் கழிதல், காதில் இரைச்சலுடன் சக்திகுன்றி செவிட்டுத்தனம், ஒழுங்கற்ற பேச்சு, பசியின்மை, உறக்கமின்மை, காதில் குரும்பி சேர்ந்து தினவுடன் அரித்தல், புழுக்கள் ஊறுதல், துள்ளித் துடித்துக் கதறுதல், செவிகள் வீங்கித் துடித்தல் முதலிய குறிகள் தோன்றும். (இது ஐவகைப்படும்)

**காதுவலிக்கு மருந்து :-** (1) பசுவின் நெய் - 1/4,

நல்லெண்ணெய்-1 படி வீதம் கலந்து; அதில் அபின், கந்தி, சூதம், வெள்ளை வகைக்கு 1 - கழஞ்சு வீதம் பொடித்துப் போட்டுக் காய்ச்சி வாரமிருமுறை தலைமுழுகியும்; ஒரு துளி காதில் விட்டும் வர செவி நோய்கள் தீரும் (2) முசுறுமுட்டை, பூ நாகம்-நண்டுக்கறி, வெள்ளுள்ளி, கோழிமுட்டை மஞ்சட்கரு, குக்கில், வசம்பு வகைக்கு 1 கழஞ்சு வீதம் சிதைத்து, 1/8 படி வேப்பெண்ணெயிலிட்டுக் காய்ச்சி வடித்துக் காதிலிட்டு வரலாம்.

## ★★ 64. தலைவலிக்கு மருந்து என்ன?

தூக்கமின்மை, கவலை, அலைச்சல், வாயுப்பண்டம், மலச்சிக்கல், பிற நோய்த் தொடர்பு இவற்றால் **தலைவலி** காணுகிறது-இதில் பிடரி-நாசி-உச்சி - நெற்றி - செவி இவற்றில் அலகு செருகியது போல் நொந்து தலை வலித்தல், தலையில் நீர் கோத்துக் கனத்துக் குத்தல், தலையே பிளந்து விடுவது போன்று நோதல், மண்டை வறளல், மனக்கிலேசம், மாரடைப்பு, பேசவியலாமை, மூக்குநீர் வடிந்து நாறுதல், உடல் நொந்து அதிரல், காலையில் தொடங்கி பகலில் கடுமையுற்று மாலையில் குறைதல், மாலையில் தொடங்கி நடு இரவில் கடுமையுற்று காலையில் குறைதல், காதடைப்பு, கண் மயங்கி நீர் சொரிந்து சிவத்தல், தூக்கமின்மை, உணவில் வெறுப்பு, சுரம், கழுத்திற்கு மேல் கடும் வேதனை முதலிய குறிகள் காணும். (இது 10 வகைப்படும்)

**தலைவலிக்கு மருந்து** :- (1) நல்லெண்ணெய் - 1, பச்சை மஞ்சள் சாறு - 1/4, ஆதண்டைச் சாறு - 1/4, பசுவின் தயிரின் நீர் - 1/4 படி வீதம் கலந்து, அதில் குறுந்தொட்டி - சுண்டை - வேளை - முள்ளி - கீழாநெல்லி இவற்றின் வேர், கோட்டம், தேவதாரம், சுக்கு, மிளகு வகைக்கு - 2 கழஞ்சு, குக்கில் - 1 கழஞ்சு, இவற்றை அரைத்துக் கலந்து பதமுறக் காய்ச்சி வடித்துத் தலைமுழுகிவர தலைவலிகள் தீரும். (2) மிளகை முலைப்பாலிலரைத்து கொதிப்பித்துப் பற்றிடலாம். (இதற்கு அலைச்சல் நீக்கவும்)

## ★ 65. பல் வலிக்கு மருந்து என்ன?

வாயுக்குற்றம், பற்களைச் சரிவரப் பேணாமை முதலியவற்றால் **பல்வலி** காணுகிறது - இதில், பற்களில் இனிப்பு - புளிப்பு - குளிர்ச்சி-காற்று படுகையில் கூச்சம்-குடைச்சல் - குத்தல்-நோவு காணல், பற்கள் தேய்ந்து அசைந்து தசை

வலுவின்றிச் சரிதல், பாசி படிந்து மணலாய் உதிரல், பல்லி டுக்குகளில் காறை, பற்களில் கிறல், ஈறுகள் வீங்கிப் புண்ணாகி -குருதி சீழ் வடிதல், கிருமி, அதிகப் பற்கள் முளைத்தல், கண் -காது-தலை நோதல் முதலிய குறிகள் காணும். (இது 10 வகைப்படும்)

**பல்வலிக்கு மருந்து** :- கடுக்காய், தான்றிக்காய், மாசிக்காய், சீனிக்காரம், கொடுக்காய்ப்புளி, துருசு, காசுக்கட்டி வகைக்கு - 3 விராகன்; அரத்தூள் - 1 பலம் இவற்றைப் பொடித்து, மாகாணிப்படி எலுமிச்சம்பழச் சாற்றிலிட்டுக் கிண்டி வெய்யிலில் உலர்த்தி, பின் பழச்சாற்றிலேயே நன்கு அரைத்து உலர்த்திப் பொடித்துப் பல்துலக்கி வர பல் நோய்கள் தீரும். (இதற்கு இனிப்பு வகையும், குளிர் பானங்களும் நீக்கவும்)

## ★ 66. புற்றுநோய்க்குரிய மருந்து என்ன?

மேகநோயின் விளைவு, சிலவகை நச்சுத்தன்மை, குருதிக்கேடு, புகையிலை நஞ்சு, கல் - பல் - முள் - எலும்பு முதலியன சதா அழுத்துதல், ஒருவித நுண்கிருமி போன்ற வற்றால் உடலின் சருமத்திலும், உட்புறத் தாதுக்களிலும் முளைக்குருத்துகள் போன்ற கழலை தோன்றி, ஒன்றாகவோ, அல்லது இழையங்கள் அழிந்து கசிந்து பரவி வேரூன்றி பலவாகவோ கண்டு மிக்க துன்பத்தையும், மரணத்தையும் ஏற்படுத்தவல்ல ஒருவகை **கழலைக் கட்டியே புற்று நோய்** எனப்படும், சாதாரணமாக 40 - வயதிற்குமேல் தோன்றக்கூடிய இந்நோய், காணுமிடத்திற்கேற்ப கன்னப்புற்று - இலிங்கப்புற்று - யோனிப்புற்று - ஸ்தனப்புற்று - கருப்பைப்புற்று - குடல்புற்று - ஈரல்புற்று -மூளைப்புற்று - இரத்தப்புற்று எனப் பலவிதமாக அழைக்கப் பெறும். இந்நோய்க்குறிகள் தொடக்கத்தில் வெளித் தெரியாதிருந்து - முற்றிய பின்போ, எதிரிடைக் கோளாறு களினாலோ திடீரென வெளிப்படும். இதில், பற்றும் இடத்திற்கேற்ப கட்டிகள் எழும்புதல், நீடித்த அசீரணமுடன் எடைகுன்றல், உதடு - நாவு - தொண்டை - சருமம் இவற்றில் புண்கள் கண்டு ஆறாதிருத்தல், அடிக்கடியும் - நீடித்தும் மாதவிடாயோ - வெள்ளையோ காணல், குருதியுடன் மலநீர் கழிதல், திடீரென மலச்சிக்கலோ - வயிற்றோட்டமோ கண்டு நீடித்தல், எதையும் விழுங்கவோ - செரிக்கவோ இயலாமை, மச்சம் - மரு இவற்றில் மாறுபாடு காணுதல், குரல் கம்மி சதா இருமுதல், இரத்த சோகையுடன் எடை குறைதல், கடும் நோவு - தினவு - சோர்வு, கவலை; தூக்கமின்மை முதலிய

குறிகள் காணும், இந்நோய் குணமாகி 5-ஆண்டு வரை திரும்பாதிருப்பின் முழுக்குணம் பெற்றதாக அறியலாம்.

**புற்றுநோய்க்கு மருந்து :-** (1) மேகநாதத் தைலம்-சித்தாதி எண்ணெய் - அகஸ்தியர்மெழுகு-கௌசிகர் குழம்பு முதலிய வற்றால் வயிற்றைக் கழிக்கவும். (2) மகா இடிவல்லாதி மெழுகு - சரமாரித்தைலம் - அலரிவேர் குழித்தைலம்- நந்திமெழுகு, இரசகந்தி மெழுகு - முப்பூரப்பதங்கம் - அயவீரச்செந்தூரம் -தாம்பரபற்பம் - கருவங்கச் சுண்ணம் - துருசுபற்பம் - வீரரச பற்பம்-பறங்கிப்படைப் பதங்கம் போன்ற மருந்துகளை முறைப் படித் தொடரவும். (3) புங்கத்தைலம் - விரணசஞ்சீவி எண்ணெய் - துருசுவங்கக்களிம்பு - பூரக்களிம்பு போன்றவற்றை மேலே பூசலாம். (இதற்கு புகை, போகம், புளி, கரப்பான் பொருள் நீக்கி - சத்துணவு கொள்ளவும்.)

## ★ 67. அண்டவாதத்திற்குரிய சிகிச்சை என்ன?

வாயுவானது விகல்பமுற்று அண்டத்தில் உலவி, அங்கு வீக்கமும் வேதனையுமுண்டாக்கி, பின் நாபி நரம்புகளின் வழிச் சென்று ஆண் குறியைச் சார்ந்து, அங்கும் விரைப்பகுதியிலு முள்ள நரம்புகளுக்கு கோளாறு ஏற்படுத்தி வேதனையும், வீக்கமும், பிதுக்கமும் ஏற்படுத்துவதே **அண்டவாதம்** எனப்படும். இதில், வீக்கமின்றிப் பருத்து, சிலசமயம் மிகத் துன்பம் தருவது **குடலண்டம்** எனவும், வாயு விரையிலிறங்கிப் பொருமி வலித்து, மேனோக்கி உடனுள் வாங்கி, நரம்பு புடைத்துக் காண்பது **அண்டவாயு** எனவும்; துர்நீர் சேர்ந்து விரைப்பை பருத்து கடினமாகி வேதனையும் சில சமயம் சுரமும் காய்வது **நீரண்டம்** எனவும்; ஒன்று அல்லது இரு விரையிலும் தசை வளர்ந்து நாளுக்கு நாள் மிகத்துன்பம் தருவது - **சதையண்டம்** எனவும் 4 வகையுண்டு. இவற்றுள் பொதுவாக வேதனை, கல்போல் திரண்டு பிதுங்கல், பசிமந்தம், இடுப்புவலி, தாதுநட்டம் உட்பட சிறுநீரகக் கோளாறுகளும் விளையும்

**அண்டவாதத்திற்கு மருந்து :** (1) சுத்தித்த வாளமும், கடுகு ரோகணியும் சமன் கூட்டி, தேங்காய்ப் பால் விட்டரைத்து, விழுதிற்கு எட்டுப்பங்கு அதே பாலில் கலந்து காய்ச்சி வடித்து, 10 துளிவீதம் தர பேதியாகி வாயு கலையும். (2) பூண்டு, புங்கவிதை, கழற்சிவிதை, இலுப்பைக்கட்டி, காயம், கருஞ்சீரகம், இந்துப்பு, சுக்கு, கடுகு, சித்திரமூலவேர்ப்பட்டை

ஆகியன சமன்கூட்டி; வேலிப்பருத்திச் சாற்றில் இரு சாமமரைத்து கழற்சியளவு மாத்திரைகளாக்கி தினமிரு வேளையும் சுடுநீருடன் உட்கொள்ளவும். (3) இரவில், பப்பாளி இலையை அரைத்த விழுதை விரையில் வைத்துக் கட்டி காலையில் கழுவி விடவும். (4) வித்துரசமெழுகு - இடிவல்லாதி -அயவீரச் செந்தூரம்-மூப்பூரப்பதங்கம் முதலியனவும் பயன் படும். (இதற்கு, வாயுப்பொருள், புளி, புகை, போகம் நீக்கவும்.)

## ★★ 68. காலாணிக்குரிய மருந்து என்ன?

மேகநோயினர்க்குப் பிறத்தல், மிகு புணர்ச்சி, சத்துண வின்மை, அழுகிய மற்றும் கரப்பான் பொருளை அதிகமுண்ணல், அசுத்த நீரைப்பருகல், காலில் செருப்பின்றி கடுவழி நடத்தல், பாதத்தில் கல்லழுத்திக் காய்த்தல், குருதிக்கேடு, முள்ளோ-கல்லோ - பீங்கானோ காலில் குத்தி உட்சென்றதை எடுக்காமல் விட்டு விடுதல், சிலவகை விஷகடி முதலிய காரணங்களினால், மச்சை தாது கெட்டு நொந்து பித்தநீரும் கூடி **காலாணி நோய்** (புற்றுக்கால்) தோன்றுகிறது. இதில், பாதத்திலும், விரல்களின் அடியிலும் தடித்துக் கடினமுற்று முளை கிளம்பி வளர்ந்து வரும். மிக வேதனையுடன் புண்ணாய்நோதல், எதிலாவது இடித்து விட்டால் மயிர்ச்சிலிர்க்குமளவு வலித்தல், புணர்ச்சியிலிச்சை, கிளம்பி வளரும் முளையை அறுக்க அறுக்க வளருதல், மழை பெய்யுமுன் ஒருவித நோவு காணல், பலவீனம், தூக்கம் குன்றல் தாது நட்டம், மலநீர்க்குற்றம் முதலிய பல குறிகள் கண்டு நீண்ட நாளைக்கு நீடித்திருக்கும்.

**காலாணிக்கு மருந்து :-** (1) வசம்பு, மருதோன்றி, மஞ்சள், துத்தம் இவை 10-கிராம் வீதம் தூளாக்கி, 100 - மி.லி. விளக்கெண்ணெயிலிட்டுக் காய்ச்சி வடித்து காலாணியில் பூசிவரக் குணமடையும் (இருப்பினும் உள் மருந்து கொடுக்காமல் முழுப் பயன் கிட்டாது). (2) புற்றுப்பதங்கம் - இரசகந்தி மெழுகு - இடிவல்லாதி மெழுகு - அயவீரச் செந்தூரம் ஆகியன உட்கொள்ளலாம். (இதற்கு சத்துணவு கொண்டு, புகையை நீக்கவேண்டும்.)

## ★ 69. யானைக் காலுக்குரிய சிகிச்சை என்ன?

நெய்தல் நிலவாசம், மலநீர் ஊறிய மற்றும் கபக்குற்றமிக்க பொருட்களையுண்ணல், அதீதப்புணர்ச்சி, ஒருவித ஒட்டுண்ணியின் (பைலேரியல்) விஷம், தீவினை புரிதல்

இவற்றால் முலை, யோனி, புயம், விரை, கைகால்கள் இவற்றிலும் - குறிப்பாக தொடை நரம்புகளில் கபநீர் நிரம்பி. அவ்வமயம் வாத பித்தமும் பாதத்தில் பரவி, அங்கு சிறிது சிறிதாக துர் மாமிசத்தைச் சேர்ப்பித்து, புற்றுப் போல் பருக்கச் செய்து நிலைத்து விடுவதே **யானைக்கால்** (பாதவன்மீகம் - சிலீபத ரோகம்) எனப்படும். இதில், பாதங்கள் நாளுக்கு நாள் வீங்கி வளரும். துர்மாமிசம் கிழங்கு முளைகளைப் போலும், வெள்ளை-மஞ்சள்-கறுப்பு நிறங்களில் பளபளப் புடனும் - குளிர்ச்சியாயுமிருத்தல், அரோசகம், பிதற்றல், சுரம், மலநீர்க் கட்டு, வாந்தி, எரிச்சல் போன்ற குறிகளுடனும் காணும். இந்நோய் கண்டு ஒரு ஆண்டுவரை முதிராதிருப்பின் சாத்தியமென்றும்-பாதத்தின் இருபுறமும் பிதுங்கி தூண், புற்று, ஆள்வள்ளிக்கிழங்கு, யானையின் கால் போலாகி விட்டால் அசாத்தியம் எனவும் கூறப்படும் (இது மூவகைப்படும்)

**யானைக்காலுக்கு மருந்து : (1)** வாதநாச - மேகநாத - சித்தாதி - கழற்சி முதலிய தைலங்களினால் மாதமிரு முறை வயிற்றைக் கழிக்கவேண்டும். **(2)** துத்தம், குங்கிலியம், பெருங்காயம், சாம்பிராணி, சவுக்காரம், மைசாட்சி, கரியபோளம், அபினி இவை சமன்கூட்டி, மலைக்கற்றாழையை வாட்டிப் பிழிந்த சாறுவிட்டு மை போலரைத்து, அதே சாற்றில் கரைத்து குழம்பு பதமாகக் காய்ச்சி, இளஞ்சூட்டுடன் காலில் பற்றுப்போட்டு வரவும். **(3)** காளமேக நாராயணச் செந்தூரம் - மேக சிந்தாமணி மெழுகு - இடிவல்லாதி - இரசச்செந்தூரம் முதலியன கொள்ளலாம். (இதற்கு வாயு, கரப்பான் பொருளை நீக்கவும்.)

### ★★ 70. இளம்பிள்ளை வாதம் என்றால் என்ன?

ஐந்து வயதிற்குட்பட்ட குழந்தைகளுக்கு வாதநோய் பற்றி கைகால் இழக்கச் செய்வதே **இளம்பிள்ளை வாதம்** எனப்படும். இது, வாதகபக்குற்றத்தில் ஜனித்தல்-முலையுண்ணும் பருவத்தில் தாய் வாதக்குற்றமிக்க செயல் முறையில் ஈடுபடுதல் - வாயுவும், குளிர்ச்சியும் ஊட்டவல்ல உணவுகளை அதிகமுண்ணல் - சத்துணவு இன்றி நோய் எதிர்ப்புச்சக்தி குன்றல்-தலை முதலிய வர்மத்தானத்தில் அடிபடல் - திடீரெனப் பயந்து அதிர்ச்சியுறல் போன்ற காரணங்களால் ஏற்படும்.இதில் முதலில் கடும் சுரம் கண்டு, முக்குற்ற மீறலால் சன்னி தோன்றி, பின் வாதம் வெகுண்டு சிறுமூளை, முதுகுத்தண்டுப் பகுதிப் பரிச நரம்புகளைத் தாக்கி, அதனால் ஒரு பக்கக் கையோ,

காலோ-இரண்டுமோ செயலிழந்துவிடும். மேலும், வாய் கோணல், பேசவியலாது நாவுப்பிடிப்பு, மதிக்குழப்பம், உடலும் பாதிக்கப்பட்ட பகுதியும் குளிர்ந்தும்-உணர்வின்றியும் காணல், உடல்மெலிவு, கைகால் சூம்பி வற்றி சிறுத்துவிடுதல், நிற்கவியலாமை நடக்கவொட்டாமை முதலிய குறிகளுடன்: உடனடிச் சிகிச்சை செய்யாவிடில் நிரந்தர முடமாகி விடுதலும் ஏற்படும்,

**இளம்பிள்ளைவாதத்திற்கு மருந்து :** இதற்கு, வாத நோய் சிகிச்சையில் கூறியுள்ள மருந்து யாவும் பொருந்தும், (2) மகாவீர மெழுகு - காடிக்காரச் செந்தூரம்-கருப்பு விஷ்ணு சக்கரம் - குந்துருக்கத்தைலம் முதலியன சிறப்பான குணம் தரும். (இதற்கு வாயு குளர்ச்சி தரும் பொருளை நீக்கவும்)

## ★ 71. வாய் பிடித்தல் என்றால் என்ன?

வெய்யிலில் காய்ந்து வறண்ட பூமியில் திடிரென மழை பொழிவதால் பூமியில் அடங்கி நின்ற வெப்பம் ஆவியாய் எழுவதையும்-ஈரத்தில் குளிர்ந்த நிலத்தில் திடீரென் கடும் வெய்யில் படுவதால் ஈரத்தில் மறைந்துநின்ற வெப்பம் ஆவியாய் கிளம்பி வெளியேறுவதையும் அறிவோம். இங்ஙனமே, ஒரு நோயாளிக்கு பித்தக் குற்றத்தினால் மிகு வெப்பமும்; வாதகபக் குற்றத்தினால் மிகு சீதளமும் உடலில் பற்றி அதனால் பிணிகள் தோன்றியிருக்கும் பொழுது; முறையே அக்குற்றங்களுக்கு எதிரிடைக் குணமுடைய குளர்ச்சியூட்டும் குங்கிலியம் சிலாசத்து போன்ற மருந்துகளையோ - வெப்ப வீரியமுள்ள ரசபாடாணம் போன்ற மருந்துகளையோ; கொடுக்க நேரிடுகையில், அதனதன் செயல்களைப் புரியத் தொடங்கியதும் உடலில் நிலைத்த மிகு வெப்பம் ஆவியாய் வெளிக் கிளம்பத் தொடங்குகிறது. தீடீரென வெளிக்கிளம்பும் இந்த வெப்பத்தினால் குடலிலிருந்து வெந்து புண்ணாய் நொந்து, அதன் தொடர்ச்சியாக தொண்டை அழற்சி வாய்வேக்காடு, ஈறுகளில் புண், நாவில் கொப்புளங்கள் முதலியன கண்டு காரம்பட வொட்டாமையும் எதனையும் விழுங்கவியலாமையும் ஏற்படும். இதோடு, நாவறட்சி, கைகாலசதி; மூட்டுகளில் வலி, சோர்வு, பயம், கவலை, சொள்ளு நீர்வடிதல், சுரக்குறிகள் காணும். எனினும், இது கண்டு சிறிதும் அச்சம் கொள்ளத் தேவையில்லை. இக்குறிகள், மருந்து உடலில் சார்ந்து செயலாற்றத் தொடங்கி விட்டது என்பதை உணர்த்துகிறதே யொழிய இதனால், நவீன மருந்துகளைப் போன்ற உடனடி

ஆபத்தோ, மரண பயமோ இல்லை யென உணரவும். இந்நிலை விரைவில் மாறிவிடும்.

**வாய்பிடித்தலுக்கு மருந்து :** (1) அவுரிவேர், அறுகம்புல் சிறுகீரை, மிளகு, இளநீர் இவை கூட்டிக் குடிநீராக்கி தினம் மும் முறை கொடுக்கவும் (2) தெக்கம் பாக்கு, சூாசுக்கட்டி, வேலம்பட்டை, நாவல்பட்டை போன்ற துவர்ப்புக் கியாழத்தால் வாய் கொப்புளிக்கச் செய்யலாம் (3) பால், தயிர், வெண்ணெய், நெய், முட்டை வெண்கரு, அகத்திக்கீரை, வாழைத்தண்டு முதலிய குளிர்ச்சியூட்டும் உணவு வகைகளைக் கொடுக்கவும், (4) குமரிச் சாற்றில் ஆறு புடமிட்ட சீன பற்பத்தை வெண்ணையுடன் தரவும், (உடலில் மருந்து வெப்பம் குறைந்தபின் அதே சிகிச்சையைத் தொடரலாம்.)

## ★ 72. கருத்தடைக்குரிய விளக்கம் என்ன?

ஒரு தம்பதியருக்கு, நல்ல உடல் நலமுடன், மக்கட் பேறடையும் வாய்ப்பும் இருந்தாலும் கூட - அதிகக் குழந்தைகளைத் தவிர்க்கும் பொருட்டோ, வறுமையின் காரணமாகவோ, விபச்சாரத்திற்கு ஏதுவாகவோ அல்லது வேறு காரணங்களை முன்னிட்டோ - சில விதிமுறைகளின் படி தனக்குத்தானே குழந்தை பெறும் சக்தியை இழந்து விடுவதே **கருத்தடை செய்தல்** எனப்படும் இதற்கு சுயகட்டுப்பாடு போன்ற வழிமுறைகளும், அறுவைச் சிகிச்சை முறைகளும் பலவித மருந்து வகைகளும் கூறப்பட்டுள்ளன. இதில் குறிப்பாக நாத விந்து உயிரணுக்களின் உற்பத்தியைத் தடுக்கவோ, அல்லது அவற்றை ஒருங்கிணையவிடாது தடுக்கவோ, வல்லதான் மருந்துகளைக் கண்டறிய தீவிர ஆய்வு செய்து வருகின்றனர். இங்கு அவ்வகை மருந்துகளில் ஒன்று கூறப்பட்டுள்ளது.

**கருத்தடை மருந்து :** நன்கு முதிர்ந்த பூவரசின் அடிமரப் படையை எடுத்து, புறணியும் உள் நாரும் நீக்கி, வெய்யிலில் உலாத்திப் பொடிக்கவும். காசுக்கட்டியையும், வறுத்த இந்துப் புவையும் தூளாக்கவும். பின்,இவை மூன்றும் சமன்கூட்டி, 5-மணி நேரம் நன்கு அரைத்துப் பாத்திரப்படுத்தவும் இம்மருந்தில் 2-வெருகடியளவில், 1/2 ஆழாக்குப்பசுவின் பாலுடன் பெண்ணின் மாத விலக்கின் முதல் நாள் முதல்5-நாளைக்குத் தினமிரு வேளையும் உட்கொள்ளவும். (மருந்துமுடியும் வரையில் இலகு உணவு கொண்டு, கரப்பான் பொருளும், குளியலும் நீக்கி, 6-ம் நாள் சுடுநீரில் குளித்து 7-ம் நாளில் எண்ணையிட்டுத் தலைமுழுகவும்) இதனால்

மாதவிடாய்த் தடையின்றியும், மணவாழ்வின் இன்பம் குறையாமலும் மருந்து உட்கொண்ட பெண் மலடாகிவிடுவாள்.

### ★ 73. தீச்சுட்ட புண்ணுக்குரிய மருந்து என்ன?

ஒருபங்கு நெய்யில். ½ பங்கு குங்கிலியத் தூளையிட்டுக் காய்ச்சி, உருகிக் கரைந்த குங்கிலியத்தை வேறு பாத்திரத்திலுள்ள நீரிலிட்டு வடித்து மத்தினால் கடைய வேண்டும். இப்படி நீரை மாற்றி மாற்றி சில தடவை கடைய **குங்கிலிய வெண்ணெய்** மேலே மிதக்கும். இதனை எடுத்துப் பூசிவர நெருப்பு - கொதி நெய்யினால் சுட்ட புண்களின் எரிச்சல் நீங்கும். கொப்புளம் கிளம்பாது. புண் ஏற்படினும் விரைவில் ஆறிவிடும்.

### ★ 74. கிருமி நோய்கள் என்றால் என்ன?

பித்த-கபக் குற்றங்களினாலும், மேக நோயினாலும், பயறு - மாவு - கிழங்கு வகைகளினாலும், அசுத்த நீர் - அழுகிய உணவுகளினாலும், புண்புரைகள் அழுகுவதாலும் உடலின் உள்ளுறுப்புப் பகுதிகளிலும், நீர்-மலம்-சளி-குருதி இவற்றிலும் பலவகை அளவிலும் வடிவிலுமான **நுண்கிருமிகள்** தோன்றும். இவற்றால் தாதுக்கள் கேடுற்று அதனால் சோகை, காமாலை, யானைக்கால், புற்று, பிரமை, உடலிளைப்பு, வலிப்பு, சுரம், ஈரல்வலி, வாந்தி, பேதி, பவுத்திரம், மூலம், மலடு, செவிநோய், பல்வலி, வயிற்று வலி, படை, சொறி போன்ற பல கிருமிப் பிணிகள் பற்றும். நிற்க, உடலில் தோன்றும் நுண்புழுக்களுள் முறையே, பெரும்பூநாகக்கிருமி-நீர்பாம்புக்கிருமி-நெல்முளைக் கிருமி- சன்ன நீளக்கிருமி - அணுக்கிருமி-வெண்கிருமி-அந்தர் மலக்கிருமி - வட்டக்கிருமி - வால்கிருமி - காவில்லாக்கிருமி - சூக்குமக்கிருமி - தோன்றாக்கிருமி-நீர்க்கிருமி-மஞ்சள்கிருமி -இரத்தக்கிருமி-கருங்கிருமி-மண்டைக்கிருமி- சுரோணிதக்கிருமி - சூரைக்கிருமி- துலக்கிருமி - கணக்கிருமி - தாதுக்கிருமி - வாய்க்கிருமி - சூதகக்கிருமி-புனக்கிருமி-சூலைக்கிருமி சுக்கிலக்கிருமி - வயிற்றுக்கிருமி - குடல்கிருமி - ஈரல்கிருமி - தட்டைக்கிருமி - நாடாக்கிருமி-செங்கிருமி எனப் பலவகைப் படும் (இவற்றை ஒழிக்க, இதன் தன்மையும், வெளித் தோன்றும் நோய்க்குறியும் அறிந்து உரிய மருந்துகளைத் தர வேண்டும்.)

### ★ 75. எலும்புருக்கி நோய் என்றால் என்ன?

எலும்போ, அதன் குருத்தோ - முருந்தோ பாதிக்கப்

படுவதால் கட்டுவிட்டு மெலிந்து, வறண்டு, உளுத்து உதிர்ந்தோ, முறிந்தோ அல்லது உள்ளிருக்கும் சத்து (மச்சை) உருகி வறண்டு அழிந்தோ உடலில் பல பிணிகள் பற்றி உடலை இளைக்கச் செய்வதே **எலும்புருக்கி நோய்** எனப்படும். எனினும், **குழந்தைகளுக்கு** ஊட்டக் குறைவு, புழுதி, சுண்ணக்காரை, மண், சாம்பல் இவற்றை உண்ணல்-குடற்பூச்சி; கிரகதோடம்; கணச் சூட்டினாலான குடல் அல்லது மூளைக் கோளாறு, வயிற்றுப் போக்கு, கண்டமாலை, சயம், விடாசுரம், நிணமேகம் ஆகியன முற்றல்; அறை வீட்டில் பிறவிக் குற்றம் போன்றவற்றினாலும் மற்றும், **பெரியவர்களுக்கு** சயம், காசம், மதுமேகம், நிணமேகம், நச்சுசுரம், சீதோஷ்ணம், சுகாதாரக் குறைவு, நெருக்கடி, கர்ப்பமேகம், கிராணி, இருதய நோய், ஈரல் கோளாறு, வாதம், முள்ளந்தண்டு நோய், விந்து நட்டம் முதலிய காரணங்களாலும் சதைவற்றி உடல் மெலிந்து, எலும்பு மோதுகட்டி வெளித் தெரிய இளைத்துக் காண்பதையும் எலும்புருக்கி என்றே கூறும் வழக்கமுண்டு. (முதலில் கூறியுள்ளதாயினும்-அல்லது, அடுத்துக் கூறப்பட்டுள்ள பிணிகளினாலா யினும் உரியகாரணம் அறிந்து அதனதற்குரிய மருந்துகளைக் கொடுத்தால் போதும்.)

**★ 76. கர்ம நோய்கள் என்பதற்குரிய விளக்கம் என்ன?**

சித்தர்கள் கூறிய **கர்மகாண்டம்** எனும் நூல் விளக்கப்படி: **கர்மானுசாரம்** என்பது வேறு பிறவியின் தீச்செயலுக்குரிய தண்டனையாக சூக்கும் உடலுக்கு ஏற்படும் **கெடுதி அல்லது நோய்** ஆகும். இத்தகைய பூர்வ சன்ம கரும காரணத்தினாலான பிணிகளுள் பல இயற்கையாகவும், சில தெய்வக்குற்றத்தினாலும் கண்டு - கிரகத் தொடர்பான கெடுதி தீரும் வரை அல்லது செய்வினைப் பயனுக்குரிய பிராயச்சித்தம் ஏற்படும் வரை நீடித்தே தீரும். மேலும் காலத்தால் அறியவொட்டாத சில காரணங்களினால் பெற்றோருக்கு சில கோளாறு ஏற்பட்டு, அவ்வமயம் பிறக்கும் அவர்களது குழந்தைகளையும் பற்றி பரம்பரையாகத் தொடருவது முண்டு, எனவே காரணம் அறியவியலாத நோய்கள் கருவிலேயே ஏற்பட்ட தோடங்களின் விளைவு என அறியலாம். இப்படி கருவிலேயே தொடரும் பிணிகளுக்கு, நடை முறையில் கூறப்படும் முக்குற்றம், தாதுக் கோளாறுகள் போன்ற வெளிக் காரணங்கள் பொருந்தாது இத்தகைய நோய்கள், பிறந்ததுமோ - சிறிது சிறிதாகவோ - திடீரென்றோ - நாளாவட்டத்திலோ-உடல் தளர்ந்தபோதோ முன்னறிவிப் பின்றியோ- பல தலை முறைகளாகவோ தொடர வாய்ப்புண்டு. இது தோன்ற வெளிக்காரணங்களாக

அபாயம்-பாடாணம்-நஞ்சுக்கடி-மனோவசியம்-தேவதை அல்லது பேய் பிசாசுக்கோளாறுகள்-மந்திரம் -விபத்து-காயம், விரணம், வெட்டு, நீரில் மூழ்குதல், நெருப்பு, வாயுக் குற்றம் முதலியவற்றைக் கூறலாம். எனவே, கர்ம நோய்களுக்குரிய பரிகாரத்தினாலன்றி அவை சிகிச்சைக்கு வசப்படாதென அறியலாம்.

## ★ 77. சலக் கோர்வை என்றால் என்ன?

கபக் குற்றம் மிக்க அதி சீதளப்பொருளை மிகுதியாயுண்ணல் - வெயில் படாத, விளக்கெண்ணெய் போல் தடித்த சுனை நீரை அருந்தல், சாக்கடை நீரில் பயிராகும் காய்கனி, கீரை வகைகளை உண்ணல், நீரடைப்பு நோய்- -சிரசில் மேக நீர் தாக்குதல் முதலிய பல காரணங்களால், உடலுறுப்புகளில் நீர் திரண்டு, தளதளப்புடனும், நோவுடனும் காணக்கூடிய பிணியே சலக்கோர்வை எனப்படும். இவை குருதியில் நீர்மிகுதி - அடிவயிறு நீர் திரட்சி - பீஜத்தில் நீர்சேர்தல் - கபாலத்தில் நீர்கோர்த்தல் - பித்தப்பையில் நீர் மிகுதி- மார்பில் நீர் தங்கல் - இருதயத் தாமரையில் குருதிநீர் சேர்தல் - கருக்குழியில் நீர்க் கோர்வை - கண்ணில் நீர்சேர்தல் - சதை அல்லது தோல் பகுதியில் நீர் கோர்த்தல்-குண்டிக்காயில் சிறுநீர் தங்கல்-நுரையீரலில் நீர் சேர்தல் - காதில் நீர் கோர்த்தல் -நாதாசயப் பாண்டு -உடல் முத்றும் நீர் கோர்த்தல் எனப் பலவகைப்படும். இவற்றின் தன்மையுணர்ந்து தனித்தனி சிகிச்சையினை செய்தல் வேண்டும் (பொதுமருந்து:- சலமஞ்சரி)

## ★ 78. குருட்டுத்தனத்தின் வகை யாவை?

ஒரு பொருளையோ-நிறத்தையோ உரிய அளவில் காணவியலாதவாறு கண் பார்வை முழுமையாகவோ, அரை குறையாகவோ குன்றி விடுவதே குருட்டுத்தனம் எனப்படும். இது பிறவியினாலோ, மேகநீரினாலோ, வர்ம நரம்புகளின் தாக்குதலினாலோ, மாயையினாலோ, பித்தத்தினாலோ ஏற்படலாம். பொதுவாக, குருட்டுத்தனம் என்பது, பிறவிக் குருடு - இராக்குருடு-அரைக்குருடு-பகல்குருடு-முழுக்குருடு-நிறக்குருடு-எழுத்துக்குருடு-மனக்குருடு-வஸ்துக்குருடு-சோதிக்குருடு - ஆத்மக்குருடு - மின்னல்குருடு - அதிர்ச்சிக்குருடு - அம்மைக்குருடு - அந்திமாலைக்குருடு - மயக்குக்குருடு- கிழக்குருடு - காமக்குருடு - மாயக்குருடு - ஆணவக்குருடு- பேய்க்குருடு - கபாலக்குருடு - மோகக்குருடு - ஒற்றைக்குருடு-

நோய்க்குருடு - வெண்குருடு - நீர்க்குருடு-வெறிக்குருடு எனப் பலவகைப்படும். (இதனை சாத்திய நிலையறிந்து சிகிச்சை செய்தால் பயனுண்டு)

## ★ 79. ஊமைத்தன்மை ஏற்படுவது ஏன்?

பொதுவாக, வாதம் மீறி கபத்துடன் கலந்து நரம்புப் பகுதியினை அனுசரிப்பதால், உதடு - நாவு - குரல் வளையின் ஒலித்தந்தி ஆகியன தாக்குண்டு, பேசுவதற்கேற்ப செயல் படாமையினால், வாய் பேசாதிருத்தலே **ஊமைத்தன்மை** எனப்படும். இது பல காரணங்களினால் ஏற்படும். குறிப்பாக, கருவிலேயே ஏற்படும் மூளைக் கோளாறு -பிரசவத்தின் போது குழந்தையின் தலை மிக அமுங்கி மூளை காயமுறுதல் - பரம்பரைக் கர்மவினை-செவிட்டுத்தனம்-பெண்கள் கர்ப்பிணி யான சமயத்திலோ, பிரசவத்திலோ ஏற்பட்ட தவறு-தலையில் அடிபட்டு மூளை அதிர்ச்சி ஏற்படல் - சன்னி, பாரிசவாயு இவற்றால் மூளை தாக்குறுதல்-உடலினுள்ளுறுப்புகளோ, வர்மத் தானங்களோ காயமுறுதல் - பேசத் தெரிந்தும் குரலுறுப்புகளுக் கேற்பட்ட நோய்கள்- மிகப் பயந்து அதிருதல் - பொறிபுலன் தாக்குண்டல் முதலிய பல காரணங்களால் ஊமைத்தனம் ஏற்படும். (இவற்றுள் சிலவற்றைத் தவிர, மற்றவை தக்க சிகிச்சையில் குணமடையும்.)

## ★ 80. உடலில் நடுக்கமும்-வீக்கமும் ஏற்படுவது ஏன்?

உடலில், **(1) நடுக்கம் (உதறல்),** குளிர் - பயம் - துக்கம் - சினம் - அபினி முதலிய போதைப் பொருள் - காயம் - பாடாணவீறு - நடுக்குவாதம் - தசைச் சுருக்கம் - சூதகவாயு - இரசவேகம் அல்லது முறிவு - உலோக நஞ்சு - கைகால் முடங்கியிருக்கையில் அசைத்தல் - விஷகடி - சன்னி - சுரம் - பிரசவவேதனை - அதிர்ச்சி முதலிய பல காரணங்களினால் ஏற்படும். **(2) வீக்கம் (ஊதல்),** கர்ப்பதொந்தம் - வாயுக் குற்றத்தால் உடல் மெலிதல் - பிறந்த சிசுவிற்கு உடல் சில் விட்டு நிறம் குலைதல் - இரத்தம் நீர்த்தல் - கடும் பத்தியத்தில் உப்பை சேர்த்தல் - வாதநீர் தங்கல் - விஷகடி - மகோதரம் - பாண்டு - சோகை - காமாலை - அடிபடுதல் - சேங்கொட்டை, தில்லைப்பால், இரசம் முதலிய மருந்துகளின் வேகம் - நீரில் மூழ்கி இறத்தல் முதலிய பல காரணங்களினால் ஏற்படும். (மேற்கூறிய காரணங்களைக் கண்டறிந்து சிகிச்சை செய்ய வேண்டும்)

## ★★ 81. மாரடைப்பு ஏற்படுவது ஏன்?

இருத்துரோகம், தமரகவாயு, தமர்வாதம், இருதயரோகம், இருதயவாயு, நெஞ்சடைப்பு, உருத்திரரோகம், நெஞ்சுவலி என்றெல்லாம் கூறப்படுவதும்; கொள்ளை நோய்போல் நொடிக்குள் ஆளைக் கொன்று விடுவதுமாகிய கொடிய நோயே-**மாரடைப்பு** எனப்படும். அழித்தல் கடவுளாகிய **உருத்திரனின்** உறைவிடமாகிய **அனாகதம்** என்ற மார்புப் பகுதியில் இந்நோய் வருவதால், இதற்கு **உருத்திரவாதம் (வாயு)** என்ற சிறப்புப் பெயருமுண்டு, இது, மூளைக்கு மிகுதியாக வேலை தருதல் - மிகு கவலை - அதிர்ச்சி - நீரிழிவு - கீல்வாதம் - உடலுழைப்பின்மை - நரம்புச்சூலை இரைப்பிருமல் - கொழுப்பு, வாயுப் பண்டங்களை அதிக முன்னல் - செரியாமை, இருதய பலவீனம் - மார்பில் பலத்த அடிவிழுதல் - நிணநீர்கெட்டு இருதயத்தில் தங்குதல் - தமரகப்பகுதியில் கொழுப்புப் படிதல் - மது - புகையிலை முதலியவற்றால் ஏற்படும். இதில், தோடமீறலினால், குறிப்பாக **வாயு சினமுறுவதால்** - இருதயத்தை நெருக்கி, தமரகப் பகுதி நரம்புகளில் தாங்கவியலாத கொடுமையானவலி - குத்தல், மூச்சுவிட முடியாமல் திணறல், வியர்வை, மயக்கம், இளைப்பு, பொறிபுலன் குன்றல், நெஞ்சடைப்பு இவை கண்டு உடனே கொல்லும். இது, பொதுவாக கொழுப்புச் சத்து மிகுந்த, 40 - வயதிற்கு மேற்பட்ட வயதினற்கு - குறிப்பாக, தீவிர உடலுழைப்பு, மலையேற்றம், இரவில் வயிறு முட்ட உண்ணல் இவற்றுக்குப்பிறகு **முதன் முறையாக** தோன்றும். இதனை விட அடுத்தடுத்து வருவதில்தான் ஆபத்து அதிகம். (இதற்கு வாயுவுக்குரிய மருந்துகளைத்தரலாம். கட்டுப்பாடும், அமைதிகாத்தலும் முக்கியம். நித்திய கல்யாணிச்செடி பயன்தரும்)

## ★ 82. நெஞ்சுவலி ஏற்படுவது ஏன்?

பொதுவாக, அன்னரசம் கேடுறுவதால், வாயு சினந்து நெஞ்சில் பித்தகபமுடன் சேர்ந்து, மூச்சுவிட முடியாமல் குத்தலுடன் துன்புறுத்தக்கூடிய மார்புவலியே - **நெஞ்சுவலி (இருதய ரோகம்)** எனப்படும். இது, உண்டவை செரிக்கு முன்; சூடான, கசப்பான, துவர்ப்பான அல்லது ஒவ்வாதனவற்றை உண்ணல் - மலநீரை அடக்குதல் - மனக்கிலேசம்-கடும் உழைப்பு-மார்பில் அடியிடிபடல் - கடும் இருமல் முதலிய கபப்பிணி - சுவாசத்தடை முதலியவற்றால்

ஏற்படும். இதில், இருதயத்திலும் அதன் பகுதிகளிலும் வலியும்-ஒழுங்கற்ற இதயத் துடிப்பும், சில சமயம் கூச்ச உணர்வும் காணும். கண்களில் வீக்கம். சோர்வு, மயக்கம், திகைப்பு, உடல் முற்றும் உணர்விழத்தல், வாய்குமட்டல் இவைகாணும். இத்தகைய-உணவு பேதம், பித்தக்கோளாறு, வாயுத் தொல்லை, நெஞ்சில் பலத்த அடிபடல் இவற்றால் ஏற்படும் நெஞ்சு வலிக்கும், **வேறு வகை இருதய நோய்களுக்கும்** தொடர்பில்லை. இதுபோல், நுரையீரல் நோயையும் தவறுதலாக இருதயப்பிணி எனக் கூறுவது முண்டு. (நெஞ்சு வலியின் காரணமறிந்து உள் - வெளி மருந்துகளைப் பயன் படுத்தலாம்)

## ★ 83. பின்னிசிவு - தனுர்வாதக்குறிகள் யாவை?

உடலை வில்போல் வளைக்கும் ஒருவித வாதவலிப்பை **தனுத்தம்பவாதம்** அல்லது இசிவு எனப்படும். வாயுவினால் உடலை முன்புறம் வளைப்பது அந்தராயாமம் அல்லது **முன்னிசிவு** எனவும் - பின்புறம் வளைப்பது பகிராயாமம் அல்லது **பின்னிசிவு** எனவும் கூறப்படும். இரண்டின் குறிகளும் ஒன்றேயாகும். இயற்கையாக உடல் பின்புறம் வளையும்போது - கடும் சினமுற்றுள்ள வாயுவின் சீற்றத்தால்-பிட்டத்திற்கு குறுக்கேயுள்ள தசைநார்களையும், நரம்புகளையும் பாதிப்ப தால், பிகுவுற்ற தசையை விறைக்கச் செய்து இசிவு அல்லது இழுத்துப்பிடித்தலாகும். அவ்வமயம், மார்பு, இடுப்பு, தொடைகளில் கொடிய வலிகாணும். மேலும், **பின்னிசிவில்** - உடல், தலை, குதிகால்கள் பின்புறம் வளைந்தும்; மார்பு உயர்ந்து, கழுத்து இறுகியும்; முகமும், பல்லும் நிறம் மாறியும்; மலநீர் கட்டுண்டு, தாழ்வாய் பிடிப்பதுடன்; வேறு துணைக்குறிகளையும் காட்டும். இது, பெண்களுக்கு பிரசவத்திலும் - பின்னரும் கண்டு அசாத்தியமாகும். இதுவே, பின்னர் தனுர்வாதமாக மாறும். மனக்கட்டுப்பாட்டிலுள்ள சில முக்கிய சதைகளுக்கு காணும் இசிவே **தனுர்வாதம்** எனப்படும். இதில் உடல் அடிக்கடி வில்போல் வளையும். மிக்க வியர்வை, நாக்கும் பல்லும் கிட்டல், மேல் மூச்சு, திணறல், நோவு முதலியன காணும். (இவற்றுக்கு, வாதப் பிணிகளுக்குரிய வீரியமிக்க உள்-வெளி மருந்துகளைத்தரலாம்)

## ★ 84. அபிசார - அபிசங்க சுரம் என்றால் என்ன?

மாந்திரீகத்தின் அடிப்படையில் வருவதே - **அபிசாரசுரம்**

எனப்படும். **சித்தர் நூலின்படி** அட்ட கருமங்களில் ஒன்றாகிய மாரண மந்திரத்தை முறைப்படி செபித்து அதன்மூலம் ஒருவனுக்கு சுரம் விளைவிப்பதாகும். இதனால் சன்னிபாத சுரத்திற்குரிய (டைபாய்டு) குறிகளுடன், உடல் முற்றும் கொப்புளங்களும் தோன்றி வருத்தும். **ஆரியர் கொள்கைப்படி** மந்திரம், செபம், ஓமம் முதலியவற்றினாலும் - **அதர்வண வேதத்தில்** கூறியுள்ள மாரண மந்திரங்களைக் கொண்டும், ஒருவன் பெயரைச் சொல்லிச் செய்வதினால் மேற்படி சுரம் வரும். இதனைக் குணப்படுத்த **மணி–மந்திரம்– மருந்து** இவை மூன்றும் தேவைப்படும். **(2) அபிசங்க சுரம்** (இடியோபதி) என்பது பூதாவேசம், மருந்து, நஞ்சு, அச்சம், சினம், துக்கம், காமம் ஆகிய காரணங்களால் ஏற்படும் கிளர்ச்சியினால் காணும். இச்சுரம் நீங்க, நோயாளியை - ஒரு அழகிய இளம் பெண்ணை விட்டுக் கட்டித்தழுவுமாறு செய்வதுமுண்டு.

### ★★ 85. மூளைக்காய்ச்சல் என்றால் என்ன?

உயிரைப் பறிக்கக் கூடிய ஒருவகை மரண சன்னியே - **மூளைக்காய்ச்சல்** எனப்படும். பொதுவாகவே, சுரத்தினால் சகல தாதுக்களும் பாதிப்படையும். மூளைசுரமோ உடலியக்கங்களுக்கு பெரிதும் ஆதாரமாகவுள்ள மூளையையே தாக்குவதோடு - கடுமையான சுரநோய்க் குறிகளையும் உடையதால் இதனை **அசாத்திய நோயாகவே** கொள்வதுண்டு. இதில் சில வகையுண்டு. அவை (1) **பொக்க நேத்திரசன்னி** - இதில், உடல் மிகவும் காயும். விக்கல், தாகம், மயக்கம், காதடைப்பு, களைப்பு, பிதற்றல், கண்கள் வீங்கி நீர் சொரிதல் இவை கண்டு 5-நாளில் கொல்லும். மேலும், இது 10-வித குணங்களையுடையதாகும். அவை, ஈரமான திரவம் - கனமான நெருக்கம் - குழகுழப்பான நைப்பு - ஏற்கத்தக்க முரட்டுத்தனம் - விரும்பக்கூடிய மணம் - துர்நாற்றமுள்ள, வெறுப்பான குமட்டல் - குற்றங்களின் தன்மைக்கேற்ற மலம் - மயங்கும் பலவீனம் - உறுப்பு யாவிலும் ஊடுருவல் - மயிரணுக்குழாயிலும் நுண்மையாய்ப் புகுதல் ஆகியனவாகும். (இதற்கு; சன்னிசுரத்திற்குரிய மருந்துகளை - நிலவேம்பு, பற்பாடகம், பாதிரிவேர், துளசி இவற்றின் குடிநீர்களில் தர குணமாகும்.)

### ★★ 86. முறை சுரம் என்றால் என்ன?

காரிரத்தக் குழாயிலுள்ள குருதிக்கு துர்மணக்கேடு

உண்டாவதால் ஏற்பட்டுத்தடுத்து, 48-மணி நேரத்திற்குப் பின் வருவதே - **முறைசுரம்** எனப்படும். இது, முக்கியமாக மூவகைப்படும். அவை, (1)**தின (ஏகாயி) சுரம்** - இது, நாள்தோறும் வந்து செல்லும். (2) **மூன்றாம் முறை (திரியாகிக) சுரம்** - இது, இடையிடையே ஒருநாள் எவ்விதக் கோளாறுமின்றி விட்டுவிட்டு; ஒவ்வொரு மூன்றாம் நாளும், சந்திரோதயத்திற்கு முன்பாக வந்து செல்லும். (3) **நாலாம் முறை (சாதுர்க்கிக) சுரம்** - இது, இடையில் இரண்டுநாள் விட்டுவிட்டு, ஒவ்வொரு நான்காம் நாளும் வந்து செல்லும். இவ்வகை சுரம் ஆண்டிற்கொருமுறை வருவதுமுண்டு. நிற்க, **முறைக்காய்ச்சலின்** போது, குருதிக் குறைவினால் ஈரல்களின் பாதிப்பு, மண்ணீரல் வீக்கம், சோகை இவையும் ஏற்படலாம். மேலும், பலவீனம், சோர்வு, அமைதியின்மை, வயிறு வலுவிழத்தல், இடுப்பு - முதுகு - கால்களில் வலி அல்லது கிலேசம், காதிரைச்சல், தலைவலி, மூட்டுவிட்டது போலிருத்தல் இவை காணும். நாடித்துடிப்பும், வெப்பமும் அடிக்கடி கூடும் (இதில், சிறுவர்களது வயதிற்கேற்ப மருந்துகளை மாற்றுவதோடு - மற்றபடி பெரியவர்களுக்குரிய சுரநோய் சிகிச்சை முறைகளே போதும்)

## ★★ 87. சூதக சன்னி - வலிப்பு என்றால் என்ன?

பெண்களுக்கு, மாதவிடாய் சமயமும் - சூதகம் தொடர்பான கர்ப்ப வாயுவினாலும் நரம்பைப் பற்றி வரும் ஒருவகை இசிவே **சூதகசன்னி** (அபதானகம்) எனப்படும். இதில் சுரம் விட்டுவிட்டுக்காயும். சிலசமயம் கீழ் வயிற்றில் ஏதோ பந்துபோல் உருண்டு மேலெழும்பி வயிற்றைத் தாக்குவதாக் தோன்றும். உடலுறவில் நாட்டம் ஏற்படும் இங்ஙனமே, சூதகத்தடையினால் கருப்பை பாதித்தல் - கணவனால் புறக்கணிக்கப்படுதல் - கணவனின் உடலுறவில் நிறைவின்மை- இளவயதில் விதவையாதல் முதலிய காரணங்களால்; சூதக காலத்தில் வரும் ஒருவித மயக்கமுடன் கூடிய இசிவே **சூதகவலிப்பு** எனப்படும். இதில், கைகால் இசிவோடு, சிலசமயம் குருதியோ, நுரையோ, இரண்டுமோ வாயிலிருந்து வெளிப்படும். மயக்கமும், இசிவுமின்றி; விக்கல் கொட்டாவி, வயிறு உப்பிசம், வயிற்றில் பந்து போலெழும்பி தொண்டையை அடைப்பது போன்ற உணர்வு, கைகால் நடுக்கம் இவை ஏற்படும். ஒரு சமயம் புலம்பல், மறு சமயம் சிரித்தல், புத்திசுவாதீனமின்மை, பேய்பிடித்தது போல் பேசுதல்.

ஆடுதல், பாடுதல் இவற்றுள் சில அல்லது பல தோன்றும். இவர்களால் பேசவியலாவிடினும் பிறர் பேசுவதை உணருவார்கள். அறிவு தெளிந்த பின் சிறு நீர் அதிகமாகக் கழியும். (இதற்கு, வடக்கோடிய எட்டி வேர்ப்பட்டையின் குடிநீர் பயனளிக்கும். தொடர்ந்து சூதகச்சிக்கலுக் குரியன வற்றை தரலாம்)

### ★ 88. விஷம சுரம் என்றால் என்ன?

பித்த வாத சுரம் போல் உயிருக்கு ஊறு விளைவிக்கக் கூடியதும்-குறிப்பிட்ட காலத்தில் வராமலும்; வெப்பசீதளங்கள் நிலையில்லாமலும், சுரவேகம் சமமில்லாமலும் உள்ளதொரு காய்ச்சலே - **விஷம சுரம்** எனப்படும். இது, நீண்டநாட்களாக உடலினுள்ளிருந்து நச்சுத்தன்மையுற்று, சகல தாதுக்களையும் பற்றி பலவித சுரங்களாக மாறும். ஆயின் தாதுக்களில் ஊடுருவி மறைந்தும், சூக்குமத்தன்மையுடனும் இருப்பதால் உட்காய்ச் சலாயிருந்து கொண்டு வெளிக்காட்டுவதில்லை. இதனால், உடலில் வாட்டம் - பாரம் - மெலிவு காண்பதால், சுரம் ஒருபோதும் விலகுவதில்லை. இச்சுரம் முழுமையாக தணியாதிருப்பதோடு, ஆழமான உறுப்புகளில் பதுங்கியிருப்ப தாலும் உடல் சோர்ந்து, உறுப்புகள் கனத்து, சோர்வடையும். ஒருக்கால் சுரம் குறைவதாகத் தோன்றினும், அவ்வமயம் மேற்கொள்ளும் உணவு முதலிய காரணங்களால் மீதியுள்ள தோடங்கள் இலேசாக சினமுற்றாலும் கூட மீண்டும் பதிதாக சுரம் தோன்றி தாக்கிவிடும். இச்சுரம், கிரகம், தேவர், பூதம், தீயசக்திகளினாலும் ஏற்படுவதாகவும் கூறுவர். (இதற்கு, சுரநோய்க்குரியனவோடு - தாதுக்களையும் குளிர்ப்பிக்க வேண்டும்)

### ★★ 89. அந்தர விருத்தி என்றால் என்ன?

உடலினுட் புறமிருந்து பருத்து அல்லது பிதுங்கி வருவதே **அந்தர விருத்தி** எனப்படும். இதனை, **குடலண்டம்** - குடலண்டவாதம் -குடலண்டவிருத்தி **குடலிறக்கம்**- குடல் பிதுக்கம் - குடல்வாயு - **குடல்வாதம்** எனப்பலவாறு கூறப்படும். இது, அதிகமாகவும் விரைவாகவும் முக்கல் - சுமத்தல்-பாரமிழுத்தல்-குதித்தல்-விழுதல் - நடத்தல்; பித்தவாயு அல்லது வாயுப்பண்டங்களையும் - செரிக்க கடினமான வற்றையும் அதிகமுண்ணல், கடுங்குளிர் நீரில் குளித்தல், அசீரண மந்தம், பலவீனம், மிக்க உடலுறவு, நெய்தல் நில வாசம் இவற்றால் ஏற்படும். வாயு சினந்து பெருங்குடலில் தங்குவதால்;

குடலும் அதனைத்தாங்கும் சவ்வும் பலவீனமுற்று தளர்ந்து, தொடைக்கவுட்டியின் ஒரு புறமோ, இருபக்கமோ - பீசநரம்பும், குருதிக்குழல்களும் ஓடும் துவாரம் வழியாகக் கிழிறங்கி விரைப்பையில் வந்து இறங்கும். மேலும், நாளுக்குநாள் பருத்து, சிலசமயம் களகளவென துருத்திவாய்க் காற்றைப் போல் ஒலிப்பதாயும் - அமுக்கினால் மேலேறியும், விட்டுவிட்டால் கிழிறங்குவதாயும் இருக்கும். சிலருக்கு அண்டத்தில் இறங்காமல், ஆண்குறியின் மேற்பகுதியில் மட்டும் பிதுக்கம் காணும். இதில் **ஏறண்டம், இறங்கண்டம்** என இருவகையுண்டு. ஒன்று கடும்முயற்சியினால் தன்னிலைக்குத் திரும்பும் - மற்றொன்று சுருங்காது. நவீன முறையில் பலவகையாகவும், ஆண்களுக்கு கொப்பூழுக்குக்கீழ்புறம் வருவதை குறிப்பாகவும் கூறுவர். மேலும், குடலின் தசையில் வரும் கட்டியினால் சில குடல் பகுதி தோலினடிப்புறமிருந்து பிதுங்குவதாயும் - அடிவயிற்றுத்திசுக்கள் வரிசையாக இழுக்கப் பட்டு திரளுவதாயும், அதனால் பீசத்தை நோக்கி நகருவதாகவும் கூறுவர். பெண்களுக்கும், கடிதடத்தின் மேற்புறம் சிறிய கட்டிபோல் வருவதுண்டு. (அண்டவாதத்திற் குரிய மருந்துகளே குடல்வாதத்திற்கும் தரலாம்)

### ★★ 90. சுத்த வாதக்கட்டி என்றால் என்ன?

ஒரு பெண் பிரசவித்து உடல் முற்றும் பச்சைப்புண் போலுள்ள சமயத்தில் சதா உடல் நலியும்படி புணருதல் - பதினான்கு இயற்கை விரைவுகளை அடக்குதல் - கருப்பகாலத்தின் பத்தியக்கேடு இவற்றால் கருப்பையில் வாயு மிகுந்து, இடுப்பில் உந்தி முதல் யோனிவரை கொடுமையான வலியை உண்டாக்குவதே **சுத்தவாதக்கட்டி** எனப்படும். இது, பக்கங்களில் குத்தல், நோவை உண்டாக்கி; கடல் தவளை போல் கருப்பை வாயை அடைத்துக் கொள்வதால், பெருகும் வாயுவின் வேகத்தால் சூதக சமயம் அல்குல் வழியாக, ஊநீரானது - சில சமயம் கருத்தும் மற்றசமயம் குருதியாகவும் ஒழுகும். இக்கட்டி தானே கரைந்து விழும் தன்மையற்றதால், இதனை இரத்தகுன்மக்கட்டி (சூதகக்கட்டி) எனத் தவறுதலாகக் கூறுவதுண்டு. (இதற்கு சூதகவாயுவையும். கட்டியையும் கண்டிக்கும் மருந்துகள் தரலாம்)

### ★★ 91. குன்மக்கட்டியின் பேதம் யாவை?

அசீரணக்கோளாறு நீடிப்பது, வாயுப்பண்டம், கடும் மலச்சிக்கல் போன்ற பல காரணங்களால், முக்குற்றக் கேடு

அல்லது அதிகரிப்பினால், வயிற்றினுள் கட்டியைப் போல் காணும் வீக்கம் அல்லது திரட்சியே - **குன்மக்கட்டி** எனப்படும். இக்கட்டியானது மார்புக்கும், சிறுநீரகத்திற்கும் இடையில், வயிற்றினுள் பந்தைப்போல் உலவிக் கொண்டிருக்கும். இதனால் - நோவு, செரியாமை, நெஞ்சில் கட்டை போட்டது போலிருத்தல், உணவில் வெறுப்பு, குமட்டல், ஆயாசம், அமைதியின்மை இவை காணும். நிற்க, **பெண்களுக்கு** இதுபோல் காணும் **வித்திரதிக்கட்டியும்**-மற்றும் சினைக்கட்டி, கருப்பக்கட்டி, அடிவயிற்றுக்கட்டி **இரத்த : குன்மம்** போன்றவையும் சூதகக் கோளாறுகளினால் ஏற்படுவதாகும். இவையும், குன்மக்கட்டியும் வெவ்வேறாகும். இரண்டுக்கும் பல வேறுபாடுகளுண்டு. அவை ***(1)*** **குன்மக்கட்டி,** உள்ளுறுப்புகள் எதனையும் சார்ந்து இருக்காது-வளர்ந்து பக்குவமடையாது-பித்தாதிக்கத்தால் ஏற்படும்-தனக்குள் கெட்ட சதை, குருதி முதலியனவற்றை கொள்வதில்லை - வயிற்றினுள் எவ்விதப் பற்றுமின்றி உலவிவரும். ஆனால் **(2) வித்திரதிக் கட்டி,** இதற்கு தொடர்புள்ள ஒன்றைச் சார்ந்திருக்கும் - வளர்ந்து பக்குவமடையும்-குருதிக்கேடு, சூதகச் சிக்கலினால் ஏற்படும் - துர்மாமிசமும், குருதியுமே கட்டியாக மாறும் - குருதியையும், மாமிசத்தையும் அடிப்படையாகக் கொண்டது. (குன்மக்கட்டி என்பது வாயுத்திரட்சியே தவிர வேறில்லை. இதற்கு, குன்மவாயுவுக்குரிய மருந்துகளே போதும்)

## ★ 92. ஓக்காளத்தின் வகை யாவை?

**ஓக்காளம்** என்றால் வாய்க்குமட்டல், **வாந்திக்குணம்** அல்லது வாந்தி யெடுத்தல் எனப்படும். இது பிணி, நச்சுண்டல், கருப்பிணியின் மசக்கை, வெண்பாடாணம்-துருசு-செம்பின் களிம்பு முதலிய குற்றம், மதுவகை, பித்தமிகுதி, அருவெறுப்பு போன்ற வற்றால் ஏற்படும். இது பலவகைப்படும். அவை. **(1) பித்தோக்காளம் (பித்தவாந்தி)** - இதில், பித்துநீர் கலந்து வெளிப்படும். **(2) கரும்பித்தோக்காளம் (கருப்புவாந்தி)** - இதில், இரைப்பை நீருடன், குருதியின் கருப்புப்பொருள் கலந்து வெளியாகும். **(3) இரத்தோக்காளம் (குருதிவாந்தி)** - இதில் செந்நீர் கலந்து வெளிப்படும். **(4) வெள்ளோக்காளம் (வறட்டுவாந்தி)** -இதில் ஒன்றுமில்லாமல், வாயுவுடன் மட்டும் வெளியேறும். **(5) மலஓக்காளம் (மலவாந்தி)** - இதில், மல வண்டலுடன் வெளிப்படும். **(6) படுவோக்காளம் (நாசகரவாந்தி)** - இதில், கருப்பிணிக்கு மரணமிளைவிக்கு

மளவில் ஏற்படும். **(7) மடக் கோக்காளம் (திரும்பும் வாந்தி)** - இதில் இடைவெளி விட்டுவிட்டு வெளியேறும். **(8) ஓயாவோக்காளம் (திருந்தாவாந்தி)** - இதில், கட்டுப் படுத்தவியலாதவாறு வெளிப்படும். **(9) கர்ப்போக்காளம் (அருவருப்புவாந்தி)** - இதில், கருவுற்றவளுக்கு மசக்கைக் குமட்டலாக வெளிப்படும் **(10) நச்சோக்காளம் (விஷவாந்தி)** - இதில், உட்கொண்ட நச்சுப்பொருளின் தன்மைக்கேற்ப வெளியேறும். (இதற்கு, வாய்க் குமட்டலுக்குரிய காரணம் - குறிகுணங்களைக் கண்டறிந்து அதற்கேற்ற மருந்துகளைத் தரவேண்டும்.)

## ★★ 93. பரிணாம சூலை என்றால் என்ன?

நமது உடலில் சிறுகுடல் பெருங்குடலோடு சேருமிடத்தில் நாபிக்குச் சற்றுக் கீழே **வர்மி அல்லது குடல்வால் (அப்பண்டிஸ்)** என்ற ஒரு சிறிய புழுப்போன்ற உறுப்பு தொங்கிக் கொண்டிருக்கும். அதில் அழற்சி முதலியவற்றால் ஏற்படும் கடுமையான வலியே **பரிணாமசூலை** எனப்படும். பழைய மலம் நீண்ட நாளாக பெருங்குடலில் தங்குவதால் - வாயு சினமுற்று, பித்த கபத்தை தாக்குவதால் இச்சூலை ஏற்படுவதாகக் கருதப்படும். இதனால் குடல்கள் தாபிதம், அசீரணம், மலச்சிக்கல், சுரம், சீரணத்தில்நோவு இவை ஏற்படும். இந்நோயை, அருகாமை உறுப்பில் காணும் பிணியின் தொந்தத்தினால் ஏற்படுவது - நீண்டநாள் தொல்லைதருவது - வர்மியில் துளை அல்லது புழுவுண்டாவதால் வருவது- மீண்டும் மீண்டும் வருவது - மரணத்திற்கு ஏதுவானது (அப்பண்டிசிட்டிஸ்) எனக்கூறுவர். நவீன முறைப்படி, குடல் வாலின் பயன் இன்னதென இன்றுவரை கண்டறியவியலாமை யால், இந்நோயை நீக்க இவ்வுறுப்பை அறுத்து நீக்குவது தவிர வேறுவழியைக் கையாளுவதில்லை. ஆயின், நமது முறையில் -சீரணக்கோளாறினாலான வலியாகவே, இதனை துண்டிப்பதால் சக்தி குன்றிவிடும் எனவும் கருதுவர். இதற்கு இளம் சுடுநீரை குதத்தின் வழியாக, இடையிடையே உள்ளே பீய்ச்சி (எனிமா) இறுகும் மலத்தை வெளியேற்றுவதுடன் - குன்மத்திற்குரியனவற்றையும் தர குணமடையும்.

## ★ 94. அடிவயிற்றில் வலி ஏற்படுவது ஏன்?

**அடிவயிற்றில்** அதாவது பெருங்குடல், சிறுநீரகப் பகுதிகளில் குத்தல், வலி ஏற்பட பல காரணங்களுண்டு.

அவற்றுள் சில-அளவு மீறிய உணவினால் ஏற்படும் செரிமானக் கோளாறு - மலச்சிக்கலினால் வாயுமிகுந்து குடலில் சேருவது - குடல் வாயுவினாலான குடல் பிதுக்கம் - பித்தத்தினாலான பேதி, வாந்தியுடன் கூடியது - பித்தக்கற்கள் பித்த தாரையை அடைத்துக் கொள்ளுவது-நீரடைப்பு, சதையடைப்பு, கல்லடைப்பு- பாரிசவாயு-பெண்களுக்கு சூதகச்சிக்கல், சூதகவாயு, சூதகக்கட்டி போன்ற கருப்பாசயக் கோளாறுகள் -குடல் வால் நோய்-அடியிடிபடல் போன்றவையாகும் (இதற்கு, பிணியின் காரணமறிந்து சிகிச்சை செய்ய வேண்டும்)

## ★ 95. பெண்களின் தசையண்டம் என்றால் என்ன?

ஆண்களுக்கு ஏற்படும் அண்டவாதம் போன்றே பெண்களுக்கு ஏற்படும் **கானிகாயோனி** அல்லது கூதை எனப்படுவதே **தசையண்டம்** ஆகும். இது, அகால உடலுறவு, மிக்கப்புணர்ச்சி, பிரசவக்கேடு, கடும் வெட்டைமேகம், பலவீனம் ஆகியவற்றால் பெண்களுக்கு வாயு மிகுந்து குடலி னின்று கீழிறங்கி அல்குலுக்குள் பூரித்துக் கொள்வதால் ஏற்படும். இதில் அல்குலின் இரு பக்க சதையும், இதழும் விரிந்து தளர்ந்து காணும். புணர்ச்சியில் விந்துபோய் பாய்வதற்கும்; காமநீர், சுரோணிதம், கருப்பம் இவை வெளியேறி வரத் தடைபட்டும்; அதனால் குருதி கெட்டு கருப்பையினின்று நிதம்பத்தினுள் அடங்கி, நீண்டு வந்துள்ள வங்குவாசல் எனும் பூவும் தளர்ந்து, ஆண் குறியைப் போல் வெளியில் வந்து தொங்கும்-வாயுவினால் திரண்ட குருதி அத்துவாரத்தில் தசை விழுது விட்டது போலும்; தேங்காயின் உள் முளை, குமிளங்காய், தாமரைமொக்கு இவை போலும், துன்மாமிசம் வளர்ந்து அண்டங்களைப் போலவே தொங்கும். (இதற்கு கர்ப்பவாயுவுக்குரிய சிகிச்சையினை மேற் கொள்ளலாம்)

## ★ 96. இரத்த குன்மம் என்றால் என்ன?

பெண்களுக்கு மட்டுமே வரக்கூடிய சூதகநோயே, இரத்தவாத குன்மம் எனப்படும்-**இரத்தகுன்மம்** ஆகும். பெண்கள்-முதல் பிரசவகாலத்திலும், கருச்சிதைவான போதும், மாதவிலக்கு சமயத்திலும் வாயுப் பண்டங்களை அதிகமுண்ப தாலும், பத்தியக்கேட்டினாலும், வாதம் சினப்பதால் சூதகம் தடைப்பட்டு, குருதி கட்டிக் கொண்டு மாதவிடாய் நின்று போகும். மலட்டுப் பெண்களுக்கு, மாதருது தவறுவதாலும்

சூதகம் வெளியேறாமல் திரளுவதுண்டு. இதனால் கருப்பை பெருத்து, அடிவயிற்றில் கல்லைப் போல் திரண்டு வலியும், குத்தலும் ஏற்படும். கருப்பிணிகளுக்குரிய குறிகளுடன், ஆனால் வயிறு மென்மேலும் பருக்காமலும், சிலருக்கு பருத்து வருவதாயும் இருந்து பிள்ளைத்தாய்ச்சி போல் தோற்றம் காணும். ஆனால் அவை பொய்க்கர்ப்பக் குறிகளேயாகும் சூதகக்கட்டி ஆண்டுக்கணக்கில் நீடிப்பின், அதற்கேற்ப கட்டியின் வளர்ச்சியும், எடையும் கூடிக்கொண்டே வரும் இதற்கு, பிரசவகாலமாகிய 10-மாதத்திற்குப் பிறகு சிகிச்சை செய்வது நலம். சாதாரண சூதகச்சிக்கலுக்கும் இதற்கும் வேறுபாடுண்டு. (இதற்கு, சூதகக்கட்டியை உடைத்துக் கரைத்து வெளியேற்றும் மெழுகு, தைலம் முதலியவற்றை தரலாம்)

## ★ 97. நீரண்டத்தின் குறிகள் யாவை?

ஆண்களின் விரைப்பையில் நாளாவட்டத்தில் ஊனீர் போன்ற தொரு திரவம் சேர்ந்து கோசப்பை வீங்கிக் காண்பதே -**நீரண்டம்** எனப்படும். இது - விரைப்பையின் அடிப்புறமிருந்து தொடங்கி, மேற்பகுதி, இலேசாக வழவழப்பாயும், தொட்டால் மிருதுவாயும், வலியின்றியும், பருமனால் தொல்லையாகவும் காணும். இது காயம், மேகம், பிறவி அல்லது குறிப்பிட்ட காரணமின்மை இவற்றால் ஏற்படும். இதனை ஊசியால் குத்தி நீரை வெளியேற்றியும், அறுவை சிகிச்சையின் மூலமும் குணமாக்கலாம். இதற்கும். குடலண்டத்திற்கும் நிறைய வேறுபாடு உண்டு. அவை **(1) நீரண்டம்** படிப்படியாக வரும் - மறைந்து, மீண்டும் தோன்றுவதில்லை-சப்தம் கேட்காது - வீக்கம் மிருதுவாயிருக்கும்-உத்வேகமோ, அசைவோ இராது -விரை தெரியாது-நீர் தளும்பல் புரியும் - உயிராபத்து இல்லை **(2) குடலண்டம்** திடீரெனவரும்-படுத்தால் மறைந்து, நின்றால் தோன்றும்-உட்புறம் ஒலி கேட்கும் - வீக்கம் கடினமாயிருக்கும் -இருமினால் உந்து சக்தி இருக்கும்-வீக்கம் விரையை மறைக்காது - நீர்தளும்பாது - உயிராபத்து உண்டு. **(3) சன்தயண்டம்** என்பது முற்றிலும் மாறுபட்டது. இதில் துர்மாமிசச் சேர்க்கையினால், பீசம் பருத்து கல்போலாகும் இதுவே அனைத்திலும் கடின சாத்தியமாகும். (இவைகளுக்கு அண்டவாதங்களுக்குரிய மருந்துகள் பயன்தரும்)

## ★★ 98. வாத ரக்தம் என்றால் என்ன?

குட்டம் போன்ற தொரு கடுமையான சருமப்பிணியே

**வாதரக்தம் (சயநோய்க்குட்டம்)** எனப்படும். தனக்கு, பொருந்தாத அல்லது தன் நலத்திற்கு ஒவ்வாத உணவுக்கு அடிமையாதல் - முரட்டுத்தனமற்ற சாந்தமான உடற்கட்டை அடைதல் - கொழுத்துத் தடித்தல் - உடலுழைப்பின்மை இவற்றாலும்; மற்றும், எளிதில் சீரணமாகாத கடின உணவுகளை அதிக முண்ணல்-வெப்ப, வீரியமுள்ளவற்றை உண்ணல் - உண்டவை செரிக்குமுன் மென்மேலும் உண்ணல் இவற்றாலும் குருதி கெட்டு, வாயுவும் சினமுறுவதால் இந்நோய் காணும். இதில், தொடக்கூட பொறுக்கவியலாதவாறு தீவிரமான, முரட்டுத்தனமான துன்பமிருக்கும். பாதிப்புற்ற பகுதியில் ஊடுருவித்துளைத்தெடுப்பது போன்ற வலியிருக்கும். கால்கள் முற்றாக வலுவிழந்து, தொடுவுணர்வு அற்றுப்போகும். (இதற்கு, இரசகந்தகாதி மருந்துகளுடன் - உண்டியைக் குறைத்தலும் அவசியமாகும்)

## ★ 99. வெண்பாண்டு நோய் என்றால் என்ன?

அபூர்வமாக, எப்போதாவது காணப்படக்கூடிய **சுவேத பாண்டு நோயே-வெண்பாண்டு** எனப்படும். இந்நோயுற்றோர், வெய்யிலில் காயாத வெள்ளையர்கள் (ஐரோப்பியர்) பிணமாய்க்கிடக்கையில் காண்பது போல், வெளுத்துக் காண்பர். இவர்கள் உரோமமும் சணல் நாரைப்போல் வெளேறென்று காணும். கருவிழி வெளுத்து, கண்மணியும் கருநிறம் மாறி, சிறுத்து செந்நிறமடையும். பார்வை நரம்புச்சவ்வும் கூச்சமுற்று தரிசனம் குன்றுவதால், அவர்கள் நிழலுக்கு வந்தாலன்றி பகல் வெளிச்சத்தில் பார்க்க முடியாது. உடல் மிக்க நுட்பமாயும், வியர்வை நாற்றமுடனும் இருக்கும். எளிதில் சினமும், அச்சமும் அடைவர். இந்நோய் பெண்களுக்கு வந்தால் மகப்பேறு கிட்டாமலும் - மீறிக் குழந்தை பிறப்பினும் அவர்கள் இனத்தின் நிறமுடனும் இருக்கும். பெரும்பாலும் இத்தகையோர் நீண்டநாள் வாழ்வதில்லை. (சுவேதபாண்டு - என்றால் கற்றாழை நாற்றமுடைய வியர்வையுடன் கூடிய வெளுப்பு நோய் என அறியலாம். சிலர் மேற்கூறிய குறிகளுடன் பிறவியிலேயே தோன்றுவதுண்டு)

## ★ 100. மதரோகம் - பூதன் என்றால் என்ன?

இயற்கை அளவை விட மிகவும் பருத்துள்ளதை **கொழுப்பு ரோகம்** எனப்படும். இதில், பெண்ணுக்கு வருவதை **மதரோகம்**

எனவும் - ஆணுக்கு வருவதை **பூதன் (புதமை)** எனவும் கூறுவர். இதில் - **(1) மதரோகம்** - இது, சத்துமிக்க மற்றும் மாமிசவகை உணவுகளை அதிக முண்ணல், சிறிதும் உடலுழைப்பின்றி சதா அமர்ந்தோ, படுத்தோகிடத்தல், பகலுறக்கம் முதலிய காரணங்களினால் உடலில் கொழுப்புச் சத்து மிகுவதால் ஏற்படும். இதனால் - மிகுதூக்கம், மிகுபசி அல்லது பசியின்மை, தாகம், உடலுறவில் நாட்டமின்மை, பலவீனம், மூச்சுத்திணறல், வியர்வை, இருதய பலவீனம் இவை காணும். **(2) பூதன்** - இது, ராக்ஷதன் அல்லது அசுரன் எனக் கூறுமளவிலும் - வலுவான, கட்டான, மிகப்பருத்த, அகன்று - உயர்ந்த உருவமுடனுமுள்ளதாகும். மிருகம் போல் வலிமையுடன் சண்டை போடுவர். ஆயின் நுட்பமான அறிவும் - பண்புணர்ந்து நடக்கும் புத்தியும் இராது. இத்தகைய வளர்ச்சிக்கு சில கோளங்களின் சுரப்புமிகுதியே காரணமாகும்.

## ★ 101. ஆகந்துகரோகம் என்றால் என்ன?

**ஆகந்துக ரோகம்** என்றால் எதிர்பாராமல் **நடுவிலோ திடீரென்றோ வரும் நோய்களாகும்.** இவை உடலையடுத்த நோய்களின் கடுமையினாலும், உணவு அல்லது பத்தியக் கேடுகளினாலும் ஏற்படும். மேலும் - அடியிடிபட்டுக் காயமுண்டாதல், நஞ்சுகள், விஷப்பூண்டுகள் - அமிலங்கள் இவற்றை நுகர்ந்து பார்த்தல், நஞ்சுயிர் தீண்டல், அடங்காக்காம விகாரம், மிகுகவலை, அதிர்ச்சி, அச்சம், சினம், தோஷம், பைசாசம், சாபம், பலவீனம், நெருப்பு, வெள்ளம், புயல், கெட்டவாயு, கெட்டழிந்த பண்டம், பாடாணவீறு போன்ற காரணங்களாலும் ஆகந்துக நோய்கள் ஏற்படும். (இவற்றுக்கு, உரிய காரணமறிந்து சிகிச்சை செய்ய வேண்டும்)

## ★★ 102. பாதங்களில் காணும் நோய்கள் யாவை?

பொதுவாக, குதிகால் - பாதங்களில் மேகப்புண், புற்று யானைக்கால் வீக்கம் போன்றவை ஏற்படினும், இங்கு கூறப்படுவது வாதம், சூலைகளினால் காண்பதாகும். அவை - **(1) பாதகண்டகம்** (கணுக்கால்வாதம்)-இது, உள்ளங்காலில் சீதளம் அனுசரித்து; கணுக்களிலும், விரல்களிலும் பரவி காலைத்தூக்கி வைக்கும் போது கல் அல்லது முள் குத்துவதைப் போல் வலிக்கும். **(2) பாதலகம்**-இதில், பாதத்தை தூக்கி அடிவைக்கும் போது சாணம், களிமண், சகதி இவை அப்பியது

போலும், செத்தை ஒட்டிக் கொண்டது போலும் உணர்வும் கால் மரத்தல், பாதங்கள் ஒன்றுடனொன்று அடித்தலும் காணும். **(3) பாதகண்டூரம்** - இதில், இரவில் பாதம், பெருவிரல் இவற்றில் வலியும், குடைச்சலும் கண்டு காலையில் குணமாகி விடும். **(4) பாததாகவாதம்.** இது, பித்தமிகுதி, வாதபித்தக்கேடு இவற்றினாலான பாதவறட்சி அல்லது சீதளத்தால், குருதி பாதிக்கப்பட்டு உள்ளங்காலில் சங்கடமாக உணரும் வெப்பம் முதல், பொறுக்க முடியாத அளவுவரை தீயாய் எரியும். இதனால் தூக்கம் நீங்கி, உடல் நலமும் கெடும். இது, மிகு நடையினாலும் வரும் (இதற்கு, முடக்கொற்றான் நலமூட்டும்.) **(5) பாததாரிகம்** (பாதபேதம்) - இது, அதிக நடையினால் வாயு கோளாறடைவதால் உள்ளங்காலில் பசையற்று, வறட்சியுற்று வெடிப்பும், பிளப்பும் கண்டு துன்புறுத்தும். **(6) பாதவரிஷம்** (உள்ளங்கால்திமிர்) - இதில், காலை நீட்டினாலும், மடக்கினாலும் உணர்வு இராது. (பாதத்தில் திமிருடன், தொட்டால் முள்ளாய்க் குத்துவதாயும், வலியும், உறுத்தலுமிருப்பின், அது தொழுநோயின் அறிகுறியாகும்) **(7) பாதாட்சேபகம்** (நீர் அல்லது உதறுவாதம்) - இதில், நடக்கும் போது பாதங்கள் ஒன்றுடனொன்று அடித்துக் கொள்ளுவதாயும், சுழற்றி விழுவது போலுமிருக்கும். (பாதநோய்களுக்கு வாதப்பிணி மருந்துகள் நலமூட்டும்)

## ★ 103. கால்வீக்கம் ஏற்படுவது ஏன்?

**கால்வீக்கம்** சாதாரணமாக அடியிடி முதலிய காயம், விரணம் முதலியவற்றினாலான **அழற்சியினால்** ஏற்படுவதுண்டு. எனினும் பின்வரும் காரணங்களாலும் ஏற்படலாம். அவை - **(1)** மேகநீர்த்தொடர்பால் கால்களிலும், பாதங்களிலும் ஏற்படும் நீங்காத அல்லது தொடர்ந்த வீக்கம். **(2)** வாதநோய்த் தொடர்பாலானது. **(3)** யானைக்கால், கழலை முதலியவற்றாலான கடின மாமிச வளர்ச்சியினாலானவ்வை, **(4)** பாண்டு நோயில் பித்தநீர் காலில் இறங்குவதால் ஏற்படுவது **(5)**கரப்பான், சொறி முதலியவற்றால் காண்பது. **(6)** நச்சுசுரத்தில் மண்ணீரல் பெருக்கத்தினாலான வயிற்றில் காணும் சுரக்கட்டியினால் ஏற்படுவது. **(7)** சோகை, பலவீனம், விஷசுரம், உப்புச் சத்துமிகுதி முதலியவற்றினால் காண்பது. **(8)** பெண்களுக்கு கருவுண்டாதல், சூதகச்சிக்கல், மாதவிடாய்

நிற்கும் காலம் முதலியவற்றால் ஏற்படுவது. (9) மேகப்பிணி, மொழிசூலை, கீல்வாதம், பிரமியம் இவற்றால் காணும் கால் வீக்கம் ஆகியனவாகும் (பாதவீக்கம் இயல்பாக இரவுகளில் காண்பதாயும், வேறு உடல் நலக்கேடில்லாமலும் இருப்பின் சிறப்பான சிகிச்சைகள் தேவையில்லை. மற்றபடி பிணியறிந்து உரிய மருந்து தரவேண்டும்)

## ★★ 104. இடுப்பு வலி ஏற்படுவது ஏன்?

இடுப்புவலி என்பது இடுப்புப் பகுதியில் முதுகினடியில் ஒன்று அல்லது இரு புறமும் காணும் ஒருவித நோவாகும். இது, பொதுவாக பலவீனத்தினாலும் - வெள்ளை, வெட்டைப் போக்கினாலும் - மலமிறுகி வாயு பெருகுவதாலும் - பெண்களுக்குப் பிரசவ அறிகுறியாகவும் - மிக்க உடலுறவினாலும் ஏற்படும். இது நாட்படத் தொடருகையில் கடிசூலை எனப்படும். இது, குண்டிக்காய்க் கோளாறினால் ஏற்படுவதாகச் சிலர் கூறினாலும் - இவ்வலியோ பெரும்பாலும் தசைநார்கள் அல்லது தாதுவைப் பற்றி ஏற்படுவதாகும் என்பது தெரிந்த விஷயம். இது, மூத்திரவுப்பு அல்லது மற்ற நச்சுப்பொருட்கள் தாதுக்களில் தங்குவதாலும் ஏற்படும். இதனால் - குனிதல், நிமிர்தல், ஒரு புறமிருந்து மறுபுறம் திரும்புதல், படுத்திருந்து எழுதல், அமர்ந்திருந்து எழுதல் இவற்றின் போது. இடுப்பு நாற்புறமும் அசைவதால் தசை நார்களுக்கு அசதியேற்பட்டு கத்தரிப்பதுபோல் ஓர்வித வலி யையுண்டாக்கும். இதற்கு, வாயுப்பண்டம், மாமிசம், காபி, தேயிலை, ஈரம், குளிர்ச்சி இவை கூடாது. இதமாயிருக்க ஒற்றிடமிடுவதோடு, மேற்பூச்சும், பலவீனத்திற்குரிய உள் மருந்துகளும் தரலாம். நவீன முறையினாலான மின்னொளி பாய்ச்சல், உஷ்ண ஆவி காட்டல் போன்றவை நிரந்தரத் தீர்வாகாது.

## ★ 105. பக்கசூலைக்குரிய குறிகள் யாவை?

உடலுக்கு ஒவ்வாத பண்டங்களையுண்ணல், குன்மம், கடும் மலச்சிக்கல், நுரையீரல் அழற்சி முதலியவற்றால் சினமுறும் வாயு, கபத்துடன் சேர்ந்து வயிறு, பக்கவிலாவில் தங்குவதால் -முதுகு, இடுப்பு, மற்றும் குறிப்பாக விலாப்புறத்தில் வலியும். குத்தலும ஏற்படுவதே - **பக்கசூலை** எனப்படும். இதனால் வயிற்றுப்பிசம், பொருமல், தூக்கமின்மை, உணவில் வெறுப்பு,

வலியுடனும் சிரமத்துடனும் மூச்சுவிடுதல், திணறல், சிலசமயம் சுரத்துடன் உடல் புண்ணாய் நொந்து உளைதல், தலைவலி, இசிவு முதலிய குறிகள் காணும். இது, ஈரல் தாபிதமுற்று, அதனால் வீங்குவதாலும் (ப்ளூரசி) ஏற்படுமெனக் கருதப்படும். (இதற்கு, விஷ்ணு சக்கரம், கருப்புவிஷ்ணு சக்கரம், சூலைபூபதி, சூலைக்குடாரம் போன்றவையும் - பொதுவாக சூலை நோய்க்குரியனவும் பயன்படும்)

## ★★ 106. பீலிகைக் கட்டி என்றால் என்ன?

*பீலிகை* எனப்படும் மண்ணீரல் வீங்கிப்பருப்பதே பழஞ்சுர அல்லது **சுரக்கட்டி** எனக் கூறப்படும் - **பீலிகைக்கட்டி** ஆகும். இதனை, பீலிகோதரம், பீலிகைவாயு, மண்ணீரல் நோய் எனவும் கூறுவர். இதில், மண்ணீரல் கனத்துப்பெருகி, குழவிபோல் திரண்டு வீங்கி, குறுக்கே கிடந்து புரளவும் மேனோக்கி ஏறவும் செய்யும். மலமிறுகி, அன்னத்தைத் தள்ளி, வயிறு மந்தித்து, ஓக்காளித்து, புளியேப்பம் காணும். பலம் குன்றி உடல் தளரும். இலேசான சுரம், களைப்பு, அசீரணம், வாந்தி, காமாலை, சோகை, பாண்டு, அடிவயிற்றில் நீர் கோர்த்தல் இவை காணும். (இதற்கு, மலநீரைப் பிரிக்கச் செய்து, பாண்டு சோகைக்குரியனவற்றை தரலாம்)

## ★ 107. உக்கிரத் தொண்டைத்தாபம் என்றால் என்ன?

முன் தொண்டைப் பகுதியில் - குரல்வளைக்கு மேலும், உண்ணாவுக்குக் கீழும் ஏற்படும் அழற்சியே **உக்கிரத் தொண்டைத்தாபம்** எனப்படும். இது, பல காரணங்களால் ஏற்படும். அவை (1) மிகுசீதளம், குளிர்காற்றுப் படுதல் இவற்றால் தொண்டையில் வலி ஏற்பட்டு விழுங்க வியலாமையோடு, சுரம் முதலியனவும் காணுதல். (2) சயம், கிரந்தி முதலிய நோயினால் அடிக்கடி காணுதல் (3) துத்திரோகம் எனப்படும் தொண்டையடைப்பானில் காணுதல் (4) தொண்டைப்புண்களினால் காணுதல். (5) தொண்டை கட்டிக் கொண்டு கொப்புளங்கள் எழும்பி விரணமாவதால் காணுதல் ஆகியனவாகும். (இதற்கு, மூல காரணங்களுக்கேற்ற மருந்துகளைத் தரவும்)

## ★ 108. குரல் கம்மல் ஏற்படுவது ஏன்?

தொண்டைப்புண், கத்தகரோகம் அல்லது **குரல்கம்மல்**

நோய் என்பது பின் வரும் காரணங்களால் ஏற்படும். அவை, உண்ணாக்கு வளர்ச்சியினால் தொண்டையடைப்பு, சுவாசிக்க வியலாமை இவற்றாலும்-வாயின் கீழ்ப்பகுதி அழற்சியுற்று, வெந்து புண்ணாவதாலும்-பெருவாரி நோய்களினால் தொண்டை அழுகிப்போவதாலும்-தொண்டை விரணமுறுவ தாலும் குரலடைப்பு ஏற்படலாம். மேலும்-தொண்டை யடைப்பான், பொன்னுக்கு வீங்கி, சயம், மேகக்கிரந்தி; குரல்வளை வீக்கம், காற்றுக் குழல் தொடர்பான இருமல், குழந்தைக்குரிய தொண்டை நோய், வைசூரி, கபக்கட்டு முதலிய பிணிகளின் குறியாகவும் குரல் கம்மும். **குரல்கம்மல்** நோயில்-தொண்டைக் கரகரப்பு, உண்ணாவு நீளுதல், தொண்டையழற்சி, தொண்டையிலுள்ள நாளமில்லாச் சுரப்பிகள் (டான்சில்ஸ்) விரிவடைதல் ஆகியன முக்கியக் குறிகளாகும். (இதற்கு கபப்பிணிகட்குரிய நீற்றினமும் - சூரணமும் பயன் தரும்.)

## ★ 109. மிகுதாகம் ஏற்படுவது ஏன்?

உடலில் பாயும் அன்னரசக் குழம்பின் திரவத்தன்மை குறைவதாலும், நாளமில்லாச்சுரப்பி மற்றும் குழாய்களின் நிணநீர் வறண்டு ஈனப்படுவதாலும், பதினெண் வகைக் குற்றங்களில் ஒன்றாகிய நீர்வேட்கை எனப்படும் **மிகுதாகம்** ஏற்படும். இது, மிக்க கவலை, பயம், உழைப்பு, மனம் திடுக்கிடல் - அதிக உப்பு, புளி, காரம், சூடு - பட்டினி - சுவை உறுப்புக்குற்றம் - குருதிக்கேடு - அறுவைசிகிச்சை முதலிய விரணங்களின் வேதனை - அடிப்படைத் தாதுக்களின் குறைவு - நெய் முதலிய கடின உணவினாலான செரியாமை - மேககாங்கை, மதுமேகம், நாவறட்சி, நரம்புக்கிளர்ச்சி- உடல்மெலிவு போன்ற காரணங்களால் வாதம் அல்லது பித்தம் தனித்தோ, பித்தவாயு இணைந்தோ சினமுறுவதால் ஏற்படும். இதில்-வாய், உதடு, அன்னம், தொண்டை, நாவு இவை வறண்டு எரியும். சில சமயம் உடல் முற்றும் காந்தும். **அடங்காத தாகம்** ஏற்படும். இது ஏழுவகைப்படும். வெறும் நாவறட்சி என்பது வேறு (இதற்கு குளிர்ச்சியூட்டுவனவும், நாவறட்சிக் குரியனவும் தரலாம்.)

## ★★ 110. சுகசன்னி ஏற்படுவது ஏன்?

பொருந்தாப் புணர்ச்சியினால், அதாவது பெண்

மாதவிடாயுற்றுள்ள சமயம் சம் போகம் செய்வதினால் வரும் பெண் தோடத்தினாலான முக்குற்ற சுரமே - **சுகசன்னி** எனப்படும். மேலும், தைலம் தேய்த்து முழுகிய நாளிலும் - தயிரன்னம் புசித்து வயிறு மந்தமாயுள்ளபோதும் - உடல் அலுப்பாயுள்ள போதும் உடலுறவு கொள்ளுதல் - கடும் புணர்ச்சி இவற்றினால் நரம்புக்கு அசதி கண்டு; உடலில் வலி, கண்சிவப்பு, வியர்வை, நடுக்கம், பிரமை இவற்றுடன்; உடல் குளிர்ந்து, கண்சுழன்று, இசிவு கண்டு, சிலசமயம் மரணமும் ஏற்படும். (இதற்கு - கட்டிய வெண்பாடாணத்தில் அரிசி எடை வீதம் தேனுடன் உரைத்துக் குழப்பித்தரலாம். சன்னிக்குரிய மற்ற மருந்துகளும் பயன்படும்)

### ★ 111. பரிவர்த்திகை - பரோத்தம் இவை யாவை?

*(1)* **ஆண்குறியின்** முன் தோலில் சுருக்கமுற்று முடிச்சு போன்ற கடினமான சதைக்காய்ப்பு ஏற்படுவதால் மேற்படி முன்தோல் சதையை பின்னுக்கிழுக்கவியலா நிலையை- **பரிவர்த்திகை** எனப்படும். புணர்ச்சியில் அதிகம் உராய்தல், அடிக்கடி பிசைதல், கைப்பிரயோகம் போன்றவற்றால், வாயு கேடுற்று மேற்படி சதையில் இதனை உண்டுபண்ணும். இதில் கடும் எரிச்சலும், நோவும் காணும். இதற்கு, மேற்பூச்சு மருந்துகளையிட அழற்சியும், காய்ப்பும் மாறும். (2) காமவிச்சையின்றியே அடிக்கடி ஆண் குறிக்கேற்படும் எழுச்சியை - **பரோத்தம்** எனப்படும். இது, நடு முதுகிலுள்ள வீணாத்தண்டு - ஆண்குறி இவற்றில் அடியிடிகாயம் ஏற்படுவது, சிறுநீரகத்தில் கற்கள் உண்டாவது, விந்து பெருகல் முதலிய பல காரணங்களால் ஏற்படும். (காரணமறிந்து சிகிச்சை செய்யவும்)

### ★ 112. சுக்கிலாசுமரி ரோகம் என்றால் என்ன?

**சுக்கிலாசுமரி** என்பது **இந்திரியக் கல்லடைப்பு** எனலாம். இது, பெண்ணைப் புணருகையில் விரைந்து வெளி வரும் விந்துவை அடக்குவது அல்லது திடீரென நிறுத்துவது - விந்துவை நீண்டநேரம் வெளிவராமல் கட்ட வேண்டி தாதுபுஷ்டி அல்லது தம்பன மருந்துகளை அதிகம் உட்கொள்வது - மிக்க உடலுறவால் உடலின் சக்திக்குமேல் விந்துவை வெளியேற்றுவது - உறுப்பினுள் விந்துவானது திரண்டு கற்கள் போல் விளைதல் - விந்து வெளியேறுகையில்

விரைப்பையிலுள்ள கெட்டுப்போன உயிரணுவும், இதர சுரப்பியும், மற்ற கூட்டுப்பொருளும் இயற்கை நிலைக்கு முறண்படுதல் - உடல் சூட்டினால் விந்துவைத் தனது இருப்பிடம் விட்டு நழுவச் செய்து, நாளத்தின் வழியே கீழே ஒழுகவிடாது, அண்டநடுவில் மறித்து, பின் அதற்குரிய விந்துவைச் சுண்ட வைத்து உலரவிடல் முதலிய காரணங்களால் ஏற்படும். இவ்வகை நீர்த்தாரை அடைப்பினால், சிறு நீர் மெதுவாக, சிறிய அளவில், வலியுடன் இறங்கும். விரை வீங்கும். அடிவயிறு நோகும். கல்போல் இறுகிய விந்துவானது திரண்டு சிறுநீருடன் வெளியேறும். (இதற்கு கல்லடைப்புக்குரிய மருந்துகள் பயன்படும்)

## ★ 113. தேமல் என்றால் என்ன?

பித்த கபத்தின் சினத்தினால் - உடலில் வட்டங்களாக, தடிப்பின்றி வேறு நிறத்தையும், சில சமயம் தினவையும் உண்டாக்கக்கூடிய தோலைப் பற்றியதொரு சாதாரணமான தழும்பே - **தேமல்** எனப்படும். பொதுவாக, இது சிறிது மஞ்சள் நிறமாயும், சிறு புள்ளிகளாகவோ, சேர்ந்து இணைந்து படர்ந்து படர்ந்தோ - பெரும் பாலும் அழகிய இளைஞர்களது முகம், மார்பு, தோளில் ஏதோ கரைபடிந்தது போல் தோன்றும். பெண்களுக்கு இதனால் அழகு கூடுமெனக் கருதுவதுண்டு. இது, தோன்றி, மறைந்து, மீண்டும் வருவதுண்டு. இதில், சில சமயம் கடும் அரிப்பு - தடிப்பு - நிறமாற்றம் பலவாறு இருப்பினும், இதனை தோல் வியாதியாகக் கொள்வதில்லை. இதில், மஞ்சள் நிறமான-**அழகுத்தேமல்;** வாழ்வில் வளமூட்டும் குறியாகிய மஞ்சள் புள்ளிகளான-**பொங்குதேமல்;** பிணி, திமை, மரணம் இவற்றின் குறியாகக் கொள்ளப்படும் - **மங்குதேமல்;** அழுத்தமான கருநிறமுடைய-**அழுக்குத்தேமல்;** கசிவற்ற, நிறமுடைய - **கிலாசம்;** எச்சில் தழும்பு எனப்படும் - **உத்கோடரோகம்** எனப்பலவகையுண்டு. (தேமலுக்கு, அயச்செந்தூரத்தை - அமுக்கராலேகியத்துடன் தரலாம்)

## ★ 114. நகச்சுற்று என்றால் என்ன?

"வாத பித்தக் கோளாறினால் - விரல் நுனி, நகக்கண் ஆகியன வீங்கி; வலி, எரிச்சல், சுரமுடன், நகங்களின் வேரையும் அழித்து வேறு நகம், முளைப்பதாயும், சில சமயம் மற்ற விரல்களிலும் அடுத்தடுத்து வருவதாயுமுள்ள நகமுண்ணி

அல்லது **சிப்பம்** எனப்படுவதே - **நகச்சுற்று** ஆகும். இதில் (1) **நகக்கணுக்கட்டி** என்பது, விரல் நுனித் தசை நாரை மூடியுள்ள சவ்வு அழற்சியுற்று, சிவந்து 'விண்' எனத்துடிக்கும் கடும் வலியுடனிருக்கும். இது நகச்சுற்றின் மூன்று நிலைகளுள் ஒன்று. இதில், விரல் மட்டுமின்றி; கை, தோள்பட்டை வரை வீங்குவதோடு - சில சமயம் விரல் எலும்புகூட சிதைவுற்று விழுந்தும், விரல் இழுத்து சுருங்கியும் உருக்குலைந்து போவதுண்டு. (2) **நகக்கணுநோய்** மேகத்தினால் ஏற்படும், இதில், விரலுக்கு அழற்சியுற்று, ஒருவித வெள்ளைத்தோல் நகத்தைச்சுற்றிலும் ஏற்பட்டு, துடிக்கும் வலிகாணும், சில சமயம் நகமே விழுந்து விடும். (3) **நகக்கணுவிரணம்** - இதில் கொப்புளம் எழும்பாமலேயே, விரலில் புண்ணுண்டாகி, கை முழுக்க நோகும். நகத்தின் வேர் அழுகி, நகம் விழுந்து விடும். (நகச்சுற்றை அசட்டையாகக் கருதாமல், உடனே சிகிச்சை செய்வதே நலம்)

## ★ 115. செவிடு ஏற்படுவது ஏன்?

வாயுக்குற்றம் மிகுந்து, கபத்துடன் சேருவதால் எற்படும், நிரந்தர காதடைப்பு அல்லது செவிகேளாமையே - **செவிடு** எனப்படும். இது பின்வரும் காரணங்களால் எற்படும். அவை, காதில் அதிகம் குறும்பி சேருவது - சன்னியினால் காதினுள் அழற்சி ஏற்படுவது - சதா அதிகமான சப்தத்தைக் கேட்டுக் கொண்டிருப்பது-மூளையில்காணும் கோளாறு- பெண்களுக்குக் காணும் சூதகசன்னி - மலை சுரம், அல்லது நச்சுசரம்- காதின் நரம்புக்கோளாறு-தொண்டையடைப்பு-அதிகம் இராவிழித்தல் - செவிப்பறைகிழிதல்-உளுந்து, மற்றும் வாயுப்பண்டம் அதிக முண்ணல் - கடும் மனக்குழப்பம் - நரம்புத்தளர்ச்சி - அந்நியப் பொருள் செவியினுள் புகுந்து அடைத்தல் - சிலவகை நச்சுப் பொருட்கள்-கடும் பிணியின் தாக்கம் - காதில் கடும் தாக்குதல் - நீரில் மூழ்கிக் குளிக்கையில் செவியினுள் நீர்புகுதல் - ஐஸ்கிரீம் முதலிய குளிர்ந்த பொருளை அதிக முண்ணல் - கொய்னா மருந்தை அதிகம் ஏற்றல் ஆகியனவாகும். இவ்வகையிலான **காதுகோளாமை** - காதொலிமந்தம் முதல் அரைச்செவிடு. முழுச்செவிடு வரை பலவகைப்படும். வாத நோய்ப் பிரிவில் செவிட்டுத் தன்மையினை - **செவிபடுவாதம்** எனப்படும். இது காதில் - வலி, இரைச்சல், சீழ், விநோத ஒலிகள், குத்தல், அழுக்குசேரல், விரணம், புற்று, புழு, சதைவளர்ச்சி, அடைப்பு போன்ற இதர குறிகளுடனும் காணலாம்.

### ★ 116. உட்காய்ச்சல் என்றால் என்ன?

உடலினுள்ளேயே காண்பதும், அதிகத்துன்பம் தராமலி ருந்து ஓரிரு நாளில் தானாகவோ அல்லது மிக எளிய மருந்து பட்டினியினாலோ நீங்கிவிடுவது மாகியதும், சாதாரணமாகக் கொள்ளப்படுவதும் **அற்பசுரம்-சந்தசுரம் - உட்சுரம்** எனக் கூறப்படுவதுமாகிய **உட்காய்ச்சல்** - பித்தகபம் தொந்தித்துள்ள போது, வாதமானது வயிறு அல்லது குடலினுள் அடங்குவதால் ஏற்படுவதாகும். இந்த **உட்காந்தலினால்** இரவு பகல் இடைவிடாமல் சுரம் காய்தல், வயிற்றுவலி, மயக்கம், தாகம். மலம் வறண்டு இறுகிக் கட்டல், குருதிகுன்றி உடல் வெளுத்தல், அசதி, அமைதியின்மை இவை காணும். பிரசவித்த பெண்களுக்குக் கூட அதிர்ச்சி, பலவீனத்தால் சுரம் கண்டு சிலநாள் நீடித்து நீங்கும். இச்சுரம் ஒத்துணர்ச்சியினாலும் காண்பதால் இதனை **அநுதாபசுரம்** எனவும் கூறுவர். (இதற்கு சுரங்களுக்குரிய மருந்தே போதும்)

### ★ 117. அழற்சி ஏற்படும் இடங்கள் யாவை?

உடலில் எப்பகுதியிலாவது வெப்பமுற்று, சிவந்து நோவுடன் காணும் வீக்கமே-**அழற்சி** அல்லது **தாபிதம்** எனப்படும். இது, நுண்ணிய குருதிக் குழல்களிடையே நடைபெறுகையில் சதைக்கோ, உள்ளுறுப்புகளுக்கோ பிரகோபத்தினால் ஏற்படும். **அழற்சியானது** பின்வரும் இடங்களாகிய - அடிவயிறு, இரைப்பை, இருதயம், இருதயச் சவ்வு, இலிங்கமலர், இடுப்பு, உண்ணாவு, எலும்பு, கடைக்கண், கண்ரப்பை, கண்ணறை, கழுத்துக்கோளம், கல்லீரல், கருப்பை, கண், கணையம், கடிதடம், குண்டிக்காய், கேடயம், கொப்பூழ், சிறுமூளை, சுவாசக்குழல், சுமரி, செவி, செவிப்பறை, தசை, தரிசியம், தாடை, தோல், தோள்ப்பட்டை, நாடி, நாளம், பல், பரிப்புப்புசம், பிட்டம், பிடுக்குவிதை, புப்புசம், மலவாய், மலக்குடல், மண்ணீரல், முலை, முலைக்காம்பு, மூத்திரத்தாரை, மேற்பரடு, முருந்து, மூத்திரப்பை, வயிறுறை, விதானம், விந்துக்குழாய், விரை, விழி, வாய், யோனி, மூட்டு, மூக்கு ஆகியனவற்றுக்கு ஏற்படும்.

### ★ 118. தாபிதம் உண்டாக்கும் பிரிவுகள் யாவை?

உடலில் ஏற்படும் **அழற்சி** எனப்படும் **தாபிதம்** அதனதன் தன்மைக்கேற்ப பல வகையாகக் கூறப்படும். அவை, கடும்பாதிப்பைத் தரும்-அதீதத்தாபிதம்; சதை அழுகிய

தினாலான - அழுகற்றாபிதம்; இடைவெளியைச் சேர்க்கும் - இணைக்குந்தாபிதம்; நாட்பட தொடரும் - இழுக்குத்தாபிதம்; நிணநீரை வெளிப்படுத்தும் - ஊனொழுக்குத் தாபிதம். நீரைத்துளித்துளியாய்க் கசியவிடும் -ஒழுக்குத்தாபிதம்; அடியிடியினாலான - காயத்தாபிதம்; சளியை வெளியேற்றும் - சளித்தாபிதம்; சீழை உண்டாக்கக் கூடிய - சீழ்த்தாபிதம்; சூலை நோயில் காணும் - சூலைத்தாபிதம்; குளிர்ச்சி வாயுவினாலான - வாதத்தாபிதம்; கடும் எரிச்சலூட்டும் - வலித்தாபிதம்; நஞ்சுகளினாலான - விஷத்தாபிதம்; அதிகமாகப்பரவும் - பரவியதாபிதம்; இதர குறிகளில்லாத - தனித்தாபிதம் ஆகியனவாகும்.

## ★ 119. அக்கி நோயின் வகை யாவை?

அக்கி என்றால் "உஷ்ணம் - கண்" என்ற பொருளும் உண்டு. எனவே **அக்கிநோய்** என்றால் உஷ்ணப்பிணியையும் -கண்ணோயையும் குறிக்கும். இங்கு கூறுவது உஷ்ணத்தினாலான **சருமப்பிணியே யாகும்**. அவை பின்வருமாறு சில வகைப்படும். 1) **அக்கி** - இது கோடைகால வெப்பம், சுரநோய்க் கொதிப்பு இவற்றால்; உடலின் பலஇடத்தில் சிவந்து அம்மைக்குரு மாதிரி சிறு கொப்புளங்கள் கண்டு, எரிச்சலுடன் புண்ணாகிப் பட்டையிட்டு நீங்கும். 2) **அக்கிப்படுவன்** - இது, அக்கிக் காய்ச்சல் எனப்படும் ஓர் குளிர் சுரத்தினால் உடலில் சதை வீங்கிச் சிவந்து வலியுடன், தினவும், எரிச்சலும் கூடிய குருக்களை எழுப்பிச் சில நாளில் மாறும். 3) **அக்கிபீச்சல்** - இது, உடலில் பல்லியின் மூத்திரம் படுவதால் அக்கியைப் போல் சிறிய கொப்புளங்கள் காண்பதாகும். 4) **அக்கிப்படை** - இது, உடலில் அக்கியைப் போல் காணும் ஒருவிதப் படையாகும். 5) **அக்கிப்புடை** - இது, உடலில் அம்மைக்குரு போல் திரண்டெழுந்து சிவந்து வீங்குவதாகும். நிற்க, தோலினின்றும்- சளிச்சவ்வினின்றும் எழக்கூடிய அழற்சியுடன் கூடிய அக்கியானது பெரும் பாலும் சிறுவர்களையே தாக்குவதாயும்-கொடுந்துன்பமின்றி விரைவில் தானே நீங்குவதாயுமிருக்கும். இது நீங்க, செங்காவிக் குழம்பால் சிங்கம், நாய் முதலிய உருவங்களைத் தீட்டுவதுண்டு. இதற்கு **அக்கியெழுதல்** எனப்படும். இதனால் அழற்சி தணிந்து - எரிச்சல் குறையுமே தவிர வேறில்லை.

## ★★ 120. காதிரைச்சல் ஏற்படுவது ஏன்?

செவியினுள் உள்ள கேள்விநரம்புகளில் வாயு சேருவதால்

நோயுற்று, அதனால் காரணமின்றியே-சங்கு, குழல், யாழ், பேரிகை போன்ற பலவித வாத்தியங்கள், கடலலை முதலிய வற்றின்-பல்வேறு சப்தங்களையும், குழப்பமான இரைச்சலையும் உண்டாக்குவதே கர்ணநாதம் அல்லது காதிரைச்சல் எனப்படும். இது, புகையிலை - மதுவகை - வாயுப்பண்டம் - கொய்னா முதலிய சில ஆங்கில மருந்துகள் - ஐஸ்கிரீம் முதலிய குளிர் பானங்கள் இவற்றை அதிகம் உண்பது; பீனிசம் பாண்டு - காமாலை - கீல்வாயு இவற்றின் பாதிப்பினாலும், காதின் அழற்சி - குறும்பி அதிகம் சேரல் - சவ்வு பலவீன முறல் முதலியவற்றாலும் ஏற்படும். காதிரைச்சலினால் அமைதிகெடல், கவனம் சிதறல், குழப்பம், வெறுப்பு இவையும், நாளடைவில் செவி மந்தமும், செவிடும் ஏற்பட்டுவிடும் (இதற்கு, காதை பீச்சாங்குழல் முதலியவற்றின் மூலம் சுத்தி செய்த பின், உரிய தைலத்தை விடலாம். மேலும், சந்தனாதி திரிபலை முதலிய தைலங்களினால் முழுகியும் வர கபால வறட்சி நீங்கி, நோய் குணமாகும்)

### ★ 121. பகல்-இராக் குருடு என்றால் என்ன?

பகல் - இராக் குருடுகள் என்பன தற்காலிகமாகவும் - தினமும் வந்து போவதுமாகும். இதில் (1) பகல் குருடு (சூரியக்குருடு - கூனாகம்) இதில், பகற் பொழுதில் கண் தெரியாமலோ, அல்லது மிக மங்கலான பார்வையுடனோ இருக்கும். இரவில் - பூமியும், சுற்றுப்புறக் காற்றும் குளிர்ச்சியடைவதால், உடலில் கேடுறும் பித்தமானது, பகல் வேளையில் பிரகோபமடைந்து பார்வையைக் குறைப்பதால் சிறிய பொருட்கள் எளிதில் கண்ணுக்குப் புலப்படாது. ஆயின் இரவில், சினமுற்ற பித்தம் தணிவதால், அதே சிறிய பொருட்கள் மிகத் தெளிவாகத் தெரியும். (2) இராக் குருடு (அந்திமாலை - மாலைக்கண் - நத்தாந்த ரோகம்) இதில் சாயுங்காலத்தில் பார்வை குன்றி இருளடையச் செய்து காலையில் பார்வை தெளிவாகும். இது, கண்களுக்கு எவ்விதத் தீங்குமின்றியே, கண்நரம்பு, தரிசன நரம்பு இவற்றின் கோளாறால் பார்வை மந்தமாவதாகும். மேகத்தினால் வரும் இந்நோயில் - உடல் வெளுப்பு, முகம் பசப்பு, தலைகனம் கண்பீளைகட்டல், அறிவு மாறல், நிமிர்ந்து பார்த்தால் கண்கூசுதல், கண்ணொளி குன்றல் இவற்றுடன் - இரவு நேரத்தில் எரியும் விளக்குக் கூட கண்ணுக்குத் தெரியாது (இவற்றுக்கு கண்ணோய் மருந்துகளே போதும்)

## ★ 122. விக்கலின் தன்மைகள் யாவை?

**உதரவிதானம்** எனும் ஈரல் தாங்கியும், அதனைச் சார்ந்த அல்லது அருகாமை உறுப்புகளும் தாபிதமுறுவதால், வாயு சினந்து, உதரவிதானத்தில் திடீரென விட்டுவிட்டுக் காணும் இசிவின் வெளிப்பாடே - **விக்கல்** எனப்படும். விக்கல் இயற்கையாக மரணத்திற்கு முன்னரும் - நீரழிவு முதலிய பிணிகளின் அசாத்திய நிலையிலும் - மேலும், குன்மம், அசீரணம், ஈரல்பிணி, வாந்திபேதி, உணவை விரைந்து விழுங்கல், மிகுகாரம் இவற்றாலும் கண்டு; உயிர் நிலையை விரைந்து தூண்டி அழிப்பதாகும். சிசுக்களுக்கு சாதாரணமாக வருவது ஆபத்தின்றியே, நீர் பருக விலகும். விக்கல் - தொண்டை, மேற்சுவாசக்குழாயின்று; துரித, குறுகிய, இசிவுள்ள, விகுத்தலான, ஆவேசமுள்ளதாகவும்; வினோதமான நடுங்கும் ஒலியுடனும், மூச்சுக்காற்றுடன் சேர்ந்தும் வெளியேறும். வயிற்றினின்று கிளம்பும் விக்கல் சில வினாடி அல்லது நிமிட இடை வெளியிலோ, தொடர்ந்து ஒன்றிரண்டோ, அதிக் மாகவோ வருவதோடு-சில நிமிடம், மணி, நாட்கணக்கிலோ நீடிப்பதுமுண்டு. பிராண - உதானவாயுக்களின் சினத்தால் இரைப்பைத் தசையில் திடீர்ச் சுருக்க முறுவதால், ஹிக்-ஹிக் என்ற ஒலியுடன் வெளியேறும் விக்கல் ஐவகைப்படும். அவை **(1) அன்னசம்** - இது, உணவாதிக் குற்றத்தால் வரும். **(2) யாமளம்** - இது, இரண்டிரண்டாக சில வினாடி இடைவெளிகளில் தோன்றும். இதில் கடும் தாகம், எரிச்சல், மயக்கம் காணும். **(3) சூத்திரர்** - இது, நுரையீரல் மார்பு கூடுமிடத்தில், இடைவெளியிட்டுப் புறப்படும். **(4) கம்பீரம்** - இது, கொப்பூழினின்று புறப்பட்டு, உரத்த ஒலி யிடனும், வலியுடனும் வெளிப்படும். உயிரைப் போக்கும். **(5) மகாவிக்கல்** - இது, மிகக் கடுமையாகவும், இடைவிடாமலும் - மலக்குடல், தலை, மர்மத்தானங்களில் கொடும் வலியுடனும் வந்து, ஆளையும் கொன்றுவிடும்.

## ★ 123. கொலையிச்சைக் கிரகம் என்றால் என்ன?

**கொலையிச்சைக்கிரக நோய்** என்பது ஒருவித துர்க்கிரகப் பாதிப்பினால் ஏற்படும். இதனால் - உடல் மெலிந்து துர் நாற்றம் வீசுதல், தோற்றம் மாறி முகமும் விகாரமடைதல், நாவைக் கடித்தல், கண்ணீர் சொரிதல், மூக்கு வறளல், வெறித்த பார்வை, நாவறண்டு தாகித்தல், துர்நாற்ற முள்ள வாந்தி, நவத்துவாரத்திலும் குருதி இழிதல், வயிறு காந்தி எரிதல்,

நினைவு மாறல் போன்றவை காணும். மேலும், பொறுப்பற்ற, தீய செயலையும் புரிவர். அவை - மலநீரைப் பிசைதல், மார்பில் அடித்துக் கொள்ளல், எதிரில் வருவோரை திட்டி அடித்தல், பிறரை ஆயுதம்-தடிகளைக் கொண்டு எரிந்து தாக்குதல், குளம் - கிணறுகளில் விழுந்து சாக முயலுதல் முதலியனவாகும். (இதற்கு, வெறி நோய் மருந்துகளுடன் - கிரக சாந்தி வழிபாடும் தேவை)

## ★ 124. உடல் - ஊனுருக்கி என்றால் என்ன?

பொதுவாக - *(1)* ஏதேனுமொரு பிணியின் காரணமாக உடல் இளைத்து, உலர்ந்து போவதே - **உடலுருக்கி** எனப்படும். அவை; குடலைச்சுற்றியுள்ள சவ்வு தாபிதமுறுவதால் குழந்தைகளுக்குக் காணும் கணச்சூட்டினால் ஏற்படும் உள்ளுருக்கி (பால சோஷணம்) - கர்ப்பச் சூட்டினால் பிணியுற்று உடல் மெலிதல் - நீரிழிவினால் நரம்பு தளர்ந்து உடல் வாடல் - சயநோயில் குருதி கெட்டு உடலுலரல் - முள்ளத்தண்டுக்கு அழிவுறுவதால் உடல் இளைத்தல் போன்றவையாகும். **(2)** உடலிலுள்ள தசை, நிணம், சுக்கிலம், கொழுப்பு, எலும்பு முதலிய சத்துக்களைப் போக்கி அதனால் அந்தந்த உறுப்புக்கள் பலவீன முற்று மெலிந்து போவதே - **ஊனுருக்கி** எனப்படும். இது பற்றும் இடத்திற்கேற்ற பெயரைப் பெறும் அவை; சயநோய் (நுரயீரலின் பாதிப்பு) - குடலுருக்கி (குடல்களைத்தாக்குவது) - குண்டிக்காய் நோய் (மூத்திரக் குண்டிக்காயின் பாதிப்பு) - எலும்புருக்கி (எலும்புகளின் பாதிப்பு) - ஊனுருக்கி (நிணநீர்க் கோளம் தாக்கப்படுவது) போன்றவையாகும். (பிணிக்கேற்ற மருந்துகளால் இவை மாறும்)

## ★ 125. கண்படல நோயின் குறி என்ன?

கண்ணின் கருவிழியையும், பார்வையையும் தாக்குவதே படல காசம் எனப்படும் - **கண்படல நோய்** ஆகும். படலம் என்பதில் வெண் விழியிலும் சவ்வு போல் படரும். இது, விழியின் மேலுள்ள, முன்புறமுள்ள முதல் அடுக்கு - அடுத்துள்ள விழித்தோல் - மூன்றாவது வெண்விழி - அடுத்துள்ள கருவிழி ஆகிய தோல்களைப் பற்றும். படலம் முற்றினால், கண் இருண்டு பார்வை முற்றாக இழக்கும். முற்றாவிடில் கலங்கலான பார்வையோடு - மின்னல், சந்திரன், நட்சத்திரம் முதலியன கண்ணுக்குத் தோன்றும். இதில், வாயு கூடினால் யாவும் சிவப்பாய்க் காணும். **பித்தம் மீறினால்**

சூரியன், மின்னல், வானவில் இவற்றைப் பார்க்கலாம். மற்ற யாவும் இருண்டும், மயிலிறகு போல் பல நிறத்திலும் தோன்றும். கபம் மிகுந்தால் எப்பொருளும் வெள்ளையாகவும், நெய் பூசியது போலும் காணும். முக்குற்றமானால் பொருட்கள் பல நிறத்திலும், புள்ளிகள் உள்ளதாயும் தோன்றும். ஆயின், குருதி கேடுற்றால் சகல பொருளும் சிவப்பாயும், இருண்ட தன்மையுடனும் காணும். இவை, சதை-இரத்த-நீர்-வரி- கருநாக -மாமிச-பசுவிழி-பஞ்சுநீர்-செவ்வேர்- வெண்மாசு- சுடர்-பக்க- செவ்வரி-வெள்ளை-கடைக்கண் படலங்கள் எனப் பல வகைப்படும். (இதற்கு கண்ணோய் மருந்துகளைப் பயன் படுத்தலாம்)

## ★★ 126. நரித்தலை வாதம் என்றால் என்ன?

அதிக உடலுறவு, கடும் சீதள காலத்தில் வாயு- கபப் பண்டங்களை மிகுதியாக உண்பது, மிக்க உண்டி, மேகசூலை - வாதம் - மேகவெட்டை இவற்றால் சினமுறும் வாயுவும், குருதிக்கேடும் இணைந்து - முழங்கால், கீல், பாதம் இவ்விடங்களில் வலியுடன் கூடிய வீக்கத்தை உண்டு பண்ணுவதே - நரித்தலை வாயு எனக் கூறப்படும் - நரித்தலை வாதம் ஆகும். இதில், முழங்காலின் உள்ளிருக்கும் இணை மூட்டுச் சவ்வுக்கு தாபிதமுற்று, உளைச்சலுண்டாகி, சூலை நீர்க்கட்டு எனக் கூறப்படும், துர்நீர் சேர்ந்து, எலும்பு வளர்ந்து, நரியின் தலையைப் போல் தோற்றமுடன் மோதுகட்டி வீங்கி நடக்கவோ, காலை நீட்ட - முடக்கவோ இயலாதபடி கடும் வேதனையும் காணும். இது, மூட்டு நரம்புகளையும் பலவீனப்படுத்தி, கணுக்காலையும் சோர்வுறச் செய்வதால் அடியெடுத்து வைக்கவும் இயலாது போகும். சிலருக்கு வீக்கமானது, நரித்தலையை விட மிகப் பெரியதாயும், சிவந்தும், வெப்பமுடனும், வலியுடனும், எலும்பின் தேய்வு அல்லது சிதைவுக்குக் காரணமாயும் இருக்கும். நாடி படபடத்து நடக்கும் (இதற்கு, மயனத் தைலம், பிண்டத் தைலம் முதலிய மேற்பூச்சுடன் - வாத, சூலைக்குரிய மருந்துகளும் தரலாம்)

## ★ 127. நிருத்தமணி நோய் என்றால் என்ன?

ஆண் குறியின் முனைத் தோல் வாதக் குற்றத்தினால் சுருங்கி மேலுக்குச் செல்வாமல் துன்பமும், வலியும் தருவதே பரிவர்த்திகம் எனப்படும் நிருத்தமணி நோய் ஆகும். இதில் சிறுநீர் சன்னமாக இறங்கும். இது சில வகைப்படும். அவை

*1) நிருத்தப்பிரகாசம் (நிகுதிமொய்த்தல்)* - இது, மேகத்தினாலும், அக்கிரம சருமத்தில் புண், புரை, விரணம் இவை உண்டாவதாலும் கண்டு, சிறுநீர்ப் புழை அழுத்தி அடைப்பட்டு சிறுநீர் வெளியேறாமல், நோவுண்டாவதாகும். வாயுவினால் இலிங்கமணிக்கு மேலாக இழுத்த முன் தோல், சுருங்கி வீக்கமுற்று, அம்மலரில் பிகுவாகப் பிடித்துக் கொண்டு கீழுக்கு இறங்காமலிருக்கும். **2) நிகுதி முறுத்தல்** (நர்தாபிரகாஷ்) - இது, பிரமேக, விரணமேகத்தால் கண்டு, கோசத்தின் அக்கிரம சருமம் சுருங்குதல் அல்லது சிறுத்தலினால் இலிங்க மணியை பிதுக்கி வெளிப்படுத்த இயலாத நிலையுண்டாகும். இதற்கும், பெண்களின் யோனிலிங்கத்தில் ஏற்படுவதற்கும் பேதமுண்டு. (இதற்கு, மேகவாயுவுக்குரிய மருந்துகளைத் தந்து - மேற் பூச்சுமிடலாம்)

**★★ 128. சன்னிபாத சுரக் குறிகள் யாவை?**

முக்குற்றக் கோளாறினால் - குடலில் தோடங்கள் கண்டு, குடற் சவ்வு தாபிதமுற்று வீங்கி, அதனால் வரும் கடும் காய்ச்சலே - **சன்னி பாத சுரம்** (டைபஸ்) எனப்படும். இதனையே, சிறிய மாற்றங்களுடன் - **அதிசார சன்னி பாத சுரம்** (டைபாய்டு) எனக் கூறப்படும். பெரும்பாலும் இரண்டின் குறிகளும் ஒன்றேயாகும். இது, பொரும்பாலும் 15-25 வயதுடைய ஆண்களுக்கே அதிகமாக வந்து, 14-21 நாள் வரை நீடித்துத் துன்புறுத்தும். இதில் - கழிச்சல், இருமல், சுவாசம், குழப்பம், அச்சம், திகைப்பு, தலைவலி, கீல்வலி, கண் சிவப்பு, சீதளம், அரட்டல், புரட்டல், நாவறட்சி, எரிச்சல், சர்வாங்க நோவு, அசதி, மறதி, கன்னம்-காது-புருவம்-தலையுச்சி இவை துடித்தல், பிதற்றல், மதம், ஓக்காளம், மிகுவியர்வை, துர்நாற்றமுள்ள மலநீர், உதடு வெடித்து குருதி கசிதல், பொறிபுலன் குன்றல் முதலிய குறிகள் காணும். ஓஜஸ் எனும் தாது கெட்டு உடல் நடுக்கம், வலிப்பு, கல்லீரல் - மண்ணீரல் - நுரையீரல் இவற்றில் கட்டி - வீக்கம் இவை கண்டு அசாத்தியமுறும். பிணியின் விளைவாக செவிடு, தலை முடியுதிரல், உடல் மெலிவு அல்லது பருமன், பல நாளைக்கு பலவீனம் போன்றவையும் காணும். இதனை - ஆங்கில முறையில். நோய் நீடிக்கும் முழுக்கெடு வரைக்கும் சிகிச்சையளிப்பர். ஆனால் சித்த முறையில் ஒரு சில நாளிலேயே தீரும். (இதற்கு. வெண்பாடாணம் அல்லது கந்தகப் பதங்கம் - சன்னிபாத பைரவரசம் முதலிய மருந்துகள் நலமுட்டும்)

### ★ 129. நரம்புச் சூலை (வாதம்) என்றால் என்ன?

நரம்புகளில் ஏற்படும் வாதவலியே, நரம்புக்குத்து அல்லது நரம்பு வாதம் எனப்படும் - **நரம்புச்சூலை** ஆகும். இது, நரம்பிலும் அல்லது நரம்பு செல்லும் வழியிலும் காணும். இது, நீரிழிவு, நச்சுகள், சூலை, முறைசுரம், குளிர்சுரம், கபநோய் இவற்றின் பாதிப்புகளாலும் - வாதம் சினமுறுவதாலும் ஏற்படும். இது காணும் - மார்வு, பிடரி, தலை, முகம், கை கால் முதலிய இடங்களுக்கேற்ப பல வகையாகக் கூறப்படும். இதில் காணும் வலியானது 'விண்விண்' என்று தெறிக்கக் கூடிய அளவில் மிகவும் கொடுமையாகவும், பதைத்துத் துடிப்பதாகவும், தோலில் உணர்வுப்பூர்வமாகவும் இருக்கும். நரம்புச்சூலையும் - கீல் வாதமும் வெவ்வேறாகும். **கீல் வாதம்** பல மூட்டுகள், கணுக்களில் காண்பதோடு - ஓடித்திரியும் இயல்புடையதாகும். **நரம்புவாதம்** ஒரே இடத்தில் நிலைத்து நிற்கும். (இதற்கு வாத-சூலைகளுக்குரிய மருந்துகள் பயன்படும்)

### ★ 130. யோனி நோயின் குறிகள் யாவை?

உடலுக்கு ஒவ்வாத உணவுகள், மேடுபள்ளமான இடத்தில் படுத்தல், அனலாதி வெப்பம், தவறான நடத்தை, ஆண்குறிக் குற்றம், அதிக உடலுறவு, சூதகக் குற்றம், துர்தேவையின் பாதிப்பு முதலியவற்றால் பெண் குறியில் காணும் நோயே **யோனி நோய்** எனப்படும். இதனால், யோனியில் கிருமி நெளிவது போலிருத்தல், அல்குல் சிவந்து வறளல் - வீங்கல், வேதனை, தினவு, சகிக்கவியலாத தொல்லை, எரிச்சல், வலியோடு கனப்பு, பிட்டத்திலும் கவுட்டியிலும் குத்தல், சருமம் சுர -சுரத்தல், தாகம், பேதி, அரோசகம், முலைகள் ஒட்டியுலர்தல், பல நிறத்துடனும் நுரையுடனும் குருதி வடிதல், சுரம், வயிற்றில் ஏழு மாதக் கருவிருப்பினும் வெளியேறி விடுதல், துர்நாற்றம் போன்றவை காணும். இது, 21- வகையாகவும், முக்குற்ற அடிப்படையில் 20-விதமாகவும், ஆக 41 - பிரிவாகக் கூறப்படும். இதில் **சன்னிபாத நோய்** அசாத்தியம் எனப்படும். அவை 1) **சண்டினி** - இதில், காமநீரின்றிப் போவதால் உடலுறவின் போது கரகரவென்ற ஒலியிருக்கும். 2) **அண்டினி** - இதில், உடலுறவின் போது யோனியானது முட்டை போல் தோன்றும். 3) **மகதி** - இதில், புணர்ச்சியின் போது யோனி வழி அதிகமாய் விரியும். 4) **சூசிகவக்தரம்** - இதில், யோனி வழி மிகக் குறுகியிருக்கும். 5) **திரிதோடசை** - இதில், சர்வ யோனிக் குற்றங்களும் காணும். பெரும்பாலும் யோனி

நோயுடையோர் உடலுறவை வெறுப்பர் - அல்லது மிக விரும்புவர். சிலர் மலடாவதுமுண்டு. சூதகச் சிக்கல் - பெரும்பாடு இவையும், யோனி நோயும் வெவ்வேறாகும். (இதற்கு, குளிர்ச்சியூட்டுவனவுடன் - குறிக்கேற்ற சிகிச்சையும் செய்ய வேண்டும்.)

## ★ 131. உதட்டு நோயின் குறிகள் யாவை?

இதழ்நோய் அல்லது ஒஷ்ட ரோகம் எனப்படுவதே - உதட்டுநோய் ஆகும். பொதுவாக. உதடுகளில் கத்திமுனை போன்ற வெடிப்பு - கடுகு போன்ற கட்டி - பலவித கொப்புளம் - பேரீச்சு போன்ற வீக்கம்-நீர்க்குமுழி போன்ற மாமிச வளர்ச்சி - முளைகள் இவை காணும். மேலும்-கருப்பு, சிவப்பு, வெளுப்பு, மஞ்சள், குருதி போன்ற நிறங்கள் தோன்றுவதுடன்; அங்கு - கடும் எரிச்சல், தினவு, முறமுறப்பு, மரத்தல், வேதனை, வெப்பம், வறட்சி, உப்பல், வாடல், அசைவின்மை, துர்மணம் இவை காணும். மற்றும் பல நிறக் குருக்கள் தோன்றி சதா புலால் கழுவியது போன்ற துர்நாற்றமுள்ள குழகுழத்த நீர் - வியர்வை-எண்ணெய்-குருதி போன்ற கசிவுகளும்; புண்களில் கிருமிகள் தோன்றி நமைச்சலும், வலியும் ஏற்படும். உதடுகள் காரணமின்றி வீங்கி வடிவதுடன்-கொப்புளங்கள் கண்டு விரைந்து பழுத்து உடைந்து சீழும், துர்நீரும் கசியும். உதட்டில் நெய் தடவியது போல் பளபளப்புடன், மிருதுவான கொழுப்பு போல் வீங்கி, சுரண்டினால் இதமான அரிப்பும், அங்கு குளிர்ச்சி பட்டால் கடும் நோவும் காணும். உதட்டின் பிளப்புப்புண், மிக நாற்றமுள்ள துர்நீர்க் கசிவுடன் எளிதிலும் ஆறாது, இங்ஙனமே, வெளிக்காயங்களினால் உதடுகள் கிழிந்து, வெடிப்புற்று, வீங்கிச் சிவந்து, புண்-கட்டி - மாமிச முளை - பக்குகள் கண்டு தினவும், வலியும் ஏற்படும். (இதற்கு, குங்கிலிய வெண்ணெயை மேலே தடவி-உள்ளே அழற்சிக் குரியனவற்றைத் தரலாம்)

## ★ 132. தாடை நோயின் குறிகள் யாவை?

முகவாய்க் கட்டையில் வருவதே அலகுநோய் அல்லது தாளுரோகம் எனப்படும் தாடைநோய் ஆகும். இதில் தாடையினுட் புறம் மீனின் பித்துப்பை - மலர்ந்த தாமரைப்பூ - உண்ணாவு - இலந்தைப்பழம் - ஆமையின் முதுகு போன்ற வடிவுகளில், சிவந்து சுரசுரப்பான மாமிசத்தடிப்புகள்,

கொப்புளங்கள் கண்டும் - **தடையின் வெளிப்புறம்** மினுமினுப்புள்ள மிருதுவான அல்லது கடினமான வீக்கம் எழும்பித் தொங்குவதாயும் இருக்கும். உட்புறம் நோவின்றி துர்மாமிச வளர்ச்சியுடன் - கழலை வீக்கம் தோன்றி நிலைப்பது அல்லது வற்றி மீண்டும் வருவதுமாயிருக்கும். தொண்டையடைத்து உணவு செல்லாமையும் - புசிப்பன நாசி வழியே விழுவதும் காணும். புலால் நாற்றமுள்ள கோழையும், துர்நாற்றமுள்ள சொள்ளு நீரும் வடியும். தொண்டை கட்டிப் புண்ணாகி, சீழும் குருதியும் இழியும். தாடையில் வலி, இருமல், தாகம், நாவறட்சி, வாயில் கொப்புளம் காணும், வாதம், பித்தம், சுரம் முதலியவற்றால் உடல் மெலிவுற்ற சமயம் தாடைகள் வறண்டு, வற்றி, ஒடுங்கிக்காணும். சுரதாகமுடன் தாடையில் தீராத வீக்கம் காண்பதை - **கண்டாலஜிரோகம்** எனப்படும். (இதற்கு, கிரந்திகளுக்குரிய மருந்துகளைத் தரலாம்)

## ★ 133. வாய் நோயின் குறிகள் யாவை?

வாயின் தொடர்பாக வருவதே - **வாய்நோய்** எனப்படும். இதில் **வாய்முழுவதும்** சிறு புண் - சுண்ண வேக்காடு போன்ற கொப்புளம் - முள் குத்தியது போல் அருகல் - வழுவழுத்த விரணம் - சிறு கீறல் - மாமிச முளை இவை கண்டு, அரிப்பு, எரிச்சல், வேதனை காணும். **நாவு** தடித்து - வெடித்து - சிறு கொப்புளங்கள் கண்டு, தினவு - எரிச்சல் - வலியுடன் காரமும், குளிர்ச்சியும் படவியலாது. **தாடையினுள்** கருப்பும், வெளுப்பும் கலந்த கட்டியுண்டாகி, அதை அறுத்தாலும், உடைத்தாலும், பிதுக்கினாலும் மீண்டும் வளரும். கருத்து, வெளுத்த கபம் **தொண்டை** அல்லது மூக்கு வழியாக சதா வெளியேறும். வாயில் இனிப்பு - கசப்பு - உவர்ப்புச்சுவையுடன் - ஒருவித ஆவியைப் போல் புகையெழும்பும். **உதடுகள்** சுரசுரத்து - கனத்து - தோலுரிந்து செம்புபோல் நிறமுற்றுக் காந்தும். **நெஞ்சில்** துர்மணமுற்று, **பற்கள்** கருத்து, பல் துலக்க வியலாமல் வலித்து அருவருக்கச்செய்யும். மலநீரில் ஊடுருவிய அபானவாயு மேல்நோக்கி வாயின் வழியே வெளியேறுவதால், சதா வாயில் துர்நாற்றம் வீசிக் கொண்டேயிருக்கும். (இதற்கு மலநீர்ச்சிக்கலைப் போக்கியும் - துவர்ப்பி மருந்துகளைத்தந்தும் வேக்காட்டை மாற்ற வேண்டும்)

## ★★ 134. இந்திரலுத்தம் (வழுக்கை) ஏற்படுவது ஏன்?

இந்திரலுத்தம் என்ற **எரிப்பூச்சிகளானது** பயிர் முதலிய

பச்சிலைகளை அழித்து ஒன்றுமில்லாமல் செய்து விடுவது போல் - இந்நோயிலும் மயிர்க்கால்களைக் கெடுத்து தலையில் **வழுக்கையை** உண்டுபண்ணுவதால், இதற்கு **இந்திரலுத்தம்** என்ற பெயர் ஏற்பட்டது. இதில் - பித்தமானது மயிர்த் துவாரத்தில் பரவி, வாதத்துடன் இணைவதால் தலையிலுள்ள **மயிரெல்லாம் உதிரும்**. இப்படி பித்தம் முதலியன உரோமத்துவாரங்களை அடைவதால் உதிர்ந்த உரோமம் முளைக்காது. இங்ஙனம் தலை முடியை உதிரச்செய்வதுடன் கபாலத்தை மூடியுள்ள தோலின்மீது வழுவழுப்பான தொரு மழுங்கலை உண்டு பண்ணுவது - **கலதி** எனப்படும். இது, **வாதத்தில்** பிறப்பதாயின், அத்தோல் தீயில் சுட்டாறிய வடுவைப் போன்ற மச்சத்தையும் - **பித்தத்தால்** ஏற்பட்டால் அம்மச்சத்தில் வியர்வை கசிவதாயும் - **கபத்தால்** ஏற்பட்டால் அச்சருமம் மிகக் கடினமுடனும் - **முக்குற்றத்தால்** பிறப்பதாயின் அத்தோல் நகத்தின் நிற முடனும், மாறாத எரிச்சலுடனும் தோன்றும். சாதாரணமாக வந்து மாறும் புழுவெட்டும் - வழுக்கையும் வெவ்வேறாகும். (இதற்கு, குளிர்ச்சியும் - கிருமி நாசினிக் குணமுமுள்ள சாறுகள் கலந்த தைலத்தினால், முழுகியும் - பதமுமிட்டு வரலாம்)

## ★★ 135. பலித நோய் (நரை) ஏற்படுவது ஏன்?

இயற்கையாக முதுமையில் நரைப்பதும் - அகால நரையும் வெவ்வேறாகும். அதிகமான சினம்-பயம்-கவலை- சிந்தனை -குழப்பம்-உழைப்பு-உட்சூடு இவற்றாலும், தடியிடி படலாலும் விளையும் மிகு வெப்பமானது, உடல் முற்றும் பரவி சிரசைப் பற்றி அங்குள்ள தலைமயிர் வேர்களையெல்லாம் வேகும்படி செய்துவிடுவதால் குட்டிநரை எனும் உரோம வெளுப்பாகிய **பலிதநேயை** உண்டுபண்ணும். தலை மயிர் **வாதத்தால்** நரைத்தால் அதன் முனை பிளந்து, நகத்தின் நிறமுடனும், சிறிது கருப்பாயும்; தொட்டால் வெப்பமாயும் - **பித்தநரையானால்** செம்மை, பொன் நிறங்களுடன்; மயிர்க்கால்கள் எரிச்சலுடனும் - **கபத்தினால்** நரைத்தால் வெள்ளிக்காசு போல வெளுத்து, மினு மினுப்புடனும், அதிக அளவிலும், நரைக்குமிடத்தில் தினவுடனும்-**முக்குற்றத்தால்** நரைத்தால் சகல குணங்களுடனும் தோன்றும். (இதற்கு - கரிசாலை, நெல்லி, எலுமிச்சை, மருதோன்றி, செம்பரத்தம்பூ போன்றவை கலந்த தைலம் போட்டு வரக்குணமாகும்)

## ★ 136. சந்நியாச மூர்ச்சை என்றால் என்ன?

உயிர்நிலைகளில் அதிகரிக்கும் முக்குற்றம் சன்னிபாதமாகி, தானும் - மனம், மெய், வாக்கு இவற்றையும் அடக்குவதால் காண்பதே - **சந்நியாச மூர்ச்சை** எனப்படும். இதில், நோயாளி வெட்டிய மரம் போல் விழுந்து, உயிர் இருப்பினும் செத்த பிணம் போல் கிடந்து (கோமா) இறந்து விடுவதால் இது கடின சாத்தியமாகும். மூர்ச்சைநோயில் பொதுவாக, உடல், கருப்பு - சிவப்பு - மஞ்சள் ஆகிய நிறமுடனும்; உடல் இளைப்பு - எரிச்சல் - காங்கை - வியர்வை - கனம் - பாரம் இவற்றுடன் உறுப்புக்களை அசைக்கவியலாமலும் சக்தியிழந்து கிடக்கும். நனைத்து தடித்த தோலை உடலில் போர்த்தியது போலிருக்கும். முதலில், ஆகாயத்தைக் காண கருப்பு - சிவப்பு - மஞ்சள் - நீலம் - மேகம் கம்மியது போன்ற நிறங்களாகத் தோன்றி, உடன் மூர்ச்சையுற்று உடனேயோ, நெடு நேரம் சென்றோ தெளியும். கண் கலங்கி மஞ்சள் அல்லது செந்நிற மடையும். மலம் துண்டுதுண்டாக நழுவும். நெஞ்சுவலி, தாகம், நடுக்கல், மார்புத்துடிப்பு, வாநீரொழுகல், பிரமை இவை காணும். சாதாரணமாகக் காணும் **மூர்ச்சையும் - மயக்கமும்** வேறாகும். (இதற்கு, மூர்ச்சைக்குரிய சிகிச்சைகளே போதும்)

## ★ 137. உளமாந்தை நோயின் குறிகள் யாவை?

குடற்சயம் அல்லது குடலிளைப்பு என்பதே - **உளமாந்தை நோய்** ஆகும். சயநோயின் ஒரு பிரிவாகிய இந்நோய் - பசியின்றியும், புலாலையும் மிகுதியுண்ணல், பகலுறக்கம், இராவிழித்தல், மிகு புணர்ச்சி, மூச்சிரைக்க ஓடுதல் முதலியவற்றால் - வயிறு மந்தித்து, பசித்தீ கெட்டு உணவு செரியாமல் வயிறு ஊதிக் கழிதல், இருமிச்சளியைக் கக்கல், உடலிளைப்பு இவை கண்டு நாட்பட நிலைக்கும். இதில், முதலில் தொண்டை கட்டி சிணுக்கிருமல், மூக்கு நீரொழுகல், தலைவலி - உட்புறம் கட்டி ஏற்பட்டு, பழுத்து உடைந்து, வாயின் வழியே சீழ் வருதல் - இருமல் இடைவிடாமல் நிலைத்து, சளிமிகுந்து கடினமுற்று, தாங்கவியலாத துர்நாற்றமுடன், சீழ் போன்ற நிறமுடன் வெளியேறுதல் காணும். அடி வயிற்றில் கட்டிபோல் வீங்கி, வரவரப் பருத்துப் புண்ணாய் நோகும். மிடற்றுப் புண்ணாகி, விழுங்கவியலாது. உடல் மெலிந்து - வற்றி - வெளுத்து - வலிமைகுன்றி, கைகால் சோர்ந்து நடுங்கும். மார்பு - விலாப்புறம் நோகும். உணவில் வெறுப்பு, இசிவு, நினைவு மாறல், மயக்கம், மனத்தளர்ச்சி,

அரட்டல், புரட்டல், மிகு தூக்கம், அசதி, இரைப்பு உட்பட சயநோய்க் குறிகளும் காணும். (இதற்கு, சயநோய்க்குரிய சிகிச்சை செய்யலாம்)

**★★138. சொறி - சிரங்குகளின் குறிகள் என்ன?**

இவற்றுள் - *(1)* **சொறி (விசர்ச்சிகா குட்டம்)** - இதில், தோலில் நெய் பசையுடன் கூடிய வெளிர் நிறத் தடிப்புண்டாகி தினவு, எரிச்சல், நோவுடன்-சொறியுமிடம் சிவந்து, கடினமுறும். கரு நிறக் கொப்புளம் கண்டு, உடைந்து விரணமாகி, துர்நாற்றமுடன் கபில நிற சினை நீர் வடியும். தவளை அல்லது தாமரைமுள் போல் சுரசுரவென எழும்பி, அரிப்புடன் விரைந்து பரவும். சருமம் பாம்புத் தோல் போல் மினுமினுத்துப் பின் கருக்கும். வயிறு பொருமல், சோம்பல், நாவறட்சி, கைகாலெரிவு, சலசலப்பு இவை காணும். *(2)* **சிரங்கு (பாமா குட்டம்)** - இதில், தாமரைக்குடை போல் எழும் கொப்புளங்கள், கருத்து - சிவந்து - பருத்து - சிறுத்து - நெருங்கி, முன் கைகால், தொடையில் எழும்பி விரண முற்று, வறண்டு, வலி, தினவுடன் பிசுபிசுத்த நாற்ற முள்ள துர்நீரும் வடியும். சொறிந்த இடம் வெளுத்து, எரித்து, வீங்கும். பாம்புச் சட்டை போல் தோலுரியும். புண்பட்ட இடம் எளிதில் உலராமல்; கைகால் அழுகி, வரவரக் குறைந்து கொண்டே வரும். உடல் குன்றி - எரியும். (இவற்றுக்கு, மேற்பூச்சுடன் - கந்தகாதி மருந்துகள் தரலாம்)

**★ 139. சரும வெடிப்பு-கொப்புளங்களின் குறிகள் என்ன?**

இவற்றுள் - *(1)* **சரும வெடிப்பு (சமர்தல குட்டம்)** - இதில், உடல் முற்றும் வலித்து, கீற்று கீற்றாக வெடித்து, தடித்து, சிவக்கும். கடும் தினவுடன், தொடக்கூடத் தாங்க வியலாத வலி-எரிச்சல்-குத்தல்-குருதி வடிதலுடன் கொப்புள முற்று புண்ணாகி, சிதைந்து உதிரும், சிலருக்கு, உள்ளங்கை கால்களில் மட்டும் பாளம்பாளமாய் வெடித்து, மிகவறண்டு அல்லது நீர் கசிந்து மிக வேதனை தரும். மேலும், மயக்கம், அசதி, வயிற்றுவலி, அரிப்பு, பிசுபிசுத்த நீர், பொக்கு உதிரல் இவை காணும். *(2)* **கொப்புளம் (விச்போடக குட்டம்)** - இதில், மேகம் மற்றும் கோடையின் உட் சூடு இவற்றால்-உடல் முற்றும் வறண்டு, அரிப்புண்டாகி, தீப்புண் போல் எரிச்சலுடன், கொப்புளங்கள் கிளம்பும், சருமம் பாளம் பாளமாய் பிளந்து, பிறகு நல்ல பாம்பின் படம் போல் வீங்கித் தடித்து வெளுக்கும்.

தோல் தடித்தும்-மிருதுவாயும் காணும். கொப்புளங்கள் சிவந்து - வெளுத்துப் பரவி, விரணமுற்று; விஷகடி போல் எரிச்சல், தினவுடன் மனக் கவலையை ஏற்படுத்தும். (இவற்றுக்கு, மேற்பூச்சுடன் - மேக/நோய்க் குரியனவும் தரலாம்)

## ★ 140. படர்தாமரை-புண் புரைகளின் குறிகள் என்ன?

இவற்றுள் *(1)* **படர்தாமரை (புண்டரீக குட்டம்)** - இதில், உடல் - முகம் - காதுகளில் தாமரைப் பூவிதழ் போல் உயர்ந்து மேலெழுந்த விரிந்த படையுண்டாகி, விளிம்பில் குருதி நிறமுடனும்-நடுவில் வெண்மையாகவும்; மற்றும் கருப்பு -சிவப்பு-வெளுப்பு நிறங்களுடனும், எரிச்சல்-தினவு- அரிப் புடனும் காணும். சொறிந்தால் குழம்பலான துர்நீர்க்கசிவும் - குருதி சொரிதலும் கண்டு பிறகு வாடும். மென்மேலும் பரவுவதாயும் -தடிப்புகள் பழுக்க நாட் செல்வதாயும் இருக்கும். *(2)* **புண் புரை (சதாரு குட்டம்)** - இதில், உடல் இரத்தம் போல் சிவந்தோ, வெளிர் பசுமை கலந்த சிவப்பாகவோ மாறும். கருத்துச் சிவந்து அடியகன்ற பெரும் கொப்புளம் கண்டு, உடல் முற்றும் பரவும் விரணங்களாகி, கடும் எரிச்சல் -தினவு-கிருமி கண்டு, சொறிந்த இடம் கரடு கட்டி புண்ணாகிப் புரையோடும். கரடு கட்டியது, பாம்புச்சட்டம் போல் நீண்டு உருண்டு, பருத்துப் பரவிக்காணும். நாசி, கண் காது, கன்னம் இவை தடித்துத் துடிக்கும். புரையோடும் புண்கள் நீண்டநாள் நிலைத்து துன்பம் தரும். (இவற்றுக்கு மேற்பூச்சுகளுடன் - மேக சருமங்களுக்குரியனவற்றை றத் தரலாம்.)

## ★ 141. கட்டி - கழலைகளின் குறிகள் என்ன?

இவற்றுள் - *(1)* **கட்டிகள் (தசை எழுச்சி)** - இவை, பொதுவாக தோலினடியிலுள்ள சதை, இழை முதலிய தாதுக்களின் விகல்பம் அல்லது அழிவினால் விளைந்து, அழற்சியுடன் சீழ் கொண்டு எழும் வீக்கமாகும். சாதாரணமாக -பரு, மரு, கொப்புளம், ஊமை வீக்கம், கழலை, பிளவை, அரையாப்பு, கண்டமாலை, களகண்டம், மூளை - ஈரல் வீக்கம் போன்றவற்றையும் கட்டிகள் என்றே கூறுவதுண்டு. இது, வரும் இடத்திற் கேற்பவும் - குணம், தன்மை - நோய்களுக் கேற்பவும் பலவாறு கூறப்படும். இவை, மூல காரணத்திற்கேற்பவும் - வாதாதிக் குற்றங்களுக் கேற்பவும் பலவித அளவு-நிறம்- நோவு -தன்மை-வலிமை போன்றவற்றுடன், விரைவில் தீருவதாகவோ - மிக நீடிப்பதாகவோ இருந்து துன்பம் தந்து, பழுத்து கட்டியான மஞ்சள் நிறச்சீழுடன்-ஆணி வெளியேறிய பிீ

ஆறும். *(2)* **கழலை (அவுதும்பரக் குட்டம்)** - இதில், உடல் முற்றும் அத்திக்காய்களைப் போல், முகம் வைக்காமல், சிறிதும் பெரிதுமான கழலைகள் தோன்றி, நாளுக்கு நாள் பெருத்து, பழுத்து அமுங்குவதால் தோல் சுருங்கி, மரத்தில் அத்திக்காய் காம்புடன் தொங்குவது போல், கழலை கழலையாகத் தொங்கும். மேலும், தினவு - சொறி - திமிர் கண்டு சொறிந்த இடத்தில் செந்நீரும் கசியும். உடலில் மதமதர்ப்புடன் உளைந்து கருத்துச் சுருங்கல், விரணத்தின் குருதியில் புழுக்கள் நெளிதல், மயக்கம் இவை காணும். சிலருக்கு அளவு மீறிப் பருத்து கடினமுற்று வன் கழலையாக மாறித் தொங்கும். (இவற்றுக்கு, சூதகந்தி - வல்லாதி முதலியன கலந்த மருந்துகள் பயன்படும்.)

## ★ 142. கண்டமாலை நோயின் குறிகள் யாவை?

முக்குற்றங்களினால் கொழுப்புதாது கெடுவதாலும், துர் மாமிச வளர்ச்சியினாலும் - கழுத்து நரம்புகளில் தோலின் நிறத்திலேயே சுண்டை, நெல்லி, சிறு கத்தரிக்காய் போன்று சிறிய, பெரிய அளவுகளில் தோன்றும் மினுமினுப்பான கட்டிகளே - **கண்டமாலை** எனப்படும். இவை, நாளடைவில் பழுத்து அரித்து உடைந்து, நடுவில் குழி விழுந்து, சீழ்கட்டிப் புண்ணாகிப் புரையோடி பல தோற்றத்துடனும், இலேசான வலியுடன், துர்நாற்றமுள்ள சீழ் கசிவதாயும்; அவற்றுள் சில உஷ்ணம், தினவு, நமையுடனும் காணும். சில கட்டிகள் கிளை பிரிந்து செல்வதாயும் - சில, நீண்ட நாளாகியும் கரையாமல் வலுப் பெறுவதாயும் இருந்து துன்பம் தரும் - இவை, கழுத்தைச் சுற்றிலும் மாலையணிந்தது போல் பரவுவதால் - **கண்டமாலை** என வழங்கலாயிற்று. இவை, அறுகு போல் முளைப்பதும் - தணிவதுமாக இருப்பதுடன்; உடல் மெலிவு, சுரம், இருமல், பீனிசம், வாந்தி, பக்கநோவுகளுடனும் காண்பது அசாத்தியமாகும் (இதற்கு, இடிவல்லாதி - இரசகந்தி - நந்தி முதலிய மெழுகுகளைத் தரலாம்)

## ★ 143. விருப்புருதி - பிளவைகளின் குறி என்ன?

இவைகள் **மேகநீர்க்கட்டிகளில்** சிறப்புடையவையாகும். இவற்றுள் - *(1)* **விப்புருதி (வித்திரதி)**-இதில், தோல், குருதி, மாமிசம், கொழுப்பு, எலும்பு, நரம்பு இவற்றில் சிறுகச்சிறுக உருவாகி, தடித்து எழுந்து, சீழுற்று, மெதுவாகப் பருத்து, கடும் வேதனையுடன் உடையும். இது, நரம்புகளில் ஓடிஓடித் திரிகையில் **ஓடுவிப்புருதி** எனக் கூறப்படும். இது, கொப்பூழின் மேற்பகுதியில் வந்தால் வாய்வழியாகவும்-நாபிக்குக் கீழ் வருவது

ஆசனவழியாகவும் வெளிப்படும். இது பல் வேறு வடிவிலும் -நிறத்திலும்-இதர உள்வெளிக் குறிகளுடனும் கண்டு துன்பம் தரும். **(2) பிளவை** - இதில், தலை, கன்னம், பிடரி, இடுப்பு, மார்பு, முதுகு போன்றவற்றில், மாங்காய், தாமரைக்காய், பந்து போன்ற கட்டிகள் கண்டு, ஒன்று அல்லது பல முகக் கண்களுடன் பழுத்து புரையோடும். இதில் கடும் வலி, எரிச்சல் சுரம், சோபதாபம், நாவறட்சி, கழிச்சல், காந்தல், திரட்சி இவை காணும். இதில், நடு முதுகு முள்ளந்தண்டில் வருவது-**இராசபிளவை;** முள்ளந்தண்டு ஓரத்தில் உறை போல் வருவது-**பக்கப்பிளவை;** மார்பு, ஈரல் பகுதியில் தண்டுக்கோல் போல் திரளுவது-**மார்புப்பிளவை;** கழுத்து, நெஞ்சின் வலப்புறம் வருவது - **எழுநாயறு;** அங்கு இடப்புறம் வருவது - **படு நாயறு** எனப்பலவாறு கூறப்படும். இதில் இராசபிளவை அசாத்தியமாகும். எனினும், கண் அடைபட்டு துன்பம் தரும் பிளவைகளை, கத்தியினால் கீறிவிட்டு சுத்தித்து, கார மருந்துகளையிட்டு ஆற்றுவது நலமாகும்.

## ★★ 144. கருமேக - செம்மேகக் குறிகள் யாவை?

இவற்றுள் **(1) கருமேகம் (கிருஷ்ண குட்டம்)** - இதில், உடல் முற்றும் பரவலாகவும்; குறிப்பாக தலை - மூக்கு - இமையினடி-மேல் நெற்றி - புறங்கால் - முழங்கால் - அரைப் பகுதிகளிலும்; தோலில் உணர்வின்றி கரு நிறமுற்று, தடித்துப் படர்ந்து, சற்றுச் சிவந்து மதமதர்த்து செதிலாக உதிருவதாயும், துர்நாற்றம் வீசுவதாயுமிருக்கும். உடல் முற்றும் - குறிப்பாக படைகளில் தீயாயெரிந்து தினவுடன் சாம்பற் பொடி போல் உதிரும். உடல் வலி, தலைசுற்றல், விரணம், தாதுக்களில் கொதிப்பு, மனக்கலக்கம் இவை காணும். **(2) செம்மேகம் (வியாதிகா குட்டம்)**-இதில், கைகால்-கண் காது-கழுத்து - விரை-உடல் இவற்றில் செந்நிறத் தடிப்பும், புண்ணுமுண்டாகி, தோல் வெடித்து, கடும் எரிச்சலும்-சூடும் கண்டு, சீழ் வடியும். மற்ற இடத்தில் பாம்புச்சட்டம் போல் சருமம் மினுமினுத்தும், நாளடைவில் கருநிறமுற்றும், கைகால் சந்துகளில் கருத்துத் தடித்தும், உணர்வின்றியும் காணும். பாதம் - உள்ளங்கையில் வெடித்துப் பிளந்து, காற்றுப் பட்டால் கூட சகிக்க வியலாத வலியுடன், தீச்சுட்ட புண் போலாகி, சருமத்தைத் தின்னும். புண்களின்றி, செம்படை மட்டும் கண்டு, நரம்புகளைப் பற்றியிழுத்து, விரல்களை மடக்கிச் செயலிழக்கச் செய்வது முண்டு. (இவற்றுக்கு, சேங்கொட்டை, கந்தி, சூதம் கலந்த மருந்துகள் தரலாம்)

## ★★ 145. வெண்மேகக் குறிகள் யாவை?

**வெண்மேக (சுகுவத குட்டம்) நோயில் உடல் முற்றும்** தடித்தோ-தடிக்காமலோ மயிர் உட்பட வெளுக்கும். மூட்டுகள் -உதடு-மூக்கு நுனி-விரல்-காதுமடல்-குறி-ஆசனம்-உச்சி இவற்றில் தீச்சுட்டது போல் எரிச்சலும், உலராத தீப்புண்ணில் உள்ளது போல் வெண் சிவப்பு நிறமும் காணும். சில சுரசுரத்துச் சிவந்து, சிறிது கருஞ்சாயலுடன் வெளுத்தும் - வெளுக்காத இடம் அழுக்கு நிறமாயுமிருக்கும். செந்தாமரைப் பூவைப் போல் வெளிர் சிவப்பாகவோ - தும்பைப்பூவைப் போல் வெளுத்தோ புள்ளிகள் விழுந்து பரவித் தடித்து எரிச்சல், தினவுடன் - அங்குள்ள மயிரும் உதிரும். சருமத்தில் வீங்கி, வெடித்து, வெளுத்து, அசருண்டாகி உதிரும். இதில் மயிர் கூட வெளுப்பது - தடவினால் மேடு பள்ளம் தெரிவது - முதலில் குறி, உதடு முதலிய மெல்லிய இடங்களில் தோன்றி கடுமையாகவும், விரைவாகவும் பரவுவது-தடிப்புற்ற தோலில் கீறினாலும் வலியின்மை - புள்ளியில் ஊசியினால் குத்தினால் வெண்ணிற நீர் வருவது-சடைப்பின்னல் போலும், தீச் சுட்டாறிய வடுபோலுமிருப்பது ஆகியன மிகக் கடின சாத்தியமாகும். (இதற்கு, கருஞ்சீரகம், கார்போகி, காட்டுச் சீரகம் கலந்த சூரணமும் - நந்திமெழுகு, கந்தி மெழுகு போன்றவையும் தரலாம்)

## ★ 146. உடல் பருமன் - மெலிவு குறிகள் யாவை?

*(1)* **அதிதூல ரோகமே - உடல் பருமன் நோய்** ஆகும் இதில், உடலின் மாமிச-கொழுப்பு தாதுக்கள் அதிகம் வளருவதால் உடலும், மார்பு - வயிறு - தொடை - பிருட்டம் இவையும் அளவு மீறிப் பருத்து, அசைவின்றிக் கடினமா யிருக்கும். எனவே, உடலை விரும்பியபடி இயக்கவியலாமை நடந்தால் சதைகள் குலுங்குதல், மேல் மூச்சு, இரைப்பு ஆயாசம், அறிவு மயங்கல், கபம், சிறு இருமல், மகிழ்வின்மை தாழ்வு மனப்பான்மை, செயலில் விரைவின்மை ஏற்படும். இது விந்துநாதக் குற்றத்தை ஏற்படுத்தினால் கருவழிவு, சூதகச்சிக்கல் ஆண்மைக்குறைவு, மலடு இவை எற்படும். **(2) அதிசுட்சு ரோகமே - உடல் மெலிவு நோய்** ஆகும். இதில், சாமாக்கினி குறைவால், செழித்து வளர்ந்த மாமிச - கொழுப்பு தாதுக்கள் வற்றி உடலிளைக்கும். இதனால்-நரம்பு, கில், கழுத்து, வயிறு. தொடை, தாடை, புயம் இவை உலர்ந்து மெலியும். உட் சூட்டுடன், கண் குழிவிழுந்து, நாவறளும். பலவீனம், சோர்வு, ஆயாசம், தூக்கம், செயலில் வலுவின்மை, மிகுதாகம், ஏக்கம்

கவலை, கைகால் - இடுப்பு அசதி, தன் உடலைக் கண்டு திடுக்கிட்டு ஏங்கல், தேவாங்கு போன்ற தோற்றம் இவை காணும். இது, சயம், எலும்புருக்கி, கணம், வறுமை, பட்டினி, தீராக்கவலை, மிக்க அலைச்சல், சரிவர உணவும் - தூக்கமும் கொள்ளாமை இவற்றாலும் ஏற்படும். (இவற்றுக்கு பிணிக்கேற்ற சிகிச்சை தேவை)

## ★ 147. நாவு முள்-நாற்றம்-அரணையின் குறிகள் யாவை?

இவை பெரும்பாலும் குழந்தைப் பிணிகளாகும். இதில் (1) நாமுள் - இதில், நாவு - தொண்டை - வாயில் முள் கிளம்பி, அருகலுடன் தேக்கு இலை போல சுரசுரத்து, மதமதர்த்து அழன்று எரியும். நாவில் முள் தைத்தது போலும், மழுங்கிய அல்லது இலவம் முள் போலும் நிரம்பி தடித்துச் சிவந்து, வெளுத்து கொப்புளங்கள் கண்டு நோகும். கணவுபோல் மயங்கி பொறி கலங்கும். கண்கள் திறந்தேயிருந்து நீர் சொரியும், விலாவில் அள் எடுக்கும். முலையுண்ணாது - வாய்பேசாது - தலைநடுங்கி வலிக்கும். சுரம், இருமல், கபம், மேல் மூச்சு, கையில் தங்காமை, வாந்தி, வேப்பம் பூ நிற பேதி காணும். (2) நாநாற்றம் - இதில், நாவு புண்ணாகி கவிச்சு நாற்றம் வீசும். மிடறுநோகும். பாலுண்ணாது, சூடான கபமுடன், சுரம் காயும். மலம் தீய்ந்து கருகும். (3) நாவரணை -இதில், நாவின் கீழ் குருணைச் சோறு போல் வெளுத்த குருக்கள் கண்டு, காதில் குத்தலும், தலைவலியும் காணும். வாநீரூறிக் குமட்டும். உடல் வியர்த்து, பிடரி திமிர்த்து, கபம் கூடும். நாவில் தடித்து, சுண்ணம் பட்டதுபோல் வெந்து, குமிழம் பழம் போல் உருண்டு நோகும். நாடி விறைத்து, நாவு திமிர்த்து, மிடறு வறண்டு பேசவியலாது. (பொதுவாக, நாவுப் பிணிகள் -ஆண்களுக்கு நாவின் வலப்புறமும்- பெண்களுக்கு இடப்புறமும் வந்தால் தீருவது கடினம்)

## ★ 148. முலைகளில் காணும் பிணிகள் யாவை?

பெண்களின் முலைகளில் காணும் சில முக்கிய நோய்களாவன - (1) முலைவிப்புருதி (தன வித்திரதி) - இது, கருப்பிணி அல்லது பிரசவித்துள்ளவர்களுக்கு, முலைப்பால் சுரப்பினும் - இல்லாவிடினும், முலையின் நரம்புகளைப் பற்றி கட்டியாக எழும்பி வீங்குவதாகும். இச்சீழ்க் கட்டி கடும் துன்பம் தரும். கன்னியரின் முலை நரம்புகள் மிக நுட்பமாயுள்ளதால், இக்கட்டி அவர்களுக்கு வருவதில்லை.

**(2) முலைப்புற்று** (தனப்பிளவை) - இது, சிசுவுக்குப் பால் புகட்டாமை அல்லது மேகத்தினால் புற்றுண்டாகி கொடும் தொல்லை தரும். **(3) முலை நோய்** (தனருக்கு வாதம்) - இதில், முலையின் உள்ளும் - புறமும், நேர் முதுகிலும் வேதனையுடன்; முலைக்காம்பை வாளால் அறுப்பது போலி ருக்கும். அடிக்கடி வாந்தி வரும். **(4) முலையெரிச்சல்** (தனத்தாபம்)-இதில், முலைப்பால் சுரப்பிகளின் அழற்சியால் வந்து - கடுமையாக எரியும். **(5) முலைக்குத்து** (தனச்சூலை) - இது, கட்டி தோன்றுமுன்போ, சூலையினாலோ முலையில் ஊசி அல்லது ஈட்டியினால் குத்துவது போல் நோவதாகும். **(6) முலைக்கட்டி** (தனச்சிலந்தி) இது, முலையில் காணும் ஒருவிதக் கொப்புளப் புண்ணாகும். **(7) முலைக்காம்பு நோய்கள்** - இது, முலைக்காம்புகள் கீறி அல்லது வெடித்துப் புண்ணாதல்-முலைக்காம்பை துண்டிப்பது போல் வலித்தல் -முலைக் கண்கள் அடைபட்டு நோதல்-முலைக் காம்பு சுருங்கிப் போதல் முதலியனவாகும். மேலும் **(8) முலையெழாமை** (தனமின்மை)-**பால் கட்டி நோதல்-பால் வற்றிப் போதல்** ஆகியனவாகும். (இதற்கு, பிணிக்கேற்ற சிகிச்சை தேவை)

## ★ 149. செருக்கு நோயின் குறிகள் யாவை?

நாள் முழுவதும் நினைத்த போதெல்லாம் அளவு மீறி மது அருந்துவதால் வருவதே மதநோய் எனப்படும் - **செருக்கு நோய்** ஆகும். இந்நோயினர், தன்னை மிக்க வலிமையுடைய வனாகக் கருதிக் கொண்டு, கண்டவாறு பேசுதல். சினமுற்று சீறிவிழல்-காரணமின்றி களிப்படைதல்-இடைவிடாது விரைந்து பேசல்-ஒன்றுகிடக்க ஒன்றுசெய்தல்-தியானி போலிருத்தல் - எவரிடத்தும் நிராசை-கலகமிடப் பிரியம் - நினைவிழந்து மரம் போல் கிடத்தல்-தன்னை மறந்து பிதற்றல் இவற்றை மேற் கொள்வர். இதில் - உடலிளைத்து வலிமைகுன்றி சதா சூடாக இருப்பது போலிருத்தல், அறிவு குன்றல், மார்புத்துடிப்பு, தாகம், சுவையின்மை, தலை கைகால் நடுங்கி நாடி தளரல், முகம் வறண்டு கண் பஞ்சடைத்து ஒளி குன்றல், தோல் சுருக்கம், விக்கல், மிகுதூக்கம் அல்லது தூக்கமின்மை, மேல் மூச்சு, கிறுகிறுப்பு, நாவறட்சி, பக்கசூலை, மிகுவியர்வை, வாந்தி, கழிச்சல் இவை காணும். உடல் பல்வேறு நிறமுற்று-மரத்து - கடுத்து-பளுவாகி நோதல், குரல் கம்மி ஈனத்தொனி இவையும்- இரத்த பித்த நோய்க் குறிகளும் கண்டு ஆளைக் கொல்லும். (இதற்கு, சிகிச்சையோடு-மதுப் பழக்கத்தையும் நிறுத்தியாக வேண்டும்.)

## ★ 150. வாயுத் தொல்லைகள் யாவை?

பசியின்றிப் புசித்தல் - மந்தகுண உணவு-மிக்க உண்டி - உடலுழைப்பின்மை - செரியாமை-மலச்சிக்கல் போன்றவற்றால் வருவதே **வாயுநோய்கள்** ஆகும். அவை-(1) **மந்தாக்கினிவாயு** -இதில், மிக்க பசியுண்டாகி மந்திக்கும். தோன்றியதெல்லாம் உண்ண விரும்பினும், வயிற்றில் தங்காது வாந்தியாகும். மலம் கருகி சிறிது குருதியுடனும், அதிக நீருடனும் விழும். வயிறு வலிக்கும். முகமும்; கண்ணும் வெளுத்து கிறுகிறுக்கும். பலம் குன்றும். (2) **குடகரிவாயு** - இதில், குடல் - முதுகு - நெஞ்சு - விலா இவற்றில் வாயு ஓடிப்புடைத்துப் புரண்டு, அழன்று நோகும். உடல் சோர்ந்து, மலம் கருகும். (3) **குண்டலவாயு** - இதில், வாயு இரைந்து திரிந்து வயிற்றில் வந்து கல்போல் திரண்டு - மீண்டும் சிதறி உடல் முற்றும் பரவி, பின் வந்து அடங்கும். தீபனம் மிக ஒடுங்கும். (4) **அநாகதவாயு** - இதில், நொந்த சோறு, ஊசற்கறி, மென்மேலும் உண்ணல், மலக்கட்டு இவற்றால் வாயு கூடி, வயிறு பொருமி, வாந்தி காணும். (5) **அந்தரவாயு** - இதில், அக்கினி கூடி உண்டவை செரியாமல் பிரவர்த்திக்கும். வாந்தி, தாகம், வாயு பரிதல், புளியேப்பம் காணும். (6) **துடிவாயு** - இதில் வாயு அடிக்கடி உடலில் பரந்தோடித் துடித்து சில சமயம் அடங்கும். இப்படி தினமும் பெருகி தொல்லை தரும். (7) **ஆனந்த வாயு** - இதில், தொடர்ந்து மிக்க ஒலியுடன் ஏப்பம் வரும். உண்டவை செரியாது. மலம் சிக்கும். (இதற்கு, அட்ட - பஞ்சதீபாக்கினி சூரணம்; இஞ்சி - நாரத்தை லேகியம் பயன் படும்)

### கல்பம் கொள்ள வேண்டும்!

பாரப்பா வெகுகோடி காலமட்டும்
பண்பாக சடத்தோடே இருப்பதற்கு
நேரப்பா கற்பமது கொள்ள வேணும்
நேர்மையுடன் பத்தியமா யிருக்க வேணும்.
காரப்பா உப்புவகை கட்டவேணும்
கருத்துடனே குரு முடித்துக்கொள்ள வேணும்.
சீரப்பா இவையாவும் முடித்தோன் சித்தன்
செகத்திலே நெடுநாள்தா னிருப்பான் பாரே

*(க.வை.கா-700)*

# VIII அறுவை மருத்துவம்

## ★★ 1. அறுவை மருத்துவம் என்றால் என்ன?

உடலுறுப்புகளில் தோன்றி துன்பம் தரும் கட்டி, குருதி, சீழ் உட்பட பல விதமான மாசுக்களையும்; மூலம், பவுத்திரம், கருவழிவு, சதை வளர்ச்சி, புண்புரை, எலும்பு முறிவு முதலியவற்றையும் - பொறிகளுள் புகுந்த அந்நியப் பொருட் களையும் நீக்கும் பொருட்டு அவ்வவற்றிற்குரிய கருவிகளையும், காரப் பொருட்களையும், அட்டை முதலியவற்றையும் கையாண்டு, பாதிக்கப்பட்ட பகுதியுடன் சக உறுப்புகளும் பாதிக்கப்படாவண்ணம் சிகிச்சையளித்து பிணியை நீக்குவதே **அறுவை மருத்துவம்** எனப்படும். (அறுவைச் சிகிச்சைக்கு முன்னும் - பின்னும் கையாள வேண்டிய விதி முறைகள் அனைத்தையும் கண்டிப்பாகக் கடைப்பிடிக்க வேண்டும்.)

## ★ 2. சத்திரத்தானம் என்பன யாவை?

பொதுவாக, உடலில் விரணம், கட்டி, கழலை முதலியன ஏற்பட்டு, கத்தியினால் அறுக்க வேண்டி வரும் முக்கிய இடங்களே-**சத்திரத்தானம்** எனப்படும். அவை-தோல், சதை, நாடிநாளம், கீல், எலும்பு, முகபாகம், தலை, கழுத்து, வயிறு, மர்மத்தானம் போன்றவையாகும். இவற்றைப் பற்றிய விரணங்கள் ஒன்றுக்கொன்று கொடியதாகவே காண்பதோடு - முக்குற்றக் கேடுகள் பொருந்தியதாயுமிருக்கும். மேலும்- தொடை, யோனி, குதம், ஆண்குறி, உதடு, முதுகு, உள்வாய், தாடை, கண், கடைக்கண், பல், நாக்கு, பெருநரம்பு, சிறுநரம்பு, வயிறு, கை முதலிவற்றில் காணும் விரணங்கள் அறுவை சிகிச்சைக்கு மிகக் கடின சாத்தியமாகும்.

## ★ 3. சத்திர விதிவிலக்கு இடம் என்றால் என்ன?

நாள்தோறும் குறிப்பிட்ட திதியில் உடலின் வெவ்வேறு பகுதியில் **அமுதம்** நிலைத்தலால், அங்கு கட்டியோ, கொப்புளமோ, காயமோ ஏற்படினும் - அடியிடிபடினும் - கத்தியால் அறுப்பினும் - நச்சுயுர் தீண்டினும் மரணம் விளையும் எனப்படுவதால்; **அமாவாசையை** அடுத்த 15-நாட்களில் கீழ்க்கூறியுள்ள திதிகளுக்குரிய அமுதநிலை இடங்களில் **சத்திர**

'அறுவை) சிகிச்சை செய்வது ஆபத்தாக முடியும். அத்தகைய திதியும்–இடங்களும் முறையே, பிரதமை-பெருவிரல், துதிகை - உள்ளங்கால், திரிதிகை-முழங்கால், சதுர்த்தி - பெருந்துடை, பஞ்சமி-குதம், சஷ்டி-நாபி, சப்தமி-முலைகள், அட்டமி- கைகால்கள், நவமி-கழுத்து, தசமி - உதடுகள், ஏகாதசி - நாக்கு, துவாதசி - நெற்றி, திரியோதசி - புருவம், சதுர்த்தி - பிடரி, பூரணம் - தலையுச்சி ஆகியனவாகும். (குறிப்பிட்டதினத்தில் அந்தந்த திதிகளுக்குரிய இடத்தை நீக்கிவிட வேண்டும்.)

## ★ 4. கட்டி வகையின் விளக்கம் என்ன?

பொதுவாக, உடலின் சருமத்தின் கீழுள்ள சதை, இழை முதலிய தாதுக்களின் விகல்பத்தினாலும் - அழிவினாலும் இடம் கண்டு அங்கு சீழ் கொண்டு அழன்று வீங்கிக் காண்பதே கட்டி எனப்படும். இது தன் இயல்பிற்கேற்ப மெதுவாகவோ, துரிதமாகவோ கிளம்பி வேதனையுடன் விம்பிப்புடைத்து, பழுத்து உடைந்து, மஞ்சள் நிறச் சீழை வெளிப்படுத்தும், பொதுவாக, பரு, கொப்புளம், ஊமைவீக்கம், கழலை, பிளவை, அரையாப்பு, ஈரல் நோய், கிரந்தி, கண்டமாலை போன்றவற்றின் வீக்கத்தையும்; மற்றசில நோய்களின் விளைவாலான மேலெழும்பல்களையும் அதன்தன் காரணப் பெயர் கொண்டு கட்டி என்றே அழைக்கப்படும்-கட்டிகள் 60க்கு மேற்பட்டவை பாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அவற்றுள், ஆசனக்கட்டி- முலைக் கட்டி-ஈரல்கட்டி-மூளைக்கட்டி-கபாலக்கட்டி-தொடைக்கட்டி - வித்திருதிக்கட்டி-கண்கட்டி-வாயுக்கட்டி-குன்மக்கட்டி - குருதிக் கட்டி-காயக்கட்டி-ஊமைக்கட்டி-கிரந்திக்கட்டி - சிலந்திக்கட்டி -வல்லைக்கட்டி-அரையாப்புகட்டி-மேகக்கட்டி- சைத்தியக்கட்டி - ஓடும்கட்டி - இராசக்கட்டி - சுரக்கட்டி- நீராக்கட்டி - வலைக்கண்கட்டி - களகண்டக்கட்டி என்பன சிலவாகும். (இவை அறுவை மருத்துவப் பிரிவிலும்-கடுங்கார மருந்துகளாலும் குணப்படும்.)

## ★ 5. கழலைக்கட்டிகளின் வகை யாவை?

உடலின் வளமைக் குற்றம், பிரமேகம், அதீதச்சதை வளர்ச்சி சிலவகை விஷகடி, மேகநீர்க்குற்றம் முதலியவற்றால் - உடலுறுப்புக்களுக்குத் தொடர்பின்றியே-நிணநீர்க் கோளங்கள் வீக்கமுடனோ, அல்லாமலோ கெட்டிப்பட்டு விடுதலே கழலைகட்டிகள் எனப்படும். இது, மணற்கழலை-நிணக் கழலை-அதிமாமிசக்கழலை-என்புக்கழலை-குருதிக்கழலை-

சிலந்திக்கழலை-நார்க்கழலை-நரம்புக்கழலை-முருந்துக்கழலை -பருக்கழலை-விஷக்கழலை-நிணநீர்க் கழலை-இரத்தக்குடாக் கழலை-கொழுப்புக்கழலை-காளான்கழலை-ஓடு கழலை-பிணி நீர்ப்பைக்கழலை-சுத்தக் கழலை-பூர்வக்கழலை-சளிக்கழலை பொசிவுக்கழலை-கருவிக்கழலை-முலைமுகக்கழலை - அண்டக் கழலை-கிரந்திக் கழலை-தசைக் கழலை-கரப்பான்கழலை - இமைக்கழலை-மேகக்கழலை - புரைக் கழலை எனப்பலவகைப் படும், (கழலைகளுக்கு பொதுவாக சேங்கொட்டை- இரசம்- வங்கம்-தாம்பரம் போன்ற மருந்துகள் பயன்தரும்.)

## ★ 6. அரையாப்புக்கட்டி என்றால் என்ன?

பிரமியமேகத்தொடர்பால் தொடையினடியில் வரும் கட்டியே - **அரையாப்பு** எனப்படும். இது, பல பெண்களைக் கூடுவதால் பிரமேக அல்லது விரணமேக தொடர்பு ஏற்பட்டு பிறகு நரம்புக்கோளாறுகளாலும் - பிணியுற்ற பெண்ணைப் புணருவதால் வெள்ளை, வெட்டை ஏற்படுவதாலும் - வேறுசில காரணங்களாலும் பிறப்புறுப்புகளில் தாபிதமுற்று, அங்கிருந்து அரையின் நிணநீர்க் கோளத்திற்குப் பரவிச் செல்வதால், துடையிடுக்கு அல்லது கவட்டியில், நெறிகள் பருத்துக் கட்டியைப் போல காணும் ஒருவித விரண நோயாகும். இது ஆரம்பத்தில் கொட்டைப் பாக்களவாகப் புறப்பட்டு, வரவரப் பெருத்துக் கோழி முட்டையளவாகி விடும். இதனால் கடும் நோவும் சிலசமயம் சுரமும் காணும். கால்களை அகட்டிய படியும், மெதுவாகவும்தான் நடக்க முடியும். கால், விரை, பாதம் இவற்றில் காணும் புண்கள், பேய்ச்சொறி, புற்று இவற்றின் காரணமாக தொடையிடுக்கில் வரும் நெறிக்கட்டி வேறாகும். (இதற்கு, மேற்பூச்சுக் களிம்புகளுடன் - பிரமியத்திற்குரிய உள் மருந்துகளும் தரலாம்)

## ★ 7. கொறுக்குப் புண் என்றால் என்ன?

மேகத்தினால் எற்படும் விரணமே **கொறுக்குப்புண்** எனப்படும். இது மேகநோய் அல்லது வெள்ளை, வெட்டை நோயுடைய பெண்களுடன் உடலுறவு கொள்ளுகையில் துர்நீர் ஆண்குறியில் பற்றுவதால் ஏற்படும். இது, குறி மலரின் அடிச்சவ்வு மடிப்பிலோ - மலரை மூடியுள்ள தோலினுள்ளோ காணும். பிணியுற்ற பெண்ணைப் புணருகையில், யோனியினுள் தங்கி நிற்கும் மேகரண நச்சு நீர், ஆண் குறியில் எங்கு படுகின்றதோ அவ்விடத்தில் புண்ணுண்டாகும். புணர்ச்சிக்குப்

பின் 4-முதல் 9-நாளுக்குப்பின் இந்நோய் பிறந்து விரண முண்டாக்கும். உடனே தக்க சிகிச்சை செய்யாவிடில், உடலில் பரவி, ஊரல், சொறி, புண் இவை கண்டு, நீர் பட்ட விடமெல்லாம் புண்கள் ஏற்படும். இவ்விரணத்தின் அடிப்புறம் கல்போலும், சில சமயம் மிருதுவாயுமிருக்கும். சில, அழுகித் துர்மாமிச வளர்ச்சியும் உண்டாகும். (இதற்கு மேகப்பிணிக்குரிய உள் - வெளி மருந்துகள் பயன்தரும்)

## ☆ 8. பக்கப் பிளவையின் தன்மை என்ன?

பொதுவாக பிடரி, முதுகு, பிட்டம் இவற்றின் ஒரு புறமும்; சிலசமயம் முகம், முள்ளந்தண்டு ஓரத்திலும் காணக்கூடிய கட்டியே - **பக்கப்பிளவை** ஆகும். இது, நீரழிவு மற்றும் குண்டிக்காய் நோய் கண்ட 45-வயதுக்கு மேற்பட்டவர்களுக்கு வரும். இக்கட்டி, கருஞ்சிவப்பு நிறமாயுள்ளதால், குருதிகெட்டு பலவீனமுறுவதால் தான் இது ஏற்படுமென அறியலாம். இது, சதையினுட்புறம் திரண்டு, பல கண்களும், புரையுமுண்டாகி, அவ்வாழியாக குருதியும், சீழும் வெளியேறும். இது உட்புறம் அழுகி, பக்கத்திலுள்ள சதைகளையும் அரித்துக் கொண்டே போகக் கூடிய தன்மையுடையதால் உட்புறம் ஆழ்ந்த பள்ளம் விழும். இதன் குறிகளும் - மருந்துகளும் மேகக்கட்டிகளுக் குரியனவேயாகும். அறுவை சிகிச்சையும் செய்யலாம்.

## ☆ 9. நரம்புச்சிலந்தி ஏற்படுவது ஏன்?

சருகூறிய மற்றும் அசுத்தமான நீர் நிலைகளில் உற்பத்தியாகும் கினியா அல்லது மெதினா எனப்படும் நுண்புழுக்கள், அந்நீரைப்பருகுவது அல்லது குளித்தலின்போது, வாய்மூலமும், உடலின் மயிர்க்கால்களின் வழியாகவும் உட்புகுந்து - தோலினடிப்புறம், குருதி நாளத் திசுக்களில் தங்கி - குறிப்பாக கால் அல்லது பாதங்களைத்தாக்கி அங்கு எழுப்பும் ஒரு வகைச்சிலந்திப் புண்ணே **நரம்புச்சிலந்தி** எனப்படும். இதில் முதலில் நமைச்சல் கண்டு, பிறகு தீப்புண், அல்லது நீர்க்கொப்புளம் போல் எழும்பி உடைந்து, அதினின்று பலபுழுக்கள் நூலிழைபோல் நீண்டும், வெளுத்தும் வெளிவரும், நாள்தோறும் வளரக்கூடிய இப்புழுக்களின் நீளம் 20-30 அங்குலம் வரையிருக்கும். இதில் புழுக்கள் அறாமல் வந்து விழுவது நலம். அப்படி அறுபட்டால் கட்டி, வீக்கம், வேதனை, சுரம் இவற்றோடு ஆபத்தான நிலையும் ஏற்படலாம். வீட்டுப் பிராணிகள் மூலமும் பரவக்கூடிய வாய்ப்புள்ள இந்நோய்,

ஆண்களுக்கே அதிகம் காணும். (இதற்கு-இரசம், பெருங்காயம், வாழைப்பழம், அரிசிச் சோறு இவை கூட்டியரைத்து மேலே போடவும். தண்ணீரை எப்போதும் காய்ச்சி, வடித்துப் பருகுவது நலம்)

## ★ 10. உபதம்ச ரோகம் என்றால் என்ன?

**உபதம்ச** அல்லது **உபதஞ்சரோகம்** என்பது சாதாரணமாக மேகசம்பந்தமாகவும் - கருப்பத்தில் பிறந்தும் ஏற்படும் ஒரு தொத்து நோயாகும். இது, ஆண்களுக்கு - மிகுபுணர்ச்சி அல்லது நீண்டநாள் புணர்ச்சியேயின்மை, மாதவிடாயுற்றவள் அல்லது நோயுற்றவளைப் புணருதல், ஒடுக்கமானதும் முரட்டு மயிரையுடையதுமான யோனியை உடையவளைப் புணருதல், ஆசனப்புணர்ச்சி, கைமுஷ்டி, ஒழுங்கினமான உடலுறவுகள் போன்றவற்றால் ஏற்படும். இதனால் பெண்களும் பாதிக்கப்படுவர். இதனால், இருபாலருக்குமே குறிகளில் புண்ணோடு அல்லது புண்ணில்லா மலேயே கண்டு, பிறகு முக்குற்றத்தினால் உடல் முற்றும் பரவி குருக்கள் அல்லது கிரந்திப்புண்களை எழுப்பி கடும் வேதனையையும் உண்டாக்கும். இது நால்வகைப்படும். அவை, ஆரம்பமேகத்தால் உடலில் ஏற்படுவதான-**கடினப்புண்**; கடும் மேகமல்லாத இலேசான - **மிருதுப்புண்**; நடுத்தர மேகத்தினால் ஏற்பட்டுப் பரவும் - **வியாபகப்புண்**; மூன்றாம் நிலை மேகத்தினாலான - **பரியுசிதப்புண்** ஆகியனவாகும். (மேகப் பிணிகளுக்குரிய உள்-வெளி மருந்துகளே இவற்றுக்கும் பயன்படும்)

## ★ 11. களகண்டநோய் என்றால் என்ன?

வாதகபக் குற்றத்தினாலும், கொழுப்பினாலும் கழுத்திற்கும், தாடைக்கும் இடையில் மாமிசக்கிரந்தி (தைராய்டு) பெருப்பதால், வளியைப் போல் நோவில்லாத மாமிச மொத்தையாய்த் தொங்குவதே புரைக்குழல் எனப்படும் **வாதகளகண்டம்** ஆகும். இது **(1) வாதத்தினால்** உண்டானால் - கருப்பு வரிசைகளுடனும், கரடுமுரடான சிவப்பு தளமுடனும், வீக்கம் மெதுவாக வளருவதாயும், அபூர்வமாக சீழ்கொண்டு அழுகுவதாயும் இருக்கும். ஊசியால் குத்துவது போன்றவலி, வாநீரூறல், சுவையின்மை காணும். **(2) கபத்தினால்** உண்டானால் வெளுத்த அல்லது பழுப்பு நிறத்திலும், தொட்டால் குளிர்ச்சியாகவும். கூச்சவுணர்வுடனும், வலி

பின்றியும், பெரிய அளவில் பருப்பதாயும் இருக்கும். வாயினிப்பும், சொள்ளுநீர் அல்லது கோழையும் வடியும். நிற்க, களகண்டம் இரு வகைப்படும். அவை (1) **சாதாரணமானது**. இது, கிரந்தியைச்சார்ந்த அத்தனை திசுக்களையும் பற்றி செழிப்பாக வளரும். வளர்ச்சி சீராகவும், செவிக்குக் கீழே பக்கவாட்டிலோ, நடுவிலோ பெரிய பரப்பளவுடனும்; கட்டியை அமுக்கிவிட சுருங்கி விரிவதாயும்; வலியின்றியும் இருக்கும். (2) **கடுமையானது**-இதில், கண் கோளமிடலும், தொண்டையடைத்து பேசவியலாமையும் முக்கியக்குறிகளாகும். கிரந்தியின் வளர்ச்சி வழக்கப்படியோ, பூர்த்தியாகாமலோ காணும். வீக்கம் மிருதுவாயும், துடிப்பதாயும், சிலசமயம் இலேசான வலியுடனும்; பொதுக்குறிகள் முன்னதை விடக் கடுமையாகவும் இருக்கும். இதனால், கிரந்தியில் புற்றும் - இருதயப் பாதிப்பும் ஏற்படலாம். (இவற்றுக்கு கண்ட மாலைக்குரிய மருந்துகளைத் தரலாம்)

## ☆☆ 12. கட்டிகளின் பதங்கள் யாவை?

சத்திர சிகிச்சைக்கு முன் - கட்டிகளின் தன்மையில் ஏற்படும் மாறுதல்களே - **கட்டியின் பதம்** ஆகும். அவை (1) **பழுக்காத நிலை (ஆமம்)**-கட்டி பழுக்காத நிலையில் அற்ப வீக்கம் - சூடு-வலியுடனும்; சுற்றுப்புறம் இயல்பான நிறத்திலும், கடினமாகவும், உள்ளே சீழ் முதலியவற்றின் அசைவின்றியும் இருக்கும். (2) **பழுத்துவரும் நிலை**-கட்டி பழுத்து வருகையில், மங்கிய நிறமுடனும், சிவப்பாயும், காற்றுள்ள துருத்தி போல் திரண்டு நாற்புறமும் பரவியுமிருக்கும். குத்தல், பரபரப்பான வேதனை, விரிந்து உடைந்து விடுவது போன்ற உணர்வு, தொட்டால் தாங்கவியலாத வலி காணும். உடலில் பலவித சங்கடம், தாபம், அருவருப்பு, அழற்சி, சுரம், தூக்கமின்மை ஏற்படும். கட்டியான நெய்யை அங்கு விட உருகிவிடும். (3) **நன்கு பழுத்த நிலை**-கட்டி நன்கு பழுத்து விட்டால், அதிலுள்ள வேதனை-அரிப்பு-வீக்கம் முதலியன குறையும். சுற்று விளிம்புகளில் பள்ளம் விழுந்து, நடுவில் மேலெழுந்து நிற்கும். அங்கு உலர்ந்து, வெளுத்து, சுருங்கும். தொட்டால், சீழானது துருத்தியில் அடைத்த நீரைப் போல் -அங்கு மிங்கும் அசைவதை உணரலாம். (4) **அளவுமீறி பழுத்த நிலை**-கட்டி பழுத்த நிலை நீடித்து-பெருகிவிட்டால், கட்டியில் தொளை விழுந்து புரையோடத் தொடங்கும். சருமம் பலவாறு சுருங்கி, மங்கல் நிறமுற்று, அவ்விடத்து மயிர்கள் உதிரும். தோல் மிருதுவாகி, அவ்விடத்தை தோடங்கள் தின்று வரும். (5)

**வாயுவினால்** - வேதனையும், **பித்தத்தினால்** - அழற்சியும், **கபத்தினால்** - வீக்கமும், **குருதியினால்** - சிவப்பும் ஏற்படும். இவை யாவும் சேர **கட்டி பழுக்கும்**. இவற்றை அறிந்து சிகிச்சை செய்ய வேண்டும்.

### ★ 13. காயங்கள் எத்தனை வகைப்படும்?

உடலின் மேற்றோல் விலகும்படியோ - அல்லது உட்சதையும், உள்ளுறுப்புக்களும் சிதைவுறும் படியோ, பல்வேறு வகையான ஆயுதங்களால் ஏற்படும் தழும்பு எனப்படும் **காயங்கள்** பலவாகும். அவை; கத்தியால் துண்டித்த **வெட்டுக்காயம்**-ஈட்டி முதலியவற்றாலான **குத்துக்காயம்** - கத்தியினாலான கீறு அல்லது **கிழிவு காயம்** - குருதிகட்டும் **கன்றியகாயம்** - நகத்தால் புரண்டிய பீறுகாயம்-வெடிப்புற்ற பிளவுகாயம் -நச்சுத்தன்மையுள்ள விஷகாயம்- சொற்பமான அசகாயம்-மரணமிளைக்கும் படுகாயம்-தடியடிக்காயம் - உட்காயம் - ஊமைக்காயம்-குருதியொழுக்குக்காயம்- எலும்பு முறிவுக்காயம்- குண்டடிக்காயம்- வழுவுண்ட காயம் - மிருகங்களின் கடிக்காயம் - நச்சுயிர்களின் பற்காயம்- தீச்சுட்டகாயம்-அறுவைச் சிகிச்சைக்குரிய சத்திரக்காயம் போன்றவையாகும். (இவை யாவுமே முதல் நான்கு வகைக்குள் உட்பட்டவையேயாகும்)

### ★ 14. புண்புரைகளின் வகையாவை?

**புண், புரை, ஊன், விரணம்** என்பவை பிணிகளாலும், காயங்களாலும் ஏற்படுவதாகும். அதனதன் தன்மைக்கேற்ப பின் வருமாறு கூறப்படும். அவை-மேகப்புண், வெள்ளை வெட்டைப்புண், நெருப்புப்புண், ஆறாப்புண், கிரந்திப்புண், ஓட்டுப்புண், குழிப்புண், ஒடுவுப்புண், இராசப்புண், கரப்பான் புண், பரங்கிப்புண் வெட்டுப்புண், காயப்புண், அழிப்புண், கொறுக்குப்புண், அழற்புண், வெடித்த புண், புற்றுப்புண், வயிற்றுப்புண், துளைப்புண், புரைப்புண், அரிப்புண், அக்கிப் புண், இரசவேக்காட்டுப்புண், குட்டப்புண், ஆகியனவாகும்.

### ★ 15. படுக்கைப் புண் ஏற்படுவது ஏன்?

ஒரு நோயாளி பலவீனத்தால் திரும்பவோ, அசையவோ இயலாமல் ஒரே பக்கமாய் படுத்துக்கிடப்பதால், ஊழ்த்தசை அல்லது எலும்பு தொடர்ந்து படுக்கையில் உராய்வதால் ஏற்படுவதே **படுக்கைப்புண்** ஆகும். இதற்கு படுக்கையிலுள்ள

நோயாளியின் மலம், நீர், வியர்வை இவற்றினாலான தொடர்ந்த ஈரநைப்பும்-காற்றோட்டமின்மையும் கூடக்காரணமாகும். இத்தகைய நிலையில், நோயாளிமீது பரிவுகொண்டு அவனை அடிக்கடி புரட்டிவிட்டும், மெல்லிய துணியினால் ஈரத்தை துடைத்து உலரவிட்டும், அடிப்புறமிருந்து காற்று வருமாறு படுக்கையமைத்தும் கவனித்து வருவது அவசியமாகும். (குங்கிலிய வெண்ணெய், வெங்காரபற்பம், தேங்காய் எண்ணெய், காரமில்லாத துவர்க்களிம்பு முதலியவற்றை புண்கள் மீது தடவி ஆற்றலாம்)

## ★★ 16. துட்டவிரணம் என்றால் என்ன?

முக்குற்றக்கேடு, காரிரத்தம், இரத்தவாதம் இவற்றால் ஏற்பட்டு - அழுகிப்புழுக்கள் நெளிவதாயும், சதையை அழிப்பதாயும். காளான் பூப்பதாயும், நெடுநாள் நீடிப்பதாக அல்லது என்றைக்கும் ஆறாததாயும் உள்ள கொடிய புண்ணையே - **துட்ட விரணம்** எனப்படும். இது, **மாறுபட்ட** நிறம் - அளவு - தன்மை - கடினம் - மென்மை - நீளம் - அகலம் - ஆழம் - மேலோட்டம் - பலவீனம் - சிரமம் ஆகிய பண்புகளுடனும்; கடும் வலி - எரிச்சல் - தினவு - வீக்கம் இவற்றுடனும்; துர்நாற்ற முள்ள சீழ் வடிவதாயும் இருக்கும். இதில், **(1) துட்ட வாத விரணம்** சிவப்பு, கருப்பு, கருவெண்மை, சாம்பல் ஆகிய நிறங்களுடனும் - எலும்பு தெரியக்கூடிய நிலையிலும் - ஊனீர், மாமிசம் கழுவியநீர், மோர்த்தெளிவு நீர் போல் கசிவதாயும் - வலியுடன் மாமிசம் கரைந்து வருவதாயுமிருக்கும். **(2) துட்ட பித்த விரணம்** வெண்சிவப்பு, மஞ்சள் நிறமாயும் - எரிச்சல், வலி, அழற்சியுடனும் - கோநீர், எண்ணெய், முருக்கம்பூ, சாம்பல் நிறமுடைய சீழுடனும் - வெகுவிரைவில் உண்டாகி ஒழுக்கும் வேகமாய் வருவதாயும் இருக்கும். **(3) துட்ட கப விரணம்** வெளுத்து, உயர்ந்து, கெட்டியாக, தினவு, வெப்ப முடனும் - குத்தல் வலியுடன், வெளுத்த பிசினைப் போல் குழகுழத்த ஊனீர் வடிவதாயும் இருக்கும். **(4) துட்ட தொந்த விரணம்** தோடங்களுக்கேற்ற குறிகுணங்களுடன் இருக்கும்.

## ★ 17. சில கருவிகளின் பெயரைக் கூறவும்?

**அறுவை சிகிச்சைக்கு** முறையே கத்தி-சத்திரம் - குறும்பி வாங்கி - முகவாதனன் - முள்வாங்கி - ஆழிக்கோல்-பிறைக்கோல் - கத்திரிக்கோல் - பாகரை வாங்கி - முச்சிலாகை

முனிமொழி - ஓட்டுக்கோல் - அட்டக்கோல் - செப்புக்குழை - ஊசி - சலாகை - வட்டகை - பஞ்சமுகம் - செப்புச்சிலாகை- கொம்பு - குடோரி - வெண்கலக்குழல் - ஈயச்சலாகை - காயக்கோல் - தொண்டு சலாகை - நயனக்கத்தி- குடுவை - சுரக்குடுக்கை - பீச்சாங்குழல் - அட்டை போன்றவை சத்திர சிகிச்சைக்குப் பயன்படும் கருவிகளாகும். இவை பலவித அளவிலும், வடிவிலும், தோற்றத்திலுமாக இருக்கும்.

### ★ 18. அறுவைக் கருவிகளின் செயல் முறை என்ன?

அறுவை மருத்துவக் கருவிகளின் **பொதுவான செயல்கள்** முறையே இடித்தல் - கடைதல் - நிறைத்தல் - வழிகளைச் சுத்தித்தல் - சுரண்டுதல் - இழுத்தல் - கட்டுதல் - நசுக்குதல் - உறிஞ்சுதல் - உயரத்தூக்குதல் - கீழே தாழ்த்துதல் - அசைத்தல்-ஒடித்தல்-புரட்டுதல் - ஒழுங்குபடுத்தல் - வெளியில் பிடுங்கி எடுத்தல் - பிளக்குதல் - தைத்தல் - துழாவல் - கீறுதல் - கொந்துதல் - குத்துதல் - அறுத்தல் - வெட்டுதல் - கடைதல் - சுடுதல் - பற்றிக் கொள்ளுதல் போன்றவையாகும்.

### ★★ 19. கருவிகளைப் பிடிக்கும் முறை என்ன?

*(1)* அறுத்தல்-பிளத்தல்-கீறுதல் முதலியவற்றை செய்வதற்கு கருவியை அதன் கணுவுக்கும், கருக்கு முனைக்கும் இடையில் ஆள்காட்டிவிரல், நடுவிரல், பெருவிரல் இவற்றால் அதேமனதாய்த் திடமாய் பிடிக்க வேண்டும். *(2)* குருதியைக் கசியவிட வேண்டிய வேலையில், கருவியை அதன் கணுவின் முடிவில் ஆள்காட்டிவிரலாலும், பெருவிரலாலும் பிடிக்க வேண்டும். *(3)* பிடுங்கி எடுக்கும் வேலையில் கருவிகளை அடிப்பகுதிகளில் பிடிக்க வேண்டும். *(4)* விரிகி முகம் என்னும் கருவியை கரதலத்தில் அதன் கணுப்பகுதி வரை மறைந்திருக்கும்படி பிடித்துக் கொண்டு முகத்தைக் கவனித்து வேலை செய்யவேண்டும். வேறு அறுவை சிகிச்சைகளில் வசதிப்படி கருவிகளைக் கையாள வேண்டும்.

### ★★ 20. குருதியை வெளிப்படுத்தும் முறை யாவை?

**தீய இரத்தத்தை வெளிப்படுத்துகையில்,** முதலில் குறிப்பிட்ட இடத்திற்குச் சிறிது மேலே கயிற்றினால் இறுகக் கட்டி. குருதி வெளிவருமாறு கீறிவிடவும். (மர்மத்தானங்கள், மூட்டுகள், எலும்புகள், தசைநார்கள் இவற்றில் கத்தி படக்கூடாது). கொந்தும் வட்டம் மேலிருந்து கீழ்முகமாய்

சாய்ந்தது போலும், முதலில் கீழே ஆரம்பித்து கிரமமாக மேலேயும் செல்லவேண்டும். கொந்துதல் அதிக ஆழமாகவோ, ஒன்றுக்கொன்று மிக நெருங்கியோ, நீளத்தில் குறுக்காவோ, ஒருமுறை செய்த இடத்திலேயே மறு முறையோ இருத்தல் கூடாது. ஒரே இடத்தில் தங்கியுள்ள தீய இரத்தத்தை கொந்தி எடுத்து விடலாம் (உணர்ச்சியற்ற உறுப்புகளின் குருதியை - **பீச்சாங்குழல்** மூலமும்: உடல் முற்றும் பரவியிருப்பின் - **காரிரத்தக் குழாயைக்** கீறியும்: சருமத்தைப் பற்றியிருப்பின் - **பீச்சாங்குழல், குடுவை, சுரைக்குடுக்கை** மூலமும்: கட்டிப்போன அல்லது தோய்ந்துள்ள குருதியையோ, அல்லது ஆழமான இடத்திலுள்ளதையோ - **அட்டை** மூலமும்; வாத பித்த கப நிலையங்களிலுள்ளதை-**அட்டை, சுரைக்குடுக்கை** மூலமும் முறையே வெளிப்படுத்தலாம்)

### ★★ 21. அட்டைவிடும் முறை என்ன?

தகுதியுள்ள-குற்றமற்ற **அட்டைகளை** மோரிலிட்டு எடுத்து சுத்த நீரில் ·போட்டு அதற்கு வன்மையுண்டுபண்ணியபின்னர் - அட்டைவிட வேண்டிய இடத்தில் கழுவித்துடைத்து சிறிது நெய்யைத்தடவி, அங்கு கிறி சிறிது குருதியைக் கசியச் செய்து அவ்விடத்தில் அட்டையைப் பற்றும்படி விட, அவை தலையை நீட்டிக் கடித்து தீய குருதியை உறிஞ்சும். அப்பொழுது மெல்லிய துணியால் அவற்றை மறைத்து வைக்கவும். ஒரு அட்டை வேண்டிய அளவு கெட்ட ரத்தத்தை குடித்த பின் அதனை எடுத்துவிட்டு தேவைக்கேற்ப அடுத்ததை விடலாம்.

### ★ 22. சிரையைக் கீறிவிடும் முறை யாவை?

குறிப்பிட்ட பிணிகளை நீக்க, அதனதற்குரிய வேறு இடங்களிலுள்ள காரிரத்தக்குழாயை (சிரை) பின்வரும் முறைப்படிக் கீறிவிட்டு கெட்ட ரத்தத்தை வெளியேற்ற வேண்டும், அதாவது **(1)** நாசி முனையை பெருவிரலால் உயர நிமிர்த்தி, உபநாசிகை என்ற மூக்கினுட்புற உறுப்பின் சிரையைக் கீறவும் **(2) நாவின் முனையை** உயரத் தூக்கிப் பல்லால் அழுத்திப்பிடித்துக் கொண்டு, அதன் கீழுள்ள சிரையைக் கீறவும். **(3) கழுத்திலுள்ள** சிரையைக் கீறுமுன் கையில் சிரையை அடக்கி முழங்கால் மீது கையை நன்கு நீட்டிவிட்டு, வயிறு முதல் மார்பு வரை கிரமமாக அழுத்திப் பிடித்து வந்து, மார்பின் மீது துணியைக் கட்டி விடவும். **(4) கையின்** சிரையைக் கீறுமுன் முழங்கையை மடிக்காது புயத்தை

நன்கு நீட்டி நோயாளியை அமைதியாக அமரச் செய்து பெருவிரலை உள்ளடக்கி முஷ்டிபந்தனம் செய்து, கீறுமிடத்திற்கு மேல் நான்கு அங்குலத்தில் துணியால் கட்டிவிடவும். **(5) உடல் பகுதியின்** சிரையைக் கீறுமுன் நோயாளியை உயரத்தில் எதையாவது பிடித்துக் கொண்டு தொங்கவிடவும். **(6) ஆண் குறியின்** சிரையைக் கீறுமுன் குறி நிமிர்ந்து எழும்பியிருக்க வேண்டும் **(7) முழங் காலுக்கு** கீழே சிரையைக் கீறுவதற்கு காலை மடக்காது நீட்டச் செய்யவும் **(8) பாதத்தில்** சிரையைக் கீறுமுன், பாதத்தை பூமியில் நன்கு ஊன்றி வைத்து, முழங்கால் முதல் கணுக்கால் வரை கரங்களால் அழுத்தமாகப் பிடித்து உருவி விட்டு மேல்புறம் இறுகக்கட்டி. அக்காலின் மீது பாதத்தை ஒருவாறு மடக்கி வைக்கவும்.

## ☆ 23. அந்நியப் பொருளை வெளியேற்றுவது எப்படி?

உடலினுள் ஏதாவதொரு வழியில் உட்புகுந்தும், அல்லது உடலினுள்ளேயே தோன்றியும் துன்பம் தரும் அந்நியப் பொருளை (சல்யம்) வெளிப்படுத்துவதற்கு பின்வரும் முறைகளைக்கையாளலாம். அதாவது, **(1) சருமம்** முதலி யவற்றிலுள்ள சல்யத்தை சந்தம்ச கருவியினாலும்: சல்யம் துவாரமுடனிருப்பின் தாளக்கருவியினாலும் தொளைவுள்ள இடத்திலிருப்பின் நளகக் கருவியினாலும் மற்றவற்றை அவ்வவற்றின் தன்மைக் கேற்பவும் வெளிப்படுத்த வேண்டும். **(2) சிரைகள்** - தசைநார்களில் உள்ளதை சலாகையினால் மெதுவாக அசைத்து எடுக்கவும். **(3) மார்பினுள்** பற்றியுள்ளதை எடுக்குமுன் பிணியாளன் மீது குளிர்ந்த நீரைத் தெளித்து திடுக்கிட்ச் செய்து, அதனால் அப்பொருள் இடம் பெயர்ந்து வேறிடத்திற்கு நெகிழ்ந்த பின் உரிய வழியில் வெளிப் படுத்தலாம். சிக்கலான வேறு இடங்களிலும் இது போன்ற முறைகளைக் கையாளலாம். **(4) எலும்பினுள்** இருப்பதை எடுக்க, பிணியாளியை மருத்துவன் தனது பாதங்களால் அழுத்தி அமுக்கிக் கொண்டு வெளிப்படுத்தலாம். **(5) வீக்கத்தினால்** மூடப்பட்டிருப்பின், முறைப்படி வீக்கத்தை அழுத்திப் பிதுக்கி உட் பொருளை வெளியேற்றவும். **(6) கருவிகளுக்கு** பிடி படாமலிருப்பின், சல்யத்தின் மீது நாடீ கருவியை வைத்து, அதனைக் கொட்டாப்புளியினால் அடித்து, அசைத்து வெளியேற்றவும். **(7) காது** போன்றவற்றிலிருப்பின் காதைக் கெட்டியாகப் பிடித்து நசுக்கியோ, நாடீயந்திரத்தின் முகத்தினால் நன்கு பற்றிக் கொண்டோ வெளிப்படுத்தவும்.

(8) திறந்த வாயில் நேராகப் பாய்ந்து நிற்பதை இரும்பைக் கவரும் காந்தக் கருவியினால் எடுக்கலாம். (9) இரைப்பையிலுள்ளதை வாந்தியினாலும் - நீர்ப் பொருளை வாயால் உறிஞ்சியும் எடுக்கலாம். (10) தொண்டையில் சிக்கியுள்ளதை, தாமரைத் தண்டின் நூலை விட்டு, அது உரிய பொருளில் சிக்கியதும் இரண்டையும் சேர்த்து இழுக்கவும். (11) முகம் - மூக்கு முதலியவற்றிலுள்ளதை அவ் உறுப்புகளுக்குப் பின்புறம் தள்ளி பின் முறைப்படி எடுக்கவும் (12) காற்றுக் குழலில் நுழைந்து விடின் தோளில் குத்தி அடித்தோ, நீரருந்தியோ உட்செலுத்தவும். (13) மாமிசத்தினுள் இருப்பதை கருவியினால் குத்தியோ, கீறியோ, அறுத்தோ எடுக்கலாம்.

## ★★ 24. வீக்கங்களைக் கீறும் முறை யாவை?

கட்டி முதலிய வீக்கங்களைக் கீறுமுன், முறைப்படியான ஏற்பாடுகளுக்குப் பிறகு, (1) நோயாளியைக் கிழக்கு முகமாய் அமரச் செய்து, மருத்துவன் அவனெதிரில் நின்று கொண்டு - நீக்கவேண்டிய இடங்களை நீக்கி விட்டு, வீக்கத்திற்கு மேற்புறம் இறுகக்கட்டியயின் கத்தியை, சீழ் வெளிப்படுமாறு விரைவாகவும், ஒரே சமயத்தில் வேண்டிய அளவும் உட்செலுத்தி எடுத்து விட வேண்டும் (2) மிகப் பெரிதாகப் புறப்பட்டு பழுத்துள்ள கட்டியில், இரண்டு அங்குல ஆழம்வரை கருவியைச் செலுத்தி, பின் இரண்டங்குலம் தள்ளி மற்றொருமுறை அங்ஙனமே கீறி விடவும். பின்னர், சலாகையை புண்ணில் செலுத்தி புரையின் ஆழத்தையும், வழியையும் அறிந்து எங்கெங்கு வீக்கம் மேலெழும்பியுள்ளதோ அங்கெல்லாம், குழிப்புண் ஏற்பட்டு விடாத அளவில் வகுத்துக் கீறி மாசுக்களை வெளியேற்ற வேண்டும் (இதனைச் செய்வதற்கு அருவெறுப்போ - மனக்கலக்கமோ - கை நடுக்கமோ சிறிதும் கூடாது) பின்னர், முறைப்படி நார்கள், நரம்புகள் முதலியவற்றால், நெருக்கமும் தூரமுமின்றி சமமான அளவில் ஊசி கொண்டு இணைத்துத் தைத்து விடவேண்டும்.

## ★★ 25. காரம் - சூடு வைக்கும் முறை என்ன?

இவற்றுள் (1) காரம் என்பது நோயுற்ற இடத்தில் அழற்சியை உண்டுபண்ணக் கூடிய மருந்தாகும். இதனைக் கையாளுமுன் நோயுற்ற இடத்தில் சிறிது அறுத்தோ, கீறியோ

குருதிகசியச் செய்யவும். பின், உலர்ந்த சல்லாத் துணியினால் சுற்றப் பட்ட சலாகையினால் காரத்தை எடுத்து, அவ்விடத்தில் படியுமாறு வைத்து, பிறகு சுமார் 3 மணி நேரத்திற்கு விட்டுவைக்கவும்-இதனால் காரம் பயன் படுத்தியதும் சிறப்பான சோபமுண்டு பண்ணி, அது தொடர்பான உறுப்பை உறிஞ்சி விடுவது போலவும், அங்கு அழுத்தி நசுக்குவது போலவும் செயல்பட்டு, அப்பகுதியெங்கும் பரவி தோடங்களை வேருடன் களைந்து; பின் பிணி நீங்கியதும் தானே தணிவடைந்து விடும்.

**(2) அக்கினியினால் சுடுவதால்** பிணி மீண்டும் வராதபடி பற்றற நீங்குவதால், இது காரம் வைப்பதைவிட மேலாகும் இதனை பிணிக்கேற்ற தாதுக்களில் பயன்படுத்தலாம். அதாவது - (1) மசகப்பரு, உடல்வாட்டம், தலைநோய், கண்மந்தம், குதப் பிளவை, திலமரு முதலியவற்றுக்கு - வர்த்தி, ஆவின் பால், அம்புமுனை-சூரிய காந்தக்கல் இவற்றைக் காய்ச்சி **சருமத்தில்** சூடுபோட வேண்டும். (2) மூலம், பவுத்திரம், கிரந்தி, விரணம் முதலியவற்றுக்கு - தேன், வெல்லம், சினேகவஸ்து, ஜாம்ப வோஷ்டம் எனும் கருவி இவற்றைக் காய்ச்சி **மாமிசப் பகுதியில்** சுடவேண்டும். (3) கண்ரப்பை ஒட்டிக்கொள்ளுதல், குருதிப் பெருக்கு, நீலிகா சர்மநோய் முதலியவற்றுக்கு - மாமிசப் பகுதிக்குக் கூறியவற்றையே காய்ச்சி சிரைகளில் சுடவேண்டும்.

## ★ 26. விரணங்களின் தீராக் குறிகளை விளக்கவும்?

பல்வேறு பிணிகளுக்கும் தீரும் - தீராக்குறிகள் கூறப்பட்டுள்ளது போன்றே, கட்டி, கழலை, புண், புரை, சிலந்தி முதலிய விரணங்களுக்கும் தீராக் குறிகள் (அசாத்தியம்) வகுக்கப்பட்டுள்ளன. அவை குறிப்பாக (1) சீழ் கொண்டு ஓரங்களில் சதை பருத்த புண் (2) பசுவின் கொம்பு போலெழும்பி கெட்ட இரத்தமும் சீழும் கசிந்து வரும் சிலந்தி (3) நடுவில் குழி விழுந்த அல்லது ஓரத்தில் வெடித்துப் புண்ணாகும் சிலந்தி (4) நரம்பு நார்த்துகளுடைய புண் (5) முக்குற்றத்தாலான உறைந்த குருதி, நிணம், கொழுப்பு, மஜ்ஜை இவை கசியும் விரணம். (6) நோயால் மெலிந்து இளைத்த வனின் வயிற்றில் தங்கிய மலநீர்க்கசியும் புண். (7) தலை அல்லது தொண்டைச் சிலந்தி (8) உடலின் சீவகளை தங்கியுள்ள பகுதிகளில் காணும் விரணம் (9) சீழ்கட்டுண்டு சதையாக மாறும் கட்டி (10) அறுகவேர் போல் கழுத்தைச்

சுற்றி முதலில் கிளைத்து எழுவதும், பின் அழுந்துவதுமாயுள்ள கண்டமாலை (11) உடலில் பதிய ஆழ்ந்தும், பக்கங்களில் துளிர்த்தும், உடல் முற்றும் பரவி, அடிக்கடி கிளைக்கும் தன்மையுள்ள கழலை. (12) இரத்தக்கழலை, குருதியோட்ட நரம்புத்தொளை, எலும்புப் பொருத்துப்பள்ளம் இவற்றில்வரும் கழலை (13) மர்மத்தானங்களிலும்; மார்பு, குதம், தலை, தோள், முதுகு இவற்றிலும் காணும் பிரமேகக்கட்டி (14) ஒன்றுடனொன்று கலந்தும், கொப்புளம் கண்டவுடன் மறைந்தும், கொப்புளங்களில் குருதி கலந்து கருகி முகத்தில் குழி விழுந்தும் காணக்கூடிய அம்மைக் கொப்புளங்கள் (15) வயிற்றினுட்புறம் உடைந்து வாய் வழி சீழும் குருதியும் கக்கும் வித்திரிக்கட்டி ஆகியன தீராது எனக்கூறப்படும்.

## ★ 27. வெட்டுக்காயத்திற்கு முதற் சிகிச்சை என்ன?

**வெட்டுக்காயங்கள் :** காயங்களின் அளவு எங்ஙன மிருப்பினும் அதனின்று ஒழுகும் இரத்தத்தை உடன் நிறுத்தி, காயத்தின் ஆழத்தையும் அறிந்து கொள்ள வேண்டும். தோலோடு தசையும் வெட்டப்பட்டிருக்கலாமாகவே, விரைவில் காயத்தை சுத்தம்செய்து மருந்துபோட முயலவேண்டும். இதற்கு, குருதி நாளங்கள் வெட்டுண்டு, இரத்தம் மிகுதியாக வெளியேறுகையில் காயமுற்ற இடத்திற்கு மேல், முதலில் இறுகக்கட்டி வைப்பதோடு, மாசிக்காய்த்தூளை காயத்தில் அப்பிவைக்க உடனே குருதிப்பெருக்கு நிற்கும், பிறகு, சுடுநீரில் சிறிது சோற்றுப்பைக் கரைத்து, அல்லது சிறிது வேப்பந் தழையைச் சிதைத்துக் கியாழமிட்டுக் காயத்தைக் கழுவி, பின் போதிய அளவு உரித்த வெள்ளைப் பூண்டை விழுதாக்கி, காயத்தின் அளவிற்கேற்ற துணியில் தடவிக் கட்டிவிடலாம் நாயுருவி இலையின் விழுதுடன் சிறிது சுண்ணாம்பு கூட்டிக் குழைத்தும் காயத்தில் தடவிக்கட்டலாம். புண் நன்கு ஆறிய பின்னரே இம்மருந்து கீழே விழும்.

## ★ 28. கடுகுப் பற்று எதற்கு உதவும்?

புன்செய்ப் பயிராகிய கடுகு வெள்ளை, கபலநிறம் என இருவகைப்படும், இதில், கறியில் சேரும் கடுகே சிறந்தது - ஆயின் பத்தியத்திற்கு உதவாது. இது, சீவ சக்தியைப்பெருக்கி; மனதிற்கும், நினைவுக்கும் ஆதாரமாயுள்ள மூளையில் அமர்ந்து சீவசாலங்களை நேரடியாகத்தூண்டும். கடுகும் - கடுகு நெய்யும்

மருந்தாகவும் பயன்படும். இதனை அரைத்துப்பூச கொப்புளம், விரணம், தலைவலி, வெறி இவையும் - உட்தர சூதகச்சிக்கல், வயிற்று வலியும் தீரும். உடலில் பதமிட வலுவுண்டாகும். எனினும், இதிலுள்ள காரத்தினால் தோல் வெந்து போய், எரிச்சலுமுண்டாகும். கடுகை அரைத்து காடியில் கலந்து **பற்றுப்போட** பலபிணிகள் தீரும். அவை; அறிவுமாறல், சுரம், அம்மை இவற்றுக்கு - **பாதம் அல்லது பிடரியிலும்,** சுரம், மயக்கம், தோடத்திற்கு - **பாதத்திலும்,** தூக்கக்கேடு, குருதி ஓட்டத்தடைக்கு - **பாதம் அடிவயிற்றிலும்;** வயிற்று வலி, விஷபேதி; வயிற்றிசுவுக்கு - **அடிவயிற்றிலும்;** முறை சுரம், வாந்திக்கு - **வயிற்றிலும்;** கபவாதசுரம், விஷபேதிக்கு - **மார்பின் இடப்புறமும்;** இருமல், சுவாசம், இரைப்புக்கு - **மார்பு, தோள் பட்டையிலும்,** கக்கிருமலுக்கு - **முதுகிலும்;** பல்வலி, முகவாதம், கழுத்துவலிக்கு - **அந்தந்தப்பகுதியிலும்** முறையே பற்றிடக் குணமாகும். (இலேசாக எரிச்சல் வரவும் எடுத்து விடுதல் நலம்: இல்லாவிடில் வெந்து போகக்கூடும்)

### ☆☆ 29. விரண சிகிச்சைக்குரிய பத்தியமுறை யாவை?

அறுவை முதலிய விரணசிகிச்சை செய்து வருகையில், பகலில் தூங்கினால் புண்ணில் அரிப்பு - வலி-சிவப்பு - வீக்கம் ஏற்படும். காம இச்சையுடன் பெண்களை தொடுதல் - பார்த்தல் - நினைத்தல் இவற்றால் விந்து தன்னிடம் விட்டுப் பெயர்ந்து வெளியேறினால் கூட, உடலுறவில் ஈடுபட்டதற்கு இணையான குற்றங்களைப் பெறுவான். மேலும், **(1) பத்திய உணவு**-கார் அரிசி, கோதுமை, யவதானியம், சிறுகடலை, பயறு, துவரை, கடுக்காய், பழஞ்சம்பா அரிசி-ஆரை, சிறுபாலை, முள்ளங்கிப் பிஞ்சு, கத்தரி, அம்மான்பச்சரிசி, சிறுகீரை, பாகல், புடல், வெள்ளரி, சிறுதேக்கு, மாதுளை-நெய், கொதித்தாறியநீர் இவற்றாலான வெப்பமான, திரவவடிவ உணவை, குறைந்த அளவிலும் - முல்லைநிலப் பிராணிகளின் மாமிசங்களுடனும் உட்கொள்ளலாம். **(2) அபத்திய உணவு** - புதிய நவ தானியம், எள், உளுந்து, உப்பு, புளி, காரம், கடினமான - சீதளமான வாயுப்பண்டங்கள், மதுவகை, அமிலம், கரும்புச் சாற்றிலான பொருட்கள், புதிய தானியம், மருதநிலப் பிராணிகளின் மாமிசம் - பால்ப் பொருட்கள் ஆகியவற்றை விலக்கி விட வேண்டும் **(3) விரணமுள்ள போது** அசீரணமுண்டானால் தோடங்கள் கூடி, விரணத்தில் வீக்கம்- வலி - எரிச்சல் - பொருமல் - பதனழியுமாறு அழன்ற பரிணாமம் இவை ஏற்பட்டுவிடும். **(4) விரணத்திலுள்ள தோடம் மீதி உள்ள**

போதே ''துரிதமாக'' ஆற்றி விட்டால், உள்ளடங்கிய தோடமானது சிறிய காரணத்தினால் கூட மீண்டும் வெகுண்டு திங்கிளைக்கும். (5) விரணம் நன்கு ஆறிய பிறகு கூட, ஆறு மாதங்களுக்காவது உடலுறவு - சினம் - பயம் - மிக்க மனக்களிப்பு - சோகம், அசீரண உணவு, கடும் உழைப்பு இவற்றை விலக்கி வைத்தல் நலம்.

## ★ 30. சித்த முறையில் சத்திரசிகிச்சை குறைவு- ஏன்?

நமது முறைகளின்படி மூவகையான சிகிச்சைகளுண்டு: அவை- (1) **தேவ மருத்துவம்** - இது, மணி, மந்திர, மருந்துகளால் நோயை நீக்குவது. (2) **மானிட மருத்துவம்** – இது சாதாரணமான நடை முறை மருந்துகளால் தீர்ப்பது. (3) **இராட்சச மருத்துவம்** - இது, கத்தி, கருவிகளினால் அறுத்தும், மருந்திட்டும் குணப்படுத்துவது ஆகியனவாகும். இதில், ஆயுர்வேதத்தில் - மானிட, இரர்ட்சச சிகிச்சை முறையே அதிகம், சித்த மருத்துவத்தில் - தேவ, மானிட சிகிச்சைமுறையே அதிகம். காரணம், இதில் வாத, வைத்திய, யோக, ஞானம் ஆகிய நான்கையும் அனுசரித்தே கூறப்பட்டுள்ளதால், இராட்சச சிகிச்சைக்கு அதிகதேவையேற்படவில்லை. எனவே, நோய்களை மருந்து, மாந்திரீகம் முதலானவற்றினாலேயே தீர்த்துவிட இயலுமாகவே, இதில் சத்திர சிகிச்சை பற்றி விரிவாகக் கூறவில்லை, ஆயின், நவீனமுறைகளில் வைத்திய பாகம் மிகச்சிறிய அளவே உள்ளதால், அறுவை சிகிச்சையையே முக்கியமானதாகக் கொள்ளுகின்றனர். எனினும், நவீன முறையில் தீர்க்கவியலாத கடும் பிணிகளையும் நமது முறைகளின் மூலம் மிக எளிதில் குணப்படுத்தி வருவதைக் கண்கூடாகக் காணலாம்.

### உகார தீட்சை

உறுதியென்ற சத்தியடா உகாரதீட்சை
உள்ளுணர்ந்து மண்டலமே செபித்தாயானால்
மறுதியென்ற வாசியதற் குறுதியாச்சு
பாலகனே வாசியென்றால் உயிர்தானாச்சு

(இரா.சி.200)

# IX. வர்ம சூத்திரம்

## ★★ 1. வர்மக்கலை (மர்மம்) என்றால் என்ன?

சித்த மருத்துவக்கலையில் **வர்மம்** என்பதும் ஓர் பிரிவாகும் (இதனைக்கையாளுபவர் **வர்ம ஆசான்** எனப்படுவர்) இதில் நமது உடல் முற்றும் பின்னிப் பரவியுள்ள 72000 நாடிநரம்புக் கூட்டத்தில் சில சூக்குமப்பகுதிகளில் - அடிபடுதல் கீழேவிழுதல், தவறாகப் புணருதல், பிரசவத்தில் முக்குதல் போன்ற பல காரணங்களால் - மின் அதிர்ச்சி ஏற்பட்டு அதனால் மயக்கம், பொறிபுலன் குன்றல், கைகால் மூட்டு நழுவல், அறிவுமாறல், மரணம் நேரல் முதலிய பல தீயவிளைவுகள் ஏற்படுவதையும்; அவ்விளைவுகளை நீக்கி குணப்படுத்துவதற்குரிய **நீவுதல் - பிடித்தல் - தட்டுதல்** போன்ற தைலாதி **இளக்கு முறைகளையும்**, உணவு - மருந்து வகைகளையு.ம் விளக்கப் பெற்றுள்ளது. (இதனைக் கையாளுவோர் மனித உடற்கூறு, உடலியல் தத்துவங்களை அறிந்து தேர்ந்தவராகவும் - மிக்க பொறுமை, தெய்வபக்தி ஒழுக்கநெறி உடையவராகவும் இருத்தல் அவசியம்)

## ★ 2. வர்மத்தின் திறவு கோல் யாவை?

வர்மக்கலையினைத் தெளிவுபட அறிவதற்கு பின்வரும் **அகத்தியர் திறவுகோல் அடங்கல் - 12** ஐயும் தெரிந்திருக்க வேண்டும். அவை (1) மேல் தாரை அடங்கல். (2) கதிர் நரம்பு அடங்கல் (3) கவளப் பெரிய கமல அடங்கல் (4) ஆதார அடங்கல் (5) உயிர்நிலை அடங்கல் (6) கோரிவாரி அடங்கல் (7) பிரதாரை அடங்கல் (8) அண்டமாம் வாளவடி அடங்கல் (9) அங்குளிர்ந்த உள்மடை அடங்கல் (10) பள்ளை அருகே அடங்கல் (11) சர்வாங்க அடங்கல் (12) உள்தாரை அடங்கல் ஆகியனவாகும்.

## ★ 3. பொதுவான வர்மத்தடுப்பு முறை யாவை?

பொதுவாக ஒருவரது தாக்குதலிலிருந்து வர்மத்தானங்களைத் தற்காத்துக் கொள்ள சில முறைகள் உள்ளன. அவை (1) ஒருவன் **அடிக்க, வெட்ட,** கம்பு கொண்டு தாக்க வந்தால், அதைத்தடுக்க, நமது வலது கையினால் அவனது வலது புறம் சுற்றி, அவனது இடப்புறம், நமது வலது கால் இடது கை

கொண்டு குனிந்து மேல் தூக்கிவிட கீழேவிழுவான். (2) **கொலைக் கருவி** கொண்டு நேரே ஓங்கி வெட்டவந்தால் - அதைத் தடுக்க, நமது இடது கரம் கொண்டு பணிந்து தடைகட்டி, பின்னால் நகர்ந்து, இடது காலினால் வலப்புறம் மிதித்து, இடது கையினால் இரு காலை வாறி மல்லார்த்திவிட விழுவான். (3) **தடி** கொண்டு திடீரெனத்தாக்க வருகையில் அதைத் தடுக்க, இடது கால் முன்வைத்து, வலது கையினால் தடை கட்டி இடது கையினால் நெஞ்சில் தலம் பார்த்து நெருங்கி வலது கையினால் அவன் விலாவில் வெட்டுக் கொடுக்க விழுவான். (4) **இடது கால்** முன்வைத்து இடது கையினால் அடிக்கவந்தால்-அதைத் தடுக்க, வலதுகால் முன் வைத்து வலதுகையினால் பணிந்து தடை கட்டி, இடதுகரம் பின்னால் வீசி அவனது இடது விலாவில் வெட்டினாலும்; இடது கால் கொண்டு நேரே ஒரு மிதி மிதிப்பினும் அவனுக்கு **"நண்டு வர்மம்"** கொண்டு விழுவான். (இவைபோன்றவைகள் நேர்முகப்பயிற்சியினால் தான் நன்குபுரியும்)

## ★ 4. படுவர்மம் - 12ன் இருப்பிடம் யாவை?

உடலில் வர்ம அடி கொள்ளும் இடங்களாக, **தொடுவர்மம் - 96, படுவர்மம்-12 ஆக மொத்தம்-108** இடங்களை வகுத்துள்ளனர். இவற்றுள் படுவர்மம் முறையே (1) **திலர்த வர்மம்** என்பது நெற்றிப் புருவத்திற்குக் கீழே நெல்லளவிலும், (2) **நட்சத்திரக்காலம்** என்பது கடைக் கண்ணின் கீழ் ஒரு நெல்லிடைக் குறியிலும்; (3) **செவிக்குத்திக்காலம்** என்பது காதின் சிறு தண்டினருகில் கீழ்க்குழியிலும்; (4) **பிடரிக்காலம்** என்பது தலைமுடியும் தலமான பிடரிக்குழியில் நேர்வரியிலும்: (5) **உறக்கக் காலம்** என்பது கழுத்துப் பகுதியில் நாடியின் கீழே அருகுப்பற்றியும்; (6) **தவளைக் (தும்மும்) காலம்** என்பது கழுத்தின் தொண்டைக் குழியிலும்; (7) **கூம்பு (நேர்) வர்மம்** என்பது மார்புக் கூம்பிற்கு இருவிரல்கடைக்குக் கீழேயும்; (8) **அடப்பக் காலம்** என்பது விலா முண்டெலும்பிற்கு நாலு விரற்கடை மேலேயும்; (9) **சுருக்கிக்காலம்** என்பது விலா முண்டெலும் பிற்கு இரு விரற்கடை கீழேயும்; (10) **உறுமிக்காலம்** என்பது கொப்பூழுக்கு நாலுவிரற்கடை மேலேயும்; (11) **அத்தி சுருக்கி வர்மம்** என்பது கொப்பூழுக்கு நாலு விரற்கடை கீழேயும்; (12) **கல்லிடைக்காலம்** என்பது குறியின் கீழ்ப்புறமும் அமைந்துள்ளன. (இவ்விடங்களில் அடியிடிகளினாலான

அதிர்ச்சி ஏற்படுகையில் அதனதற்குரிய தீயவிளைவுகள் காணும்.)

### ★ 5. உயிர்நிலைப் பாதிப்புக் குறி யாவை?

உடலில் விகல்பமான துடிப்பையோ அல்லது அவ்விடம் அழுத்தினல் விகல்பமான நோவையோ குறியாகக் கொண்டுள்ள **உயிர்நிலை (மர்மத்தானம்)** பல இடங்களாயினும் (108 வகை, அவை யாவும் ஆறு தொகுதியில் அடங்கும். அவற்றுள் **(1) மாமிச மர்மம்** தாக்குண்டால், குருதி கழுவிய நீர் போல் சற்று தெளிந்த இரத்தம் · சதாகசியும், உடல் வெளிரும் பொறிபுலன் குன்றி, விரைவில் மரணம் விளையும். **(2) எலும்பு மர்மம்** பாதிப்புற்றால், குருதிக் கசிவு மச்சையுடனும் தெளிவாகவும், இடைவெளி விட்டுவிட்டும் பெருகும் வேதனையும் காணும். **(3) தசைநார் மர்மம்** அடிபட்டால் அங்கு விறைப்பும், கொறுக்குவலியும், மிக்க வேதனையும் அசைக்கவியலாமையும் ஏற்படும். ஏற, இறங்க, நிற்க, படுக்க உட்காரத் திறமையற்று விடும். உறுப்புக்கள் வடிவிலும் செயலிலும் மாறுபடும்-அல்லது மரணம் நேரும். **(4) தமனி மர்மம்** தாக்கப்பட்டால் அதிலிருந்து இரத்தம் ஒருவித சப்தமுடனும், வெப்பமுடன் நுரைத்தும் வெளியேறும். மூர்ச்சை உண்டாகும். **(5) சிரைமர்மம்** பாதிப்புற்றால், அதிலிருந்து இரத்தம் தடிப்பாகவும், அதிகமாகவும், இடைவிடாமலும் பெருகும், நாவறட்சி, தலைசுற்றல், மேல்மூச்சு, மூர்ச்சை, விக்கல் முதலியனவும்-மரணமும் ஏற்படும். **(6) மூட்டுமர்மம்** அடிபட்டால், அங்கு சிறுமுளைகள் சுணை போல் படிந்து உள்ளதான தோற்றம் காணும். அது ஆறிவிட்டால், அவ்விடம் முடமாகி அவ்வுறுப்பின் இயற்கை வலிமையும், சலனமும் நீங்கிவிடும். மற்ற இடம் வற்றி, அடிபட்ட பூட்டில் மட்டும் வீக்கம் நிலைத்து நிற்கும். (பொதுவாக உயிர்நிலைகள் தாக்கப்படுவதில் மரணபயம் அதிகமுண்டு.)

### ★★ 6. உயிர்நிலைப் பாதிப்பிற்கு என்ன செய்வது?

பொதுவாக, **உயிர்நிலைகள் (மர்மத்தானம்)** வெட்டுப் பட்டு தாக்குண்டு விட்டால், அதனால் இரத்தம் பெருகி வெளி யேறிவிடுவதால்-மிக விரைவில் உடல் வெளுத்து, நொந்து சோர்வுற்று, தாதுக்கள் பலவீனமுற்றுக் குன்றி, பலகுறிகளும் கண்டு - மரணம் நேரிட்டு விடும். ஒருக்கால், மிக இலேசான தாக்குதலினாலோ அல்லது திறன்மிக்க சிகிச்சையினாலோ

ரணம் நேராவிடினும் கூட, தாக்கப்பட்ட இடத்தில் ஏதேனும் நிலையான கோளாறோ - ஊனமோ - வேறுகடும்பிணிகளோ ஏற்பட்டுவிடும். எனவே. மர்மத்தானம் அடிபட்டவுடன், ாமதமின்றி அதனருகிலுள்ள மூட்டுவரை அவ்வுறுப்பை அறுத்து நீக்கிவிட்டால் - சிரைகள் சுருங்கி குருதிப்பெருக்கு ின்று - மரணபயமும் நீங்கும். நிற்க, மர்மத்தானங்கள் இப்படி அபாயமானவையாக இருப்பதால்,அவ்விடங்களில் காரம் வைத்தல் - அக்கினிசுடல் - நச்சுகுண மருந்துகளையிடல் - அறுத்தல் போன்ற சிகிச்சைகளைக் கடைப்பிடித்தல் கூடாது. பொதுவாக, மர்மத்தானமில்லாத இடங்களில் எவ்வளவு அடிபட்டாலும் பயமில்லை. ஆயின், மர்மத்தானத்தில் ிலேசான தாக்குதல் ஏற்படினும், பல் பிணிப்பெருக்கமும், பருந்துன்பமும் - மரணமும் ஏற்படுவது உறுதி.)

## 7. பொதுவான வர்ம இளக்குமுறை என்ன?

பொதுவாக, ஒருவர் வர்ம அடிபட்டு கீழே விழுந்து சயலற்றுக்கிடப்பின், அவரை தூக்கியிருத்தி, கால்களை நீட்டி, தாடைகளை நெருக்கி வைத்து, இடது கரத்தை மார்புடன் சர்த்து வைத்து இருத்திக் கொண்டு, வலது கையை பிடரியிலி ந்து கீழ் நோக்கி இறக்கி, பிட்டிவரை மும்முறை தடவி ிட்டு - நடுமுதுகின் நாலுவிரல் மேலிருந்து நாங்கணப் பாருத்து என்ற மூலம் வரை, கால் முட்டினால் மும்முறை டவி இறக்கிக் கொள்ளவும், இப்படித் தடவுகையில் அவரது தாள்களைப் பற்றியிருப்பதுடன் - கால் பெரு விரலால் மலத்தில் ஒரு இருத்தும் (தட்டு) விட வேண்டும்.

## ★ 8. வர்ம சன்னியை (மயக்கம்) நீக்குவது எப்படி?

வர்ம அடியினால் மயங்கிக் கிடப்பவரது ஆடைகளைத் ளர்த்தி காற்றாட வைப்பதுடன்-வர்மத் தைலம் உட்கொடுத்து, சியமும் செய்து, உடலில் தடவியும் விட வேண்டும். மேலும், ர்ம நிலையங்களான சவாயு, அமுதம் ஏற்றிறக்கம், காள்ளுமிடம், உறுப்பு பொருத் தசைவு, விரல்கள் முதலிய டங்களில் சூடுபறக்கத் தேய்த்து, தடவி, அசைத்து, திருப்பி லித்து, தூக்கி, உதறிவிட்டு; கால்கவளி அடங்கலில் விரலால் ற்று அழுத்திப் பிடிக்க நோயாளியின் மயக்கம் (சன்னி) ங்கி சுய உணர்வு திரும்பும்.

★ 9. வர்ம முறிவுக்குரிய தைலமுறை என்ன?

இலிங்கம், மஞ்சள்மெழுகு, துருசு, துத்தம், பவளப்பற்று, அஞ்சனக்கல், பூண்டு, கார்போகரிசி, கருஞ்சீரகம், அதிமதுரம், வாளம், வேம்பாடம்பட்டை, குங்கிலியம், வசம்பு, வெப்பாலரிசி சிவதை, விளாம்பிசின், சூடன், நன்னாரி, குறுந்தொட்டி, புகையிலை, பூவரசன்பட்டை, மேனி, துளசி, ஈசுரமூலி, புங்கன்பால், இசங்கு, ஆலம்பால் இவை சமன்கூட்டி இடித்து, பத்துப்பங்கு எண்ணெயிலிட்டுப் பதமுறைக் காய்ச்சி வடிக்கவும். இதனை மேற்பூச்சாகப் பூசி வர வர்ம அடிகளினாலான எவ்வகை எலும்புமுறிவு, இசிவு, சுளுக்கு, மொழி நழுவல் போன்ற யாவும் குணமாகும்.

★★ 10. வர்மவதைக்குரிய தலைமுழுக்கெண்ணெய் எது?

குப்பைமேனி, பெருந்தும்பை, சிறுதும்பை, குறுந்தொட்டி இவற்றின் சாறு வகைக்கு 250 மி.லி.யுடன், நல்லெண்ணெய்-1 லிட்டர் கலந்து - உடன் சாதிக்காய், சாதிப்பத்திரி, ஈருள்ளி, பூண்டு, காயம், சந்தனம், சூடன், நன்னாரிவேர், வில்வ இலை, அரளிப்பூ இவை வகைக்கு 10-கிராம் வீதம் சிதைத்துக் கலந்து மெழுகு பதமாகக் காய்ச்சி வடிக்கவும். இத்தைலத்தினால் தலை முழுகிவர பல்வகை வர்மத் துன்பங்களும் தீரும்.

★★ 11. வர்மத்திற்குரிய உள் மருந்தைக் கூறவும்?

(1) வீரம், பூரம், இலிங்கம், சூதம், கந்தி இவை சமன்கூட்டி புளியைக் கரைத்து வடித்த நீரில் மெழுகாய் அரைத்தெடுக்கவும். (2) சுக்கு, மிளகு, திப்பிலி, அரத்தை, அக்கராகாரம், கடுகு, கோட்டம், கடுக்காய், காரெள்ளு, சித்திரமூலம் இவை வகைக்கு 10 கிராமளவில் கூட்டி, 1 லிட்டர் நிம்ப எண்ணெயிலிட்டு மெழுகு பதமாய்க் காய்ச்சி வடிக்கவும். நிற்க, மேற்கூறிய மெழுகில் மிளகு அளவுவீதம் 1-வேளையும்; தைலத்தில் 1-கரண்டியளவு வீதம் மறு வேளையுமாக கொடுத்துவர வர்மத்தினாலான சகல கோளாறுகளும் நீங்கிவிடும்.

★ 12. வர்ம சூலைக்குரிய மருந்து என்ன?

வெங்காயச்சாறு - 450மி.லி, வெள்ளறுகுச்சாறு -900 மி.லி, சிறுதும்பைச்சாறு - 900 மி.லி, உளாமூலிகைச்சாறு - 900மி.லி, அபினி - 20கி, கஞ்சா - 20கி, பூரம் - 20கி, தேங்காயெண்ணெய்-1½ லி. வீதம் கூட்டிக்காய்ச்சி, மேலே

,சி உருவிவிட்டு வரவும், இதனால் வர்மத்தினாலான ரம்புச்சூலை, திமிர், வலி, இரத்தக்கட்டு, வீக்கம், வளைத்துப் பிடித்தல், நடக்க வியலாமை இவை தீரும்.

### 13. வர்மக்காயங்களுக்கு மருந்து என்ன?

சங்கு, அரிதாரம், மஞ்சள்மெழுகு, அஞ்சனக்கல், பவளப் ற்று, கருஞ்சீரகம், கார்போகம், இவை வகைக்கு -10கி; வம்பாடம்பட்டை -40கி; புங்கப் பால் -700மி.லி, இசங்கின் ால் -700மி.லி, ஈசுரமூலிச்சாறு -70மி.லி, முசுமுசுக்கைச்சாறு 350மி.லி; நல்லெண்ணெய் -1400மி.லி; இவற்றை முறைப்படிக் ட்டிக் காய்ச்சி வடிக்கவும். இதனை திரியிலூட்டிப் போட்டு ர வர்ம அடியிடியினாலான காயம், புண் புரை, நீரழிவுப்புண் இவை ஆறும்.

### 14. நாட்பட்ட வர்மத்துக்குரிய மருந்து என்ன?

(1) சுக்கு, திப்பிலி, அரத்தை, அக்கராகாரம், கடுக்காய் வகைக்கு -10 கி. வீதம் கூட்டியிடித்து, 500.மி.லி. வப்பெண்ணெய்யிலிட்டுப் பதமுறக்காய்ச்சி வடிக்கவும். இதில், ாலை மாலை 10-மி.லி. வீதம் உட்கொள்ளவும். (2) காரெள்ளு லி; கொடிவேலி, கடுகு, கோட்டம், சுக்கு, திப்பிலி வகைக்கு 15கி; பனை வெல்லம் சரியளவு இவை கூட்டி மெழுகாய் டித்துக்கொண்டு, அதி காலையில் 100-கி அளவு சாப்பிடவும். 3) நன்னாரி வேரின் விழுது -100கி., எண்ணெய் -1லி. வீதம் ட்டிக் காய்ச்சி முழுகி வரவும். இவற்றால் உடலில் நாட்பட லைத்துத் துன்பம் தரும் வர்மக் கோளாறுகள் நீங்கும்.

### 15. வர்மத்திற்குரிய பத்திய உணவு என்ன?

வர்ம அடியினால் பாதிக்கப்பட்டவர்களுக்குரிய இளக்கு றை - மருந்துவகை - உணவு முறை போன்றவை அந்தந்த ர்மத்திற்கேற்ப மாறுபடும். எனினும், பொதுவாக - ஏலம், ரகம், பூண்டு, அதிமதுரம், வாலுளுவை இவற்றை, பருத்தி விதைப் பாலிலும், தேங்காய்ப்பாலிலும் அரைத்து கிழிகட்டி, அரிசியிலிட்டு வேகவைத்த கஞ்சியை உட்கொள்ளுதல் லம்பயக்கும். (இவ்வுணவுடன் வீண் அலைச்சல், கடும் உழைப்பு, உடலுறவு முதலியவற்றையும் நீக்குவதுடன் - உரிய உள், வெளி மருந்துகளையும் தருதல் வேண்டும்.)

# X பத்தியம் - பொருட் செயல்

★★ 1. தோடங்களை சமப்படுத்தும் பொருள் யாவை?

**வாதம்-பித்தம்-கபம்** ஆகிய முத்தோடங்களையும் முறையே பசுவின் மோர், பழம்புளி, பச்சை விலாமிச்சை வேர், பனிக்கட்டி, நாங்கூழ்ப் பூச்சி, நெல்லிவேர், அரு நெல்லிக்காய், மலையேலம், பெரு மரப்பட்டை, கொடு முந்திரிப்பழம், மருக்காரை வேர், வெப்பாலையரிசி, விழாலரிசி வெற்றிலை, பெருங்குமிழ் ஆகியன தன்னிலைப்படுத்தி வைக்கும்

★ 2. வளியைத் தணிக்கும் பொருள் யாவை?

***வளிக் (வாதம்)*** குற்றத்தை முறையே, சுக்கு, மிளகு, வேம்பு கொடுவேலி, கள்ளி, ஓமம், கடுகு, அவுரி, பூண்டு; காயம் சதகுப்பை, வாய் விளங்கம், குறுந்தொட்டி, உடும்பு நெய் சிவதை, மிளகாய், கருங்கோழி, வாளம், கௌரி, வீரம் சிறுதேக்கு, கருஞ் சீரகம், கடுக்காய், வாதமடக்கி, எட்டி போன்றவை தன்னிலைப் படுத்தும்.

★ 3. அழலைத் தணிக்கும் பொருள் யாவை?

***அழல் (பித்தம்)*** குற்றத்தை முறையே, கீழாநெல்லி கறிவேப்பிலை, கண்டு பரங்கி, மணலிக் கீரை, வல்லாரை கோட்டம், இம்பூரல், எலுமிச்சை, நாரத்தை, தான்றிக்காய் பாசிப்பாறு, நன்னாரி வேர், சீரகம், அருநெல்லி, முந்திரிப்பழம் ஏலம், சந்தனம், இளநீர், வில்வவேர், வெள்ளரி, சண்பகப்பூ மல்லி, பேய்ப்புடல், பச்சைக் கர்ப்பூரம், முசுமுசுக்கை போன்றவை தன்னிலைப்படுத்தும்.

★ 4. ஐயத்தைத் தணிக்கும் பொருள் யாவை?

***ஐயக் (சிலேத்துமம்)*** குற்றத்தை முறையே, திப்பிலி, மிளகு அரத்தை, கிராம்பு, நெல்லிவற்றல், அக்கராகாரம் வேப்பெண்ணெய், தாளிசபத்திரி, தாளகம், குங்குமப்பூ கோரோசனை, அண்டத்தைலம், முசுருமுட்டை, கஸ்தூரி வால்மிளகு, அதிமதுரம், மேனிவேர், முள்ளெலி, தேன் சாதிக்காய், கடம்புவித்து, விஷ்ணு கரந்தை, வெள்ளுள்ளி

கண்டங்கத்திரி, இலுப்பைப் புண்ணாக்கு போன்றவை தன்னிலைப்படுத்தும்.

**★★ 5. குளிர்ச்சியூட்டும் பொருள் யாவை?**

உடலின் மிகு சூட்டைக் குறைத்து குளிர்ச்சியையுண்டு பண்ண-முறையே, அகத்தி, ஆராக்கீரை, இலுப்பை, எலுமிச்சை, கடாநாரத்தை, கட்டுக் கொடி, கழுநீர், கீழாநெல்லி, கீரைத்தண்டு, கூவைக் கிழங்கு, சந்தனம், செம்பருத்தி, தெங்கு, நெல்லி, பறங்கிக்காய், பனை, பன்னீர்ப்பூ, புதினா, பொன்னாங்காணி, மணத்தக்காளி, மாதளம்பழம், வாழையிலைப்பட்டை, வெள்ளரிக்காய், வெந்தயக்கீரை, விலாமிச்சு வேர் போன்றவற்றை உட்கொள்ள பயனுண்டு. (இது காமாலை - வறட்சி முதலியவற்றில் உதவும்.)

**★★ 6. வெப்பமூட்டும் பொருள் யாவை?**

உடலில் மிகுகுளிர்ச்சியைக் குறைத்து வெப்பத்தையுண்டு பண்ண - முறையே - அகில், அக்கராகாரம், அபினி, அறுகீரை அன்னாசிப்பூ, ஆடுதின்னாப்பாளை, இஞ்சி, ஈசுரமூலி, எட்டி, எருக்கு, எள், ஓமம், கஞ்சா, கஸ்தூரி மஞ்சள், கருணைத்தண்டு, கரியபோளம், காப்பிக்கொட்டை, கார்போகரிசி, குங்கிலியம், குங்குமப்பூ, குன்றி, செங்கொடுவேலி, சடாமஞ்சில், சதகுப்பை, மிளகு போன்றவற்றை உட்கொள்ளப்பயனுண்டு, (இது சன்னிவாதம் முதலியவற்றில் உதவும்.)

**★ 7. மலத்தை இளக்குவன - கட்டுவன யாவை?**

**மலத்தை** - முறையே, விளக்கெண்ணெய், அகத்தி, கடலை, கீரைத்தண்டு, சோளம், தக்காளி, வாழைப்பழம், எள், எருக்கு, கடுக்காய், தேங்காய், பூசனி, சிவதை, கந்தி, ஆல்பொகடாப் பழம் போன்றவை - **இளக்கி** வெளிப்படுத்தும் (கள்ளிப்பால் -கற்றாழைப் பால்-வாளம்-பீதரோகிணி-நிலாவரை முதலியன எருவை நீராய் உடைத்துக் கழியச் செய்யும்.)

**மலத்தை**-முறையே அபின், அத்தி, இத்தி, ஆல், அரசு, நாவல், ஒதியம்பட்டை, அசோகு, சாதிக்காய், மாச்சக்காய், காசுக்கட்டி, மாதுளம் ஓடு, படிகாரம், இலிங்கம், கஞ்சா, நாகம், அன்னபேதி, ஆமை ஓடு, பவளம், சுக்கு போன்றவை **இறுக்கிக் கட்டி** கழிச்சலை நிறுத்தும்.

### ★★ 8. சிறுநீரைப் பெருக்கும் பொருள் யாவை?

**சிறுநீரை**-முறையே, நெருஞ்சில், சுரைக்கொடி, வாழைத் தண்டு, முள்ளங்கி, வெடியுப்பு, வெங்காரம், வெள்ளரிக்காய், கொடி முந்திரிப்பழம், நன்னாரி, நீர்முள்ளி, புதினாக்கீரை, பார்லியரிசி, தக்காளி, கீழாநெல்லி, அன்னாசிப்பழம், மல்லி, கரும்பு, நண்டுக்கல், மண்டூரம், கள் போன்றவை - **பெருக்கிக் கழியச் செய்யும்**. - (இளநீர்-அரிசிக்காடி-குரோசானி ஓமம் - வாழைத்தண்டு-கிரைத்தண்டு, எள்ளுப்பிண்ணாக்கு முதலியன சிறுநீரை குறைக்கக் கூடியனவாகும்)

### ★ 9. வாந்தியுண்டாக்கும் பொருள் யாவை?

**வாந்தியை உண்டு பண்ணுவதற்கென** - முறையே, அலரி, அழிஞ்சில், ஆற்றுத்தும்மட்டி, இலுப்பை, உத்தாமணி ஊமத்தை, எருக்கு, கள்ளி, குப்பைமேனி, குன்றி, சணப்பு, சிறகுறிஞ்சா, சீயக்காய், சுரை, துருசு, புகையிலை, பேயத்தி, வசம்பு, வெண்கடுகு, மலைவேம்பு வேர்ப்பட்டை போன்றவற்றை உட்கொள்ள இரைப்பையைத் தூண்டிப்புரட்டி வயிற்றிலுள்ளவற்றை மேல் நோக்கச் செய்து வாந்தியை உண்டுபண்ணும். (இதனை நஞ்சுண்டல் முதலியவற்றில் கையாளலாம்).

### ★ 10. உறக்கமுண்டாக்கும் பொருள் யாவை?

**உறக்கத்தை உண்டாக்க** - முறையே, அபினி, அழவணப்பூ கிச்சிலிப்பழம், குங்குமப்பூ, பிசின்பட்டை, மேனி, நாபி, மருது, அமுக்கராக்கிழங்கு, ஊமத்தை, கஞ்சா, கத்திரி, சாதிப்பத்திரி, குரோசானி ஓமம், குடியோட்டுப்பூண்டு, கிரிப்பூண்டு, மதனகாமப்பூ, ஈச்சு - பனை - தென்னங்கள் ஆகியவற்றைக் கொள்ளலாம். (இதனை பிணியாளன் வேதனையின்றி உறங்கக் கையாளலாம்).

ஆயின், அபினி, ஊமத்தை, கஞ்சா, நாபி, காக்கை கொல்லி சாதிக்காய், புகையிலை ஆகியவற்றை அளவு மீறியுண்ண மூர்ச்சை உண்டாகும். (காப்பிக்கொட்டை தூக்கத்தை விலக்கும்)

### ★ 11. குருதிப்போக்கை நிறுத்துவன யாவை?

**குருதிப்போக்கை** தடுப்பதற்கு அல்லது உள்மரிப்பதற்கு முறையே அபினி, அத்தி, அரசு, அரிவால் மூக்குப்பச்சிலை,

அறுகு, அன்னாசிப்பழம், ஆல், இத்தி, இம்பூறல், எலி ்பாமணக்கு, ஓதியம் பட்டை, கலியாணப்பூசனி, காட்டாமணக்கு, சேம்பு, நாவல், மாசிக்காய், மாதளை, ்முள்ளிலவு, வாழைநீர், வேங்கைப் பிசின் ஆகியவற்றைக் ்கைக்கொள்ள வேண்டும். (இது, குருதிக் கழிச்சல் - பெரும்பாடு ்முதலியவற்றில் உதவும்).

## ★★ 12. கபத்தையகற்றும் பொருள் யாவை?

**கபத்தை இளக்கி வெளிப்படுத்த** - முறையே, அதிமதுரம் அரத்தை, ஆடாதோடை, இண்டு, இம்பூரல், உத்தாமணி, ்ண்டங்கத்தரி, கருப்பூரவள்ளி, குப்பைமேனி, அக்கரகாரம், ்கோட்டம், சங்கன், தும்பை, துளசி, தூதுளை, நொச்சி, ்முசுமுசுக்கை, வால்மிளகு, விஷ்ணுகிராந்தி, வெள்ளைப்பூண்டு ்போன்றவை பயன்படும். (இது சுவாசகாசம் - கபக்கட்டு ்முதலியவற்றில் உதவும்.)

## ★ 13. வியர்வையுண்டாக்கும் பொருள் யாவை?

**உடலில் வியர்வையை** உண்டு பண்ணுவதற்கு - முறையே ்அபினி, அருநெல்லி, அன்னாசிக்காய், இலவங்கப்பத்திரி, ்எருக்கு, கஞ்சாங்கோரை, கருப்பூரப்புல், காஞ்சொறி, கோரை, ்கோவை, தாழை, துளசி, நன்னாரி, பற்படாகம், பேராமுட்டி, ்பொன்முசுட்டை, மாசிப்பத்திரி, விலாமிச்சுவேர், வெட்டிவேர், வில்வஇலை போன்றவற்றைப் பயன்படுத்தலாம். (இது கபசுரம் சன்னி முதலியவற்றுக்கு உதவும்)

## ★★ 14. பசியைத் தூண்டும் பொருள் யாவை?

**பசித்தீயைத் தூண்டி** பசியை உண்டு பண்ண - முறையே, ்ஓமம், அதிவிடயம், அரத்தை, இஞ்சி, இலவங்கம், கறி வேம்பு, ்குங்குமப்பூ, கொத்துமல்லி, கோட்டம், சதகுப்பை, சீரகம், ்சுக்கு, பாகல், பிரண்டை, சுண்டை, புதினாக்கீரை, மாம்பிஞ்சு, அசமதா ஓமம், மிளகாய், வெள்ளுள்ளி, வெற்றிலை போன்றவற்றை உட்கொள்ளலாம். (இதை குன்மவாயு - மந்தம் முதலியவற்றில் பயன்படுத்தலாம்.)

## ★ 15. குற்றங்களை மீறச்செய்யும் பொருள் யாவை?

பொதுவாக, முக்குற்றங்களுள் முறையே (1) கார்ப்புச் சுவையில் சுக்கு, திப்பிலி, பூண்டு இவையும்; கைப்புச் சுவையில்

சீந்தில், போய்ப்புடல் இவையும் தவிர மற்றவை - **வாதத்தை** அதிகரிக்கும். (2) புளிப்புச்சுவையில் எலுமிச்சை, மாதுளை, நெல்லி தவிர மற்றவை **பித்தத்தை** அதிகரிக்கும். (3) இனிப்புச் சுவையில் பழகிய சம்பா, சிறு சம்பா, கோதுமை, வால் கோதுமை, பயறு, தேன், சர்க்கரை - முல்லை நிலத்தில் வசிக்கும் மிருக மாமிசம் இவை தவிர மற்றவை **கபத்தை** அதிகரிக்கும். (4) உப்புச் சுவையில் இந்துப்பு தவிர மற்றவை - **கண்களுக்கு** ஏற்றவையல்ல. (5) துவர்ப்புச் சுவையில் கடுக்காய் தவிர மற்றவை **சீதவீரியமும், இறுக்க குணமும்** கொண்டவை யாகும். (பொதுவாக, கசப்பு, கார்ப்பு, துவர்ப்புச், சுவைகள் - **வாதத்தையும்**; கார்ப்பு, புளிப்பு, உவர்ப்புச் சுவைகள் - **பித்தத்தையும்** - இனிப்பு, புளிப்பு, உவர்ப்புச் சுவைகள் - **கபத்தையும்** தன்னிலை பிறழச் செய்யும். மற்றும், புளிப்பு, உவர்ப்புச் சுவைகள் - **மிக வெப்பத்தையும்**; துவர்ப்பு, இனிப்பு, கார்ப்புச் சுவைகள் - **மிக சீதளத்தையும்** உண்டாக்கும்.) எனவே தோடக் குற்றங்களுக்கேற்ப உரிய சுவைப் பொருட்களை நீக்கவோ - சேர்க்கவோ வேண்டும்.

### ★★ 16. அறுசுவையின் பண்பும் - பயனும் யாவை?

**சுவைகள் (உருசி)** இனிப்பு-புளிப்பு-உவர்ப்பு-கசப்பு-கார்ப்பு-துவர்ப்பு என ஆறு வகைப்படும். இவற்றுள் (1) **இனிப்புச் சுவை** பிருதிவியும், அப்புவும் இணைந்ததாகும் இதனால், வாயில் இனியபசை உண்டாகும். குமட்டல் தீரும் இது உடலில் விரைவில் சார்ந்து உடலை வளர்க்கும். (2) **புளிப்புச் சுவை** பிருதிவியும், தேயுவும் கூடியதாகும். இதனால், எச்சில் சுரக்கும், மயிர் சிலிர்க்கும். இருதயம் சுருங்கும். நீர் சுண்டி வியர்க்கும். குருதி ஓட்டமும், வெப்பமும் குன்றும் (3) **உவர்ப்புச் சுவை** அப்புவும், தேயுவும் சேர்ந்ததாகும் இதனால், வாநீரும், தொண்டை அழற்சியும் காணும். (4) **கசப்புச் சுவை** வாயுவும், ஆகாயமும் கூடியதாகும். இதனால் முகம் சுளிக்கும். சுவை நீங்கும், குருதி, பொறிகளுட் சென்று வலுப்படுத்தும். இரைப்பையில் வெப்பமுற்று, குருதி ஓட்டம் சீரடைந்து, உடல் நலமுறும். மிகுதியாயின் மலக்கட்டும், சுரமும் காணும். (5) **கார்ப்புச் சுவை** வாயுவும், தேயுவும் சேர்ந்ததாகும் இதனால், கண், மூக்கு, வாய் இவற்றில் நீர் சுரக்கும். நாவில் காரமுற்று எரியும். சருமத்தில் பட எரிந்து அழற்சியுறும் அதிகரிப்பின் கழிச்சல், குடல் புண் காணும். (6) **துவர்ப்புச் சுவை** பிருதிவியும் வாயுவும் இணைந்ததாகும். இதனால் நாவில்மதமதப்பு காணும். தொண்டை கட்டும். குருதியைச்

சுருக்கிப் புண்ணை ஆற்றும். (அறு சுவையுமின்றி சப்பென்று இருப்பதில் விளைவுகள் குறைவு.)

## ★ 17. உலோகச் சத்துள்ள மூலிகை யாவை?

மூலிகையினங்களுள் குறிப்பாக (1) பொற்றிலைக் கரப்பான், முசுமுசுக்கை, பொடுதலை, பங்கம்பாளை, முள்ளங்கி, ஆகாயக்கருடன், சித்திரமூலம், பொன்னாவிரை, அவுரி, நந்தியாவட்டை இவற்றுள் - **தாமிரமும்;** (2) இலந்தை, வெள்ளறுகு, செருப்படை, ஆடாதோடை, நல்வேளை இதில் - **வங்கமும்;** (3) சிவன் வேம்பு, மேனி, கற்றாமரை, மயிலாரை இவற்றுள் - **தங்கமும்;** (4) கீழாநெல்லி, தும்பை, துளசி, தூதுளை, பொன்னாங்காணி, தவசுமுருங்கை இவற்றுள் - **காரீயமும்;** (5) மணத்தக்காளி, துத்தி, அறுகு, செங்கற்றாழை இவற்றுள் - **வெள்ளீயமும்;** (6) சிறுகீரை, பூமிச்சர்க்கரை, கருந்துளசி, அழவணம் இவற்றுள் - **அயத்தாமிரமும்;** (7) நத்தைச்சூரி, கள்ளி, சிறியாநங்கை இவற்றுள்-**காந்தவங்கமும்;** (8) பேய்க்கடலை, நீர் மேல் நெருப்பில் - **திரிவங்கமும்;** (9) புளியாரை, வில்வத்தில்-**நிமிளையும்;** (10) பிரமியில்- **நாகமும்;** (11) விழுதியில் - **தராவும்;** (12) கழற்சியில் - **அயமும்;** (13) கருவூமத்தையில் - **அயவங்கமும்;** (14) சிறு சின்னியில் - **கிளிஞ்சலும்;** (15) கதலி வாழையில் - **வெடியுப்பும்** முறையே அடங்கியுள்ள சத்துக்களாக உள்ளன. இவை அவ்வவற்றின் சத்துக்களுக்குரிய குணநலன்களை நல்கும்.

## ★ 18. பாடாணங்களில் உள்ள சத்துக்கள் யாவை?

அனைத்து வகைப் **பாடாணங்களிலும்** பல்வேறு உலோக -உபரச-காரசார சத்துக்கள் இயற்கையிலேயே அடங்கியுள்ளன. அவற்றுள் குறிப்பாக, **வெள்ளையில்** - சூதம், வங்கம்; **சங்கில்** -வங்கம், வெடியுப்பு; **கௌரியில்**-அயம், தாமிரம்; **சவ்வீரத்தில்** - சீனம், வெடியுப்பு; **சாதி லிங்கத்தில்** - சூதம், கந்தி, நிமிளை; **துத்தத்தில்**-அயம், தாமிரம்; **மனோசிலையில்**-அயம், வங்கம்; **துருசில்** - அயம், செம்பு, கந்தகம்; **கந்தகத்தில்** - அயம், தாமிரம்; **கோழித்தலைக் கந்தியில்**-அயம், தாமிரம், வங்கம்; **வாணக்கந்தியில்** - அயம், வங்கம்; **சுரைக் கந்தியில்** - திரிவங்கம், செம்பு; ஆகிய சத்துக்கள் அடங்கியுள்ளன. இவ்வகை சத்துக்களை அறிந்து, உரிய முறையிலும், அளவிலும் அவ்வவற்றை கூட்டி மருந்து செய்தலே நலம்.

## ★ 19. உயர்வகை மூலிகை என்பவை யாவை?

சித்தர்கள் தமது உடல் அழியாது நிலைத்திருக்கும் பொருட்டும், வாத-வைத்திய - **யோக - ஞானக் கலைகளில்** அரிய சாதனைகளை அடையும் பொருட்டும், எவரும் எளிதில் அடையவியலாத சில மூலிகையினங்களை வகுத்து, அவற்றைப் பயன்படுத்தியதால், அவை **உயர்வகை மூலிகையினம்** எனக் கொள்ளப்பட்டது. அவற்றுள், நாறு கரந்தை - கறுவாழை - தீபச்சோதி - திரணச்சோதி - எருமை கணைச்சான் - உரோம விருட்சம்-சுணங்கன் விருட்சம்-செந்திராய்-செம்பல்லிப்பூடு - கல்பிரமி - செங்கொடிவேலி - செந்நாயுருவி- கல் செம்பு கற்றாமைரை-குண்டலபாலை-யாகவேதி-வெண் கண்டங்கத்திரி - கசப்புப்பாளை - பொன்வண்ணச்சாலி - கருந்தும்பை - கருந்துளசி-மதனத்தண்டு-செந்தாடுபாவை - முண்டினிவிருட்சம் - சாயாவிருட்சம்-கருநெல்லி - கல்லடிக்குருந்து - பொற்சீந்தில் - நீலஞ்சோதி - வெண்புரசு - வெண் தூதுவளை - கிளிமூக்கு மாங்காய்-குழலாதொண்டை-கருவீழி - பொன்னூமத்தை - மூவிலைக்குருந்து - கொடிநெல்லி - சாய்கை வேதி - மஞ்சு ரோகிணி-செழுமலர்க் கொன்றை-கப்புச் சடைச்சி- கருங்கொடி வேலி - கருநொச்சி-அழுகண்ணி-தொழுகண்ணி - கருவூமத்தை - செங்குமரி - கல்லாரை ஆகிய சிலமூலிகைகளையும் கூறலாம்

## ★ 20. உப தாதுக்கள் என்றால் என்ன?

பொதுவாக, சிலவகை **உலோகக் கலப்புள்ளதும்** - அவற்றைப் போன்றே நிறமும் தோற்றமும் இருந்தாலும் அவற்றினும் குறைந்த பண்புடையதுமான பொருளே **உபதாது** எனப்படும். உதாரணமாக பொன்-வெள்ளி - செம்பு - வங்கம் - வெண்கலம் - நாகம்-இரும்பு போன்ற **உயர்தாதுக்களுக்கு** இணையாக முறையே, பொன்னிமிளை-வெள்ளி நிமிளை - துத்தம் - கங்கோட்டம்-கல்கபரி-சிந்தூரம் - கிட்டம் ஆகிய **உபதாதுக்களைக்** கூறலாம். மற்றும், சில உபதாதுக்களாக, அப்பிரகம் - நீலாஞ்சனம்-மனோசிலை- தாளகம் - இரசம் - சிலாசத்து - காவிக்கல் - பித்தளை - காரீயம் முதலியவற்றையும் கூறலாம். (உலோக - உப்பு - இரசச்சத்துள்ள **உபரசம்** என்பனவேறு) நிற்க, உடலின் உபதாதுக்களாக, பால் - மாதவிடாய் - கொழுப்பு - வியர்வை - பற்கள் - மயிர் - நிணநீர் ஆகியவற்றைக் கூறப்படும்.

### ★ 21. உபரச நட்புப் பொருட்கள் யாவை?

***120*–உபரசங்களையும்** சத்தாக மாற்றுவிக்கும் வலிமை உடைய **நட்புப் (மித்திரன்)** பொருட்கள் என்பன. மொச்சை -கோதுமை-எள்ளு-உளுந்து-வெடியுப்பு-சத்திச்சாரம்-சிறுமீன் -யானைக்கொம்பு-கலைக்கொம்பு-குன்றி-எருமைக்கொம்பு-குதிரைச் குளம்பு-வரட்தவளை-முயலெலும்பு-வெல்லம்- சர்க்கரை - வாழைக்கிழங்கு-புறாவெச்சம்-கோழிமலம்- பன்றிக்கொம்பு - ஆதளைவிதை ஆகியனவாகும் (இவையன்றி வேறு பலவுமுண்டு).

### ★ 22. பகை - நட்புச் சரக்குகள் என்றால் என்ன?

ஒரு மருந்துச் சரக்கின் தீக்குணத்தை அடக்குவது **'சத்துரு'** எனவும் - அச்சரக்கிற்கு வன்மை தருவது **'மித்துரு'** எனவும் கூறப்படும். எனவே, ஒரு மருந்தைச் செய்யுமுன், அதில் சேரும் சரக்குகளின் **பகை - நட்புத் தன்மையினை** அறிந்து ஒரு சரக்கின் சத்துருவால் மற்றொன்றை மடித்து, அதன் குணத்தை மாற்றியமைத்து - அதன் மித்துருவால் அதற்கு வலிமை ஏற்படுத்துவது **மாரணமுறை** எனப்படும். இம்முறைக்கு உட்படாத மருந்துகள் நன்கு அமையாமல் போவதுடன், தீமையினையும் விளைவிக்கக்கூடும்.

### ★★ 23. உப்பு - புளிச் சரக்குகள் யாவை?

**உப்பு - புளிச் சரக்குகள்:** மருந்து வகைகளுள் சிறுநீர் (அமுரி) வெடியுப்பு, கல்லுப்பு, சூடன், கடல்நுரை, சூதம், காந்தம், இரும்பு, தொட்டி, வீரம், கௌரி, வெள்ளை, வைக்கிராந்தம், தங்கம், நாகம், சாரம். பச்சைக்கர்ப்பூரம் ஆகியன **உப்புச்சரக்குகள்** என்றும் - இதற்கிணையாக முறையே. மலம், படிகாரம், பழம் புளி, துருசு, கற்சுண்ணநீர், கந்தி, காடி, எலுமிச்சம்பழச்சாறு, புளியரணை, புளியாரை, புளிமாங்காய், பனங்கள், நிமிளை, சிலை, வீரம், வெண்காரம், இந்துப்பு ஆகியன **புளிச்சரக்குகள்** என்றும் கூறப்படும். உப்புச் சரக்கை புளிச்சரக்கினால் கட்டி நீற்றலாம்.

### ★★ 24. நாத - விந்துச் சரக்குகள் யாவை?

**நாத விந்துச்சரக்குகள்:-** மருந்து வகைகளுள் இலிங்கம், நிமிளை, கெந்தி, பூநாகம், பூநீறு, இரும்பு, காந்தம், செம்பு, நாகவங்கம் ஆகியன **நாதச்சரக்குகள்** எனவும் -

இதற்கிணையாக முறையே கல்லுப்பு, வெள்ளை, இரசம், வீரம், சூடன், எவச்சாரம், கல்மதம், சிலாசத்து, பூரம் ஆகியன விந்துச்சரக்குகள் என்றும் கூறப்படும், இதில், நாத (பெண், விந்து (ஆண்) சரக்குகள் இரண்டும் ஒன்றுடனொன்று சேர்ந்து கட்டிக்கொள்ளும்.

## பத்திய விதிமுறைகள்

### ★ 25. கடும் பத்தியத்திற்குரிய விதி முறை என்ன?

கடும்பத்தியத்தின் பொழுது பத்திய உணவுகளுடன் உப்பு புளி நீக்கியும் உண்ணல் வேண்டும், மருந்தை நிறுத்திய பின்பும் சின்னாட்கள் வரை வறுத்த உப்பும் - சுட்ட புளியும்கூட்டி நெய் - சீரகம் தாளிதமிட்டும் சேர்த்து மறு பத்தியத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். (மிகு கடும் பத்தியத்தில் புதுக் குடுவையில் சோறு வடித்து, உப்பின்றி வெறும் சுடுநீர் மட்டும் சேர்த்துச் சாப்பிட வேண்டும். இதில் முறை தவறினால் கைகால் வீங்குதல் முதலியன நேரிடும்).

### ★★ 26. பத்தியத்திற்கு ஏற்ற பொருள் யாவை?

பத்திய முறைக்கேற்ற உணவுப்பொருட்கள் முறையே கட்டிய உப்பு, ஆமை, புளியாரை, சீயக்கொழுந்து, நெல்லி அருநெல்லி, வெள்ளாடு, முயல், ஊர்க்குருவி, காடை, மான் மரை, சுறாமீன், மயரை, குரவை, வரால், தேளி, கெளிறு மிளகு, சருக்கரை, தேன், சிறுகீரை, ஆவின் பால் - நெய். சிறு பயறு, பொன்னாங்காணி, துவரை, அவரைப் பிஞ்சு. புடலம்பிஞ்சு, கதலி வாழைப்பழம், கொதிநீர், அத்திப் பிஞ்சு முருங்கைப் பிஞ்சு, பரட்டைக்கீரை, முள்ளிப் பிஞ்சு, வழுதுணம் பிஞ்சு, தூதுளைச்சமூலம், கண்டங்கத்திரிப் பிஞ்சு ஆகியன வாகும். இவை பிணிகளை விலக்கும் அல்லது மீற விடாது.

### ★★ 27. மருந்தை முறிக்கும் பொருள் யாவை?

மருந்துகளை முறிக்கும் உணவுப்பொருள்கள்; முறையே கொள்ளு, கொட்டி, காடி, கோழி, பன்றி, கொக்கு, செவ்வாடு சேம்பு, சீனியவரை, சுரைக்காய், பாகற்காய், பூசனி கடலைஅவரை பெரும்பயறு, காட்டுப்பாகல், பழுபாகல் மாங்காய், புளி, கடுகு, தேங்காய், எருமைப்பால் - நெய் கள், சாராயம், உழுவை. விலாங்கு, கூனி, கெண்டை, கயல்மீன்

முதலிய கரப்பான் பொருட்களாகும். இவற்றுள் சிறிதளவு உண்டாலும் மருந்து முறிந்து, பிணியும் வலுக்கும்.

**★★ 28. அம்மைக்குரிய உணவுவிதி என்ன?**

அம்மை நோயால் தாக்கப்பட்டோர் முறையே, எலுமிச்சம்பழம், பழம்புளி, நெல்லிக்காய், பனங்கற்கண்டு, கெளுத்திக்கருவாடு, பாசிப்பயறு, குரவைக் கருவாடு, வெள்ளாட்டு உப்புக்கண்டம், காடை, வெள்ளெலி, ஊர்க்குருவி, உடும்பு, வாழைக்கச்சல், அத்திப்பிஞ்சு, நீர்மோர், வெங்காயம் ஆகியவற்றை பத்திய உணவாக மேற்கொள்ளலாம் - ஆயின், மாங்காய், தேங்காய், இலுப்பெண்ணெய், நல்லெண்ணெய், சோற்றாவி, நெல்லாவி, கொட்டைமுத்தாவி, தாளித வாடை இவை உடலில் பட்டால்கூட கருஞ்சூலை, கடுப்பு, கைகால் முடக்கம் ஆகியன விளையும்.

**★★ 29. சுரத்திற்கு ஆகாத பொருள் யாவை?**

சுரநோயின் போது பால், எண்ணெய், இளநீர், போகம், குளிர்ந்தாறிய சோறு, மிகுநடை, தயிர், புளிப்பு, மிகுவேலை; இனிப்புப்பாகு, பச்சை மீன், இறைச்சி, கோழி, பழங்கறி, தேங்காய், மாங்காய், நெய், பருப்பு, முட்டை, புனுகு, சந்தனம், தோசை, பிட்டு, பணியாரம், பயறு, அவல், பொரி, வேசை உறக்கம், மஞ்சள் வாடை, பழங்கஞ்சி, மிகுதூக்கம், ஆசையுடன் பொருள் தேடல் ஆகியவற்றை கைக்கொள்ளல் கூடாது. ஒருக்கால் தவறிச் சேர்ப்பின் சந்நிதோடமும், அதுவும் மீறினால் மரணமும் விளையும்.

**★★ 30. பொதுவான பத்திய விதிமுறை யாது?**

பொதுவாக (1) வாயு-வயிற்றுக் கோளாறுகள் முதலியவற்றுக்கு - உருளைக்கிழங்கு, வாழைக்காய், மொச்சை - அவரைவகை - உளுந்து, கத்தரி, மாவுப்பண்டங்கள், கோசு, செவ்வாட்டு மாமிசம், சேவல் கறி, முட்டை முதலிய வாயுப் பொருட்களையும்; (2) குருதி, சீதக்கழிச்சல் முதலியவற்றுக்கு - மிளகாய், மீன், கோழி, உப்பு, கடின உணவு முதலிய மிகுகாரமான, உஷ்ணமான பொருட்களையும், (3) சரும நோய்களுக்கு - மீன், கருவாடு, பயறுவகை, கத்தரி, சோளம், செம்மறியாட்டுக் கறி, சேவல்மாமிசம், கம்பு முதலிய கரப்பான் பொருளையும்; (4) சோகை-காமாலை-பாண்டு-பெருவயிறு முதலியவற்றுக்கு-உப்பு, கடுகு, நல்லெண்ணெய், மாமிசம், புளி,

மது வகை, கிழங்கு - காய் - பயறு முதலிய வாயு - கரப்பான் பொருட்களையும்; (5) **மூலம் - பவுத்திரம்** முதலியவற்றுக்கு -மிளகாய், புளி, கடுகு, நல்லெண்ணெய், மதுவகை, கேப்பை, அலைச்சல், தூக்கம் முதலிய உஷ்ணமானவற்றையும் முறையே நீக்க வேண்டும்.

நிற்க, பொதுவாக எப்பிணிக்கும், மிகுவேலை - அலைச்சல் - புளி - புகை-போகம்-மது-இராவிழித்தல்-மனக்கவலை -அதிக சிந்தனை-பகலுறக்கம்-மந்தகுணப்பொருட்கள் போன்றவற்றை விலக்க வேண்டும் (பத்தியம் வைப்பதும் - நீக்குவதும் பண்டிதற்கழகு.)

## ★ 31. உண்ணுவதற்குரிய கீரைகள் யாவை?

உணவுவகைகளில் சமைத்து உட்கொள்ளக் கூடிய **கீரைகள்** எனப்படும் **இலைதழைகள்** பலவுண்டு. அவை-அறை, குப்பை, செந்தண்டு, சிறு, குமுட்டி, கோழி, துடுப்பு, பருப்பு, பறட்டை, பிண்ணாக்கு, முள்ளி, வள்ளை, அகத்தி, மின்னை, புளியாரை, புளிச்சை, பொன்னாங்காணி, கரிசாலை, ஆரை, பசலை, சோகி, வெந்தய, மணித்தக்காளி, காசினி, சாணாக்கி, புதினா, கறிவேம்பு, பூ, முக்குளி, தண்டு, தூதுளை, பாற்சோற்றி, பண்ணை, காய்ச்சுரை, துத்தி, விழுதி, முருங்கை, பொடுதலை, முசுமுசுக்கை, சிவப்புத்தோட்ட, குள்ளத்தண்டு, சிறுபசலை, உமரி, மணலி, சுக்கான், வல்லாரை, முளை, புளிச்சிறு, மான், கலவை (பலவகை) ஆகிய கீரைகள் ஆகும். (இவை, உணவாக மட்டுமின்றி பல்வேறு பிணிகளைத் தீர்க்கும் மருந்தாகவும் பயன்படும்)

## ★ 32. அனுபாசனத்தின் வகை யாவை?

அனுபாசனம் எனப்படும் **இணை மருந்துமுறை** ஐவகைப்படும். அவை - (1) **அனு=உடன்+பானம்=குடித்தல்** - இது, மருந்தை உடசெலுத்தவேண்டி, அதனுடன் கலந்து பருகும் குடிநீர் முதலிய திரவப்பொருள் (2) **அனு= தொடர்ச்சி+பானம்=பருகுதல்**-இது, அருவருப்பூட்டும் மருந்தை உட்புகுத்த வேண்டி, அதனை வாயிலிட்டு தொடர்ந்து அருந்தும் குடிநீர் முதலியன (3) **அனு=பின்+பானம்=குடித்தல்** - இது, மருந்தை விழுங்கியபிறகு, அது வெளிவராதிருக்க பருகும் இதமான குடிநீர் முதலியன (4) **அனு=கூட+பானம்= புசித்தல்** - இது, மருந்தை பொதிந்தோ, சுவையுண்டாகுமாறு கலந்தோ உட்கொள்ளும் நெய், வெண்ணெய், தேன், சர்க்கரை,

வெல்லம் முதலியன (5) அனு=பின்+பானம்=குடித்தல் -இது, உணவுகொண்டபின் ஏற்கும் குடிநீர், மணப்பாகு, ஆசவாரிஷ்டம் முதலியன. நிற்க, மேற்கூறியபடி - மருந்தை உட்புகுத்த வேண்டி மட்டும் செய்யும் கூட்டு மருந்து என்ற பொருள் சித்தமுறைக்குப் பொருந்தாது. ஏனெனில் முக்கிய மருந்தாகக் கொள்ளும் நீற்றினங்களுடன் கலந்து தரப்பயன்படும் துணைச்சரக்குகள் உபமருந்துகளாகவும் பயன்படுவனவாகும். அவற்றின் பண்புகளுக்கேற்ப, நீற்றினங் களுடன் இணைந்து செலாற்றும் சேர்க்கை மருந்தாகவும் பயன்படும். இவையின்றி தரப்படும் முக்கிய மருந்தின் முழுப் பயனும் கிட்டாமற் போவதோடு - சேரும் அனுபானங்களின் குணங்களுக்கேற்ப ஒரே மருந்தினால் பலவகையான நோய்களையும் தீர்க்கவியலும் என்பதும் உண்மையாகும்.

### ★★ 33. கஞ்சி எத்தனை வகைப்படும்?

கஞ்சி என்றால் குழையும்படி பசை போல் வெந்த கஞ்சிக்கூழ் அல்லது நீராய்க்கரைத்த உணவாகும். அரிசி முதலிய தானியங்களை நீரிலிட்டுக் கொதிப்பித்து, வெந்தபின் இறக்கிய அன்னப்பால் அல்லது நீராகாரமாகும். இந்த சூடான திரவம் பிணியாளர்களுக்கேற்ற உணவாகவும், தாகசாந்தி செய்வதாகவும், வியர்வையுண்டாக்கியாகவும், சிரமமின்றி செரிப்பதாகவும், தீங்கு விளைவிக்காததாகவும் இருக்கும். இது மூவகைப்படும். அவை (1) வடிகஞ்சி - இது, அரிசியை வெந்து கொதிப்பித்தபின் வடிப்பதாகும். (2) கொதிகஞ்சி - இது, அரிசி வெந்து கொதித்துக் கொண்டிருக்கும் போதே எடுப்பதாகும். (3) உறைகஞ்சி - இது, அரிசி வெந்தபின் வடித்து இறுகிய கஞ்சியாகும். இம் மூன்றுக்கும் வெவ்வேறு குணங்களுண்டு. சுமார் 30 வகையான கஞ்சிகள் புழக்கத்தி லுள்ளன. இவற்றுடன் பழச்சாறு கலந்தும், உப்பு அல்லது சர்க்கரை சேர்த்தும், தனியாகவும் தரப்படும். கஞ்சிகளினால் நோயாளிகளின் செரிமானத்துன்பம், மலநீர்ச்சிக்கல் முதலி யன நீங்குவதோடு-உட்கொள்ளும் மருந்துகளின் செயல்பாடுகள் பாதிக்காமலும் - பத்தியக் கேடு ஏற்படாமலும் பாதுகாக்கப்படுவதால் பிணியும் விரைவில் நீங்க வழிபிறக்கும்.

### ★ 34. சேவனகாலம் என்றால் என்ன?

சேவனகாலம் என்றால் மருந்துண்ணும் வேளையைக் குறிக்கும். பொதுவாக, காலை - மாலை வேளைகளிலும்,

சில நோய்களுக்கு 3-வேளையிலும், ஏன் அதற்கு மேலும் கூட கொடுப்பதுண்டு. மேலும். (1) செரிமானம் தடையாக உள்ளதற்கு உணவிற்கு முன்னரும் - செரிமானத்திற்கு என்றால் உணவுக்குப் பிறகும்-தடையில்லாத சீரணத்தின் போது உணவுக்கு முன்னரும், பிறகும்-அக்கினி தீபனத்தை உண்டாக்க உணவின் நடுவிலும் உரிய மருந்துகளை ஏற்கலாம். (2) குமட்டல், விக்கல், இரைப்பு, விஷதோடம் இவற்றுக்கு உணவுக்குப்பின் கொள்ளலாம். (3) கண், காது, மூக்கு, தலைமுடி நோய்களுக்கு சாயுங்காலம் அல்லது இரவில் மருந்துண்பது மேலாகும். (4) பாடாணம், சுண்ணம் முதலிய வீரியமிக்க மருந்துகளை வெறும் வயிற்றில் உண்பது நலமல்ல. (5) வாதப்பிணிகளுக்கு - உணவுக்கு முன்னும், பித்த நோய்களுக்கு - உணவின் நடுவிலும், கபப்பிணிகளுக்கு - உணவுக்குப் பின்னும் மருந்துகளை ஏற்பது நலமாகும்.

### ★ 35. மருந்துண்ட மாய்க்கிறை என்றால் என்ன?

ஒரு மருந்தை உட்கொண்ட்வுடன் வாயில் காணும் கசப்பு அல்லது மருந்தின் சுவை, குமட்டல் முதலியவற்றை மாற்றுவதற்கென-உண்ட மருந்தின் தன்மையைக் கெடுக்காதபடி - தொடர்ந்து உட்கொள்ளும் பொருட்களை **மருந்துண்ட மாய்க்கிறை** எனப்படும். அவை-கொட்டைப்பாக்குச் சீவல், தேன், திராஷை, வெற்றிலைக்காம்பு, கிராம்பு, ஏலம், பச்சைக்கற்பூரம், அவல், நெற்பொரி, சீரகம், சோம்பு, மதுரம், மல்லி, சாதிக்காய், பனைவெல்லம், ஓமம், சந்தனம், சர்க்கரை, பால், மோர், கற்கண்டு, பழச்சாறுகள் போன்றவையாகும் (இவற்றுள் சில அனுபானமாகவும் பயன்படும்)

**காலத்தை வெல்லும் கற்பம்**

"கால மென்னும் கொடிதான கடும் பகையை
கற்ப மென்னும் வாளினாற் கடிந்து விட்டோம்
சாலப் பிற பிறப்பினை நாம் கடந்தோம்
தற்பரம் கண்டோ மென்றாடாய் பாம்பே"

- பாம்பாட்டி

# XI மருந்து செய்முறை விபரங்கள்

★ 1. சில சூரணங்களின் செய்முறை விபரம் கூறவும்?

*(1) தயிர்ச் சுண்டிச் சூரணம்:* இந்துப்பு, வளையலுப்பு, பூநீறு உப்பு, சோற்றுப்பு, கல்லுப்பு வகைக்கு 10-கிராம்; தோல் நீக்கிய சுக்குத் துண்டுகள் 50 - கிராம், இவற்றை 600 மி.லி. நன்கு புளித்த தயிரிலிட்டு, வெய்யிலில் வைத்துச் சுண்டக் காய்ந்த பின் இடித்துச் சலிக்கவும் -இதில் ஓரிரு கிராம் வீதம் சுடு நீருடன் கொள்ள கிரகணி, அதிசாரம், அசிரணபேதி வாந்தி, சுரம் இவை நிற்கும்.

*(2) சுண்டை வற்றல் சூரணம் :* சுண்டைவற்றல், கறி வேப்பிலை, மாம்பருப்பு, ஓமம், நெல்லிவற்றல் மாதுளம்ஓடு, வெந்தயம் இவை சமன் கூட்டிச் சூரணித்துச் சலிக்கவும் - இதில் ஓரிரு கிராம் வீதம் எருமைத்தயிரில் உண்டுவர அக்னிமந்தம், பேதி, மூலம், கிராணி, பொருமல், இரைச்சல் இவை தீரும். (காரம், புலால் நீக்கவும்.)

*(3) சீந்தில் சூரணம் :* சீந்தில் கொடிச்சூரணம், கரிசாலைச் சூரணம், சுத்தித்த நாக்குப் பூச்சிச் சூரணம் இவை சமனாகக் கலக்கவும் - இதில் ஓரிரு கிராம் வீதம் நெய்யுடன் கொள்ள மேகம், ஈளை, காசம், சயம், அண்டவாயு, வாதம், எலும்புருக்கி ஆகியனவும் - தேனுடன் கொடுக்க பீனிசம், நாசிப்புண்ணும் சர்க்கரையில் கொள்ள பொடுகு, புழு வெட்டும் நீங்கும்.

*(4) பஞ்ச தீபாக்கினிச் சூரணம் :* சுக்கு, மிளகு, திப்பிலி ஏலம், சீரகம் இவை சமன் கூட்டி இலேசாக வறுத்துச் சூரணித்துச் சலித்து, மொத்த எடைக்குச் சர்க்கரை கூட்டவும் - இதில் ஓரிரு கிராம் வீதம், தேன் அல்லது நெய்யில் மூவ்வேளையும் கொள்ள வாயு, பித்தம், சூலை, அசிரணம் பசியின்மை, எலும்புச்சூடு, உஷ்ணம், ஆகியன தீரும்.

*(5) மயிலிறகாதிச் சூரணம் :* திப்பிலி - 8, சீரகம் - 10 பங்கு வீதம் பொடித்துச் சலித்து, மயிலிறகு சுட்ட, சாம்பல் - 5 பங்கு கூட்டிக் கலக்கவும். இதில் ஓரிரு கிராம் வீதம் தேனுடன் கொள்ள விக்கல், வாந்தி நிற்கும்.

*(6) ஏலாதிச்சூரணம் :* இலவங்கம்-1 , மிளகு-2 சிறுநாகப்பூ-4, தாளிசபத்திரி-8, கூகைநீர்-16, சுக்கு-32, ஏல

-64 பங்கு வீதம் கூட்டிப் பொடித்து, 128 - பங்கு ச்ர்க்கரை கூட்டவும் - இதில் ஓரிரு கிராம் வீதம் தேனில் கொடுக்க வாதபித்த நோய், கிரந்தி, விரணம், குட்டம் பெரும்பாடு, பித்தவாயு, ஊறல், எலும்புருக்கி ஆகியன தீரும்.

(7) **திரிகடுகுக் சூரணம்** : சுக்கு, மிளகு, திப்பிலி, சமனளவாக (அல்லது 4-2-1 பங்காக) தனித்தனியே இடித்துச் சலித்துக் கலக்கவும்-இதனை ஓரிரு கிராமளவில் முத்தோடங்களுக்கும் அனுபானமாகக் கொடுக்கலாம். (இதே போன்று **"திரிபலைச் சூரணம்"** செய்து அனுபானமாகவும், வாய் கொப்புளிக்கவும் பயன்படுத்தலாம்.) தனியாகவும் தரலாம்.

### ★ 2. சில மாத்திரைகளின் செயல்முறை விபரம் கூறவும்?

(1) **பேதிமாத்திரை (சுலபமுறை)** : சுத்தித்த நேர்வாளப் பருப்புக்கு, சமனெடை கறிமஞ்சள் கூட்டி தண்ணீர்விட்டு அரைத்து மிளகளவு மாத்திரைகளாக்கவும் - இதில் வயது உடல் நிலைக்கேற்ப (குழந்தை முதல் யாவருக்கும் பேதமின்றி, ஒன்றிரண்டு தூளாக்கி, காலையில் சுடுநீர், காபி, பால் இதில் கொடுக்க நன்கு பேதியாகும். (பேதி அதிகமானால் மோர்ச்சாதம் உண்ணவும்.)

(2) **சுவாசக் குடோரி** : வெள்ளருக்கன் பூவும், மிளகும் கூட்டி, வெள்ளெருக்கனிலைச் சாற்றால் நன்கு அரைத்து குன்றியளவு மாத்திரைகளாக்கவும் - இதில் 1-2 வீதம் தாளிசப்பத்திரிக் குடிநீரில் கொடுக்க சுவாசம், காசம் தீரும்

(3) **விஷ்ணுச்சக்கரம்** : இரசம், இலிங்கம், கந்தகம், நாபி பால்துத்தம், தாளகம், கந்தகம், மனோசிலை இவை சமன் கூட்டி, வேப்பம்பழச் சாற்றில் அரைத்து மிளகளவு மாத்திரைகளாக்கவும். இதில் 1, 2 வீதம் இஞ்சிச்சாறு, திரிகடுகு சூரணத்தில் கொள்ள சன்னி, சோபை, பக்கசூலை, ஏப்பம். விக்கல், மூர்ச்சை கால்கை வலிப்பு, வாதம் இவை நீங்கும்.

(4) **நீர்க்கோவை மாத்திரை** : கப்பு மஞ்சள்-4 பொரிகாரம்-2, கஸ்தூரி மஞ்சள்-4, சாம்பிராணி-2, மிளகு -2, சாதிக்காய்-2, சுக்கு-2, ஓமம்-1, இலவங்கம்-1, கற்பூரம்-1 ஆகிய பங்கு வீதம் சூரணித்து, எலுமிச்சம் பழச்சாற்றில் ( மணி நேரம் அரைத்து, சுண்டையளவு மாத்திரைகளாக்கவும் -இதனை முலைப்பாலில் இழைத்து நெற்றியிலிட தலைவலி

**(5) கஸ்தூரி மாத்திரை :** கஸ்தூரி - 1, குங்குமப்பூ - 2, கோரோசனை -3 பங்கு வீதம் கூட்டி, முலைப்பாலில் அரைத்து இரு கடுகளவு மாத்திரைகளாக்கவும் - இதில் 1-2 வீதம் முலைப்பாலில் அல்லது வெற்றிலைச் சாற்றில் கொடுக்க பித்த சீதளம், சன்னி, குழந்தைகளின் சகல சுரமும்; தேனில் கொடுக்க கபசுரம், வாயு, சன்னி வாததோடமும் தீரும்.

**(6) சூலைபூபதி மாத்திரை :** இரசம்-90, தாம்பிர பற்பம், கந்தகம், கருநாபி, நேர்வாளம் வகைக்கு 30 கிராம் ஆகியவற்றை முறையே கூட்டி, திருகு கள்ளிச் சாற்றில் 1 நாள்; எருக்கம் பாலில் -1 நாள் வீதம் அரைத்து சிறு மாத்திரைகளாக்கி, உலர்த்திகுப்பியில் அடைத்து மண்சட்டியில் 36-மணி நேரம் தீபாக்கினியாய் எரித்து, ஆறியபின் எடைக்கு கால்பங்கு நாபி கூட்டி; திருகு கள்ளிச்சாறு; மயில், மீன், பாம்பு, காட்டுப்பன்றி, எருமைக்கடா இவற்றின் பிச்சுக்கள் போதிய அளவு கூட்டி அரைத்து 100 மி.கி, மாத்திரைகளாக்கவும் - இதில் ஒன்று வீதம் காலை மாலை தக்க அனுபானத்தில் கொடுக்க சகலவித சூலைகளும் குன்மமும் நீங்கும்.

**(7) சலோதாரிமணி :** சுக்கு, மிளகு, திப்பிலி, படிகாரம், பொரிகாரம், கடல் நுரை, சுரைவிதை, இந்துப்பு, பொரித்த காயம் வகைக்கு-1, வாளம் -2 பங்கு வீதம் முறைப்படி இளநீரில் ·-மணி நேரம் அரைத்து குன்றியளவு மாத்திரைகளாக்க வும்-இதில் 1,2 வீதம் தக்க அனுபானத்தில் கொள்ள அண்ட வாயு, நீரடைப்பு, சதையடைப்பு, சுரம், இருமல் இவை தீரும்.

### 3. சில இளகங்களின் செய்முறை விபரம் கூறவும்?

**(1) கேசரி லேகியம் :** நன்கு பழுத்த-200 எலுமிச்சம் பழங்களை வதக்கிப் பிழிந்து சாறு வடித்து; 2 - பங்கு எடை சர்க்கரை கூட்டி பதமுறக் காய்ச்சி இறக்கி; மிளகு - 180, சீரகம் - 180, கோட்டம், சுக்கு, தாளிசம், திப்பிலி, சாதிக்காய், சாதிப்பத்திரி வகைக்கு - 15 கிராம் அளவில் சூரணித்துச் சலித்துக் கலந்து கிண்டிவிட்டு, உடன் 240 - கிராம் நெய்யும், தேனும் கூட்டிக் கிளரி வைக்கவும். இதில் இரு வேளையும் 5 கிராம் அளவில் உட்கொள்ள வாந்தி, மயக்கம், அசீரணம், பாதம்-கண் எரிச்சல், சோபை, சகலபித்தம், ஆகியன நீங்கும்.

**(2) நாரத்தை லேகியம் :** இரண்டு லிட்டர் நாரத்தம் பழச்சாற்றில், 1/2 லிட்டர் இஞ்சிச்சாறும், 1½ கிலோ நாட்டுச் சர்க்கரையும் கூட்டிக் கரைத்து வடித்துப் பதமுறக் காய்ச்சி;

அதில் சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய், தான்றிக்காய், நெல்லி வற்றல், இலவங்கப்பட்டை, இலவங்கப்பத்திரி, ஏலரிசி, இந்துப்பு வகைக்கு 70 கிராம்; சீரகம் - 210 கிராம் இவற்றின் சூரணத்தையிட்டுக் கிண்டி இறக்கி, முறையே 560 - கிராம் நெய்யும், 140 - கிராம் தேனும் கூட்டிக் கலந்து கொள்ளவும் - இதில் 5 - கிராம் அளவில், 40 - நாளைக்கு, இரு வேளையும் உண்டுவர பித்த குன்மம், வாந்தி, மயக்கம், அரோசகம் மலநீர்க்கட்டு, நெஞ்செரிவு, தாபசுரம், நீர்ப்புழைஎரிவு முதலியன தீரும்.

*(3)* **வெண் பூசனி லேகியம் :** வெண் பூசனிக்காய்ச் சாறு 6 - லிட்டர், தாழம் விழுதுச்சாறு, தென்னம்பூச்சாறு எலுமிச்சம் பழச்சாறு, பசுவின் பால் வகைக்கு 1½ லிட்டர் சர்க்கரை 300 - கிராம் ஆகியன கூட்டி பாகு காய்ச்சி; அதில் சீரகம், கொத்து மல்லி, கோட்டம், சாதிக்காய், சாதிப்பத்திரி மிளகு, மாசிக்காய், அதிமதுரம், ஏலரிசி, தாளிசம் வகைக்கு 30 - கிராம் சூரணம் கலந்து கிண்டிய பின், நெய் - 700 தேன் - 700 கிராம் வீதம் கூட்டிப் பத்திரப் படுத்தவும் இதில் தினமிரு வேளையும் நெல்லியளவில் கொள்ள சோகை காமாலை, அஸ்திசுரம், அஸ்திவெட்டை, வெள்ளை, நீர் சுருக்கு முதலிய வெப்ப நோய்கள் நீங்கி, உடல் வலுத்து விந்து பெருகும். ஆண்மை வலுப்பெறும்.

## ★ 4. சில மெழுகுகளின் செய்முறை விபரம் கூறவும்

*(1)* **நவ உப்பு மெழுகு :** சோற்றுப்பு, இந்துப்பு வெடியுப்பு, கல்லுப்பு, நவச்சாரம், மூங்கிலுப்பு, வளையலுப்பு பூநீறு உப்பு, பறையுப்பு வகைக்கு 10 - கிராம் வீதம் பொடித்து - லிட்டர் ஆற்றுத் தும்மட்டிக்காய்ச் சாறு, 1 - லிட்டர் பசுவின் பால் இவற்றில் கலந்து காய்ச்சி வடித்து, பின் மீண்டும் காய்ச்சி துத்திவேர்க் கற்றையால் நன்கு கலக்கி குழம்பு பதத்தில் கல்வத்திலிட்டு, அதில் வீரம்-40, இரசகற்பூரம்-20, சுக்கு-12 மிளகு-12, திப்பிலி-12, வாளம்-10 கிராம் வீதம் தனித் தனியே பொடித்துக் கலந்து, திரிபலைக் கியாழத்தில் 3 - மணி நேரமும் தாய்ப்பாலில் 3 மணி நேரமும் மெழுகாய் அரைத்தெடுக்கவும் இதில் 100-200 மி.கி. வீதம் பனை வெல்லத்துடன் காலையில் மட்டும் உண்டுவர வாதகுன்மம், நீர்க்கோவை, உதரவாயு அண்டவாதம், முடக்குவாதம், பாரிச வாயு, மகோதரம் வயிற்றுவலி, சூதகவாயு, நரம்பு வியாதிகள் ஆகியன தீரும் (உப்பு நீக்கி, சுடுநீர் சாதம் கொள்ளவும்)

**(2) பஞ்ச சூத மெழுகு :** வீரம், பூரம், இலிங்கம், இரசம், இரசச் செந்தூரம் இவை சமன் கூட்டிப் பொடித்து, அகலிலிட்டு, முலைப்பால், முருங்கைப்பூச்சாறு, செப்பு நெருஞ்சில் சாறு இவை சமன் கூட்டிய கலவையால் 3 மணி நேரம் சுருக்குக் கொடுத்து மெழுகான பின், கல்வத்திலிட்டு 3 மணி நேரம் மெழுகாய் அரைக்கவும் - இதில் 100-200 மி.கி வீதம் இரு வேளையும் பனை வெல்லத்தில் கொடுக்கவும். முலைப் பாலில் கொடுக்க தோடம், சன்னி, சுரம், இசிவும்; சித்திர மூல வேர்க் குடிநீரில் கொடுக்க குன்மங்களும்; மிளகுத்தூளில் கொடுக்க வாயு, பக்கவாதம், மார்புநோய், குண்டலவாயும்; வெள்ளைப் பூண்டுத் தைலத்தில் கொடுக்க நாசிகா பீடம், புறவலிப்பு, சன்னிதோடம், ஐவகை வலியும் திரும்.

**(3) குமுட்டி மெழுகு :** குமுட்டிக்காய், எலுமிச்சம்பழம், பூண்டு, நொச்சி, இஞ்சி இவற்றின் சாறு 2 லிட்டர் வீதம் கூட்டிச் சுண்டக்காய்ச்சி, உடன் இரசம், இலிங்கம், காயம், இந்துப்பு, வெங்காரம், கடுகு, மஞ்சள், வெந்தயம், மிளகு, வாளம்,காந்தம் வகைக்கு 4 - கிராம் வீதம் பொடித்துக் கலந்து மெழுகு பதத்தில் காய்ச்சி இறக்கவும் - இதில் சுண்டையளவில் பனை வெல்லத்துடன் காலையில் மட்டும் 3, 5 நாள் கொள்ள குன்மம், மகோதரம், கல்லீரல் - மண்ணீரல் பெருக்கம், சூதகவாயு விஷபாகம் முதலியன நீங்கும்.

**(4) மகாவீர மெழுகு :** மூன்று லிட்டர் முருங்கைப் பட்டைச் சாற்றில் சுருக்குக் கொடுத்த 140 கிராம் வீரம் - 140 கிராம் பூரம், 140 கிராம் இலிங்கம் இவற்றைத் தனித்தனியே பொடிக்கவும். சுக்கு-140, மிளகு - 140, திப்பிலி - 140, சித்திர மூலம் 840 கிராம் வீதம் சூரணித்துச் சலிக்கவும். அனைத்தையும் கூட்டி ஒன்றரை கிலோ பகவின் பால் விட்டரைத்து, உலர்ந்த பின் குங்குமப்பூ -15, கோரோசனை - 15, பச்சைக் கற்பூரம் -15 கிராம் வீதம் கூட்டி ஒன்றே முக்கால் கிலோ தேன்விட்டு மெழுகாய் அரைத்து வழிக்கவும்-இதில் 100-200 மி.கி. வீதம் பனை வெல்லத்துடன் கொள்ள மார்பு நோய், வலிப்பு, முகவாதம், சன்னி, உதருவாதம், அரையாப்பு, சூதகச்சூலை, வாதப்பிணி, மேக நோய்கள், குட்டம் ஆகியன தீரும்.

## ★ 5. சில தைலங்களின் செய்முறை விபரம் கூறவும்?

**(1) நீர்ப்பீனசத் தைலம் :** சுக்கு, மிளகு, திப்பிலி, வாய் விளங்கம், செவ்வியம், கருஞ்சீரகம், கஸ்தூரி முஞ்சள், அரத்தை

வகைக்கு 20 - கிராம் கூட்டி, ஆட்டுப்பால் விட்டு அரைத்து நொச்சி இலைச்சாறு, நல்லெண்ணெய் வகைக்கு 500-மி.லி.யுடன் கலந்து தைலமாகக் காய்ச்சவும். இதில் வாரமிரு முறை தலை முழுகி வர வெட்டைக்சூடும், விஷ பித்தமும் மிகுந்து தலையில் ஏறி, சதா சளி வடிதல், பனி, வாடை, மலை காலத்தில் நீர் மிகுந்து, பிடரி, முகம் பரபரத்து, நாசியில் அரிப்பும், அடிக்கடி தும்மலும், தலை கனத்து வலியும் ஏற்படுவதோடு கூடிய நீர்ப்பினிசம் தீரும்.

**(2) அண்டத்தைலம் :** நல்ல கோழி முட்டைகளை அவித்து மஞ்சட் கருவை தூளாக்கி, இரும்புச் சட்டியிலிட்டு அடுப்பேற்றி எரித்து எண்ணெய் பிரியும் சமயம் வடித்து எடுக்கவும்-இதில் 4 துளிவரை இருவேளையும் முலைப் பாலுடன் கொள்ள மாந்தம், சன்னி, பாரிச வாயு, குழந்தைகளின் வலி, நாக்குவாதம் முதலியன திரும்.

**(3) தாளகச்சுடர்த் தைலம் :** சுத்தித்த தாளகம் - 15, வெள்ளைப்பூண்டு - 15, பூநாகம்-30 கிராம் வீதம் நன்கு அரைத்து ½ அடிச் சதுரத் துணியில் தடவிக் கம்பியில் சுற்றிக் கட்டி, ஒரு சட்டியில் பசுவின் நெய் 300 மி.லி; சாரைப்பாம்பு நெய் 100 மி.லி. விட்டு, அதில் தோய்த்து 3/4 அளவு சுடர்த்தைலமாக இறக்கவும் - இதில் 2, 3 துளி வீதம் சுண்டையளவு சர்க்கரை, வாசாதி லேகியம், வாளான் புகையில் செய்த சூரணம் இவற்றில் கொடுக்க ஆஸ்த்துமா தீரும்.

**(4) நொச்சித் தைலம் :** எட்டிக் கொழுந்து - 1, நொச்சிக் கொழுந்து - 1, பூநாகம் - 1, கலப்பைக்கிழங்கு - 1, சுக்கு - ½ சித்திரமூல வேர்ப்பட்டை - ½, மிளகு-½, பூண்டு - ½ பலம் வீதம் பசுவின் பாலிலரைத்து; 1-சேர் நல்லெண்ணையிலிட்டு மெழுகு பதமாய்க் காய்ச்சி வடிக்கவும். இதில் வாரமொருமுறை தலை முழுகி வர சகலவிதத் தலைவலிகளும், சுவாசகாசமும் கழுத்து - பிடரி வலிகளும் தீரும். (தலை முழுகிய அன்று புளி, அலைச்சல், பகலுறக்கம், உடலுறவு நீக்கவும்)

**(5) கழற்சித் தைலம் :** ஒன்பது லிட்டர் தண்ணீரில், 800 கிராம் கழற்சி வேர்ப்பட்டையைப் போட்டு 1½ லிட்டராகக் சுறுக்கி வடித்து, 200 - கிராம் சுழற்சியிலையும், 80 - கிராம் கழற்சிப் பருப்பும் அரைத்துக் கலந்து, 1½ லிட்டர் சிற்றாமணக்கெண்ணையிலிட்டுக் காய்ச்சி; ஏலம், பறங்கிப் பட்டை, வால்மிளகு, சன்னலவங்கப் பட்டை வகைக்கு 20-கி; 20-கிராம் வாளம், 20-கிராம் இராசகற்பூரம் இவற்றை

அரைத்துக் கலந்து வைக்கவும் - இதில் காலையில் மட்டும் 8 - 15 மி.லி. வீதம் உட்கொள்ள அண்டவாயு-வீக்கம், உடல் வீக்கம், குடல் அடைப்பு, மலச்சிக்கல் முதலியன தீரும். (பழம்புளி, முருங்கை - அவரைப்பிஞ்சுகள் கூட்டலாம்.)

**(6) விஷ முட்டித் தைலம் :** வெள்ளாட்டுப் பாலில் 1½ நாள் ஊறவிட்ட எட்டிக்கொட்டை - 45, உரித்த வெள்ளைப்பூண்டு - 45, ஆவின் தோல் - 22 கிராம் வீதம்; ½ கிலோ நல்லெண்ணெயிலிட்டுக் காய்ச்சி வடிக்கவும். இதனைப் பிடித்தைலமாகப் பயன்படுத்திவர சூலை-வாத நோய்கள் தீரும்.

**(7) கரப்பான் தைலம் :** மிளகு, பூலாங்கிழங்கு, நற்சீரகம், கஸ்தூரி மஞ்சள், கார்போகரிசி, வேம்பாடம் பட்டை வகைக்கு 10 கிராம் கூட்டி, 500 மி.லி. பசுவின் பாலில் அரைத்து; அதனை செவ்விள நீர், சங்கம் வேர்க்குடி நீர், நல்லெண்ணெய் வகைக்கு 500 மி.லி. வுடன் கலந்து, நீர் சுண்டக்காய்ச்சி வடிக்கவும் - இதனை கோழி இறகில் தொட்டு உடலில் தடவி 1 மணி நேரம் ஊறவிட்டு, பின் பாசிப்பயறு அரைத்து, இளம் சுடுநீரில் குளித்து வர சகல கரப்பான் முதலிய சரும நோய்கள் தீரும். (சிலதுளிகள் உள்ளேயும் தரலாம்.)

**(8) சித்தாதி எண்ணெய் :** உத்தாமணிச்சாறு 4 லிட்டர் தேங்காய்ப்பால் 4 லிட்டர், ஆமணக்கெண்ணெய் 4 லிட்டர், தோல் நீக்கிய 500 கிராம் வெள்ளைப்பூண்டின் விழுது; 500 கிராம் கடுக்காயை 2 லிட்டர் நீரிலிட்டு கால் லிட்டராகக் குறுக்கிய கியாழம் இவற்றைக் கூட்டி; அதில் சுத்தித்த வாளம், 40, பெருங்காயம், வெங்காரம், சதுரக்கள்ளிப்பால், இந்துப்பு, திப்பிலி, கருஞ்சீரகம், வகைக்கு 5 கிராம் வீதம் பொடித்துக் கலந்து பதமுறக்காய்ச்சி வடிக்கவும் - இதில் 5 முதல் 15 துளி வீதம் பால் அல்லது சுடுநீருடன் கொடுக்க, சிரங்கு, கழலை, விக்கல், வாந்தி, கிரந்தி, குன்மம், அரையாப்பு, சூலை, பைத்தியம், பறங்கிப்புண், வலி, காதடைப்பு, புழுவெட்டு, சூதக வெட்டை, பவுத்திரம், பொருமல், கண்ணெரிவு வயிற்றுப்பூச்சி, கவிசை, நீராம்பல், நாவடைப்பு ஆகியன தீரும்.

### ★ 6. சில செந்தூரங்களின் செய்முறை விபரம் கூறவும்?

**(1) அயச் செந்தூரம் :** சுத்தித்த அயப்பொடியை சட்டியிலிட்டு, காடிநீர் தெளித்து இடித்த ஓதியம் பட்டைச்சாறு

சேர்த்து, 3 நாள் வெய்யிலிலிட்டுக் கலக்கி வரவும். பின் மேற் கூறியது போன்ற சாற்றால் அரைத்து வில்லை தட்டி உலர்த்தி கஜபுடமிடவும். இப்படி 8 - புடமிட்ட பின், காடி சேர்க்காமல் எடுத்த ஒதியம் பட்டைச் சாற்றால் 3-புடமிடச் செந்தூரமாகும் இதில் 200. மி.கி. வீதம் தேன் அல்லது பசுவின் நெய்யில் கொடுத்துவர வாத-பித்த-கப நோய்கள், விந்து நட்டம், பாண்டு, சோகை நீங்கி, குருதி பெருகி, நரம்பு வலுத்து உடல் இறுகும்.

**(2) அப்பிரகச் செந்தூரம் :** கிருஷ்ணா அப்பிரக கட்டிகளைச் சுத்தித்து, கால் பங்கு நெல்லுடன் கம்பளியில் மூட்டைகட்டி காடியில் 3-நாள் ஊறவிட்டு, பின் மூட்டையை பிரிக்காமல் கைகளால் நன்கு பிசைந்து ஊறிய அப்பிர அணுக்களை துணிவழியே வெளியேற்றி காடியிலே முற்று விழச் செய்து சில நாள் தெளிய வைத்து வடித்து, அடியில் படியும் அப்பிரக நவநீதத்தை வெய்யிலில் உலர்த்தி எடுக்கவும் 80 - கிராம் அப்பிரக நவநீதத்துடன், 5 கிராம் வெங்கார கூட்டிப் பொடித்து, வெள்ளைச் சாட்டரணை வேரின் சா விட்டரைத்து வில்லை தட்டி உலர்த்தி, அகலிலிட்டு மூடிச்சீலை செய்து; கஜபுடமிடுவதற்குரிய வரட்டிகளில் பாதி அளவி புடமிடவும், இப்படியே, முறையே 10-வீதம் வெள்ளை சாட்டரணை 'வேர்ச்சாறு, ஆடாதோடைச் சாறு, ஆல விழுதுக்கியாழம் ஆகியவற்றில் அரைத்து 30 - புடமிடவு 'செந்தூரத்தின் நிறம் சரியாக அமையாவிடில் புடங்க நெருங்கி வருகையில் வரட்டிகளை அதிகரித்துக் கொள்ளலாம் இதில் 200 மி.கி. வீதம், தினமிருவேளையும், தேனுடன் கொள் தாதுநட்டம், மேகங்கள், நீரழிவு, மதுமேகம் நீங்கும்.

**(3) அன்னபேதிச் செந்தூரம் :** அன்னபேதி-40, வெடியுப் 10 - கிராம் வீதம் கூட்டி, எலுமிச்சம்பழச சாற்றில் அரைத் வில்லை தட்டி உலர்த்தி கனபுடமிட்டெடுத்து; மீண்டு இதேபோல் ஒரு புடமிடச் செந்தூரமாகும் - இதில் 10 200 மி.கி வீதம் தேனுடன் கொடுக்க சுரம், பாண்டு, காமாலை சீதபேதி, சோகை, மகோதரம் முதலியன தீரும்.

**(4) இலிங்கச் செந்தூரம் :** ஒரு பலம் சாதிலிங்கக்கட்டியை ஓட்டிலிட்டு சிறு தீயாக எரித்து, 1-படி சிறு கும்மட்டி சாற்றில் கட்டியைப் புரட்டிப் புரட்டி - சுருக்குக் கொடுத். ஆறிய பின் கழுவி; பூவரசம் பட்டைச் சாற்றிலரைத்த 1 பலம் கடுகின் விழுதினுள் பொதித்து உலர்த்தி; 2 - பல பூவாசம்[illegible]

சீலை செய்து, 10 - எருவில் புடமிட்டு, ஆறிய பின் கவசத்தை நீக்கி தூளாக்கவும். இதில் பணவெடை வீதம் தினமிரு வேளையும் நெய், வெண்ணெயில் கொடுக்க குட்டம், குறை, புண், புற்று நோய்கள் தீரும். பட்ட மரம் பால் சொரியும். 'புளி, புகை, போகம், கரப்பான் பொருள் நீக்கவும்)

**(5) சண்டமாருதச் செந்தூரம் :** வீரம், பூரம், இரசம், இரசச் செந்தூரம், இலிங்கம், நெல்லிக்காய் கந்தகம் வகைக்கு ' விராகன் கூட்டி, முலைப்பாலில் 4 - சாமம் அரைத்து உலர்த்த செந்தூரமாகும். இதில் 2 அரிசி எடை வீதம் பனை வெல்லத்தில் கொடுக்க வாயு, வீக்கம், சுரம், சன்னி, மேகம், நீரேற்றம், சூலை, வாதம், கிரந்தி தீரும். (இச்சாபத்தியம்)

**(6) படிகலிங்கச் செந்தூரம் :** படிகாரம்-80, இலிங்கம் - 10 கிராம் வீதம் தனித்தனியே பொடித்துக் கூட்டி; காட்டாத்திப்பூ-30, கடுக்காய்ப்பூ-10 கிராம் வீதம், 1 லிட்டர் நீரிலிட்டு, 1/8 பங்காகக் குறுக்கிய கியாழம் விட்டு 2 - நாள் அரைத்து, நிழலில் உலர்த்தி அரைக்கவும் - இதில் 1 - கிராம் வீதம் வெண்ணெய் அல்லது நெய்யில் கொடுக்க அதிசாரம், சீதபேதி, சூலை, பெரும்பாடு, ஊழிபேதி தீரும்.

## ★ 7. சில பற்பங்களின் செய்முறை விபரம் கூறவும்?

**(1) சிலாசத்து பற்பம் :** முன்னூறு கிராம் கற்பூர சிலாசத்தை சுண்ணாம்பு தடவி உலர்த்தி சிறுபுடமிட்டெடுத்து; பிறகு சிறு செருப்படை அல்லது குமரிச் சாற்றிலரைத்து வில்லை தட்டி உலர்த்தி 50 எருவில் புடமிடவும். இப்படி 3- புடமிடப் பற்பமாகும். இதில் 1-கிராம் வீதம் வெண்ணெய், நெய்யில் உண்ண நீரெரிவு, வெள்ளை, நீர்க்கட்டு, பித்தம், உஷ்ணம், நீரிழிவு, மேகம், உடலெரிவு, காங்கை ஆகியன தீரும்.

**(2) சிருங்கி பற்பம் :** முன்னூறு கிராம் மான் கொம்புகளைத் துண்டுகளாக்கி, அகத்தியிலைச் சாற்றில் ஒருநாள் ஊறவிட்டுக் கழுவவும். இப்படி 7 நாள் செய்து சுத்தித்து, சுண்ணாம்பு தடவி அகலிலிட்டு மூடிச்சீலை செய்து 30 - எருவில் புடமிடவும். ஆறியபின் அகத்தியிலைச் சாற்றிலரைத்து வில்லை தட்டி மீண்டும் ஓரிரு முறை புடமிடப் பற்பமாகும். இதில் 400 மி.கி.அளவில் வெண்ணெய், நெய்யில் கொடுக்க கணம், மார்புநோய், அம்மை. எலும்புருக்கி, இருமல் உஷ்ணம், பித்தப்பிணிகள் முதலியன தீரும்.

(3) **ஆமையோடு பற்பம் :** கல்சுண்ணத் தெளிவு நீர்-600 பூநீறுத்தெளிவு நீர்-600 மி.லி. வீதம் கூட்டி; அதில் 300-கிராம் ஆமையோட்டைப் போட்டு நீர் சுண்டக்காய்ச்சி எடுத்துக் கழுவி ஒன்றிரண்டாய் உடைத்து சட்டியிலிட்டு, உத்தாமணிச் சாறு விட்டு மூடிச்சீலை செய்து, 100 - எருவில் புடமிடவும். (தேவையெனில் மேலும் ஓரிரு புடமிடலாம்) இதில் 100-200 மி.கி. வீதம் முலைப்பால் அல்லது தேனில் கொடுக்க மாந்தம், கணம், குழந்தைகளின் பேதி, ஆசனக்கடுப்பு முதலியன தீரும்

(4) **நத்தை பற்பம் :** நத்தைகளைச் சுத்தம் செய்து ஒரு பானையில் பாதியளவு நிரப்பி, வாயை அகலில் மூடிச்சீலை செய்து உலர்த்திப் புடமிடவும். ஆறிய பின் உள்ளிருக்கும் சாம்பலை குமரி அல்லது துத்தியிலைச் சாற்றில் அரைத்து வில்லை தட்டி உலர்த்திப் புடமிடவும் (பற்பம் வெள்ளையாகும் வரை மேலும் 2-3 புடமிடவும்) இதில் 400 மி.கி. வீதம் நெய் அல்லது வெண்ணெயில் கொடுக்க இரத்தமூலம், சீதபேதி, ஆசனக்கடுப்பு ஆகியன தீரும்.

(5) **வெங்கார பற்பம் :** ஒருபலம் வெங்காரத்தை சரக்கொன்னை இலைச்சாற்றில் 6-மணி நேரம் அரைத்து வில்லை தட்டி ஈரத்துடன் சிட்டியிலிட்டு, மூடி 3-சீலை செய்து, 10 எருவை அடுக்கித் தீ மூட்டி, சிட்டியை மேலே தெரியும்படி வைத்து, ஆறிய பின் எடுத்து, சிட்டியை உடைத்து, உள்ளிருக்கும் வெங்காரப் பொடியைப் பொடித்துக் கொள்ளவும். இதில் 2-குன்றி வீதம் இளநீர், வாழைக் கிழங்கு நீர் இவற்றில் கொடுக்க உடன் நீர் பிரிந்து நீரடைப்பு, கல்லடைப்பு, நீர்க்கடுப்பு, வெள்ளை, நீர்க்கிரிச்சரம் முதலியன தீரும்.

(6) **தாளக பற்பம் :** இரண்டு பலம் தாளகத்தை, 1/8 படி பச்சைப் புகையிலையின் சாறு விட்டு அரைத்து வில்லை தட்டி உலர்த்தவும். மேற்படி புகையிலை இடித்த கல்கத்தை, உலர்த்தி, பாதியை சட்டியிலிட்டு நடுவில் வில்லைகளைப்பரப்பி, மீதிக் கல்கத்தை மேலே கொட்டி, மூடி 7 - சீலை செய்து, உலர்த்தி 15 - எருவில் புடமிட்டெடுக்கவும். இதில், குன்றியளவில் தினமிருவேளையும் நெய், தேனில் கொடுக்க சுவாச காசம், சயம், வலிப்பு, சுரம் இளைப்பு, இருமல் தீரும். (இளநீர், பதநீர், மோர், பழையது கூடாது)

(7) **நாக பற்பம் :** ஒரு பலம் சிறுகண் நாகத்தை உருக்கி 1 - பலம் வாலைரசம் கூட்டித் தொந்தித்து, 2 - பலம் வெடியுப்பு சேர்த்து, எலுமிச்சம் பழச்சாற்றில் 6-மணி நேரம்

அரைத்து வில்லை தட்டி உலர்த்தி, சட்டியிலிட்டு மூடி 7 சிலை செய்து 20 -எருவில் புடமிட்டெடுக்கவும். பின் கல்வத்திலிட்டு தண்ணீர் மிதக்கவிட்டு அரைத்து, அப்படியே வைத்து, தெளிவை இருத்துவிடவும். இப்படி 7 - முறை அரைத்து வடிக்க வெடியுப்புச் சத்து முழுவதும் நீருடன் போய்விடும். அடியில் படிந்துள்ள நாகரசத்திற்கு, சமனளவு கிளிஞ்சல் சுண்ணம் கூட்டி, எலுமிச்சம் பழச்சாறு விட்டு விட்டு 6 மணி நேரம் அரைத்து வில்லை தட்டி உலர்த்தி, முழபுடமிடப் பற்பமாகும் இதில், குன்றியளவில், தினமிருவேளையும் வெண்ணெய், நெய்யில் கொடுக்க மூலம், பவுந்திரம், குன்மம், தாது நட்டம், கிராணி, இரைப்பிருமல் இவை தீரும்.

**(8) தாம்பர பற்பம் :** நாலு தோலா அடை வைத்த முட்டைத் தோட்டுடன், 2-தோலா தாம்பரப்பொடியைக் கூட்டி 6 மணி நேரம் அரைத்துப் பொடித்து, பின் உத்தாமணிச் சாறு விட்டு 12 மணி நேரம் அரைத்து, வில்லை தட்டி உலர்த்தி ஓட்டிலிட்டு மூடி 3 - சீலை செய்து உலர்த்தி, குகையிலிட்டு பழுக்க ஊதி ஆறிய பின் எடுக்கவும். இதில் அரிசி எடை வீதம், தினமிரு வேளையும், தக்க அனுபானத்தில் 7-9-11 நாள் கொடுக்க மேகம், குன்மம், கபம், குட்டம் முதலியன தீரும்.

**(9) கருவங்க பற்பம் :** நல்லெண்ணெயில் பன்னிரு முறை உருக்கிச் சாய்த்த 12 தோலா கருவங்கத்தை, ஆவிரையிலையிலிட்டு 2 மணி நேரம் வறுத்துத் தூளாக்கி, அதேயிலைச் சாற்றில் 6 மணி நேரம் அரைத்து வில்லை தட்டி, ஓட்டிலிட்டு மூடி 7 சீலை செய்து கெஜபுடமிட்டு ஆறிய பின், ¼-பங்கு பூரம் கூட்டி வெள்ளெருக்கம் பாலிலரைத்து வில்லை தட்டி முன்போல் புடமிட்டெடுக்கவும் - இதில் அரிசி எடை வீதம், தினமிரு வேளையும், நெய்யுடன் ¼, ½, 1 மண்டலம் கொடுக்க குட்டம், மேக நோய்கள் தீரும். (பிணிக்கேற்ற பத்தியம்)

**(10) பவள பற்பம் :** இருநூறு கிராம் நற்பவளத்தை சிறு குடுவையிலிட்டு, காட்டு முயல் இரத்தம் 60 - மி.லி சேர்த்து மூடிச் சீலை செய்து 150 எருவில் புடமிடவும். ஆறிய பின் பிரித்து மூடியைத் திறந்து வைத்து, 3 நாளில் பூர்த்தபின் பொடிக்கவும், இதில் 200 மி.கி. வீதம் வெண்ணெய் அல்லது பாலில் கொடுக்க இருமல், சயம், காசம், சுவாசம், இரத்த பித்தம், கிராணி, ஈளை, சீதபேதி முதலியன தீரும்.

★ **8. சில கலப்பு மருந்துகளின் செய்முறை கூறவும்?**

***(1) கந்தக ரசாயனம் :*** முன்னூறு கிராம் சுத்தித்த கந்தகப் பொடியுடன், 150-கிராம் அமுக்கராக் கிழங்கு, 60-கிராம் பறங்கிச்சக்கை; கடுக்காய், தான்றிக்காய், நெல்லிவற்றல், சுக்கு, மிளகு, திப்பிலி, ஏலம், வாய்விடங்கம், இலவங்கம், சந்தனம், கடலைப்பருப்பு, சேராங்கொட்டை, சித்திரமூலம், வகைக்கு 30-கிராம் சூரணம் வீதம் கூட்டி கல்வத்திலிட்டு, 800-கிராம் நாட்டுச் சர்க்கரை பாகு சேர்த்து, 400 - கிராம் தேனும், 400-கிராம் நெய்யும் விட்டு முறையாக அரைத்து எடுக்கவும் - இதில் 6, 12 கிராம் வீதம் இரு வேளையும் உட்கொள்ள வெள்ளை, வெண் குட்டம், மேகநீர், சரும நோய்கள் தீரும்.

***(2) பறங்கிப் பட்டைப் பதங்கம் :*** பசுவின் பால், கழுதைலத்தி, குப்பைமேனி, பொடுதலை, சங்கங்குப்பி, கையாந்தகரை இவற்றின் சாறு ஆகியவற்றில்; 150-கிராம் பறங்கிப் பட்டை துண்டுகளை நன்கு ஊற விட்டு உலர்த்தவும். கந்தகம் - 30, இலிங்கம் - 150, இரசம் - 150 கிராம் வீதம் பொடித்துச் சட்டியிலிட்டு, வாய்க்குப் பொருத்தமான, சல்லடைக்கண் போன்ற துளைகளிட்ட அகலை வைத்து, அதில் மேற்படி பறங்கிச் சக்கைகளை பரவலாகப் போட்டு, மேல் மூடிச்சீலை செய்து, 3 - மணி நேரம் எரித்து ஆறிய பின் சக்கைகளைப் பொடிக்கவும் - இதில் 100-200 மி.கி. வீதம் பனை வெல்லத்துடன் உட்கொள்ள மேகம், சூலை, கருங்கிரந்தி, கைக்கருப்பு, வெள்ளை, கில்ப்பிடிப்பு விரணம், குட்டம் இவை தீரும்.

***(3) சிவனார் அமிர்தம் :*** கந்தகம், இரசம், மனோசிலை, பொரித்த வெங்காரம், நாபி, சுக்கு, திப்பிலி, இருவி வகைக்கு 10, மிளகு - 80 கிராம் வீதம் எடுத்து, முதலில் இரசகந்தகத்தை தொந்தித்து, மற்ற சரக்குகளை தனித்தனியே பொடித்துக் கலந்து, சிறிது சிறிதாகக் கூட்டி, 7 - நாளைக்கு கருநிறமடையும் வரை அரைக்கவும் - இதில் 200-400 மி.கி. வீதம் தக்க அனுபானத்தில் கொடுக்க சகல வித வாதம், பித்தம், குட்டம், குன்மம், சன்னி, மூலம், சயம், மகோதரம், சுவாசம், சுரம் முதலியன தீரும். (இதனை இருவி கூட்டாமலும் செய்வதுண்டு, இருவி சேர்த்தால் உப்பு - புளி நீக்கவும்.)

***(4) வெடியுப்புச் சுண்ணம் :*** ஒரு சட்டியில் 200 கிராம் சுத்தித்த ஆமையோட்டுத் தூளில் பாதியைப் போட்டு, நடுவில் 100 கிராம் சுத்தித்த வெடியுப்பை வைத்து மேலே மீதித்தூளைப்

போட்டு மூடிச்சீலை செய்து உலர்த்தி; 40 - வரட்டியில் புடமிடப் பற்பமாகும். இதில் 100-200 மி.கி. வீதம் இளநீர், முள்ளங்கிச் சாறு அல்லது நீர் முள்ளிக் கியாழத்தில் கொடுக்க நீரடைப்பு, நீர்க்கட்டு, நீரெரிவு, வீக்கம் முதலியன தீரும்.

**(5) ஜாதிசம்பீரக் குழம்பு :** அறுநூறு கிராம் எலுமிச்சம் பழச்சாற்றில், 40 கிராம் இலிங்கத்தைப் பொடித்துக் கலக்கவும் ஒரு பெரிய அகலில் 10 - கிராம் பச்சைச் கற்பூரத்தை வைத்து, வேறொரு அகலால் மூடி அடுப்பிலேற்றி சிறு தீயாக எரிக்கவும். கற்பூரம் முற்றிலும் எரிந்த பின், இலிங்கம் கலந்த பழச்சாற்றை சிறிது சிறிதாகக் கூட்டி குழம்பு பதத்தில் காய்ச்சி இறக்கவும். இதில் 100-200 மி.கி. வீதம் உட்கொள்ள வாந்தி, விக்கல் தாகம், பாண்டு, மூர்ச்சை, மந்தபேதி, பித்தம் ஆகியன தீரும்.

**(6) குங்கிலியக் களிம்பு :** வங்கப்பச்சை, வெண் குங்கிலியம், இரசம் இவை சமன், கூட்டி ஊமத்தையிலைச் சாற்றில் மெழுகாய் அரைத்து, ஒரு செப்புத் தகட்டில் அப்பி, சமனளவு பசுவின் வெண்ணெய் கூட்டி, வேறொரு செப்புத் தகட்டால் நன்கு இழைத்து, ஒரு செப்புச் சிமிழில் பத்திரப்படுத்தவும். இதனை வெற்றிலையில் தடவிப் போட்டு வர புண்புரை, கிரந்தி, புற்றுக்கள், மேகவிரணம் தீரும்.

**(7) துருசுக் களிம்பு :** துருசு, துத்தம், சீனக்காரம், சூடன், சாம்பிராணி இவை சமன் கூட்டி, அதில் துளித்துளியாக விளக்கெண்ணெய் விட்டுக் களிம்பாய் அரைத்தெடுக்கவும். இதனைப் பூசிவர கண்டமாலை, படுவன், ஆறாதவிரணம், விரல் சுத்தி, பிளவை, குழிப்புண் இவை ஆறும்.

**(8) கண்டங்கத்திரி நெய் :** கண்டங்கத்திரி, ஆடாதோடை, துளசி, தூதுவேளை இவற்றின் சாறு, பசுவின் நெய் வகைக்கு 1/16 படி, பன்றி நெய் 1/32 படி ஆகியன கூட்டி சாறுவற்றக் காய்ச்சி நெய்யை இறுத்து, உடன் சாதிக்காய்-1, கிராம்பு-1, மிளகு-1, சிற்றரத்தை-2, விராகன் வீதமும்; பனங்கற்கண்டு-25 கிராமும் கூட்டிப் பொடித்துக் கலந்து கிண்டி வைத்துக் கொள்ளவும் இதில், சிறுவர்க்கு - 1, பெரியவர்க்கு - 2, கரண்டிவீதம் தினமிரு வேளை 3 நாள் கொடுக்க கக்குவான், இருமல் உட்பட சகல இருமலும், கபமும் தீரும்.

**(9) நீலாஞ்சன மை :** அஞ்சனக்கல் - 90, சீனாக் கற்கண்டு - 90, பீதரோகிணி - 10, குங்குமப்பூ - 50, படிகாரப்பற்பம் - 50, பச்சைக் கற்பூரம் - 50 கிராம் வீதம் தனித்தனியே பொடித்துக் கலந்து; வில்வ இலை, முசுமுசுக்கை, வெண்

சாட்டரணை, பனைமட்டை, கரிசாலை, நந்திப்பூ இவைகளின் சாறு வகைக்கு 30 மி.லி, வீதம் எடுத்து ஒன்றன்பின் ஒன்றாக அரைத்து உலர்த்தி, பின் தேன் கலந்து மை பதத்தில் அரைத்து வழிக்கவும் - இதனை கலிக்கமாகக் கண்ணில் தீட்டிவர கண் பூ, கண் படலம், முத்துக்காசம் முதலிய கண்ணோய்கள் தீரும்.

**(10) சேங்கொட்டை நெய் :** ஒரு இரும்புச் சட்டியில் கால்படி விளக்கெண்ணெயிட்டு, அதில் 32 - விராகன் சேங்கொட்டையை மூக்கை வெட்டிப் போட்டுக் காய்ச்சி கொட்டை வெந்து வெடிக்கும் சமயம், 12 - விராகன் கெந்தகத் தூளைப் போட்டு, அடைகட்டிவிடாது தொடர்ந்தும், பின் இறக்கிச் சூடு ஆறும் வரையும் கிண்டிவிட்டு, பிறகு அரை வீசம்படி தைலத்துக்கு 1/16 படி பசுவின் நெய், 1 விராகன் சூதம் வீதம் கூட்டிக் கலக்கவும் - இதில் சிறிய கரண்டியளவாக தினமிரு வேளையும் உட்கொள்ள முடக்குசூலை, ஆரம்பக் குட்டம், தடிப்பு, புற்று, பத்து, படை முதலிய சருமநோய்கள் தீரும். (அரை வீசம்படி தைலத்தில், 1 - விராகன் இரசம் கூட்டி மத்தித்து மேற் பூச்சாகவும் போடலாம்) கடுகு. நல்லெண்ணெய், கரப்பான் பொருள் நீக்கவும்.

**(11) கௌரி சிந்தாமணி :** இரசம், கந்தகம், பொரித்த வெங்காரம் வகைக்கு 30 கிராம் எடுத்து, ஒன்றன்பின் ஒன்றாய்க் கூட்டி கருப்பாகும் வரை நன்கு அரைத்து, கெட்டித் துணியில் பாக்களவு உருண்டையான மூட்டைகள் கட்டி, சீலை செய்து 10 - எருவில் மணல் மறைவுப்புடமிட்டெடுத்து அரைக்கவும், இதில் 200 - மி.கி. வீதம் தேன், திரிகடுகுவில் கொடுக்க சூலை, சுரம், குன்மம், எலிக்கடி, சுவாசம், காசம், பீனிசத் தலைவலி, சயம், குறிச்சூலை, விஷகடி, கழலை தீரும்.

**★ 9. இரசமணி செய்முறை ஒன்றைக் கூறவும்?**

வால்ல ரசம்-50, வெள்ளைப்பாடாணம்-75 கிராம் வீதம் எடுத்து, முதலில் பாடாணத்தையும், பின் சூதம் கூட்டியும், 500-மி.லி. கருவூமத்தம்பூச் சாற்றினால் நன்கு அரைத்து விழுதாக்கவும். இந்த விழுதை உருட்டி ஒரு குடவு சட்டியின் நடுவில் வைத்து - சுற்றிலும் சிறிது இடைவெளி இருக்குமளவில் -ஒரு கனத்த செம்புக் கிண்ணத்தினால் கவிழ்த்து மூடி, வாயைச் சுற்றி களிமண்ணால் பூசி உலர்த்தி; சட்டிக்கு மேல் சட்டி மூடி, 7-சீலை செய்து உலர்த்தி 30-எருவில் புடமிடவும். சட்டி ஆறிய பின் பிரித்துப் பார்க்க இரசம் உருகிக்கட்டியும், கிண்ணத்தினுள் முத்துக்களாய்ப் படிந்தும் காணும். அதனைச்

சுரண்டி குகையிலிட்டு உருக்கி, பச்சைப் புகையிலையின் சாற்றைக் கிராசமிட சிறிது செம்புச் சத்து இருப்பினும் நீங்கி, சூதம் மட்டும் தனித்துக் கண் விட்டாடும். இதனை அச்சில் இட்டு மணியாக்கி உடலில் அணியவோ - மருந்துகளில் கூட்டவோ செய்யலாம். மேலும், கருவூமத்தங் காயினுள் வைத்து பலமுறை சாரணை (இலகு புடம்) ஏற்ற உரிய பலனை அடைய இயலும் (இந்த மணி தீயில் புகையாது, உருகும்.)

## ★ 10. கூகைமாவு தயாரிப்பது எப்படி?

நன்கு முற்றிய கூகைக் கிழங்குகளை கழுவி, தோல் நீக்கி அரைத்து மாவாக்கிய பிறகு, ஒரு வாயகன்ற சட்டியில் நிறைய நீர் விட்டு, வாய்க்கு மெல்லிய துணிகட்டி, அதனை நீர் மட்டத்திற்குக் கீழே விட்டு, அதில் மாவைக்கொட்டி, கையால் கரைத்து வர மாவு சட்டியினடியில் செல்லும். அம் மாவை நன்கு கலக்கிவிட்டு நீர் தெளியவும் இறுத்து, மீண்டும் இருமுறை நீர்விட்டு கலக்கி தெளிவை இறுத்துவிட்டு, அடியில் படிந்துள்ள மாவை எடுத்து வெய்யிலில் உலர்த்திக் கொள்வதே **கூகைமாவு (அரரூட்மாவு)** எனப்படும். இது மிக மெல்லியதாயும், எளிதில் செரிக்கக் கூடியதாயுமிருப்பதால் இதனை கஞ்சி செய்து நோயாளிகளுக்கும், குழந்தைகளுக்கும் தரலாம். இதனால் சுரம், இருமல், தாகம், வலிமை குன்றல், வயிற்றுக்கோளாறுகள், வெப்புக்கழிச்சல், இரத்த பேதி ஆகியன நீங்கும்.

## ★ 11. சீந்தில் சர்க்கரை செய்வது எப்படி?

சீந்தில் கொடியை இடித்து குளிர்ந்த நீரிலிட்டு, மறுநாள் கடைந்து சக்கையை கசக்கிப் பிழிந்து நீக்கிவிட்டு, நீரை மூன்று மணி நேரம் வெய்யிலில் வைக்க தெளியும். அதனை வடித்து விட்டு, வேறு நீர் விட்டுக் கலக்கி முன்போன்றே தெளிய விட்டு, இறுத்து, மறுபடியும் அப்படியே செய்யவும். உலர்ந்த பின்பு அடியில் படிந்திருக்கும் கைப்புச் சுவையுடைய மாவு தான் **சீந்தில் சர்க்கரை** எனப்படும். (முற்றிய கொடியின் சத்து வெள்ளையாகவும் மற்றவை பழுப்பு நிறத்திலும் இருக்கும்) இதனை தனித்தோ, துணை மருந்தாகவோ கொடுக்க காமாலை, இருமல், மூர்ச்சை, வாந்தி, கபம், மண்ணீரல் வீக்கம் சுரத்தினாலான உடலிளைப்பு, சிறுநீரக அழற்சி, மேகவெட்டை. இருதய பலவீனம், குருதிக்குறைவு, விந்துநாசம், மதுமேகம் முதலிய நோய்கள் தீரும்.

## ★ 12. சவ்வரிசிக் கஞ்சியின் பயன் என்ன?

சவ்வரிசி என்பது, நம்நாட்டின் மதனகாமமரம், குமுதிட் பனை, மரவள்ளிக்கிழங்கு - மலாக்கா முதலிய தீவுகளின் லிப்பி, ரம்பியம் முதலிய மரங்கள்; மற்றும் பல தாவர வகையின் விதை, காய், கிழங்கு, சோறு முதலியவற்றிலுள்ள மாவைப் போன்ற பொருளிலிருந்து தயாரிக்கப்படும், அரிசி போன்றதொரு முக்கிய உணவுப் பொருளாகும். இது, கடுகு போன்ற விதையளவிலும், சாம்பல் நிறத்திலும், வழவழப்பாயும், கெட்டியாயும், விரைவில் கெட்டுவிடும் தன்மையுடனும், இலேசான இனிப்புச் சுவையுடனுமிருக்கும். சவ்வரிசியை சர்க்கரை அல்லது உப்புக்கூட்டி கஞ்சியாய்க் காய்ச்சி உட்கொள்ள-சோர்வு, பலவீனம், குடல்வெப்பத்தினாலான மலக்கட்டு, சீழ்ப்பிரமேகம், மூலம், இரத்தப்பெருக்கு, குருதி மேகம் முதலிய நோய்கள் தீரும், நோயாளிகளுக்கும் - தாய்ப்பாலில்லாத குழந்தைகளுக்கும் இது ஒரு சிறந்த உணவாகும்.

## ★ 13. இலிங்க (வாலை) ரசம் எடுப்பது எப்படி?

பொதுவாக, மருந்துகளில் சேரும் வங்கரசத்தில் உள்ள குற்றங்களை நீக்க கடும் சுத்திமுறைகள் தேவைப்படுவதால் - இலிங்கத்தை நெருப்பிற்கு உட்படுத்தி அதிலுள்ள இரசத்தை பதங்கித்துப் பிரித்தெடுப்பது மிகச் சிறந்ததெனக் கொள்ளப் படுகிறது. அதாவது, 4-பங்கு கொடி வேலி வேர்ப்பட்டைத் தூளில் பாதியை ஒரு பானையிலிட்டு, அதன் மீது 1 - பங்கு இலிங்கப் பொடியைத் தூவி, மீதித்தூளை மேலே பரப்பி, மேற்சட்டி மூடி சீலை மண் செய்து முறைப்படி எரித் தெடுக்கவும். ஆறியபின் மேற்சட்டியைப் பிரித்து, உட்புறம் படிந்துள்ள பதங்கத்தைச் சுரண்டி எடுத்து துணியிலிட்டுப் பிழிய சுத்தமான சூதம் கிட்டும். (இங்ஙனமே, வீரம் - பூரம் முதலியவற்றினின்றும் உரிய முறைகளின் படி இரசத்தைப் பிரித்தெடுப்பதுண்டு. இவ்வகை இரசங்களுக்கு வேறு சுத்தி முறைதேவையில்லை)

## ★★ 14. மூலிகைச்சத்து (உப்பு) எடுப்பது எப்படி?

மருத்துவம் - வகாரம் - காயகல்பம் - உணவு முதலிய சகலத்திற்கும் உறுதுணை புரியவல்ல உப்பு, கடல் - மலை - நிலம் ஆக மூன்று பகுதியில் இயற்கையாகவும்; மற்றும் ஒன்றுடனொன்று கலந்து செயற்கையாகவும், ஆக மொத்தம்

25 - வகையாக எடுக்கப்படும். மேலும் மருந்துவப்பயனுக்கென சிலவகை மூலிகைகளிலிருந்தும் உப்பு எடுக்கப்படும். அதாவது, குறிப்பிட்ட மூலிகையின் சமூலத்தை நிழலில் நன்கு உலர்த்தி, தீயிட்டு எரித்துச் சாம்பலாக்கி சட்டியிலிட்டு, அதன் எடைக்கு நாலு பங்கு தண்ணீர்விட்டுக் கரைத்தும் - பின் அடிக்கடி குச்சியால் கலக்கியும் விடவேண்டும். மறுநாள் தெளிவை மட்டும் இறுத்து, வெய்யிலில் வைத்து அல்லது அடுப்பேற்றி காய்ச்சினால், நீர் சுண்டவும் அடியில் வண்டல்போல் **மூலிகைச்சத்து (உப்பு)** படிந்திருக்கும். அதனை வழித்து, உலர்த்திப் பயன்படுத்த, அம்மூலிகையின் பயனை துரிதமாகவும், சிறிய அளவிலும், முழுமையாகவும் பெறலாம். நிற்க, **உப்புச்சத்துள்ள மூலிகைகளாக** எருக்கு - துத்தி - குப்பைமேனி - வாழை - முருங்கை - ஊமத்தை - நாயுருவி - தென்னோலை - அறுகு - பிரண்டை - எள்ளு - பூவரசு - எட்டி ஆகியவற்றைக் கூறலாம். (மனிதஉடலிலும் 12 - வகை உப்புக்களுண்டு.)

### ★ 15. சாம்பிராணிப்(பூ) பதங்கம் எடுப்பது எப்படி?

சாம்பிராணி மரப்பட்டையிலிருந்து பால் போல் வடிந்து உலரக்கூடியதும்-பளபளக்கும் சாம்பல் நிறமும், நறுமணத்துடன் சுவையும், தைலச்சத்தும் உடையதுமான பிசின் கட்டிகளே **சாம்பிராணி** எனப்படும். இது, **மலாக்கா-பறங்கி-மடையன்-மட்டி-பால்** சாம்பிராணிகள் என பலவகைப்படும். சாம்பிராணியை பிணிக்கேற்ப உள் வெளிப்பயனாய் கொடுக்க, இருமல், இரைப்பு, கபம், சுரம், சூதகக்கட்டு, மார்பெரிச்சல், தலைவலி, நீர்க்கோவை, வாதவலி, வாயு, வீக்கம், விரணங்கள், கண்நோய், நீரடைப்பு, வறட்சி, நச்சுச் சந்துக்கள் முதலியன நீங்கும், நிற்க, சாம்பிராணியைப் பதங்கித்து அதிலுள்ள குங்கிலியம் போன்றதொரு வெண்ணிறச் சத்தைப் பிரித்துப் பயன்படுத்த, மிகத்துரிதமாக வேலை செய்யும், அதற்கு, சாம்பிராணியைப் பொடித்து, ஒரு கலயத்திலிட்டு, கெட்டியான வெள்ளை நிறத் தாளில் பை போல் செய்து, கலய வாயில் சொருகி, கழுத்துடன் சேர்த்து நூலால் கட்டியும், புகைவெளிப்படாதிருக்க பசை கொண்டு ஒட்டியும் வைத்த பிறகு, அடுப்பேற்றி பசுவின் நெய் ஊற்றி சிறு திரியிட்டு எரிக்கவும். சாம்பிராணி உள்ளே புகைந்து வெளியேறுகையில், வழியின்றி பையினுட்புறம் படியும், பிறகு சட்டி ஆறியபின், பிரித்து தாளில் படிந்துள்ள **பதங்கத்தை** எடுக்கவேண்டும். உள்ளே தங்கும் தைலத்தை தனியாகப் பயன் படுத்தலாம். இதனை வாலை போன்ற சட்டிகளிலிட்டும் எடுப்பது உண்டு.)

## ★★ 16. காடித்தெளிநீரின் பயன் யாவை?

பொதுவாக, **காடித்தெளிநீர்** என்பது, அரிசி-கோதுமை - பயறுவகை, பழங்கள், சர்க்கரை, தேன், சில மரங்களில் சாரம் முதலியவற்றைப் பக்குவப்படுத்தி புளிக்க வைத்து வடித்தெடுக்கக் கூடிய இளநீல நிறமும், புளிப்புச்சுவையும், ஒருவித மணமும் கூடியதான - **புளித்த நீரேயாகும்.** காடிகளுக் கேற்ப அதன் பயன்களும் மாறுபடும். பொதுவாக, காடியினால் உடல் குளிரும் சுரதாபம் குறையும். வயிற்றுப் புழுக்கள் நீங்கும், காரசார வேகமும், மயக்கம் தரும் நஞ்சுகளும் முறியும். கொதிநீர்ப்புண், தீக்காயம், வழுவுண்டதோல் இதில் பூச எரிச்சல் தணிந்து ஆறும் ஊழ்த்தசை விரணம், மார்க்கட்டி, சுளுக்கு, தலைநோய், விஷகடி, சூதகஒழுக்கு, குருதிப் பெருக்கு முதலியன தீரும். வியர்வை யுண்டாகி நோய் வேகம் தணியும். கடினமான பொருளை விரைவில் வேகவைக்கவும், சட்டினி - ஊறுகாய் முதலியன கெடாதிருக்கவும் பயன்படும். நிற்க, **புளிப்புநீர்** பழக்காடி - அரிசிக்காடி - சர்க்கரைக்காடி - கஞ்சிக் காடி - கள்ளுக்கரடி - கடலைக்காடி- ஈச்சங்காடி - தென்னங்காடி - திராட்சைக்காடி - ஆறுமாதக்காடி - சீமைக்காடி - பனங்காடி எனப் பல வகைப்படும். (கருங்குருவையரிசி, கடலைப் புளிப்பு இவற்றின் ஆறு மாதமான பழைய காடிக்கு வீரியமும், மருத்துவப் பயனும் அதிகம். இதனால் பல உயரிய மருந்துகளைப் புடமிடுவதுண்டு.)

## ★ 17. சருக்கரையின் மருத்துவப் பயன் என்ன?

உணவு வகைகளுக்கு இனிய சுவையூட்டவல்ல சருக்கரை, கரும்பு-தென்னை-பனை-ஈச்சு - சீந்தில்-இலுப்பைப்பூ- பீட்ரூட் கிழங்கு-சிலவகை மரப்பட்டைகள் முதலியவற்றினின்றும் எடுக்கப்படுகிறது. இது, எடுக்கப்படும் தாவரத்திற்கேற்ப நிறம் -குணம்-வடிவு-பெயர் முதலியவற்றில் மாறுபடுகின்றது பொதுவாக, நமது வழக்கத்திலுள்ள சருக்கரையின் பயன் சிறந்ததாகும். குறிப்பாக, (1) தாவர வகை, கடைச்சரக்கு. மாமிசவகை முதலியவற்றை கெட்டுப் போகாமல் பாதுகாக்கும் எனவேதான் சூரணம் முதலியவற்றில் சருக்கரை சேருகிறது (2) செம்பு, பாடாணம், வீரம் முதலிய நஞ்சுகளை முறிக்கும் (3) ஆங்கில மருந்துகளில் சாராயம் மூலமும், ஆயுள்வேத ஆசவாரிட்டங்களின் மூலமும் மருந்தின் சத்தை குருதியில் கலக்கச்செய்தல் போன்று, சித்தமருந்துகளிலும் சருக்கரையை அனுபானமாகக் கொள்வதால் மருந்தின் சக்தி விரைவில் உடலில் பரவுகிறது. (4) மருந்துகளின் குமட்டல் சுவையை

மாற்றுகிறது. (5) புண் புரைகள், வேக்காடு, நெய்ப்பசை இவை நீங்குவதற்கு சருக்கரை கலந்த நீரை விட்டுக் கழுவலாம். (6) சுண்ணாம்புடன் சருக்கரை கூட்டிக் குழப்பி காயத்தில் போட குருதிப்பெருக்கு நிற்கும். (7) சருக்கரையினால் இருமல், பலவீனம், நீர்க்கோவை, நடுக்கம், இருதயப்படபடப்பு, பித்தம், அரோசகம், கபக்கட்டு, நரம்புத்தளர்ச்சி, ஈரல் வலுமின்மை, குருதிக்கேடு முதலிய பல நோய்கள் நீங்கும்.

## ★ 18. உண்மைச் சரக்குகளை அறிவது எப்படி?

சிலவகை **மருந்துச் சரக்குகள்** அரிதாகக் கிட்டுவதாலும், அவற்றின் தேவை கருதியும் இன்று அதேபோல் தோற்ற முள்ள போலிகள் நடமாடுவதால், **உண்மைச் சரக்கின் குணத்தை** பரிசீலித்து தேர்தலே நலம். கலப்படமில்லாத பொருள்களுள் உதாரணமாக (1) **கஸ்தூரி** நறுமணமும், கறும்பழுப்பு நிறமும், நெய்ப்புத் தன்மையுடனுமிருக்கும். நீரில்கரையாது. தீயில் உருகிக் குமிழியிடும். புதைத்திருப்பினும். மணம் குறையாது. பெருங்காயத்தின் மணத்தை மாற்றிவிடும். (2) **கோரோசனத்தில்** பழுக்கக் காய்ச்சிய ஊசியை குத்திப் பிடுங்க, அதில் மஞ்சள் நிறம் படிவதுடன், தொளை வழியே மஞ்சள் நிறப் புகையும் வரும். (3) **குங்குமப்பூ** ஒரு வித வாசனையுடனும், சிறிது மினுமினுப்பாயும், செம்மஞ்சள் நிறத்தில் சிறுநார்கள் போலுமிருக்கும். நீரிலிட சிறிது நேரத்தில் நீர் முற்றும் செம்மஞ்சள் நிறமடையும். (4) **அபினி** ஊதா நிறத்தில், பிசுபிசுப்பாயும், ஒருவித மணத்துடனுமிருக்கும். தீயில் பொங்கும். நீரில் கரையும். (5) **அம்பர்** வெள்ளை அல்லது கருமை நிறத்திலும், நெய்த் தன்மையுடனும், பச்சையில் துர்நாற்றமும், உலர்ந்தது கஸ்தூரி போன்றதொரு மணமுடனும், சுவையின்றியுமிருக்கும், விரைவில் தீப்பிடிக்கும். சுடு நீரிலும், சாராயத்திலும் கரையும். குளிர்ந்த நீரில் கரையாது. (6) **தேன்** இளமஞ்சள் நிறத்திலும், இனிப்பாயும், ஒருவித மணமுடனும், முதலில் தெளிவாயும் பிறகு மங்கலாயும் இருக்கும். இதனை நாய் நக்காது. ஈ, எறும்பு மொய்க்காது. துணியில் துளியை விட ஒட்டாமல் உருளும். நீரிலிட எளிதில் கரையாது முத்தாய் நிற்கும். (மேற்கூறிய பொருள்களுக்குரிய சோதனைகளில் மாறுபாடாயிருப்பின், அவை போலிப் பொருள் என உணரலாம். இதே போல் பாடாண - உலோக வகைகளுக்கும் வெவ்வேறுவித சோதனை முறைகளுண்டு).

## ★★ 19. சுண்ணக்குரு என்றால் என்ன?

**சுக்கான்கல் சுண்ணமும், பூநீறும்** சமனளவாகக் கூட்டி, 4-பங்கு நீர் விட்டு நீற்றி, மூங்கில் குச்சியால் தினம் 3-4 முறை நன்கு கலக்கிவந்து, 4-ம் நாள் ரவியிலிட மேலே நுரைபோல் மிதக்கும். அவ்வகைச் சத்து பூர்க்கும் வரை வழித்து வழித்து, வேறொரு பாண்டத்திலிட்டு. வெய்யிலிலிட, உலர்ந்து காரமான உப்பாகியிருக்கும். இச்சத்துக்கு **வைத்திய முப்பு** என்றும் பெயராகும். இச் **சுண்ணகுருவை** மருந்துகளில் மிகச்சிறிய அளவில் சேர்க்க அவற்றின் வீரியம் அதிகரிக்கும். (மத்தியகால ஞானிகள், இக்குருவை 5-வது இடத்தில் வைத்து, பயன் படுத்தியுள்ளனர்.)

## ★ 20. தாதுக்குரிய வித்துக்குணம் யாவை?

பொதுவாக, பெரும் பாலான **வித்துக்கள்** (விதைகள்) தாது வலுவிற்கு ஏற்றவைதான். குறிப்பாக, இனிப்பு, கசப்பு, துவர்ப்புச் சுவையுள்ளவை மிக நல்லது. விதைகள் **அதிக வெப்பம்** அல்லது **அதிக சீதளம்** கொண்டவை என இருவகைப் படும். சில வகைகள் மட்டும் சமமாயிருக்கும். சாதாரணமாக **(1)** இடைவெளியின்றி நெருங்கியுள்ள விதைகள் அதிக உஷ்ணமாயிருக்கும். (உ.ம்: தூதுளம்) **(2)** இடைவெளி மிகுந்து ஒன்றுடனொன்று சேராதிருப்து அதிகக் குளிர்ச்சியாயிருக்கும். (உ.ம்: பூசனி) **(3)** இவ்விரண்டிலும் சேராமல், இடை வெளியுடனும், ஒவ்வொன்றும் தனித்தனியாக உள்ளவை நற்பயன்தரும் (உ.ம்: வாதுமை, முருங்கை) பொதுவாகக் கூறுவதெனில், மிகு வெப்பமோ - சீதளமோ இன்றி இரண்டு குணமும் சம அளவிலுள்ளதே தாது செழிப்புண்டாக்க ஏற்றவை எனலாம்.

## ★ 21. சுண்ணத் தெளிநீரின் பயன் யாவை?

**கற்சுண்ணாம்பிற்கு** 4-பங்கு நீர் விட்டு, 3-தினம் கலக்கி வந்து 4-ம் நாள் வண்டல், கலங்கலின்றி நீரை வடித்துக் கொள்வதே **சுண்ணத்தெளிநீர்**. ஆகும். இதனால் செரியாமை, அசீரணபேதி, சீதபேதி, குடல் நோய் வயிற்றுப்புளிப்பு, மூத்திரக்கல், தாது - தாவர நஞ்சு, பிறப்புறுப்புகளின் எரிச்சல், மாந்தம் இவைதீரும். **சுண்ணாம்புத்தெளிவு நீருடன்** - பால் கலந்து வயிற்றுப் புண், சயம், கண்டமாலை இவற்றுக்கு பத்திய உணவாகத் தரலாம்-நல்லெண்ணையும், சர்க்கரையும் கலந்து த// நாட்பட்ட வெள்ளையும், நீரடைப்பும் தீரும் - கருவேலன்

பிசின் கூட்டித்தர சீதக்கடுப்பு தீரும் - தேங்காயெண்ணெயும், சூடனும் கலந்து மேலேபோட கொப்புளம், சிரங்கு விரணம், முலைக்காம்புப்புண் இவை ஆறும். இந்நீரை கந்தைத்துணியில் நனைத்துமேலே போட மேகவிரணம், இலிங்கப்புற்று, காது - மூக்கின் குருதி யொழுக்கு தீரும். பெரும்பாட்டிற்குக் கழுவும் நீராகப்பயன் படும். குழந்தைகள் தாய்ப்பாலின்றி, வேறு பாலைப் பருகி வருகையில் தர செரிப்பிக்கும். இதில் ஓமம் சுத்தியாகும். புடமிடும் மருந்துகளை இந்நீர் விட்டு அரைப்பதுண்டு.

## ★ 22. காப்பி - தேயிலையின் குணம் யாவை?

**காப்பிக்கொட்டை - தேயிலை** இவற்றினை கொதி நீரிலிட்டு குடிநீர் வடித்து தனியாகவோ, பால் - சீனி கலந்தோ பருகும் தொடர் பழக்கம் உலகெங்கிலும் உள்ளது. இவற்றுள் **(1) காப்பி நீர்** வெப்பமூட்டி நரம்புகளுக்கு சுறுசுறுப்பூட்டும். வியர்வையினால் சுரம், குளிரைத் தணிக்கும். உழைப்பின் களைப்பு, சோர்வை நீக்கி, கிளர்ச்சியூட்டும். இருதயம் குண்டிக்காய், சருமம் இவற்றின்தொழிலைப் பெருக்கும். அபினி ஊமத்தை முதலிய நச்சு போதையை விலக்கும். மருந்துகளின் அருவெறுப்பை மாற்றும். சுரம், குடல் கோளாறு, தலை வலி, சோம்பல், இருமல், கக்குவாய், வாந்திபேதி, மூளைநரம்பு வலி, செரியாபேதி இவற்றுக்கு தருவதுண்டு. ஆனால், தூக்கம் கெடும் - பாரிசவாயு, சந்துப்பிடிப்பு, நீர்நோய், நரம்புத்தளர்ச்சி உட்பட பல பிணிகளும் ஏற்படும். **(2) தேநீர்** உடலுக்கு சுறுசுறுப்பு, மூளைக்கு உற்சாகம், மனோபலம் இவற்றைத் தரும். துவர்ப்பியாகவே வாய் கொப்புளிக்கவும், கழிச்சலை நிறுத்தவும் பயன்படும். ஆனால், தூக்கக்கேடு, மூளைக்கடுப்பு, மயக்கம், செரியாமை, பைத்தியம் இவை ஏற்படும். (மேற்படி டீ - காபியின் பலன் - அளவோடு பயன்படுத்தினால் கிட்டுவதாகும். காபியில் - **காபீன், டீயில்-தையீன்** என்பன உட்பட சில வகை நச்சுத் தன்மை இருப்பதால் இவற்றிலான நன்மையை விட தீமையே அதிகமாகும்)

## ★ 23. கொய்னாச்சத்தின் பயன் யாவை?

ஆங்கில மருத்துவ முறையில் மிகுதியாகப் பயன்படுத்தப் படும்-**கொய்னாச்சத்து** என்பது, சுரமரம் எனக்கூறப்படும் **சின்கோனா மரத்தின்** மஞ்சள் அல்லது சிவப்பு நிறப் பட்டையினின்று தயாரிக்கப்படுவதாகும். **கொய்னாவினால்**

சகல சுரமும் தீரும். இதனால், நச்சுசுரத்தில் (மலேரியா) காணாத வாதப்பிடிப்பு - வலி, ஈளை, கக்குவாய், கடும் கபவாதசுரம் (நிமோனியா), நுரையீரலின் துன்மாமிசம், கண்ணோய், அக்கினி விசர்ப்பி, சீதபேதி, வாய்ப்புண், பேதி, நமர், சயம், பிரசவித்தவளின் குருதிக்கேடு, பலவீனச்சூடு, பல்லீறு நோய், தொண்டைக் கம்மல், விரணம், பசியின்மை, உடல் மெலிவு முதலியன தீரும். அம்மை சுரத்தின் கடுமையைத் தணித்து, வலிமையைத் தரும். விளாவிய கந்தகத்திராவகத்துடன் தர கசப்புச் சுவையினாலான வயிற்றின் எதிர்க்களிப்பு மாறும். இதனால், மீண்டும் மீண்டும் வரும் புனர் சுரம் தீராது. இதனை வெறும் வயிற்றில் கொள்ள துரித பலன் கிட்டும். ஆனால், **கொய்னாவை** தொடர்ந்தோ, அதிகமாகவோ, உட்கொண்டால் காதில் 'ஹூம்' என்ற ஒலி - மந்தம் அல்லது செவிடு, தலைச் சுற்றல், தூக்கமின்மை, குமட்டல் ஏற்படும். இரைப்பையின் செரிப்பிக்கும் நீரை தடை செய்யும். குருதியின் நிறமற்ற உயிரணுக்களின் இயக்கத்தை பல வீனப்படுத்தும், மூளை, தண்டுவடத்தை சமனப்படுத்தி, சுருக்கி, முடிவில் தன்னிச்சை செயலைப் போக்கிவிடும். உடல் வெப்பத்தைக் மிகவும் குறைத்து, அங்க சீவிகளில் பிராணவாயு கலப்பதை தடுத்துவிடும். திடீரென குருதி யோட்டத்தைக் குறைத்து, இசிவுண்டாக்கி, இருதய இயக்கத்தை நிறுத்தி மரணத்தை உண்டுபண்ணும். இதனாலான அழிவுக்கு தாவர, சீவ இனங்களும் தப்புவதில்லை, எனவே, இயன்றவரை கொய்னாவை தவிர்ப்பதே நலமாகும்.

## ★ 24. பிசின்களின் பயன்கள் யாவை?

தாவரங்களினின்று இழியும் பால் அல்லது சத்தே - **பிசின்கள்** எனப்படும். சகல பிசின்களுக்கும் மருத்துவக் குணமுண்டு. அவற்றுள் சில **(1) வேலம் பிசின்** (இரு வேல்) -இது, துவர்ப்பியாகும். இதனால்-விந்து நீற்றல், உள்ளழல், மது மேகம், வெகுநீர், குருதிப் போக்கு, தொண்டை நோய், எரிச்சல், சீழ்மேகம், இருமல், அழற்சி, இரத்தபித்தம் இவை தீரும். ஆண்மை, அழகு, வலிமை கூடும். முட்டை வெண் கருவுடன் கூட்டி தீப்புண்ணிலிடலாம். **(2) முருங்கைப் பிசின்** -இதன் தன்மை தட்பமாகும். இதனால்-விந்து நீர்த்தல், வெகுநீர், வளிப்பிணிகள் தீரும். விந்து இறுகி, ஆண்மை பெருகி. அழகுண்டாகும். இதனை எண்ணெயில் கரைத்து காதிலிட செவிப்புண்ணும் - பாலில் கரைத்துப் பூச தலைவலி, நெறிக் கட்டியும் தீரும். **(3) இலவம் பிசின்**-இதன் தன்மை தட்பமாகும்

-துவர்ப்பியாகும். இதனால் - சயக் கோழை, விரண எரிச்சல், நீர்ச் சுருக்கு, தொண்டைப் புகைச்சல், வெள்ளை, வெட்டை, கழிச்சல், குருதிப் பெருக்கு, தாது நட்டம் இவை தீரும். **(4) வேங்கைப் பிசின்**-இது துவர்ப்பியாகும். இதனால்-உளை மாந்தை, வெள்ளை, வெட்டை, புண்புரை, கழிச்சல், பித்த வாந்தி, செரியாமை, பல்நோய், அழற்சி, இருமல் இவை திரும். கண்ணொளி பெறும். **(5) பாதம் பிசின்** - இது உள்ளழலாற்றி யாகும். இதனால் - இருமல், சிணுக்கிருமல், கழிச்சல், நீரெரிவு, நச்சு மருந்துகளின் வேகம், விந்து நீர்த்தல், அழற்சி இவை தீரும். ஆண்மையும், கபமும் பெருகும். (கசப்பு வாதுமைக்கும் இக்குணமுண்டு)

## ★ 25. கந்தகத்திராவகத்தின் பயன் என்ன?

கந்தகமும்-வெடியுப்பும் கூட்டி முறைப்படிவாலையிலிட்டு வடித்தெடுப்பதே, தீநீராகவும் பயன்படக் கூடியதான **கந்தகத் திராவகம்** ஆகும். இது கடும் காரமுடன், உடலில் படக் கொப்புளிக்கும். இது, துவர்ப்பாயும், வெப்பத்தைப் போக்கி, பலமூட்டுவதாயும் பயன்படும். இதனுடன், 6-8 மடங்கு தண்ணீர் அல்லது இதர மருந்துகள் கலந்தே தரவேண்டும். இலவங்கப் பட்டைக் குடிநீருடன் கலந்து தர - குடல் நோய், வயிற்று வலி, கண்டமாலை, களைப்பு தீரும். மாசிக்காய்ச் சத்துடன் தர-வயிறு, நுரையீரல், கருப்பை, குண்டிக்காய் இவற்றின் குருதியொழுக்கு தீரும். நீருடன் கலந்து கொப்புளிக்க தொண்டைக்கம்மல் மாறும். இதனால் - பலவித பேதி, சயநோயின் வியர்வை, சொறி, மேகக்கிரந்தி, அதிசுரம் இவை தீரும். (எப்போதும், கந்தகத்திரவாகத்தைத்தான் நீரில் கவனமுடன் கலந்து கலக்க வேண்டும். நீரை திராவகத்தில் ஊற்றக் கூடாது)

## ★ 26. பிண்ணாக்குகளின் குணம் என்ன?

எண்ணெய் வித்துக்களை ஆட்டி நெய் பிழிந்தபின் உள்ள திப்பிகளே **பிண்ணாக்கு** ஆகும். இவற்றுள் **(1) எள்ளுப் பிண்ணாக்கு** - இதனால், கழலை, தினவு, புண், கரப்பான், நீர்மேகம் இவை விளையும். வெகுமூத்திரம், மதுமேகம், தாதுநட்டம், பலவீனம் இவை விலகும். இதனை, மோர்க் கறியாக செய்து உண்ண கபம் நீங்கும். **(2) இலுப்பைப் பிண்ணாக்கு** - இதனால், முக்குற்றம், கடுவன், புண், கரப்பான், குடல்வாயு, வீக்கம் இவை தீரும். நசியமிட தலைவலி - பாரம், பீனிசம் தீரும். நீருடன் தர வாந்தியுண்டாகி ஊமத்தங்காயின்

நஞ்சு தீரும். இதனைப் புகைக்க புழு-பூச்சி, எலிகள் அண்டாது. **(3) வேம்பம் பிண்ணாக்கு** - இதனால், சன்னி, வளிப்பிணி, தலைவலி, கப நோய், புண் புரை, கிரந்தி, இசிவு, சுரம், உடல்வலி இவை தீரும். நசிய மிட தும்மலுண்டாகி தலைவலி - முப்பிணி தீரும். **(4) கடலைப் பிண்ணாக்கு** - இதனால் சருமப்பிணி, பித்தம், கிறுகிறுப்பு, பத்தியமுறிவு இவை விளையும். உடல் வலுக்கும்.

## ★ 27. கள்ளுகளின் குணம் யாவை?

இவற்றுள் **(1) தென்னங்கள்ளு** - புதிய தென்னங் கள்ளுடன், மிளகு - சீரகத் தூள்களையிட்டுப் பருக உடல் உஷ்ணம், மேகம், சீதபேதி இவை தீரும். மலம் இளகும். குருதி பெருகி - உடல் வலுத்து - சுறுசுறுப்புண்டாகும். அளவு மீறினால் மயக்கம் வரும். **புளித்த கள்ளினால்** - சுக்கில சுரோணிதம், குளிர்ச்சி, பாண்டு, சோபை, முக்குற்ற தொந்தம், குருதிக் கழிச்சல், கரப்பான், நளிர்சுரம், பெருங்கழிச்சல், வாதம் அழல் இவை உண்டாகும். அறிவுகெடும். **(2) பனங்கள்ளு** - புளிக்காத பனங்கள்ளினால், சொறி, சிரங்கு, தினவு, பித்தவெட்டை, வெள்ளை, உஷ்ணம் இவை தீரும். சப்ததாதுக்களும் வலுத்து, சுக்கில சுரோணிதம் பெருகி, உடல் நலமுறும். **புளித்தகள்ளினால்** வாதக்குற்றம், கபம் பெருகும். அறிவு கெடும். **(3) ஈச்சங்கள்ளு** - சிற்றீச்சின் புதிய கள்ளை அதிகாலையில் அளவுடன் பருகிவர உள்ளழலை, பிரமேகம், மூத்திரக் கிரிச்சரம், அரோசகம் இவை தீரும். ஆனால், பித்தம், வீக்கம், திமிர் வாயு உண்டாகும். அளவு கூடினால் கழிச்சலுண்டாகும். பொதுவாக, கள்ளுகளினால் உடல் குளிர்ச்சியாகும். ஆயின், பிற விளைவுகளைக் கருதி விலக்குவதே நலம். கள்ளினால் பாடாணங்கள் சுத்தியாகும்.

## ★ 28. தாரின் மருத்துவப் பயன் என்ன?

**தார்** நிலத்தினடி தாதுக்களினின்றும் - தாவரங்களினின்றும் இருவகையாகப் பிரித்தெடுக்கப்படுகின்றன. நம் நாட்டில் பனை, தாழை, சவுக்கு முதலிய மரங்களை எரித்த கரியினின்று குழித் தைலமாக எடுக்கக் கூடிய - கறுத்துப் பளபளப்பாய் வாசனையுடனும், தீயில் உருகுவதுமான - பொருளே தார் எனப்படும். இதனைக் காய்ச்சி, ஆவியை நுகர சன்னிபாதசுரம், மலக்கட்டு, இருமல், சயம் இவை தீரும். வாதுமை நெய், தேங்காய் நெய், கற்பூரத்தைலம், சாராயம் முதலியவற்றில்

கலந்து மேலே பூச சொறி, சிரங்கு, குட்டம், நமைச்சல், கொப்புளம், கழுதைச்சொறி (சோரியாஸிஸ்) போன்றவை தீரும். **தாது - தாவர தார்கள்** இரண்டுமே உள்-வெளிப் பயனில், வெப்பமும் - வலிமையும் ஊட்டுவனவாகும். உள் பயனில் கபம், இரைப்பிருமல் நீங்கி, உடல் தேறும். சில சமயம் சிறுநீரில் கருப்புப் படிவம் காணும். தார்களினின்று பல துணைப் பொருட்களும் தயாரிக்கப்பட்டு பயனில் உள்ளன. வெளிநாடுகளில் பெரிய உலைகள் அமைத்து, நிலக்கரியினை எரித்து தாரை வடிப்பார்கள்.

## ★★ 29. காய்ச்சுக்கட்டியின் பயன் யாவை?

துவர்ப்புக்குணமுள்ள பல்வேறு மரங்களின் பிசின் அல்லது சாறெடுத்து, அதற்கு மணமூட்டி தாம்பூலத்துடன் அருந்துவதற் கேற்ப தயார்ரிக்கப்படுவதாகிய - பற்காவிக்கட்டி அல்லது காசுக்கட்டி என்பதே **காய்ச்சுக் கட்டி** ஆகும். இது, நால் வகைப்படும். அவை (1) ஒதளை, கருங்காலி முதலிய துவர்மரச் சாற்றிலிருந்து செய்வது. இதன் நிறம் கறுப்பு. எளிதில் உடையும். (2) கம்பீர் எனும் செடியிலிருந்து செய்வது-கசப்பான **கத்தக்காம்பு** இதுவேயாகும். இன்னொரு வகை சிவப்பாக, கடும் துவர்ப்பாயிருக்கும். (3) ஐதராபாத் காசுக்கட்டி என்பது பல்வேறு துவர்பட்டைகளை கியாழமிட்டு செய்வதாகும். இது, மேலே சாம்பல் அல்லது கபில நிறமாயும், உட்புறம் வெளுத்தும், பல அளவிலும், துவர்ப்பாயுமிருக்கும். இதனை, ஆண்குறியின் சோர்வு முதலிய நரம்புத்தளர்ச்சிக்கு மேலே பூசுவதுண்டு. (4) முற்றிய பாக்குகளை வேகவைத்து சத்தெடுத்து செய்வது. இது கருப்பாய், மிகத் துவர்ப்புடனிருக்கும். நிற்க, **காசுக்கட்டியை** வாயிலடக்க தொண்டைப்புண் - கம்மல், குரலடைப்பு, இரச வீறு, விரணம், பல்லீற்றுப் புண், வாய் பிடிப்பு இவை தீரும். கியாழம் அல்லது பாவனத் திரவத்தினால் கழுவ படுக்கைப் புண், முலைக்காம்பு விரணம், குறிப்புண், அழற்சி இவை ஆறும். களிம்பாக்கி அல்லது திரியிலூட்டி, கட்டி கழலைகளுக்குப் போடலாம். உட்தர சித - ரத்த பேதி, குடல் புண், உள்வேக்காடு இவை தீரும்.

## ★ 30. தேன் மெழுகின் பயன் யாவை?

**தேனீக்கள்** தாம் வசிக்கும் கூட்டை அமைத்தற்கென தமது உடலிலிருந்து வெளிப்படுத்தும் ஒருவிதமான நைப்புப் பொருளே - **தேன்மெழுகு** எனப்படும். இது, தேனின்

மணமுடன் கனதியாயும்: மஞ்சள் நிறத்திலும், வெளிச்சம்பட வெளுப்பதாயுமிருக்கும். இதனைக் காய்ச்சி சுத்தி செய்கையில் **வெள்ளைமெழுகு** கிட்டும். கொழுப்பை விட மேலான மெழுகினால் தோலின் அழற்சி நீங்கி, மிருதுவாகும். இதனால், முற்றிய சீதபேதி, இருமல், சுவாச காசம், பாரிசவாயு இவை தீரும். இதனைக் களிம்பாக்கி துணியில் தடவிப்போட புண், புரை, விரணம் ஆறும். இதனைக் கொண்டு தயாரிக்கப் படும் **மயனத்தைலத்தினை** தடவிவர, வாதம், சூலை, சன்னி, நரம்புகளின் வாயு, வீக்கம், குறித்தளர்ச்சி, நரம்புத்தளர்ச்சி, குருதி ஒழுகும் காயம், நரித்தலைவாதம், அண்டவாதம், இசிவு, பலவீனம் இவை நீங்கும்.

## ★ 31. மக்கிப்பால் என்றால் என்ன?

**மக்கி** என்ற பெயரிலுள்ள செடி மற்றும் மரத்தினின்று பிரித்தெடுப்பதே இரேவல் சின்னிப்பால் அல்லது **மக்கிப்பால்** எனப்படும். இது, மக்கி மரப்பட்டையைக் கீறி, அதினின்று ஒழுகும் பாலை உலர்த்திப் பதப்படுத்துவதாகும். இது சுவையும், மணமுமின்றி - மஞ்சள் நிறத்திலும், கடினமாயும் - குழாய், உருளை, துண்டு ஆகிய வடிவங்களிலும் கிட்டும். இது, மலத்தை வெளியேற்றும், காமாலை, வயிற்று உப்பிசம், வீக்கம், சூதகச் சிக்கல், வயிற்றிரைச்சல், நீர்பேதி, நீர்க்கோர்வை, குடல்மாசு இவை தீரும். நாட்டு இரேவற்சின்னி, மஞ்சள் சீனக்கிழங்கு, வரியாத்து, பேதிக் கிழங்கு எனவும் கூறப்படும். **இரேவல் சின்னிக் கிழங்குக்கும்** மேற்படி குணங்களுண்டு. இதனை நீரில் தோய்க்க மஞ்சள் நிறமாகும்.

## ★ 32. ஆவின் மோரைப் பயன் படுத்துவது எப்படி?

பசுவின் தயிருடன் சமனளவு தண்ணீர் சேர்த்து, மத்து முதலிய வற்றால் நன்கு கடைந்து அதிலுள்ள பாலேடு மற்றும் வெண்ணெய்ச்சத்தை முற்றாக நீக்கியபின், அதிகக் கட்டியாகவோ, நீர்த்தோ இல்லாமலும் - புளிப்பு, இனிப்பு, துவர்ப்புச்சுவைகள் கலந்தும் உள்ளதொரு திரவமே **பசுவின் மோர்** எனப்படும். இப்படிக் கடைந்தெடுத்த **ஆவின் மோர்** நால்வகைப்படும். அவை, தண்ணீர் கலவாதது - கால் பங்கு நீர் சேர்த்தது - அரைப் பங்கு நீர் கலந்தது - சமனளவு நீர் சேர்த்தது என்பனவாகும். இதில் ஒன்று - அரை என்ற பங்களவு கலந்த மோர் மருந்துகளுக்கும், நோயாளியின் செரிப்புத் திறனுக்கும் பயன்படும். இது, துவர்ப்பி, இலேசான குளிர்ச்சி,

ஆரோக்கியம், சத்து இவற்றை அளிப்பதுடன் - பசித்தீயையும் தூண்டி, உணவையும் செரிப்பிக்கும். இதனால் - பேதி, நச்சுக்கள், வயிற்றுக்கடுப்பு, சிறுநீரகப் பிணிகள், குன்மம், பொருமல், பித்தஉபரி, மந்தப்புளிப்பு ஆகியன தீரும். இதனை, தொடர்ந்து பயன் படுத்துவதால் உடல் நலம் பாதுகாக்கப்படுவதோடு சில நோய்களும் அணுகாது. இங்ஙனமே, மோர்த்தேட்டை எனப்படும் மோர் தெளிந்த - இனிப்பும், புளிப்புமான - தண்ணீர் இலேசாகவும், வெப்பமூட்டியாகவும், தாதுக்களின் வறட்சியைப் போக்குவதாயும் இருக்கும். இரசாயனம் மற்றும் எதிரிடை நஞ்சுகளும், மருந்துகளின் பின் விளைவுகளும் மாறும். காமத்தைத் தூண்டாமையால் பயன்படுத்த ஏற்றது. (தேரையரின் கூற்றுப்படி மோராக அல்லாமல், தயிராகப் பயன்படுத்தக் கூடாது என அறியவும்)

## ★ 33. இளநீர் - பதனீரின் பயன்கள் யாவை?

இளந்தேங்காயிலுள்ள சுத்தமான தண்ணீரே - இளநீர் எனப்படும். தேங்காயினுள் சதைப்பற்று ஏறஏற இந்நீரும் குறையும். இளநீரானது, நீர் கலந்த பாலைப்போல் சிறிது வெண்மையாயும், இனிப்பு துவர்ப்புச் சுவையுடனும், குளிர்ச்சியாயும், பருக இன்பமாயும் இருக்கும். இதனால் - கோடைகாலக்களைப்பு, மிகுதாகம், நாவறட்சி, குருதிக்கேடு, நீர்க்கட்டு, நீரெரிவு, நெஞ்செரிவு, இளைப்புநோய், மகோதரம், நீரிழிவு, தாது நட்டம், சீதபேதி, தீச்சுட்டபுண், பலவீனம் இவை தீரும். இளநீரின் கண்திறந்து, 6-கிராம்பை உட்செலுத்தி மூடி, மறுநாள் எடுத்து 2-மணிக்கொரு முறை தர - நவீன 'குளுகோஸ்'' போல் சீவசக்தி மாறாது கிட்டும். (2) பதனீர் என்பது, பனைமரத்தின் பாளையைச் சீவி விடுவதால் பெருகும் நீராகும். இது, வெண்மையாய் இனிப்பு, துவர்ப்பு, சிறிது புளிப்புச் சுவையுடனும், பருகக் குளிர்ச்சியாயும், இன்பமாயும், களைப்பை நீக்குவதாயும் இருக்கும். இது, நேரம் செல்லுகையில் புளித்துக் கள்ளு ஆகிவிடும். புளிக்காத புதிய சாற்றினால் - வெட்டைச்சூடு, பாண்டு, உஷ்ணம், நீர்க்கட்டு, செரியாமை, மலச்சிக்கல், சயம், குன்மம், கிரந்தி, காசம், நீரிழிவு, தொண்டைநோய், சருமப்பிணி, மேகம், சோகை, சூதகதோடம், அழற்சி, சில் விஷம் இவை தீரும். (இளநீர் - பதனீர் இரண்டுமே மருந்துகள் செய்யவும் - சுத்திமுறைகளுக்கும் பயன்படும்.)

## ★ 34. கடலைப்புளிப்பு எடுப்பது எப்படி?

**கொண்டைக் கடலைக்காடி** என்பதே **கடலைப்புளிப்பு** ஆகும். இது, கடலைச் செடிகளின் மீது, இரவு அல்லது விடியுங்காலையில், மெல்லிய சல்லாத்துணிகளை விரித்து வைக்க, அவ்வமயம் பெய்யும் பனியினால் துணிகள் நனைந்துள்ளபோது, செடிகளின் சத்தும் அப்பனி நீரில் ஏறிக் **காடியாக** மாறும். அத்துணியைப் பிழிந்து வடிப்பதே கடலைப்புளிப்பு நீராகும். இது, உடலுக்கு வலுவும், குளிர்ச்சியும் தரும். குடல் வலுவடையும். குன்மம் தீரும். வெடியுப்பைத்திராவ கத்தில் கடலைப் புளிப்பும் சேருவதுண்டு. இது, காடியைப் போன்றதேவெனினும் அதை விட மும்மடங்கு விலையாகவே - இதற்குப் பதிலாக, விளாவிய **கந்தகத்திராவகத்தை** விற்று விடுவதுமுண்டு. *(2)* **கடலைச்சத்து** அல்லது கடலைப்பச்சை (சியானத்திரவியம்-நிக்ஷாஸ்தா) என்பது, மேற்படி கடலைப் பருப்பை நீரில் ஊற வைத்துப் பிசைந்து வெளிவரும் பாலை தெளிவிறுத்த பிறகு அடியில் நிற்கும் வண்டலாகும். இதுவும் உடலுக்கு பலமூட்டும்.

## ★ 35. காண்டாமிருக இரத்தம் என்றால் என்ன?

**காண்டாமிருக இரத்தம்** என்பது ஒரு மிருகத்தின் குருதியல்ல. இது, பிரப்பந்தாளி, உதிரவேங்கை, புரசு முதலிய மரங்களினின்று வடிந்து உறைந்த சாறு, அல்லது துவர்ப்பு மரங்களினின்று எடுத்த பிசின் வகையிலிருந்து தயாரித்த **துவர்ப்புச் சரக்காகும்**. இது 'கீனோ' எனும் பொருளைப் போலிருக்கும். இதற்கு மணமும், சுவையுமில்லை - பழத்தினின்று எடுத்த பால் இளங்கருப்பாயும், தூள் சிவப்பாயுமிருக்கும். இதை சாராயத்தில் கலந்து ஆயாசம் மூர்ச்சை ஆகியவற்றுக்கு தலையிலும், நெற்றிப்பொட்டிலும் தடவலாம். இது பல்பொடியில் சேரும். நாம் பயன்படுத்துவது உதிரவேங்கை மரத்தின் பால் (குக்குலு) ஆகும். இது காய்ச்சுக்கட்டி போல் வேலை செய்யும். குறிப்பாக, குருதிப் போக்கு, விரணங்களுக்கு நல்லது. இதன் சாந்தகுணத்தினால் இதை மெலிவுற்ற பெண்களுக்கும், குழந்தைகளுக்கும் தரலாம் (இங்ஙனமே, **காட்டெருமைப் பால்** என்பது குறிப்பாக - எருக்கு; மற்றும் கள்ளிப்பாலைக் குறிக்கும்.)

# XII பொருட் பண்பு விளக்கம்

உலகில் இறைவன் படைப்பிலுள்ள **அசையும்-அசையாப்** பொருள்யாவுமே ஒன்றையொன்று சார்ந்து வாழுவதாகவும் - ஒன்று வாழ மற்றொன்று இரையாகவோ, துன்பம் தவிர்ப்பனவாகவோ திகழுவதையும் நாமறிவோம். எனவே, சகல தோற்றமும் ஏதோவொரு காரணத்தினாலன்றி, ஒன்று கூட வீணாகப் படைக்கப்பட்டவையல்ல. இப்படைப்புகளில், **தாவர-தாது - சீவ இனங்களுள்** பெரும்பாலானவை மாந்த இனத்திற்கு மருந்துகளாகவும், சில உணவுகளாகவும் பயன்பட்டு உயிர்வாழ உறுதுணையாக இருந்து வருகின்றன. இவ்வகைப் பொருட்களனைத்திற்கும் பெரும்பாலும் தனித்தனிக் குணங்களுண்டு. அவற்றைக் கண்டறிந்து விளக்கிக்கூறுவதே **பதார்த்தகுண சிந்தாமணி, பதார்த்தகுண விளக்கம் - பதார்த்தகுண சூடாமணி - மலைவாகடம் - குணபாடம்** என்றெல்லாம் கூறப்படும் - **பொருட்பண்பு விளக்க நூல்** ஆகும். இதில், அனைத்துப் படைப்புக்களின் நற்குணம் -தீக்குணம்-உணவுக்குணம்-மருத்துவக்குணம்-மேலான குணம்; இவை உட்பட அனைத்து, உள் - வெளி, பசுமை - உலர்ந்த, தனி - சேர்க்கை, நேரடியான - பக்குவப்படுத்தப்பட்ட பண்புகளனைத்தையும் விரிவாகக் கூறப் பட்டிருக்கும். இதில், ஒவ்வொன்றின் உறுப்புகளனைத்தும் தனித்னியாகவும் - ஒன்று கூட விடுபட்டு விடாமலும், அனைத்துமே ஏதோவொரு வகையில் பயன் படுமளவிலும் முறையாக, தெளிவாக, ஒளிவுமறைவின்றிக் கூறப்பட்டிருக்கும். இவை **சித்தர்களின்** நுண்ணிய அனுபவ ஆய்வறிவால் கண்டறியப்பட்டு நமக்களித்துள்ள **கருவூலங்களுள்** ஒன்றாகும். இவற்றில் நற்தேற்சி பெறாதவர்கள் சிறந்த மருத்துவராக இருக்கவியலாது.

## ★★ 1. தாது - தாவர - சங்கமப் பொருள் யாவை?

ஐவைப் பூதங்களின் ஆளுகைக்குட்பட்ட இவ்வுலகின் பொருள்யாவும் **அசையும் பொருள் - அசையாப் பொருள்** என இருவகையுள் அடங்கும். இவை தாது - தாவர - சங்கமப் பொருள் என்ற 3- பாகுபாட்டினையுடைய தாகும். இவற்றுள் (1) **தாதுப்பொருள்** எனபன, முறையே உலோகம் - 11 (இதில் இயற்கை - 8 செயற்கை-3) - காரசாரம் -25 (இதில் இயற்கை

-10, செயற்கை-15) - பாடாணம் -64 (இதில் இயற்கை - 32, செயற்கை 32) - உபரசம் 120, ஆக மொத்தம் - 220 வகைப்படும். **(2) தாவரப் பொருள்** என்பன முறையே புல் -பூண்டு-செடி-கொடி- மரம் என்றுள்ள பல்லாயிரக்கணக்கான மூலிகை வகையாகும். **(3) சங்கமப் பொருள்** என்பன முறையே ஊர்வன-நடப்பன-நீந்துவன - பறப்பன என்றுள்ள பல்லாயிரக் கணக்கான உயிரின வகையாகும்.

## உலோகங்கள் - 11

### ★ 2. இரும்பின் செயல் முறை யாவை?

**இரும்பு (அயம்)** பூமியில் கிட்டும் கருப்பு நிறமானதொரு கனிப் பொருளெனினும் இது உலகின் பொருள் யாவற்றிலும் சிறிதளவு கலந்தும் இருக்கிறது. இது மிக்க கனமுடன் துருவேறும் தன்மையும் கொண்டதாகும். **இரும்பினால்** பித்தபாண்டு, வெண்குட்டம், அதிதூல நோய், சோபை, காமாலை, மந்தம், குன்மம், கழிச்சல், சுக்கில நட்டம், பசியின்மை, நீரிழிவு, சயம், பெருவயிறு, பலவீனம், வாத-பித்த - கபக்குற்றப் பிணிகள் ஆகியன தீரும். குருதியின் தன்மை கூடி, சகல உறுப்புகளும் தூண்டப்பட்டு, உடல் தேறி இரும்புபோல் வலுவடைந்து ஒளிரும். (அயமருந்துகளை திரிபலையில் கொடுக்க மலம் கட்டாது) நிற்க, **காந்தம்** என்பது இரும்பின் குணங்களையுடையதேயெனினும், இது அயத்தை விட மேன்மையான பயன்களை நல்கி ஆயுளையும் நீடிக்க வல்லதாகும். (அரம் எனப்படும் **உருக்கின்** பயனும் இரும்பிற்குரியதேயாகும்.)

### ★★ 3. வங்கங்களின் செயல்முறை யாவை?

இவற்றுள் **(1) கருவங்கம்** (காரீயம்) மலை முதலிய இடங்களில் செண்டு செண்டாகவும், அறுவிகளின் கல் - மணலுடன் கலந்தும், மற்ற பொருட்களில் கலந்தும் இருக்கிறது. **கருவங்கத்தினால்** தாவர நஞ்சு, கண்ணோய், குன்மம், வாதம், சூலை, பவுத்திரம், யானைக் குட்டம், மேகம், சுரம், பெருவயிறு, உப்புசம், பாண்டு, விரணம், புற்று, பசியின்மை, கிருமிகள், கிரந்தி, மூலம் ஆகியன நீங்கும். **(2) வெள்வங்கம்** (வெள்ளீயம்) விரைவில் உருகல், ஓசையின்மை, கனம், நெய்ப்பு, குளிர்ச்சி ஆகிய தன்மையுடனிருக்கும். **வெள்வங்கத்தினால்** தாகம்.

கரப்பான், விந்து நட்டம், சலப்பிரமேகம், பித்தகபத் தொந்தம், மேகம், உடல் ஒளிகுன்றல், சுரம், துர்ப்பலம், கிரந்தி, மந்தார சுவாசகாசம், அக்கினிமந்தம், சிறுநீரக - பிறப்பு, - புப்புச உறுப்புகளின் பிணிகள், கிருமிகள், தாது வேப்பம், வீக்கம் குருதிப் பெருக்கு ஆகியன நீங்கும். (வங்கத்தை நன்கு சுத்தித்து அளவுடன் பயன்படுத்தாவிடில் மிக்க தீங்கிளைக்கும்)

**★★ 4. தாம்பிரத்தின் செயல் முறை யாவை?**

**தாம்பிரம்** (செம்பு) தனித்தும், பிறவற்றில் கலந்தும் இருக்கும். இது மினுமினுக்கும் செங்கபில நிறமுடனும், துப்பேறும் தன்மையுடனும், வெடியுப்புத் திராவகத்தில் மட்டும் கரைவதாகவும், மின்சாரம் - உஷ்ணத்தை கிரகிக்கும் தன்மையுடனுமிருக்கும் - **தாம்பிரத்தினால்** இரத்த பித்தம், சந்நி, கல்லீரல்நோய், அக்கினி மந்தம், பீலிகம், வெண்குட்டம், பித்தவழலை, சூதகப்பிணி, புண் - கிரந்தி, திரிதோடசுவாசம், கிருமி, கண்ணோய், தாதுக்குட்டம், குன்மம் ஆகியன தீரும். (தாம்பிரம் இரைப்பை, சிறுகுடல் சவ்வுகளால் கிரகிக்கப்பட்டு ஈரலில் சேர்ந்து, கழிவுறுப்புகளால் வெளியேற்றப்படும். இதற்கு கண்டிப்பாக பத்தியத்தைக் கடைப்பிடிக்க வேண்டும்.)

**★★ 5. நாகத்தின் செயல் முறை யாவை?**

**நாகம்** (வாசுகி) உருக்குகையில் பாம்பு போல் சீறுவதால் இப்பெயர் பெற்றது. இதனை பிறவற்றினின்று பிரித்தெடுத்த பின் வெளுப்பு, நீல நிறத்தில் பளபளத்து கட்டியாகவும், கம்பித் தகடாக்குமளவிலும், காற்றுப்பட உப்புப்பூப்பதாகவுமிருக்கும் - **துத்தநாகத்தினால்** மேகம், பேதி, வெள்ளை, உட்சூடு, கிராணி, பித்தம், மூலம், பவுத்திரம், பலவீனம், குருதிப்போக்கு, உடல் மெலிவு, வாத-பித்த-கபப்பிணிகள், விரணம், சீதரத்த பேதி, மேகப்பிணி, குன்மம், வெறி ஆகிய பிணிகள் நீங்கும்.

**★ 6. பொன்னின் செயல்முறை யாவை?**

**பொன்** (தங்கம்) பூமியினடியில் சொற்ப அளவிலேயே கிட்டுவதால் மதிப்புடன் திகழ்கிறது. இது ஒளி மிக்க பசு மஞ்சள் நிறத்திலும், துருவேறாத் தன்மையுடனும், தகடாவதாகவும், திராவகங்களில் கூட உருகியோடாத் தன்மையுடனும் இருக்கும் - **பொன்னினால்** தாவரங்களின் நஞ்சுகள், உடல் ஒளிக்குன்றல், சன்னி, இளைப்பு, காசம், உட்சூடு, கபக்குற்றம், தாதுநட்டம், விழிநோய், கோழைக்கட்டு

மேகம், சயம், சூதகச்சிக்கல், சிறுநீர்க்கட்டு ஆகியன நீங்கும் உணவைச் செரிப்பித்து, குருதியை தூய்மைப்படுத்தி, ஞாபக சக்தி - அறிவு - அழகு - உடல்பலம் - ஆண்மை இவற்றைப் பெருக்கும். காமவிச்சையைத் தூண்டும்.

### ★★ 7. மண்டூரத்தின் செயல்முறை யாவை?

**மண்டூரம்** (அயக்கிட்டம்) உலையிலிருக்கும் இரும்பினால் விடப்பட்டு, தீயில் வெந்து, மெழுகு பதத்தில் கட்டியாவதால் இது இரும்பை விட வலிமையுடையதாகும் - உலோக **மண்டூரத்தினால்** வாதசோபை முதலிய வீக்கம், அஸ்திசுரம் கொடிய விஷபாகம், இரைப்பு, கபக்குற்றம், உடல் வெளுப்பு காசம், நீராமைக்கட்டி, பிரமியம், குருதிக்கேடு, முப்பிணிசுரம் காமாலை, பாண்டு, நீர்த்தோடம், குன்மம், சூலை சூதகக்கோளாறு ஆகியன தீரும். குருதி பெருகி உடல் வலுப்பெறும் (இதனை, பசிமந்தமுடனும்-மலக்கட்டு, உடல் சூடு இவற்றின் போதும் கொடுத்தல் கூடாது)

### ★ 8. வெள்ளியின் செயல் முறை யாவை?

**வெள்ளி** (இரசிதம்) மற்ற தாதுவில் கலந்தும், மாசின்றி சங்கு போல் வெளுத்தும், தகடாக்க வல்லதாகவும் மினுமினுப்புடனு மிருக்கும்-**வெள்ளியினால்** உடல் மெலியும் புராணசுரம், உணவை ஊட்டச் செய்யும் மேகவாதப் பிடிப்பு, ஒழுக்கு வெள்ளை, குருதிபேதி, சயம், வெறி, கபம் விழிநோய், இருமல், குன்மம், வாதப்பிணி, கிரந்தி, நீர்க்கோவை லாஞ்சனம், சிரங்கு, சொறி, சிறுநீரகப்பிணி ஆகியன தீரும் உடற்குப் புத்துணர்ச்சியும், மூளைக்கும் அறிவுக்கும் வலிமையும் உண்டு பண்ணும்.

## பாடாணங்கள் - 64

### ★★ 9. இரசத்தின் செயல்முறை யாவை?

**இரசம்** (சூதம்) கனிகளிலும், இலிங்கத்திலிருந்துப் எடுக்கப்படுகிறது. இது இல்லாத பொருள் உலகிலில்லை. இது வெள்ளை முதலிய நிறத்திலும் சூரிய ஒளியை வெளிப்புறத்தும் சிறிது நீல ஒளியை உட்புறத்தும் கொண்டு, தரையிலிட சிதறி உருண்டோடும் தன்மையுடனும் திகழும் - **இரசத்தினால்**

கிரந்தி, கண்ணோய், குன்மம், சூலை, பெரும்புண், குட்டம் வளிக்குறைவு, மேகம், புற்று, பசிக்கேடு, குருதிக்கேடு, சுக்கிலநட்டம், கிருமிகள், உள்ளும் புறமுமான பிணிகள், மூளை சக்தி குன்றல், முக அழகின்மை, நரம்பு பல வீனம், சருமநோய்கள் ஆகியன நீங்கும். மூப்பை ஒழித்து ஆயுளை நீடிக்கும். அட்டமாசித்தியும் கை கூடும். பொதுவாக உடலுக்கு நன்னிலையை உண்டாக்கி - பின்காத்து - அந்நிலைக்கு அழிவு தரும் பிணிகளை அழித்து வரும். (இதனைக் கடுமையாக சுத்தித்தும் - பத்திய முறை தவறாமலும் கையாளாவிடில் தீங்கு பயக்கும்.)

## ★★ 10. இலிங்கத்தின் செயல்முறை யாவை?

**இலிங்கம்** (வன்னி) கந்தகம் - இரசம் - வெடியுப்பு கூட்டித் தயாரிக்கப்படுகின்றது இது பாதரச உருக்காகிய நெருப்பு நிறம், கனம், மணமும் சுவையுமின்மை, நீரில் கரையாது, தீயில் புகைதல் ஆகிய தோற்றத்திலிருக்கும் - **இலிங்கத்தினால்** பேதி, சுரம், சந்நிபாதம், தீராப்புண், அதிமூத்திரம், காணாக்கடிவிடம், காசம், கரப்பான், சிரங்கு, கிரந்தி, குட்டம், சூலை, வாதம், சுரம், சன்னி, மேகம், வாந்தி, வயிற்றுப்புண், கழிச்சல் ஆகியன தீரும். (மண்பானைத் துண்டுபோல் சிவப்பு நிறத்திலுள்ள இரசச்செந்தூரத்தின் பண்புகளும் இலிங்கத்திற்குடையனவே யாகும்.)

## ★ 11. பூரத்தின் செயல்முறை யாவை?

**பூரம்** (இரசகற்பூரம்) இரசம், கந்தகம், கறியுப்புக் கூட்டி மினு மினுக்கும் வெண்ணிறக் கட்டிகளாகத் தயாரிக்கப் படுகிறது - **பூரத்தினால்** தொடை வாழை, சூலை, வாதரத்த நோய், காமாலை, பித்தம், சீதபேதி, நீர்க்கோவை, விரணசந்நி, ஆறாதபுண்கள், மேகம், கல்லீரல் வீக்கம், கிருமிநோய், பேதி, செரியாமை, மலக்கட்டு, சொறி, சிரங்கு, தலைவலி, குறிகளின் புற்று, மாந்தம், கொறுக்குப் புண் ஆகியன தீரும்.

## ★★ 12. வீரத்தின் செயல்முறை யாவை?

**வீரம்** (மீனாட்சி மைந்தன்) இயற்கையிலும், செயற்கையிலுமாக ஒளியின்றி சாக்கட்டித் துண்டுபோல் வெண்ணிறத்தில் கிடைக்கின்றது-**சவ்வீரத்தினால்** வாத நோய்கள், குறை நோய், குன்மம், கர்ப்பாசய வளர்ச்சி

அரையாப்பு, கொறுக்குப் புண், மேகம், கிருமிகள், குளிர்சுரம், வாந்திபேதி, விரணம், சருமநோய், பிளவை, கிரந்தி, மூலக்கட்டி, கபக்கட்டு, கண்டமாலை, புற்று ஆகியன நீங்கும். (இது கொடிய நஞ்சாகவே நன்கு சுத்தித்து அளவுப்படிக் கையாளவேண்டும்.)

## ★ 13. நிமிளையின் செயல்முறை யாவை?

**நிமிளை** (நீலாஞ்சனம்) நீலவெள்ளை நிறத்திலும், படை படையாகவும், நீரில் கரையாமலும், தீயில் உருகுதல் - புகைந்தோடல் - எளிதில் ஒடிதல் ஆகிய குணமுடனும் திகழும் - **நிமிளையினால்** சன்னி, சுரம், மேகம், சயம், தாகம், இரசதோடம், இரத்த பித்தம், கபம், கண்ணோய்கள், கீல்வாயு, குறியில்புண், விரணம், கழிச்சல் ஆகியன தீரும். உடலுக்கு அழகும், குளிர்ச்சியும், ஒளியும் நல்கும். (இதை குதிரைகளுக்குப் பலமூட்டக் கொடுப்பதுண்டு)

## ★★ 14. கந்தகத்தின் செயல்முறை யாவை?

**கந்தகம்** (பரை நாதம்) இயற்கையிலும் - செயற்கையிலும் வெள்ளை, மஞ்சள், சிவப்பு, கருப்பு நிறங்களிலும், பிறபொருட்களில் கலந்தும், ஒருவித மணமுடனும் கிட்டுகிறது - **கந்தகத்தினால்** குட்டம், சருமநோய்கள், புண், புரை, சொறி, சிரங்கு, குன்மவாயு, கண்ணோய், கவிசை, நஞ்சுகடி, நாட்பட்டமேகம், வாதசுரம், பேதி, கிராணி, கபம், கிருமிகள், சுவாசகாசம், இருமல், மூலம், குதநெகிழ்ச்சி, கண்ட மாலை, கீல்வாயு, மாரடைப்பு, பிரமை, வீக்கம் ஆகியன தீரும். உடல் குளிர்ந்து ஒளிரும்.

## ★★ 15. கௌரியின் செயல்முறை யாவை?

**கௌரி** (ஈஸ்வரி) இயற்கையிலும், தாளகத்தின் சத்தாகவும் எடுக்கப்பட்டு வெள்ளை, மஞ்சள், சிவப்பு நிறமாயிருக்கும்- **கௌரியினால்** வாதநோய், அலசம், சுரம், கபம், சன்னிபாதம். கடிவிஷம், சொறி, முத்தோடம், உதரம், சூலை, பித்தம், குளிர் ஆகியன தீரும். (இதனாலான மருந்தை ஆற வைத்தே பயன்படுத்த வேண்டும்.)

## ★★ 16. தாளகத்தின் செயல்முறை யாவை?

**தாளகம்** (அரிதாரம்) அயத்துடன் கலந்தும், சிவப்பாக -

மஞ்சளாக, கனமுடனும், தீயில் நீலநிறப் புகை எழுப்புவதாயும் பல வகையிலும் கிட்டுகிறது-தாளகத்தினால் குட்டம், குளிர் சுரம், கபம், சிறுநீர் நாளப்பறங்கிப் புண், அழுகண், மண்டை நோய், உடலில் குத்தல், வாதநோய், நாவு - கபோலப்பிணி, நமை, நாட்பட்டநஞ்சு, ஈளை, இருமல், இளைப்பு, கரப்பான், ஆராதபுண், குன்மம், முப்பிணிகள், பழஞ்சுரம் ஆகியன தீரும், உடலுக்கு வன்மை, அழகு, ஆயுளைத் தரும். (இதை உடலில் மயிரைக் கழிக்கவும் பயன்படுத்துவர்)

## ★ 17. மனோசிலையின் செயல்முறை யாவை?

**மனோசிலை** (நான்முகன்) மஞ்சள் நிறமுடன், இயற்கையிலும்; வெள்ளை - கந்தகம் கூட்டித் தயாரித்தும் கிட்டுகிறது - **மனோசிலையினால்** நளிர் சுரம், சருமகுட்டம், கழுத்தில் கொப்புளங்கள், இரைப்பு, சிலந்திவிடம், காசம், கபநோய், கண்ணோய், மூத்திரக் கிரிச்சரம், பவுத்திரம், வெண்குட்டம், மூலம், பத்துபடை ஆகியன நீங்கும். (இதோடு வெடியுப்புக் கூட்டியரைக்க தீயுண்டாகி வெடிக்கும்.)

## ★ 18. மிருதார்சிங்கியின் செயல்முறை யாவை?

**மிருதார்சிங்கி** உலோகச் சாயலுடன், பசு மஞ்சள்நிறத்தில் கடினமாகவும், மஞ்சட் சந்தனச் சுவையுடனும் - நச்சுப்புகையுடனும், நீரில் கரையாத் தன்மையுடனுமிருக்கும். **மிருதார்சிங்கியினால்** படை, கரப்பான், மகாவிரணம், கிரந்தி, ஈளை, இருமல், சயம், கிருமிகள், மேகப்புண், சருமநோய்கள் ஆகியன நீங்கும்.

## ★★ 19. வெள்ளையின் செயல்முறை யாவை?

**வெள்ளை** (சங்கு பாடாணம்) சீமைச் சுண்ணாம்பு போலும், நீரை இழுத்துக் கொள்வதாகவும், பூண்டு மணப் புகையுடனும், எளிதில் உடையத்தக்க சங்கு போலுமிருக்கும் -**வெண்பாடாணத்தினால்** கொள்ளைசுரம், விடக்கடி, தோடம், சன்னி, மூக்குப்புண், வாய்ப்புண், கிரந்தி, சருமநோய், யானைக்கால், சுரம், சுவாசகாசம், ஆகியன தீரும். பசியைத்தூண்டி, உடலைத்தேற்றி, நரம்புகட்கு வலுவூட்டி, சுவாச - சீரண - ஜனனேந்திரிய உறுப்புகளைத் தூண்டி நலமூட்டும். (அளவில் மிக்ககவனம் தேவை)

## காரசாரங்கள் - 25

### ★★ 20. காரங்களின் குணம் என்ன?

காரங்கள் என்பன நான்கு வகைப்படும் -இவற்றுள்

*(1)* **அப்பளக்காரம்** (உழமண்) உவர்மண் கரைசலை வடித்துக் காய்ச்சி உலர்த்துவதாகும். இது வெண் பழுப்பு நிறமாகும்-**அப்பளக் காரத்தினால்** வாதக்குடல் விருத்தி, சூலை, மகாவாதம், கபக்குற்றம், வயிற்றுப்புசம், வாதகுன்மம், கில்வீக்கம், சூதக வாயு, மலடு ஆகியன தீரும். (இது அப்பளம் பொரிவதற்காக இடப்படும்.)

*(2)* **சீனிக்காரம்** (படிகாரம்) காரச் சத்துள்ள களிமண்ணில் இருந்து பிரித்தெடுக்கப்படுகிறது. இது படிகம் போல் வெளுத்துக் கட்டியாக, புளிப்பு - இனிப்பு - துவர்ப்புச் சுவையுடனும், காற்றினால் இதில் தங்கும் நீர்சத்து, பொரிப்பதால் நீங்குவதாகவும் இருக்கும் - **சீனத்தினால்** பல்லரணை, யானைக்கால், கண்ணோய், குன்மம், வாயு, உட்சூடு, குடல்புண், குருதிப்பெருக்கு, பித்தம், பலவகைக் கழிச்சல், கக்குவான், கபம் விழுதல், தொண்டைப் புண், வெள்ளை, பெரும்பாடு, வாய்விரணம், வாந்தி, மூலக் கொதிப்பு ஆகியன தீரும். (இது மயிருக்கு நிறமூட்டும் மருந்திலும் சேருகிறது.)

*(3)* **வெங்காரம்:** (பொரிகாரம்) வற்றிய ஏரி மண்ணைக் கரைத்து வடித்துக் காய்ச்சியும், வைப்புச் சரக்காகவும் தயாராகிறது. இது தெளிவாய், வெள்ளையாய், சில கோணங்களுடன் மினுமினுத்தும், பொரித்தால் நீர்சுண்டி சிறு துவாரங்களுடனும் காணும் - **வெங்காரத்தினால்** தவளைச் சொறி, புடை, தினவு, குன்மம், குருதி மூலம், ஒழுக்குக் கிராணி, அஸ்மரி, பங்குவாதம், பல்நோய், கிரிச்சரம், கபாதிக்கம், பாம்பு - புழு நஞ்சு, சன்னிபாதம், இருமல், மாந்தம், சூதகக் கோளாறுகள், மந்தப் பிரசவம், புண், வாய்வேக்காடு, நீர்க்கோவை, வலி, சிரங்கு, கண்ணோய், நீரடைப்பு ஆகியன தீரும். (இதனால் பாய்ச்சை, சாணிப் புழு ஆகியன அழியும்).

### ★★ 21. சாரங்களின் குணம் என்ன?

சாரங்கள் என்பன ஐவகைப்படும். இவற்றுள்,

***(1) நவச்சாரம்:*** (சூளிகை) கற்சூலைகளிலும், வைப்பு முறையிலும் கிட்டுகிறது. இது, நார்நாராகவும், தூளாக்கக் கடினமாகவும், பழுப்பு வெள்ளையாக மணமின்றியும், கசப்பு - புளிப்பு - மூத்திர வெகுட்டலுடனும், கரையத் தக்கதாயும் இருக்கும்-**நவச்சாரத்தினால்** பெருவயிறு, கல்லடைப்பு, வயிற்று வலி, குடல்குத்தல், சருமத்தில் புலால் நாற்றம், முத்தோடம், கனவாயு, உப்புசம், கல்லீரல் வீக்கம், பீலிகம், நீர்க்கோவை, இரத்த காசம், சூதகக்கட்டு, கக்குவான், முறைசுரம், முகசன்னி, மாமிசக்கிரந்தி, பலவீனம், பல்நோய், மல-நீர்க்கட்டு ஆகியன தீரும்.

***(2) எவச்சாரம்:*** (மரவுப்பு) தாவரம் முதலியவற்றிலிருந்து பிரித்தும், வைப்பு முறையிலும் தயாராகிறது. இது யானைத்தந்தம் போலும், சாரணைக்கும் - கடின திராவகத்திற்கும் உறுதியாயிருக்கும்-**எவச்சாரத்தினால்** குய்யம் -கழுத்து-நாவு-கன்னம்-வாய் இவற்றின் நோய்கள், இருமல், இரைப்பு, ஆசன வாய்ப்புண், விஷகடி, கிரகணி, சோபை, குன்மம், சூலை, உடல் பருத்தல், உஷ்ண வாயு, பெருவயிறு, அலசம், கபப்பிணி, நீரடைப்பு, மண்ணீரல் வீக்கம், உண்ணாவு வளர்ச்சி, மூலம், சீத-குருதிக் கழிச்சல், கட்டிகள், நமை, புண் ஆகியன தீரும்.

***(3) சத்திச்சாரம்:*** (சுவர்ச்சிகை) வைப்பு முறையில் பனை வெட்டை போன்ற தோற்றத்தில் கிட்டும் - **சத்திச்சாரத்தினால்** மந்தாக்கினி, நீர் - மலக்கட்டு, பெருவயிறு, கபப்பீலிகம், சயம்,காசம், வாதம், கிரகணி ஆகியன தீரும்.

### ★★ 22. கறியுப்பு - இந்துப்புவின் குணம் என்ன?

***(1) கறியுப்பு :*** (சோற்றுப்பு) கடல் நீரைப் பாத்திகட்டி உறையச் செய்து எடுப்பதாகும். இது கரிப்புச்சுவை, மணமின்மையுடன், வெள்ளை - பழுப்பு நிறத்திலிருக்கும் - **கறியுப்பினால்** பித்தவாயு, கண்டக்கழலை, கபம், கல்லீரல் நோய், குன்மம், மந்தம், பொருமல், வாயு, நீரடைப்பு, பசிக்குறைவு, ஈளை, இருமல், வெறி, பெரும்பாடு, மூர்ச்சை, மேகம், விஷகடி, சருமநோய், குட்டம், வாநீரூறல், சொறி, தினவு, பல்நோய், விரைவாயு, செரியாமை,\பலவீனம், குடற்புழு, சூதகக்கட்டி, வீக்கம், வாய்ப்புண், மல நீர்க்கட்டு ஆகியன தீரும். (இதுவே நாம் அன்றாடம் உணவில் கூட்டியுண்பதாகும்)

***(2) இந்துப்பு :*** (மதியுப்பு) பூமியில் வெட்டியும், வைப்பு

முறையிலும் கிட்டுகிறது. இது மேலே கபில நிறமாயும், உள்ளே வெள்ளையாயும், கரிப்புச் சுவையுடனுமிருக்கும்-**இந்துப்பினால்** குன்மம், அலசம், அசிர்க்கரம், கபபித்தம், நரம்புக் கிரந்தி, திரிதோடம், மலக்கட்டு, கபா திக்கம், விஷமசுக்கிலம், கடுவன், சன்னியாசம், தாகம், சுவாசம், குருதி மூலம், வாதக் கடுப்பு, சூலை, விஷகடி, சுளுக்கு, வீக்கம், பசிக்குறைவு மகோதரம், வயிற்றுவலி - பொருமல், பொறிகள் - குறிகள் - கன்னம் - தொண்டை - தந்தமூலம் இவற்றின் பிணிகள் ஆகியன தீரும்.

## ★ 23. கல் - வெடி - வளையலுப்புவின் குணம் என்ன?

இவற்றுள், ***(1) கல்லுப்பு*** : (கடற் குருவி) கடலுக்குள் மலை போல் கட்டியாய் நிற்கும் - தீயிலிடப் பொன் போல் நின்று உருகியாடும்-**கல்லுப்புவினால்** சுவையின்மை, குத்தல், கபம், பித்தம், வாந்தி, உஷ்ணவாயு, குன்மம், வாதம், நாவறட்சி, மலக்கட்டு, சூலை, சூதக வாயு, நெஞ்செரிவு ஆகியன தீரும்.

***(2) வெடியுப்பு*** : (பொட்டிலுப்பு) வைப்பு முறையில் தயாராகிறது. இது, வெள்ளைக் கம்பிகளாகவும், நாவிலிடக் குளிர்ச்சியாயும், தீயில் பொரிவதாயுமிருக்கும்-**வெடியுப்பினால்** கர்ப்பக்கட்டி, சோபை, குன்மம், நீர்க்கிரிச்சரம், நீர்ச்சுருக்கு, சூதிகாவாதம், வாதசோனிதம், பெருவயிறு, ஈளை, கபதோடம், கண்ணோய், ஈரல் வீக்கம், கீல்வாயு, குருதிபித்தம், தொண்டைப்புண், பிரமேகம், சுவாச காசம், நினைவு மாறல், தாகம், மலடு ஆகியன தீரும். (இது, துப்பாக்கி மருந்து; நீர் - சாராயக்குளிர்ச்சி, நகைகளுக்கு மெருகு ஆகியவற்றில் பயன் படுத்துவர்)

***(3) வளையலுப்பு*** (மடவார்க்கரத்துப்பு) வளையல் செய்யக் காய்ச்சும் உழமண் உப்பிலிருந்து இயற்கையாகக் கிட்டுகிறது-**வளையலுப்பினால்** குடல்வாயு, வாதபித்தம், வயிற்றுவலி, இரைப்பு, கீல்ப்பிடிப்பு, சுரம், பீலிகம் ஆகியன தீரும்.

## ★ 24. சூடன்களின் குணம் என்ன?

இவற்றுள், ***(1) சூடன்*** (கருப்பூரம்) ஒருவகைச் செடியின் சமூலத்தின் தைலப் பதங்கமேயாகும். இது வெள்ளையாக, நொய் போன்ற அணுக்களுடன், விறுவிறுத்துக் குளிரும் சுவையுடன், தீயில் எரிவதாயும், காற்றில் கரைவதாயும் காணும் - **சூடத்தினால்** நீரேற்றம், சந்நிபாதம், கிருமி, இசிவு, வாத

அலசம், தீப்புண், கோரசுரம் வாந்தி, பித்தம், கபவாதம், இரைப்பு, கீல்வாயு, அதிசாரம், ஊழி, ஈளை, கக்கிருமல், சொப்பனக்கலிதம், மார்புத்துடிப்பு, சூதகசூலை, பிளவை காதுநோய், முகப்பிணி, குறியெரிவு, கபக்கட்டு, சுளுக்கு. சொட்டு நீர், பிரசவவெறி ஆகியன தீரும். போக இச்சை கூடும். கருவழியும் (இதனை இந்துக்கள் இறைவழிபாட்டுக்குப் பயன்படுத்துவர்)

***(2) பச்சைக்கர்ப்பூரம் :*** (விரலிப்பச்சை) கதலி வாழை யினுள்ளிருந்து கிட்டுகிறது. இது, வாசனை - குளிர்ச்சியுடனும், கைப்பு உப்புச் சுவையுடனும், ஆவியில் கரையுமாறும், ஒளிமிக்க வெள்ளை நிறத்திலுமிருக்கும்-**பச்சைக் கற்பூரத்தினால்** கப சுரம், பித்தம், மயக்கம், மூர்ச்சை, நாசிநோய், தாகம், நாமுள் முத்தோடங்கள், அரித்திரா மேகம், நமை, புண், குன்மம், வாத நோய், சீழ்ப்பிரமேகம், கீல்வலி, சுரம், சுவாசம், காசம், இரைப்பு, கண்ணோய், அரோசகம், வாந்தி, இரத்தபித்தம், நீரடைப்பு, உடலெரிவு, வியர்வை, சிரங்கு ஆகியன தீரும். உடல் குளிர்ந்து, விந்து பெருகி வலுவுண்டாகும். (இது வசியத்திற்காகும்-உணவிலும் கூட்டப்படும்)

## ★ 25. அம்பர் - கடல்நுரையின் குணம் என்ன?

இவற்றுள், **(1) அம்பர்** திமிங்கலத்தின் குடலினின்று இழியும் ஒருவகைக் கழிவுப் பொருளாகும். இது, வெள்ளை கருமை நிறத்தில் சுவையின்றி நறுமணத்துடனும், நெய்ப்புத் தன்மையுடனும், தீப்பிடிக்கத் தக்கதாயும், படல்படலாயு மிருக்கும் - **அம்பரினால்** தலைவலி, பாரிசவாயு, முகவாதம், காதுவலி, உணர்வின்மை, பிரமை, நாசிநோய், தமரகநோய், காமாலை, மகோதரம், மதுசன்னி, கரப்பான், அழிவிரணம், மண்ணீரல் - குண்டிக்காய்-இரைப்பை - தசை -கீல்களின் வலி, ஆண் குறித்தளர்ச்சி, கபம் ஆகியன தீரும். தாதுக்களுக்கு வலுவூட்டி, பொறி புலன்களைக் காத்து, விந்தைப் பெருக்கி, உடற்கு அழகும் ஆயுளும் நல்கும். (இது மணமூட்டியாகப் பயன்படுகிறது)

***(2) கடல் நுரை*** என்பது முதிர்ந்த கடல் முதலை கக்கும். கோழை வெய்யிலில் உலர்வதாகும். **இதனால்** கபம், விரணம், குன்மம், சுரம், வாநீரூறல், கண்ணோய், வறட்சி ஆகியன தீரும். (நிற்க, கடல்நுரை போன்றே, ஒருவகைக்கடல் மீனின் எலும்பாகிய **கணவாய் ஓடு** என்பதுவும் **2''x12'' பரப்பில்** ஒருபுறம் தட்டையாய் சுரசுரப்பாகவும், மற்றொரு புறம் சிறிது

கடினமாகவும் காணும், இதனால் சருமநோய், கண்ணோய், காதில்சீழ் ஆகியன தீரும். (இது பற்பொடிக்கும், பாத்திர சுத்தத்திற்கும் பயன்படும்.)

### ★ 26. பூநீறின் குணம் என்ன?

**பூநீறு** (பூவழலை) குறிப்பிட்ட இடங்களில், குறிப்பிட்ட மாதங்களில், பூமியினடியிலிருந்து பொங்கி பூவைப்போல் நிற்பதாகும் - **பூநீறினால்** குதிகால் வாதம், குன்மம் முதலிய பிணிகள் தீரும். மருந்துகளுக்கு வன்மையூட்டும். பல சரக்குகளைச் சுத்தி செய்யும். முப்பூ தயாரிக்கப்பயன்படும்.

### ★ 27. பவழம் - முத்துவின் குணம் என்ன?

நவமணிகளுள் **(1) பவழம்** (பிரவாளம்) ஒருவகைக் கடல் வாழ்ப் பூச்சிகளின் கழிவுப் பொருளாகும். இது சிவப்பாகவும், கொடியாகவும், உதிரிகளாகவும் கிடைக்கிறது-**பவழத்தினால்** சுரதோஷம், கபம், சன்னிபாதம், இருமல் அரோசகம், விஷகடி, தாதுநட்டம், தாகம், நாவின் சுரசுரப்பு, சயம், பித்தம், இரத்த காசம், நேத்திரகாசம், நரம்புத்தளர்ச்சி, மேகம், மலக்கட்டு, கபம், வாதம், வயிற்றுவலி, அரோசகம், குருதிமூலம், பவுத்திரம், இருமல், சத்திகுன்மம் ஆகியன தீரும். உடலுக்கு ஒளியும், வலுவுமூட்டி, காயகல்பமாகவும் பயன்படும். (இதை அணிமணிகளில் கூட்டுவர்)

**(2) முத்து** (ஆழிவித்து) கடல் சிப்பிகளின் வயிற்றிலிருந்து கிட்டுகிறது. இது பல வடிவு-நிறத்தில், ஒளிமிகுந்து காணும்-**முத்துவினால்** சோபை, என்புசுரம், சுவையின்மை, வலிமைகுன்றல், கண்ணோய், பித்தம், விஷம், கபம், மனச்சோர்வு, தாதுநட்டம், இசிவு, குருதிப்பெருக்கு, நீராமை குன்மம், சருமநோய், குட்டம், மேகம், நீரிழிவு, பாண்டு உட்சூடு, நீரடைப்பு, தாகம், இருமல், சன்னிபாதம், வாதம் விரணம், கட்டி, எரிவு, வெட்டை, கபம், சூலை ஆகியன நீங்கி உடல் வலிமை பெறும். (இதை நகைகளில் சேர்ப்பர்..

## உபரசங்கள் - 120

### ★★ 28. அப்பிரகத்தின் பண்பு என்ன?

**அப்பிரகம்** (காக்கைப் பொன்) பழுப்பு மஞ்சள் ஒளியுடன்

படல்படலாகவும், மெலிதாக வளையத்தக்கதாகவும் மலைகளில் கிட்டுகிறது-**அப்பிரகத்தினால்** பிரமேம், அதிமூத்திரம், மேகவெறி, நீரிழிவு, பீஜவாயு, சுரம், நமை, கண்ணோய், வாதநோய், மருந்தீடு, விஷகடி, சன்னி, இருமல், இரைப்பு, வலி, சருமகுட்டம், வாயு, நீரடைப்பு ஆகியன நீங்கும். தாதுவிருத்தியுண்டாகும் (இதனை பல்லக்கு, மணவறை முதலியவற்றை அலங்கரிக்கப் பயன்படுத்துவர்.)

### ★★ 29. அன்னபேதியின் பண்பு என்ன?

**அன்னபேதி** கந்தியும் - அயமும் கூட்டி, பசுமை நிறக்கட்டிகளாகச் செய்யப்படுகிறது. நீரில் கரையக்கூடிய இதன் மீது காற்றுப்பட வெண்மைத்தூளாகும் - **அன்னபேதியினால்** மூளைக்கட்டி, சூலை, அசீரணம், ஆமைக்கட்டி, சலோதரம் சூதகக்கட்டு, பாண்டு. சுரக்கட்டி, கருப்பப்பிரமேகம், முறைசுரம், கக்கிருமல், வயிற்றுப் புழு, அக்கி, மேகவிரணம், சீழ்மூலம், குதம் தள்ளல், கருப்பைப்புண், குருதிக்கேடு, சோபை காமாலை, எழுஞாயிறு, குதகச்சிக்கல், நாற்றம் ஆகியன நீங்கும், உடல் வலுப்பெறும். (இது அன்னத்தை நீராய்க்கரைத்துவிடும்)

### ★ 30. கல்நாரின் பண்பு என்ன?

**கல்நார்** பூமியில் வெட்டி எடுக்கப்படுகிறது. இது கல்லை போலும், நசுக்கினால் நார்நாராகவும், பழுப்பு வெள்ளை நிறத்திலும், நின்று எரியக்கூடியதாயும் காணும்-**கல்நாரினால்** பித்தகாசம், வாத நோய், குறியெரிவு, பித்தவாந்தி, நீரடைப்பு, விந்து நட்டம், அசீரணம், பித்த குடல் வாயு, பித்ததாகம், பல்நோய், ஆகியன நீங்கும், காயசித்திக்கு உதவும்.

### ★ 31. கற்சுண்ணத்தின் பண்பு என்ன?

**கற்சுண்ணம்** காலவாயிலிலிட்டு, வெண்மையாய், நீற்றி எடுக்கப்படுகிறது-**கற்சுண்ணத்தினால்** பேதி, வாத நீர்ச்சுருக்கு நஞ்சுகள், இரத்தப்பெருக்கு, தீப்புண், சிரங்கு, நமைச்சல் அழுகியவிரணம், கண்நோய், யானைக்கால், தலை நோய், சன்னி, நோயின் வேதனை, கபம், வாயு, செரியாமை, நெய்ச்சிக்கு, கல்லடைப்பு, வாந்தி, புகையிருமல், வயிற்று வலி, நீர்ச்சுருக்கு, கடிவிஷம், குருதிப்பெருக்கு, வெள்ளை, காலாணி, பெரும்பாடு, மரு ஆகியன நீங்கும். பல் உறுதியும், எலும்பு வலுவும், விந்துப் பெருக்கமும் ஏற்படும். (இது தாம்பூலத்துடன் சாதாரணமாகப் பயன்படுத்தப்படும்.)

## ★ 32. காடிக்காரம்-காவி-நிமிளையின் பண்பு என்ன?

இவற்றுள் (1) **காடிக்காரம்** வெள்ளியுடன் தீநீர் - புகை நீர் கூட்டித் தயாரிக்கப்படுகிறது-**காடிக்காரத்தினால்** பேதி, கண்ணோய், பிரமேகம், படர்தாமரை, அக்கி, கரப்பான், புண், விஷகடி, தொண்டை நோய், பாரிசவாயு முதலிய வாதம், பவுத்திரம், கொறுக்கு, குருதிப்பெருக்கு, குடல்புண், துர்மாமிசம், பீனிசம், துத்திநோய் ஆகியன நீங்கும்.

(2) **காவிக்கல்** (பூங்காவி) சிவப்பு நிறத்தில் பூமியிலிருந்து வெட்டி எடுக்கப்படுகிறது-**காவிக்ககல்லினால்** கண்ணோய், பல் நோய், மேகம், அக்கி, வாந்தி, சீத - இரத்தபேதி, பெரும்பாடு, இரத்த பித்தம், புண், சிரங்கு ஆகியன நீங்கும். (இதனை அழகு - குளிர்ச்சி - வழுவழுப்பு - பூச்சி சேராதிருத்தல் இதற்கென சுவர்களில் பூசுவதுண்டு.)

(3) **நிமிளை** தங்கம் முதலிய உலோகங்களை ஒட்டிய, ஒளிரும் நிறங்களையுடைய களிம்பு ஆகும். - **நிமிளையினால்** குன்மம், குலை எரிவு, பேதி, கிரகணி, சருமநோய், உதடு - முலைக்காம்பு வெடிப்புகள், மிகுபித்தம், சன்னி, கண்ணோய், கட்டி, கில்வாயு, சயம் ஆகியன நீங்கும், தாது வெப்பு நீங்கி விந்து ஊறி, உடல் வலுக்கும்.

## ★★ 33. சிலாசத்துக்களின் பண்பு என்ன?

இவற்றுள் (1) **கருப்பூரச்சிலாசத்து** வெண்ணிறமுடைய படிக ஒளியுடன், சூடன் மணமுள்ள கற்பலகைகளாக மலைகளில் வெட்டி எடுக்கப்படுகின்றது - **இதனால்,** கல்லடைப்பு, சீழ்மேகம், அதிதூலம், விப்புருதி, நீர்க்கிரிச்சரம், சோணிதவாதம், விந்துநட்டம், பிரமேகம், உள் விரணம், இரத்த பித்தம், கபநோய், கக்கிருமல், அதிசாரம், இரத்தக் கொதிப்பு, மேலெரிவு, பித்தவெட்டை, நீர்க்கடுப்பு, கல்லடைப்பு, உஷ்ண வயிற்றுவலி, சுரம், உஷ்ணபேதி, ஆசனக்கடுப்பு, காங்கை ஆகியன நீங்கும்.

(2) **கோமூத்திரசிலாசத்து** பசு மூத்திரத்தின் மணம், நிறமுடன், மெழுகைப் போல் மிருதுவாக உறைந்த நிலையில் கிட்டுகிறது-**இதனால்** மூத்திர நாள எரிவு, கிரிச்சரம், நீர் நாளப்புண், பிரமேகம், நாவில்சூடு, இரத்தக் கொதிப்பு, காசம், சுவாசம், கபம், மலடு, வாதம், நஞ்சுகள், அடிப்பட்ட புண் - வீக்கம், சூதகவலி, கீல்நோய், ஈரல்நோய், காதுநோய்,

கண்ணோய். சீத-ரத்தபேதி, எலும்பு முறிவு ஆகியன தீரும். இருதயபலம், தாது விருத்தி, நரம்புவன்மை, உடல் குளிர்ச்சி இவை விளையும்.

### ★★ 34. நண்டுக்கல்லின் பண்பு என்ன?

**நண்டுக்கல்** கடற்கரையில் கிட்டுகிறது. இது சிறிய தகடு போல், பார்வைக்கு உலர்ந்த களிமண் கட்டி மீது நண்டின் ஓடு ஒட்டிக் கொண்டிருப்பது போலிருக்கும்-கல் **நண்டினால்** நீரருகல், கல்-தசை-நீரடைப்பு, நாட்பட்ட பெருவயிறு, வெள்ளை, நீர்ப் பிரமேகம், கபம், நீர்சுருங்கிப் புண்ணாய் நோதல், சன்னி, நரம்பிசிவு, வாயு, சுரம், வாதம், குட்டம், துர்நீர், நாய்-நரி விஷம், வெறி, வலிப்பு, கண்ணோய், மலடு, சீக்கிரக்கலிதம் ஆகியன நீங்கும்.

### ★★ 35. துருசுகளின் பண்பு என்ன?

இவற்றுள் ***(1) மயில் துத்தம்*** (நீலத்துருசு) இயற்கையிலும் செம்புடன் கந்தகத் திராவகம் கூட்டியும் தயாரிக்கப்படுகிறது. இது நீலநிறத்தில், வெகுட்டும் துவர்ப்புடன் கட்டிகளாயிருக்கும் **-இதனால்,** விரணம், காமிய விரணம், கண்ணோய், திரிதோடம், சுரம், வாய்ப்பிணி, நாட்பட்ட பேதி, கக்கிருமல் குரல்வளை துத்தி நோய், சரும நோய், குன்மம், காதுப்புண் - சீழ், பித்தம், வாயு, வலி, வெறி, சன்னி, ஆகியன நீங்கும். வாந்தி - பேதி - ஒளிக் காந்தி இவை விளையும்.

***(2) பால்துத்தம்*** (மடல் துத்தம்) வைப்பு முறையாலானது. இது மணமின்றி வெள்ளைத் தகடுகளாகவும், காற்றில் தூளாகி நீரில் கரைவதாகவும் இருக்கும். **இதனால்** குறிப்புண், மூலப்புண், தலையின் வாதம், படர்கரப்பான், கண்காசம், இமையின் பில்லம், வெறி, வலி, சன்னி, கக்கிருமல், பேதி, பெரும்பாடு, முறைசுரம், சுவாசகாசம், சயத்தில் வியர்வை, இசிவு, ஆசனத்தின் மருள், பலவீனம் ஆகியன நீங்கும்.

## உயிரினங்கள்

### ★ 36. அட்டையின் குணம் என்ன?

***அட்டை*** நீரடிகளில் கிட்டும். இது சுமார் நாலு அங்குல நீளத்தில், பொன் முதலிய நிறத்திலும்; சிறிது கூர்மையான

முனைகளுடன், புறத்தோலில் ஆறு நீளக்கோடுகளுடன் குறுக்குச் சுருக்கங்களையும் பெற்றிருக்கும். அன்னம் நீரைப் பிரித்துப் பாலைப் பருகுவது போல் அட்டையானது விட நீரைப்பருகி குருதியைச் சுத்தி செய்யும். எனவே, **அட்டை விடுதலுக்குரிய** முறைகளைக்கடைப்பிடித்து. நோவுற்ற இடங்களில் அட்டையை விட முறையே வாந்தி-தலைவலி - வயிற்றுவலி - கக்கிருமல் - கீல் வீக்கம் - ஈரல் வீக்கம் கண்ணீர் சொரிதல், மார்புவலி முதலிய பல பிணிகட்குக் காரணமான கெட்ட குருதியை உறிஞ்சி, சுத்தமாக்கி வேதனையை நீக்கி விடும்.

## ★ 37. ஆமையின் குணம் என்ன?

**ஆமை** (கூர்மம்)யில் வெள்ளையாக, நீரில் வாழுவதின் ஓடு, கறி, கொழுப்பு, தோல், முட்டை ஆகியன பயன்படும். **ஆமையினால்** குழந்தைகளின் கணம்-மாந்தம்-மாந்த வாந்தி. மாந்த சுரம். பசியின்மை, உட்சூடு, அரோசகம், பித்தம், கபம் கர்ப்பமேகம், சீத-இரத்தக் கழிச்சல், கண்டமாலை, பாண்டு குழிப்புண், சிரங்கு, கக்குவான், வலி, புப்புசப்பிணி, கடிவிஷம் ஆகியன நீங்கும். தாதுவலுத்து, பசி-வீரியம் - அழகு ஏற்படும்

## ★ 38. இந்திர கோபத்தின் குணம் என்ன?

**இந்திர கோபப்பூச்சி** (ஈயல்) மலைக்காலத்தில் நற்சிவப்ப நிறத்திலும், வழவழப்புடனும், அரை அங்குல நீளத்தில் நீண்ட அரை வட்ட வடிவிலும், செம்மண் நிலங்களில் கிடைக்கும் **இந்திர கோபத்தினால்** கருமேகம், கபநோய், சுக்கிலநட்டம் முகவாதம், பாரிசவாயு, சூலை, கீல் வீக்கம், ஆண்குறிச்சோர்வு ஆகியன தீரும். விந்து ஊறி, நரம்பு வலுத்து, நரைதிரை மாற காயசித்தியாகும். (இதனை கக்கிருமலின் தற்காப்பிற்கென வழங்குவர்.) விந்துவில் உயிரணுக்களை உண்டுபண்ணும்.

## ★ 39. உடும்புவின் குணம் என்ன?

**உடும்புவின்** இறைச்சியினால் மூலம், வெள்ளை காதுநோய், வெட்டை, தலைநோய், வீக்கம், மேகம், புண் குட்டம், கபம், சீத-இரத்தக் கடுப்பு, குடல்வாதம், பேதி வாத பித்தம், தோல் வறட்சி, கிரகணி, மூலவாயு, சூதகவாயு பலவீனம், குருதிப் பெருக்கு ஆகியன நீங்கும். (இதனை உடல் வலுவிற்கென சமைத்துண்பதுண்டு).

### ★ 40. கஸ்தூரியின் குணம் என்ன?

**கஸ்தூரி** (மிருகநாபி) கஸ்தூரிமானின் ஆண்குறி மலருக்கும் மேல் தோலுக்குமிடையில் உண்டாகும்கிட்டுதற்கரிதானதொரு கழிவுப்பொருளாகும். இது நொய்ப்பு, மிருது தன்மையுடனும், கரும்பழுப்பு நிறத்திலும், மிக்க மணத்துடனும் இருக்கும், கஸ்தூரியினால் கபம், இரைப்பு, பிதற்றல், வலிப்பு, சுரத்தினாலான சோர்வு, சுவாசகாசம், தோடசன்னிபாதம், பித்தசுரம், தலைவலி, வாந்தி, நீர்க்கோவை, மேகருன்மம், மூலவிப்புருதி, வாதப்பிடிப்பு, இருமல் ஆகியன தீரும். நரம்பு மண்டலத்தைத் தூண்டி, சகல உறுப்புகளுக்கும் சுறுசுறுப்பூட்டி, குருதி ஓட்டத்தை ஒழுங்கு படுத்தி, உடலுக்கு வலுவூட்டும் (இதனை, வசதியுடையோர் தாம்பூலத்துடன் உடல்வன்மைக் கென உட்கொள்வர்.)

### ★★ 41. கிளிஞ்சல் - நத்தை - சிப்பியின் குணம் என்ன?

இவற்றுள் **(1) கிளிஞ்சல்** (ஏரல்) கடற்கரைகளில் கிட்டுகிறது. இதனால்-மதுமேகம், வாதம், பித்தம், கடுப்பு, உப்புசம், இருமல், மயக்க சன்னி, பிரமை, சுரம், சத்தி, சயம், மூலம், நீரடைப்பு, நீரேற்றம், மயக்கம், கால் வெடிப்பு ஆகியன நீங்கும்.

**(2) நத்தை** (ஊமச்சி) குளங்களில் கிட்டுகிறது-**இதனால்** மூலமுளை, மலக்குடல் நோய், மூலக்கடுப்பு, சீத - குருதி பேதி, சுக்கில நட்டம் ஆகியன தீரும்.

**(3) முத்துச் சிப்பி** கடலினின்று கிட்டுகிறது-**இதனால்** கபக்கட்டு, சூலை, காசம், சயம், மேகக்கட்டி, கபப்பிரகோபம் ஆகியன நீங்கும். இருதயத்திற்கு வலுவூட்டும். (இது முத்து பற்பத்திற்கிணையாக செயல்புரியும்.)

### ★★ 42. பலகறை - சங்கு - நண்டின் குணம் என்ன?

இவற்றுள் **(1) பலகறை** (சோகி) வாதுமையளவிலும். வெள்ளை முதலிய பல நிறத்திலும், கடலினின்றும் கிட்டுகிறது. **இதனால்** அலசம், தாகம், கிராணி, நச்சுசுரம், விழிநோய், வாததொந்தம், பலவிதக் குத்தல், சயம், கபவாதம், அசீரணம், ஈரல் வீக்கம், காமாலை, சுவாச காசம், இருமல், மேகச்சூடு, புண், காயம், பாண்டு, வயிற்று வலி, வாந்தி, சோகை, சூலை, குமட்டல், முத்தோடம், வெறி, கடிவிஷம் ஆகியன நீங்கும். உடலில் நீங்கிய வன்மை திரும்பி நலன்கிட்டும்.

(2) சங்கு (இடம்புரி) வெண்ணிறத்தில் கடலில் கிட்டுகிறது-இதனால், இசிவு, இரத்தபித்தம், கண்ணோய், வாதமிகுதி, முளைக்கட்டி, நடுக்கல், பித்தம், சுரம், கபநோய், மூர்ச்சை, தும்மல், குன்மம், கழலை, வாயு, சலோதரம், நெஞ்சுவலி, நீர்ச்சுருக்கு, வெள்ளை, மூலம், உட்சூடு, அண்ணாவுத்துரு, பீனிசம், சயம், பாண்டு, மயிரின் நரை - வெடிப்பு - உதிரல், பரு, சூதகக்கோளாறு ஆகியன தீரும். உடற்கு வலிவூட்டி மிக்க அழகூட்டும்.

(3) நண்டு (அலவன்) நீர்நிலையில் பலவகையில் கிட்டுகின்றதெனினும், இதில் வெள்ளை நிறப் பால் நண்டே பயன்தரும். இதனால் வயிற்றுவலி, கரப்பான், வாதகோபம், சொறி, குருதிக் கழிச்சல், குடைச்சல், கபம், குடலிரைச்சல், சுரம், நீர்க்கோவை, உடலெரிவு - சூடு, கக்குவான், சயம், வாந்தி, தாகம், விக்கல், தாதுநட்டம் ஆகியன நீங்கும். (இதைச் சிலர் உண்ணுவதுண்டு)

## ★ 43. புனுகு - கோரோசனை-தேனின் குணம் என்ன?

இவற்றுள் (1) புனுகு (மற்றும், சவ்வாது) ஒருவிதப் பூனையின் ஆசனத்தினருகிலுள்ள புனுகுச்சட்டம் எனப்படும். பைகளினின்றும் இழியும் பிசுபிசுப்பான, மணமிக்கதொரு பொருளாகும்-இதனால், சுரம், தலைவலி, மூக்கடைப்பு, மார்புநோய், பரவிக்குத்தும் வாயு, விடம், பித்த கபம், சொறி, நமை, வியர்வை, பரு, துர்நாற்றம், சன்னி, நரம்புத் தளர்ச்சி ஆகியன தீரும். ஒளி, அழகு, நீண்ட ஆயுள் இவை விளையும். (இது மணமூட்டிகளில் சேர்க்கப்படும்.)

(2) கோரோசனை (ரோசனம்) பசு - ஆடு இவற்றின் பித்துவாகும் - இதனால், பித்தமிகுதி, கிரந்தி, தமரகநோய், மாந்தம், அம்மை, செங்கிரந்தி, நீர்க்கோவை, கண்ணிருள், தொண்டை நோய், வெப்பம், சன்னி, மயக்கம், கபம் ஆகியன நீங்கும். பொறி - புலன் சக்திகூடி, விந்து ஊறி, உடல் வலுக்கும்.

(3) தேன் தேனீக்களினால் சேகரிக்கப்படும் பூக்களின் அமுதமாகும். இது, தெளிவான இளமஞ்சள் நிறத்திலும், இனிப்பாகவும், ஒருவித மணமுடனுமிருக்கும் - இதனால் முத்தோடப் பிணிகள், காசம், சுவாசம், விக்கல், சுரம், கடுப்பு, மலக்கட்டு, அரோசகம், உளமாந்தை, பசியின்மை, சயம், கண்ணோய், கரப்பான், பேதி, புழுவெட்டு, அதிதூலம், உடல் ஒளி குன்றல் ஆகியன தீரும். உடல் வலுத்து ஆயுள் நீடிக்கும். (இது துணை மருந்தாகவும் - காயகல்பமாகவும் பயன்படும்).

**★★ 44. மான்கொம்பு - மயிலிறகின் குணம் என்ன?**

இவற்றுள் *(1)* **மான்கொம்பு** (சிருங்கி)வினால் - கைகால்எரிவு, அஸ்திமேகம், முத்தோடம், மிகுதாகம், விழிநோய், மார்புவலி, பீனிசம், சுளுக்கு, காயம், தோல் வெடிப்பு, தலைவலி - நோய், விதைவீக்கம், சரும நோயின் நமை, நெறிக்கட்டி, கீல்வாயு, ருதுவாகாதிருத்தல், கண்ணோய், சயம், இருமல், சிறுநீராகப் பிணிகள், காங்கை, கணை, ஈளை ஆகியன தீரும்.

*(1)* **மயிலிறகினால்** விக்கல், மூச்சடைப்பு, வாயில் ஈரமின்மை, பிரமிப்பு, முதுகுவலி, பக்கஇசிவு, தொப்பூள் காங்கையின் வியர்வை, நடக்கவியலாமை, சுவைமாறல், வாய் திறக்கவொட்டாமை, மேக சூலை, வெட்டை, கபம் கைநாடிபிறழல், கக்கிருமல், வாந்தி ஆகியன தீரும்.

**★★ 45. பூநாகம்-முசுறுமுட்டை-ஓணானின் குணம் என்ன?**

இவற்றுள் *(1)* **பூநாகம்** (மண்புழு) சிவப்பு நிறமுடன் சதுப்பு நிலங்களில் கிட்டும்-இதனால், தாகம், சன்னிபாத சுரம், ஒக்காளம், கபநோய், தொடை வாதம், கல்லடைப்பு, நீரடைப்பு, அண்டவாயு, குறிப்புண், இருமல், தொண்டை வலி, மூட்டுப்பிசகு, இரத்தக்கட்டு, ஆண்குறித் தளர்ச்சி, சயசுரம், பிரசவ வேதனை ஆகியன தீரும். (இதில் செம்புச்சத்து உள்ளது.)

*(2)* **முசுறுமுட்டை** இலுப்பை, மா மரங்களில் வாழும் சிவப்பு எறும்புப் புற்றுகளிலிருந்து கிட்டுகிறது - **இதனால்.** ஐவிதவலி, மகாவாதம், சந்நி, மந்தம், நீர்க்கபநோய், இசிவு சுரம், மூர்ச்சை, செவிப்பிணி ஆகியன தீரும்.

*(3)* **ஓணான்** (மற்றும் ஓந்தி) வகையில் பச்சை ஓந்தியே மிகப் பயன்தரும். இதனால் கருங்கிரந்தி, இளம்பிள்ளைவாதம் இசிவு, சன்னி, வலி, வாதநோய் ஆகியன தீரும்.

**★ 46. பால் - சிறுநீர் - சாணத்தின் குணம் என்ன?**

இவற்றுள் *(1)* **பால்** (அமுதம்) வகையில் *(1)* **ஆவின் பாலினால்** பழைய சுரம், புண், சூலை, பிரமேகம், பலவீனம் மெலிவு, சயம், தாதுநட்டம், இரத்தபித்தம், முத்தோடம் முயல்வலி, பித்தம், உட்சூடு, ஆகியன தீரும். உடல் நலமுறுட *(2)* **ஆட்டுப்பாலினால்** வாதபித்த தொந்தம், சுவாசகாசம் சீதக்கழிச்சல், கபதோடம், விரணம், வாதவீக்கம், பசியின்மை

பித்தகபம், வயிற்றுப்புசம், மேல்மூச்சு ஆகியன தீரும், **(3) கழுதைப்பாலினால்** வாதநோய், கரப்பான, புண், தழுதளை ரோகம், உள்விப்புருதிக்கட்டி, ஒட்டுக்கிரந்தி, சிழ்ப்பிரமேகம், சொறிசிரங்கு, கட்டி, சித்தப்பிரமை, பித்தம், கபம், கருங்கிரந்தி ஆகியன தீரும். **(4) முலைப்பாலினால்** தோடம், சன்னி பாதம், வெப்பம், முத்தோடம், பித்தகபசுரம், வாதக்கிரிச்சரம், நாவறட்சி, கண்ணோய், பலவீனம் ஆகியன தீரும்.

**(2) சிறுநீர்** (அமுரி) எடுப்பதற்கு சிற்றின்பம் அறியாத சிறுவர்களே தேவை. **இவர்களது நீரினால்** காணாக் கடிவிஷம், சோபை, வாதம், இருமல், சுவாசம், அசிர்க்கரம், மேகநீர், கிரந்திப் புண், சுரம், அபஸ்மாரம், சந்நியாசம், முகம் - கண் காதின் - கட்டிகள், சொறி ஆகியன நீங்கும். காயசித்தியாகும்.

**(3) சாணம்** வகையில் **(1) பசுஞ்சாணத்தினால்** அடிபட்ட வீக்கம், ஒழுகும் குருதி, கிருமிநோய். கபசுரம், மிகு தாகம் ஆகியன தீரும். தேக சுத்தியாகும். **(2) எருமைச்சாணத்தினால்** மிகு கழிச்சல், வயிற்றுப் பொருமல், குருதி வாந்தி, பெரும்பாடு, காமாலை, புண் ஆகியன தீரும். **(3) வெள்ளாட்டுப் புழுக்கையினால்** மகோதரமும், வாத நோயும் நீங்கும்.

## ★ 47. முட்டை - அரக்கு-மெழுகுவின் குணம் என்ன?

இவற்றுள் **(1) கோழி முட்டை** (சிற்றண்டம்)யினால் வாத தோடம், விரணம், கபப்பிணி, அஸ்திசுரம், மூர்ச்சை, பாடாண நஞ்சு,கண்ணோய், நாவுவாதம், மாந்தம், வலிப்பு, நீர்க்கோவை, சன்னி, சூலை ஆகியன தீரும். உடல் வலுக்கும்.

**(2) கொம்பரக்கு** மரக் கிளைகளில் சிறு பூச்சிகள் கட்டும் சிவப்பு நிறக் கூடு ஆகும்-**இதனால்**, குட்டம், அசிர்க்கரம், இரத்த பித்தம், குன்மம், சுவாசம், எலும்புருக்கி, அடிபட்ட புண், உடல்வலி, முடம், சன்னிபாத சுரம், கபம், பெரும்பாடு, குருதி - சீதபேதி, கண்டமாலை, சயக்கட்டி, குருதிக்கேடு, ஈறு வீக்கம், உடல் கடுப்பு, தலைவலி ஆகியன தீரும். மார்புக்கு வலிவு தரும் (மெழுகு-சாயம்-முத்திரை-நகை செய்தல் இதற்குப் பயன்படும்)

**(3) தேன் மெழுகு** தேனடை கட்ட ஈக்கள் கழிக்கக் கூடிய, தேன் மணமுடன் மஞ்சள் நிறமுள்ள பொருளாகும். **இதனால்** பாரிசவாயு, வீக்கம், கபநோய், விந்து நட்டம், வாத கோபம், குட்டம், தேள்விஷம், விரணம், மாறல் சுரம், கண்ணோய், பித்த வெடிப்பு, விரைவீக்கம், குறித்தளர்ச்சி,

காயம், இசிவு, சன்னி பாதம், பைசாசம், நரித்தலை வாதம் கரும்புள்ளி, நீர்க்கோவை, உடல்வலி, தலைவலி ஆகியன தீரும் (இது வசியத்திற்கு ஆகும்)

## மூலிகைகள்

### ★★ 48. திரிகடுகுவின் பண்பு என்ன?

இவற்றுள் **(1) சுக்கு;** (வேர்க்கொம்பு) உலர்ந்த இஞ்சிக் கிழங்கேயாகும்-**இதனால்,** வெப்பம், செரியாமை, மார் பெரிச்சல், புளியேப்பம், கீழ் வாய் நோய், இருமல், இரைப்பு, கழிச்சல், நீரேற்றம், குன்மம், உப்புசம், காதுவலி, முகநோய், குலைவலி, தலைநோய், பாண்டு, ஐயசுரம், வயிற்றுக்குத்தல், கிட்டப்பார்வை, தொண்டை வலி, பசியின்மை, சன்னிபாதம், மந்தம், மேல்மூச்சு, நெஞ்சுவலி, பல்வலி, காதடைப்பு, வாந்தி, மூட்டு வீக்கம் ஆகியன தீரும்.

**(2) மிளகு:** (மலையாளி) ஒருவகைக் கொடியின் பழமாகும். இது சிறிய அளவில் சுருங்கிக் கருத்து மிகு காரமுடனிருக்கும்- **இதனால்** கபம், பாண்டு, குளிர் சுரம், கழிச்சல், குன்மம். வாயு, சுவையின்மை, வெறி, மூலம், சன்னி, பிரமேகம், இருமல், அபஸ்மாரம், பங்குவாதம், குய்யரோகம், சோணிதவாதம், காமாலை, களநோய், காதுவலி, இரத்தகுன்மம், இரைப்பு, வீக்கம், முத்தோடப்பிணி, அடித்தள்ளல், வாந்தி, பேதி, பல்நோய், புழுவெட்டு, செரியாமை, பசியின்மை ஆகியன தீரும். உணவுகளில் கூட்டப்பெறும்.

**(3) திப்பிலி :** (ஆதி மருந்து) ஒருவகைக் கொடியின் மிகு காரமுள்ள கரு நிறமாயுள்ள காயாகும்- **இதனால்,** இருமல், இரைப்பு, குன்மம் கபப்பிணி, ஈளை, பாண்டு, சுவையின்மை, மயக்கம், பொருமல், தலைவுலி, மூர்ச்சை, நீரேற்றம், ஈரல் கட்டி, கழிச்சல், பெருவயிறு, முப்பிணி, குளிர்சுரம், மேகக்கட்டி, விந்துநீர்த்தல், புழுக்கள் நோய், கண்-காது-மூக்கு-தெண்டை நோய், உப்புசம், வெள்ளை, பெரும்பாடு, முப்பிணி, வாயு, கிறுகிறுப்பு, நாவறட்சி, மேகம் ஆகியன தீரும். ஆண்மை பெருகும். இது, கபநோய்களின் வைரியாகும்.

## ★★ 49. திரிபலையின் பண்பு என்ன?

இவற்றுள் *(1)* **கடுக்காய்** (ரோகினி) முட்டை வடிவிலும் இருபுறமும் சப்பையாக, மஞ்சள், சிவப்பு, கருப்பு முதலிய நிறத்திலும், பல அளவிலும், வகையிலுமிருக்கும்- **இதனால்,** தமரக நோய், குருதியழல், மிகு நீர், சுவையின்மை, கண்ணோய், இருமல், வயிற்று நோய்கள், வாதப் பிணிகள், மேகநோய்கள், சோகை, காமாலை, பாண்டு, சருமநோய்கள், அசிரணம், அழலை, ஆண்மையின்மை, குன்மம், குட்டம், புழு நோய்கள், கைகாலெரிவு, தொண்டைக்கட்டு, இரைப்பு, நாவறட்சி, வயிற்றுக் கோளாறுகள், வாயு, விக்கல், வாந்தி, சயம், சுரம், சிறுநீரக நோய்கள், மூர்ச்சை, மூலம், ஒளிகுன்றல், நீர்மலக் கட்டு, தலை நோய்கள், உதட்டு நோய், தோஷம், பவுந்திரம் அரோசகம், பல்நோய், நாவின்நோய்கள், பெருவயிறு, உட்சூடு ஆகியன தீரும். (இது தாயினும் சிறந்ததாகவும், முத்தோடக் குற்றங்களையும் நீக்கவல்லதாகவும், காயகல்ப மருந்தாகவும் பயன்படும் சஞ்சீவியாகும்.)

*(2)* **தான்றிக்காய்** (திறிலிங்கம்) சிறு நெல்லியளவில் உருண்டையாக இருக்கும். இதன் இலை, பழம், விதை ஆகியன பயன்படும். **இதனால்,** வெள்ளை, ஆண்குறிப் புண், குருதியழல், சிலந்தி நஞ்சு, வளி-தீ குற்றங்களினாலான பிணிகள், பல் வலி, இரைப்பு, தொண்டைக்கட்டு, கபம், மேல்மூச்சு, இருமல், புண்கள் ஆகியன தீரும். கண்ணொளி கூடி, உடல் அழகுடன் ஒளிரும்.

*(3)* **நெல்லிக்காய்** (நெல்லி முள்ளி) பச்சையாகவும், உலர்ந்தபின் சிறிது சுருங்கி கருப்பாகவும் இருக்கும். இதன் சமூலமும் பயன்படும்-**இதனால்** கபநோய், பீனிசம், வெறி, வாநீரூறல், வாந்தி, மயக்கம், மலக்கட்டு, பிரமேகம், கிறுகிறுப்பு, சுவையின்மை, பத்தியக்குற்றம், மகோதரம், சூலை, மேகச்சூடு, பாண்டு, மூலம், பெரும்பாடு, சோபை, வாயு, குறிப்புண், தாகம், குன்மம், உடலெரிவு, சீதக்கழிச்சல், அழற்சி, பித்தம் ஆகியன தீரும். காயசித்தியாகும்.

## ★ 50. அறுகு - அவுரி - அலரியின் பண்பு என்ன?

இவற்றுள் *(1)* **அறுகின்** (மூதண்டம்) புல்லும் வேரும் பயன்படும்-**இதனால்** வறட்சி, நீர்க்கட்டு, முக்குற்றக்கேடு, கண்ணோய், ஈளை, கண்புகைச்சல், மருந்துகளின் வெப்பம்,

தலைநோய், தூக்கமின்மை, குருதியழல் ஆகியன நீங்கும். உடல் மேனிபெறும். (இதுவே உலகின் முதல் மூலிகையாகும்)

**(2) அவுரி** (நீலி)யின் வேரும், இலையும் பயன்படும், இதனால் பதினெண்வகை நஞ்சு, வளிசுரம் காமாலை, மாந்தம்,சீதளம், முப்பிணி, கீல்வாயு, வெட்டை, குன்மம், சுரமூர்ச்சை, நுண்புழு ஆகியன நீங்கும். உடல் பொன்னிற மடையும் (இதினின்று நீலம் எடுக்கப்படும்).

**(3) அலரிப்பூ** (கத்தூரிப்பட்டை) வெள்ளை, மஞ்சள், சிவப்பு, குங்கும நிறத்திலும், ஒன்று முதல் பல அடுக்கு இதழ்களுடனுமிருக்கும். இதன் வேர்ப்பட்டையும் பயன்படும். இதனால் சுரம், குட்டம், அரோசகம், தாகம், புடை, கிரந்தி, குருதிக்கட்டி, பித்தம், தலையெரிவு, காது நோய், கிருமி ஆகியன நீங்கும். (வேர்ப்பட்டை விழுதை எள்ளெண்ணெயுடன் கலந்துண்ண மரணம் நேரும். பட்டைச் சாற்றில் தாம்பிரக் களங்கு செந்தூரமாகும்.)

**★★ 51. அக்கரா – அரத்தை–மதுரத்தின் பண்பு என்ன?**

இவற்றுள் **(1) அக்கரகார** வேர் வெண்கருமை நிறத்தில் விரலளவாக சுவைப்பின் நாவில் எரிச்சல்-விறுவிறுப்பை உண்டாக்கி, வாநீரூறச் செய்வதாயிருக்கும்-**இதனால்** வாதக் குற்றம், நீர்வேட்கை பல்நோய், உண்ணாக்கு வளர்ச்சி, கீல்வாயு, சன்னிதோடம், தொண்டைக் கம்மல், நாவு அசைவின்மை, சீதளம் ஆகியன நீங்கும். நாதத்தைக் கழற்றும்.

**(2) அரத்தை** இருவகைப்படும்-**இதனால்** ஈளை, இருமல் கோழை, நாட்பட்ட கபம், கரப்பான், மார்பு நோய், வீக்கம் பல்நோய், வாதசோணிதம், பித்த சுரக்கபம், வாயு, தலை நோவு, சீதளம், உடல் வலி, பின்னிசிவு, சூதகவலி, நஞ்சுகள், தலை நீரேற்றம், பசியின்மை ஆகியன நீங்கும், உடல் ஒளிரும்.

**(3) அதிமதுரம்** (குன்றிவேர்) மஞ்சள் நிறத்திலும், வெளிப்புறம் அழுக்குள்ளதாயும், பல அளவிலும் இருக்கும், **இதனால்** முப்பிணியிலான புண், தாகம், விக்கல், கண்ணோய், வெறி, வெண்குட்டம், எலும்பு நோய், சிறு நீரெரிவு, வெப்புப்பிணி, நஞ்சுகள், காமாலை, கபக்கட்டு, தீக்குற்ற மிகுதி, மருந்துகளின் அருவெறுப்பு, அழல், வறட்சி, மலக்கட்டு ஆகியன தீரும் (இதன் சத்து - அதிமதுரப்பால் எனப்படும்)

### ★★ 52. அதிவிடயம்-அழிஞ்சில்-அமுக்கராவின் பண்பு என்ன?

இவற்றுள் **(1) அதிவிடயத்தின்** வேர் வெளியே கரும் புள்ளிகளுடன் சாம்பல் பூத்த நிறமும், உட்புறம் வெண்மையாகவும், மணமின்றியும், எளிதில் பொடிபடுமாறும், குவிந்த வடிவில் ஒரு அங்குல நீளம், கால் அங்குல கனத்திலும் இருக்கும். இதனால் முறைசுரம், பெருங்கழிச்சல், கபம், வாந்தி, புண், வெப்பம், வெகுமுத்திரம், நீரிழிவு ஆகியன தீரும் பசியுண்டாகி, விந்து ஊறி உடலுரமாகும்.

**(2) அழிஞ்சிலின்** விதையும், பட்டையும் பயன்படும்- இதனால், வாததோடம், கபக்குற்றம், சீழுற்ற குட்டம், முக்குற்றப்பிணி, சொறி, சிரங்கு, மேகப்படை, நஞ்சுக் கடியினாலான கோளாறு, கிருமி, வெப்பம் ஆகியன நீங்கும் அழல் பெருகும். (பட்டையினால் இலிங்கம் சுத்தியாகும்.)

**(3) அமுக்கராச்செடி** (அசுவகந்தி) சாம்பல் நிறமுடன், தக்காளி போல் தோலால் மூடிய காயுடனும், பழம் சிவப்பாயுமிருக்கும். இதன் இலை, விதை, வேர் (கிழங்கு) ஆகியன பயன்படும். இதனால் கரப்பான், வீக்கம், சுரம், வாயு, பலவீனம், பசியின்மை, உடல் பருமன், வெப்பம், கட்டி, ஆகியன தீரும். உடல் உரமாகி, ஆண்மை - அழகு - ஆயுள் கூடும்.

### ★ 53. அம்மான் பச்சரிசி-ஆவாரையின் பண்பு என்ன?

இவற்றுள் **(1) அம்மான் பச்சரிசி** (சித்திரப் பாலாடை) வெள்ளை, சிவப்பு நிறத்தில பூமியினையொட்டிப் படரும் பூண்டாகும்-இதனால், எரிபுண், மலக்கட்டு, மேகத்தடிப்பு, வெள்ளைக்கசிவு, நமைச்சல், பிரமேகம், உஷ்ணம் ஆகியன தீரும். விந்து ஊறும். (இது ஆவின் பாலுக்கு இணையானதாகும். இதன் பாலில் இலிங்கம் கட்டும்).

**(2) ஆவாரை** (மேகாரி) சமூலமும் பயன்படும். இதனால், சகல பிரமேக சிறு நீரக நோய்கள், ஆண்குறிஎரிவு, அஸ்திசுரம் வெள்ளை, நிணக் கழிச்சல், உடல்சூடு, புண், உப்பு-சர்க்கரைச் சத்து, கற்றாழை நாற்றம், கண்ணோய், நமை ஆகியன தீரும். உடல்பொன் நிறமுற்று வலுக்கும்.

### ★★ 54. ஆடாதொடை - பங்கம்பாளையின் பண்பு என்ன?

இவற்றுள் (1) **ஆடாதொடை** இலை மாவிலை போல் மூன்று அங்குலம் வரை அகலம், ஒன்பது அங்குலம் வரை நீளத்திலிருக்கும். இதன் இலை, பூ, பட்டை, வேர் பயன்படும் - **இதனால்,** வாதகபக்குற்றம், சுரம், முப்பிணி, வாதம், வயிற்று நோய், குருதியழல், இருமல், மேலிளைப்பு, வாந்தி, விக்கல், அண்டவாயு, சூலை, காமாலை, கபக்கட்டு, கண்ணோய், வலி தொண்டைக்கமறல், ஒலி குன்றல்ஆகியன திரும்.

(2) **ஆடுதின்னாப்பாளை** (பங்கம்பாளை) இலை சாம்பல் நிறமாயிருக்கும். இதன் சமூலமும் பயன்படும் - **இதனால்,** பூச்சி நஞ்சுகள், குடற்புழு, சிலந்தி, கரும்படை, கரப்பான், சகலவாதம், படை, கணச்சூடு, சூதகத்தடை, பிரசவ வேதனை ஆகியன தீரும். நீர்மலம் போகும். விந்தூறி உடல் வலுக்கும்.

### ★★ 55. ஆமணக்கு - ஆளி விதைகளின் பண்பு என்ன?

இவற்றுள் (1) **ஆமணக்கு** விதை கரும் பழுப்பு தோட்டுடன் கடலைப் பருப்பளவிலிருக்கும். இதன் வேரும், இலையும் பயன்படும் - **இதனால்** பித்தம், சீல்வாயு, வீக்கம், காமாலை, மலக்கட்டு, முலைப்பாலின்மை, சூதகச் சிக்கல், பக்கசூலை, கட்டி, புண், வயிற்றுவலி, குடலேற்றம், சிறுநீரகப் பிணிகள், பொறி - புலன் எரிவு, குன்மம், மருந்து வெப்பம், வறட்சி, வாயு ஆகியன தீரும். சிசுவை, தாய் போல் வளர்க்கும். உடல் பொன்னிறமுறும் (இதினின்று விளக்கெண்ணெய் எடுக்கப் படுகிறது-அவித்தூற்றிய எண்ணெய் மேலானதாகும்)

(2) **ஆழிவிதை** மற்றும் பூ, இலை, வேர் பயன்படும் - **இதனால்** சீதக்கழிச்சல், செரியாமை, அசீரண பேதி, கல்லீரல் வீக்கம், பொருமல், உட்சூடு, விக்கல், கபப்பிணி, வாதவலி, சருமநோய், சூதகச்சிக்கல், முலைப்பால்குறைவு ஆகியன தீரும். மலநீர் கழியும் - கருவழியும் - விந்து ஊறும் - உடல் வலுக்கும்.

### ★ 56. இலவங்கத்தின் பண்பு என்ன?

(1) **இலவங்கம்** (கிராம்பு) நறுமணம், காரம், விறுவிறுப்பு, கிள்ளினால் நெய்ப் பசையிடனிருக்கும் - **இதனால்** மயக்கம், பேதி, வாந்தி, குருதிக் கழிச்சல், கிராணி, ஆசனக்கடுப்பு, செவி நோய், கண்ணில்பூ, கருப்பு - சிவப்பு மச்சம், தலைகனம், பட்டை, தொண்டைப்புண், பல்லசைவு, மந்தம், விந்து நட்டம்,

இசிவு, வாயு ஆகியன தீரும். (2) **இலவங்கப் (கருவாப்) பட்டையினால்** விஷகடி, இருமல், இரைப்பு, வயிற்றுக்கடுப்பு உள்மூலப் புண், குன்மம், பேதி, வெப்பம், ஆகியன நீங்கும், உடல் குளிரும், காமம் பெருகும், மேனி பெருகும். (3) **இலவங்கப்பத்திரியினால்** மேகசுரம், கபசுரம், இருமல் - இரைப்பு, வெட்டை, தாகம், பித்தம், வாந்தி, வாய்ப்புண், மேகக்கட்டி, கைப்புச்சுவை, தாது நட்டம், பசியின்மை ஆகியன தீரும். (இவை உணவுடன் கூட்டப்பெறும்)

**★★ 57. இஞ்சி - இம்பூரல்-இலுப்பையின் பண்பு என்ன?**

இவற்றுள் (1) **இஞ்சிக் கிழங்கினால்** ஈளை, இருமல், அழல் குற்றம், வளி, சூலை, முக்குற்றப்பிணி, பசியின்மை, செரியாக் கழிச்சல், கபம், தொண்டைப்புண், அரோசகம், குரல் கம்மல், இளைப்பு, குன்மம், மயக்கம், வாயு ஆகியன தீரும். (இது ஒரு காயகல்ப மருந்தாகும்).

(2) **இம்பூரலின்** சமூலமும் பயன்படும்-**இதனால்** குருதியழல், கபக்கட்டு, உடல்சூடு, பித்தசுரம், ஈளை, இருமல், இரைப்பு, கைகாலெரிவு, வயிற்றெரிவு, விக்கல், இரத்த வாந்தி, நெஞ்செரிவு ஆகியன தீரும். (இதன் வேரிலிருந்து துணிக்கு சிவப்புச் சாயமேற்றலாம்).

(3) **இலுப்பையின்** சமூலமும் பயன்படும் - **இதனால்** தீச்சுரம், தாகம், இருமல், வீக்கம், கரப்பான், கிரந்தி, நஞ்சு, வாயு, இடுப்புவலி, கழிச்சல், கடுவன், சுக்கில நட்டம், உடல் சோர்வு, பசிக்குறைவு, முலைப்பால் குறைவு, வெப்பம் ஆகியன தீரும். அழல் மிகுந்து அறிவு கலங்கும். உடல் வலுப்பெறும். (பூவின் சாற்றினால் அயம் மையாகும்-நெய்யினால் நாகம் சுத்தியாகும் - காயின் பாலில் வெண்பாடாணம் கட்டும்.)

**★★ 58. எட்டி - எருக்கு-எலுமிச்சையின் பண்பு என்ன?**

இவற்றுள் (1) **எட்டி** (காஞ்சிரம்)யின் பழம் செம்மஞ்சளாய் அழகாகவும், உட்புறம் வெளுத்துப் பிசுபிசுப்பாகவும், விதைகள் ஐந்து வரை நெடுக்கில் அமைக்கப்பட்டு மிருக்கும். இதன் இலை, விதை, பட்டையும் பயன்படும்-**இதனால்** வாதம், நரம்பு பலவீனம், கீல்வீக்கம், கட்டி, கைக்கருப்பு, சன்னி, நஞ்சுகள், வாதவலி, கரப்பான், கிரந்தி, பாண்டு, மயக்கம், கபசுரம், துத்திரோகம், நீர்க்கோவை, சொட்டு நீர், முப்பிணி, வெறி, சூதகநோய், விந்து நட்டம் ஆகியன தீரும்.

*(2)* **எருக்கின்** பூ வெள்ளை, வெளிர் நீலநிறங்களிலிருக்கும். இதன் இலை, பூ, பால், பட்டை, வேர் இவை பயன்படும். **இதனால்** நஞ்சுகள், குட்டம், கபநோய், ஐவகைவலி, வயிற்றுப்புழு, கீல்வீக்கம், வாதம், பசிக்குறைவு, மலக்கட்டு, கட்டி, புண், ஈரல் வீக்கம், இருமல், இரைப்பு, குளிர்சுரம், பல்நோய், வெறி, குட்டம், நீர்க்கோவை, மேகம் ஆகியன தீரும். (இதன் பால் நீற்றினங்களுக்கு உதவும்.)

*(3)* **எலுமிச்சை** செடியில் முட்களும், இலையின் மேற்புறம் எண்ணெய் நிறைந்த பசுமையான சிறுபுள்ளிகளும், பழத்தோல் எண்ணெய் கலந்த கரும் புள்ளிகளுடன், ஒருவித நறுமணத்துடனும், உட்பாகம் சுளைசுளையாகப் புளிப்புச் சாறுடனுமிருக்கும். இதன் இலை, காய், பழம், சாறு, எண்ணெய் இவை பயன்படும் - **இதனால்** முக்குற்றம், வாந்தி, சூலை, குன்மம், மருந்திடு, பித்தம், வெறி, மயக்கம், தாகம், தமட்டல், கண்ணோய், காதுவலி, நகச்சுற்று, பெருவயிறு, பக்கசூலை, மனச்சோர்வு, பிடிப்பு, முடம், கழிச்சல், கிறுகிறுப்பு, அரோசகம், சுவையின்மை, நரை - திரை ஆகியன தீரும்.

## ★ 59. ஊமத்தை - ஓமத்தின் பண்பு என்ன?

இவற்றுள் *(1)* **ஊமத்தையின்** காய் உருண்டையாய் முட்களடர்ந்தும், சுரசுரப்பான விதைகளுடனும், பூ கருப்பு மஞ்சள்-அடுக்கு-மருள் ஆகிய பிரிவிலும் இருக்கும். இதன் இலை, பூ, விதையும் பயன்படும் - **இதனால்**, நாய்க்கடிப்புண், தழிப்புண், நஞ்சுகள், கட்டி, இரைப்பு, கபக்கட்டு, மூச்சடைப்பு, வீக்கம், கில்வாயு, பால்கட்டிநோய், சிலந்தி, வெள்ளை, காதுவலி, கரப்பான், சொறி, சிரங்கு, முப்பிணிக் கழிச்சல், மூலமுளை, சூதகவலி, தாதுபலவீனம், பெருநோய், உடல் கடுப்பு, நீர்க்கோவை, வாதம் ஆகியன தீரும். வெறியும், மயக்கமும் காணும். உடல் ஒளிரும். (கருவூமத்தையில் சூதம் கட்டும்-சாரணை ஏற்றவும் உதவும்.)

*(2)* **ஓமம்** விதை காரமிக்கதாக ஒரு வித மணமுடனிருக்கும்-**இதனால்** கபசுரம், இருமல், செரியா மந்தம், பொருமல், கழிச்சல், குடலிரைச்சல், ஊழி, இரைப்பு, பல்நோய், குய்யரோகம், வயிற்று வலி, ஈரல்நோய், பசியின்மை, நீர்க்கட்டு ஆகியன தீரும். இங்ஙனமே **குரோசாணி ஓமத்தினால்** சூதக வாயு - வலி, பல்லடிநோய், மாந்த இரைப்பு, கழுத்து நோய், ஆரம்பவெறி, நடுக்கம், தூக்கமின்மை.

தமரகத்தடிப்பு, நினைவுமாறல், கபம், கழிச்சல், வெகு மூத்திரம், கரப்பான், பலவீனம், புண் ஆகியன திரும். போதை தரும்.

### ★★ 60. கரிப்பான் - மேனி-ஈசுரமூலியின் பயன் என்ன?

இவற்றுள் (1) **கரிப்பான்** (கரிசலாங்கண்ணி) நீலம், வெள்ளை, சிவப்பு, மஞ்சள், பிரிவுகளாலானது - **இதனால்** குரலுறுப்புநோய், சோகை, பாண்டு. காமாலை, ஈரல்பிணி குட்டம், வீக்கம், பல்நோய், குன்மக்கட்டி, இருமல், இரைப்பு, கண் - காது - தலை நோய்கள், நீர்க்கோவை, மூலம், மயிர் உதிர்தல் - நரை, சருமநோய் ஆகியன தீரும். உடலொளி - அறிவு - அழகு - ஆண்மை விளையும். (இது பலவற்றை சிந்தூரிக்கும். தலைமயிர் கருத்துச் செழித்து வளரும்)

(2) **குப்பைமேனி** (பூனைவணங்கி) ஒரு அடி உயரத்திலும், மெல்லிய அரும்பு வட்ட இலைகளுடனும் தோட்டங்களில் விளையும்-**இதனால்**, பல்லடிநோய், தீப்புண், தாவரநஞ்சு, வயிற்றுவலி, வாதப்பிணி, மூலம், நமைச்சல், மூக்குநீர் வடிதல், கோழை, இரைப்பு, சொறி, சிரங்கு, வயிற்றுப்புழு, ஈரல் நோய், காதுவலி, வெறி, எலிவிஷம். நாட்பட்ட மலக்கட்டு, பவுத்திரம், கபப்பிணிகள் ஆகியன நீங்கும்.

(3) **ஈசுரமூலி** (தலைசுருளி) வேரும் இலையும் பயன் படும்-**இதனால்** விஷ சோபை முதலிய வீக்கம், சன்னிபாதம், நஞ்சு, சொறி, சிரங்கு, தேமல், படர்குட்டம், உடல் வெளுப்பு, இருதய நோய், வீக்கம், முத்தோடம், விடத்தினவு, இருமல், வாதம், உடல்வலி, குளிர்சுரம், ஆகுந்துக சோகை, பாண்டு, மாட்டு நோய்கள் ஆகியன நீங்கும். உரமாகப் பேச வலிமை தரும். (இதனால் செம்பு நீறும்.)

### ★★ 61. மஞ்சள் - சாதிக்காயின் பண்பு என்ன?

இவற்றுள் (1) **மஞ்சள் கிழங்கு** மஞ்சள் நிறத்தில் ஒரு வித மணமுடனிருக்கும்-**இதனால்** வாத-பித்த-கபக்குற்றம், தலைவலி, நீரேற்றம், வெள்ளை, மூக்குநீர் வடிதல், ஐவகை வலி, வீக்கம், வண்டு கடி, பெரும்புண், வாய் - வயிறு வேக்காடு, கற்றாழை நாற்றம், மிகு வியர்வை, கட்டி, சொறி, சிரங்கு, நமைச்சல், சுரம், மலக்கட்டு, கண்ணோய் ஆகியன தீரும். பசியுண்டாகும் - உடல் பொன்னிறமுறும், வெப்பமுண்டாகும். இங்ஙனமே, மஞ்சள் நிற சக்கையையுடைய **மரமஞ்சளினால்** குழந்தைகளின் கணம், மூலம், சுவையின்மை, உட்சுரம், சுரத்தின்

களைப்பு, குருதி வீக்கம், தோல் சிதைவு, வெப்பம், பசிக்குறைவு, பலவீனம் ஆகியன தீரும் - நிற்க, **கஸ்தூரி மஞ்சளினால்** பெரும்புண், கரப்பான், நுண்புழு, அக்கினி மந்தம், அடிபட்ட நோய், உடல் வலி, குன்மம், வயிற்று நோய் ஆகியன தீரும். அறிவும் ஆண்மையும் பெருகும். (இது ஒரு மணமூட்டியாகும்)

**(2) ஜாதிக்காய்** பழுத்த பின் சதைப்பற்றுடன், மணமுடன் உருண்டை வடிவிலிருக்கும். இவ்வோட்டின் மீது மூடியுள்ள செம்மஞ்சள் நிறப் பொருள் **ஜாதிப்பத்திரி** எனப்படும். **இவற்றால்,** விந்துக் குறைவு, பெருங்கழிச்சல், தலைவலி, இரைப்பு, இருமல், வாயு, வெப்ப நோய், பசிக்குறைவு, வயிற்றுவலி, பொருமல், கீல்வாயு, பெரும்பாடு, சூதகவலி, நீர் வேட்கை, கண்ணிருளல், தாபசுரம், நிணக்கழிச்சல் ஆகியன தீரும். மயக்கம் தரும். (இதை உணவுடன் கூட்டுவதுண்டு).

**★★ 62. வாளம் - வசம்பு - காயத்தின் பண்பு என்ன?**

இவற்றுள் **(1) நேர்வாளம்** (நாகணம்) ஆமணக்கு விதை போலும், பருப்பு கடலையைப் போலும், நடுவில் நச்சு இலையுடனும், எண்ணெய்ப் பசையுடனும், குமட்டல். மணமுடனும் காணும் - **இதனால்** வாதம், முப்பிணி, குடைச்சல், மேகம், அழல், வயிற்று நோய், மலச்சிக்கல் ஆகியன நீங்கும். வாந்தியும், கழிச்சலும் காணும் (இதனை நன்கு சுத்தித்து, அளவுப்படி கொடுக்க வேண்டும்.)

**(2) வசம்பு** (பிள்ளை மருந்து) வேர் பெருவிரலளவில் சாம்பல் படிந்த நிறத்திலும், ஒருவித மணமுடனும், எண்ணெய்ச் சத்துடனும் இருக்கும் - **இதனால்,** சகல நஞ்சுகள், புண்கள், ஐவகைவலி, குன்மம், குருதிபித்தம், வாய்நாற்றம், சூலை, சன்னி, இருமல், ஈரல் நோய், யானைக்கால், நாடாப்புழு, கழிச்சல், திக்குவாய், பலவீனம், வயிற்றுப் பொருமல், சொறி, சிரங்கு தெண்டைக்கட்டு, கீல்வாயு, ஆசனக்கடுப்பு, மாந்தம், கணம் ஆகியன தீரும். (இதனருகில் நச்சுயிர்கள் வராது.)

**(3) பெருங்காயம்** மஞ்சள் நிறம், மிகு நாற்றம், கரகரப்பு, கசப்பு இவற்றுடன் கூடிய, ஒரு செடியின் பிசின் ஆகும்- **இதனால்,** பல்லடி நோய், கடிவிஷம், மந்தம், ஏப்பம், வாதம் சூதகவாயு, குன்மம், பெருவயிறு, குருதியிலுள்ள கிருமி, கப வலிப்பு உடல் கடுப்பு, சூதக சூலை, சுக்குவான், வயிற்றுப் பூச்சி, பிரசவ அழுக்கு, தலைவலி, வாந்தி பேதி, தனுர்வாயு வறட்டிருமல், பக்கவலி, காதுவலி, மாந்தம், இரைப்பு, உப்புசம்,

செரியாமை, பசியின்மை, அசீரணம், சூதகக்கட்டு ஆகியன தீரும். (இது உணவுடன் கூட்டப் பெறும்)

**★★ 63. தும்பை - துளசி - தூதுளை - வேளையின் பண்பு என்ன?**

இவற்றுள் (1) **தும்பை** இரு வகைப்படும். இதன் இலையும், பூவும் பயன்படும்-**இதனால்** முப்பிணி, கபம், வாதம், தலை வலி, மூக்குநோய், தாகம், ஈளை, இருமல், வெள்ளை, கண்புகைச்சல், கைகாலசதி, சோம்பல், விஷகடி, நீர்க்கோவை, தலைகனம், பீனிசம் ஆகியன தீரும். உடலுக்கு ஊட்டமும், வெப்பமும் தரும்.

(2) **தூளசி** மணமும், காரமுமுள்ள சுமார் மூன்றடி உயரமுள்ள செடியாகும். இது பலவகைப்படும். இதன் இலையும், விதையும் பயன்படும் - **இதனால்**, வெறி, பீனிசம், வெப்பம், சுரம், கபக்குற்றம், வயிற்றுளைச்சல், சுவையின்மை, மாந்தம், தாகம், அஸ்திசுரம், கணச்சூடு, பித்தம், குத்திருமல், வண்டுகடி, கட்டி, காணாக்கடி, காயம், இருமல், இரைப்பு, சூலை, சன்னி, வயிற்றுப்புழு, பிரசவத்தின் பின் அடிவயிறு குத்தல், வெள்ளை ஆகியன தீரும். (இதை இறை வழிபாட்டிற்கு பயன் படுத்துவர்.)

(3) **தூதுவளை** சிறு முட்களையுடைதொரு கொடியாகும். இதன் சமூலமும் பயன்படும் - **இதனால்** கபநோய்கள், இருமல், இரைப்பு, காதுநோய், செவிடு, தினவு, பெருவயிறு, மந்தம், உடல்வலி, முக்குற்றம், ஆண்மைக்குறைவு, கண்ணோய், சுரம் ஆகியன நீங்கும். உடல் வலிமை பெறும்.

(4) **தைவேளை** ஐ வகையில் ஒன்றாகும். இது வெளிர் லைப் பூவுடனும், ஒருவித மணமுடனுமிருக்கும்-**இதனால்** இரத்த பீனிசம், தலைவலி, உடல்வலி, கபம், நெஞ்சுவலி, தோடம், வாதம், சோபை, நீர்க்கோவை; கணமாந்தம், மாந்தசுரம், தலைகனம், காதில் சீழ், வயிற்றுப்புழு, சுளுக்கு, வீக்கம் ஆகியன நீங்கும், பசி, அனல், பித்தம், வாய்ப்புண் காணும்.

**★ 64. சீந்தில்-சிறுதேக்கு-சிவதையின் பண்பு என்ன?**

இவற்றுள் (1) **சீந்தில்** (அமிர்தவல்லி) கொடி, இலை, வேர், இவை பயன்படும் - **இதனால்** புண்கள், பித்தசுரம், மாந்தம், உப்புசம், செரியாமை, வயிற்றுக் கோளாறுகள், மேகவெட்டை, திமிர், மேகதாகம், கபப்பிணி, உடலிளைப்பு,

மண்ணீரல் வீக்கம், காமாலை, இருமல், மூர்ச்சை, வாந்தி யானைச் சொறி, நஞ்சு, குருதியழல், கபம், ஆகியன தீரும் தமரகம் வலுக்கும். விந்தூறி காயசித்தியாகும்.

***(2) சிறுதேக்கு*** (கண்டுபரங்கி) இலையும், வேரும் பயன் படும்-**இதனால்** முக்குற்றம், இரைப்பிருமல், உட்சூடு, வெறி, சுரம், மூக்குநீர் வடிந்து சலதோடம், வளிநோய், குளிர்சுரம், மனக்கலக்கம், வீக்கம், கட்டி, சோம நோய் ஆகியன நீங்கும்

***(3) சிவதையின்*** வேர் வெளிப்புறம் கருமையாகவும், உட்புறம் வெண்மையாகவும், வெட்டுண்ட பக்கங்களில் பிசின் படிந்தும் இருக்கும்-**இதனால்**, உள்மூலம், வயிற்றுக் கோளாறுகள், பித்தவாதப் பிணிகள், வயிற்றுப்புழு, எலி விஷம், பித்த குன்மம், குழந்தைப் பிணிகள் ஆகியன தீரும். மலம் கழியும்.

### ★ 65. கள்ளி - கற்றாழை - கரிய போளத்தின் பண்பு என்ன?

இவற்றுள் **(1) கள்ளி** பல வகைப்படும். இதில், **திருகுகள்ளி யினால்** வாதமுடக்கு, கிரந்தி, பெருநோய், கபநோய், குடற்புழு, பக்க சூலை, கரப்பான், நரம்புச் சிலந்தி, வாதவெட்டை, தேள் விஷம், குன்மம், வயிற்றுப் பிணிகள் ஆகியன நீங்கும் - **கொடிக் கள்ளியினால்** செரியாமை, மந்தம், வாதக் குற்றம், குழந்தைகளின் கரப்பான், சொறி, சிரங்கு, தொண்டைக்கட்டு, பெரும்புண், பூச்சிக்கடி, குட்டம், குன்மம் ஆகியன தீரும் - **சதுரக் கள்ளியினால்** கரப்பான், சொறி, ஐயப்பிணி, குன்மம், காணாக்கடி, சூலை, அழுகிய புண், வெள்ளை, வாத நோய் பாலுண்ணி, பல்வலி, வீக்கம் ஆகியன தீரும் - **இலைக் கள்ளியினால்** கரப்பான், கிரந்தி, காதுவலி, வீக்கம், நீர்க்கட்டு, நகச்சுற்று, வயிற்றுப் பூச்சிகள் ஆகியன நீங்கும். (இவை யாவும் கழிச்சலை உண்டு பண்ணும்)

***(2) கற்றாழை*** (குமரி) பல வகைப்படும். இதன் பால், சாறு, வேர், மடல்சோறு பயன்படும்-**இதனால்**, வாதமேகம், கருங்குட்டம், மூலம், தொழு நோய், இருமிக்குத்தல், உன்மாதம் பவுத்திரம், குன்மம், பித்தக்கிரிச்சரம், பீலிகம், மிகுநீர், உடலெரிவு, உட்சூடு, கண்ணோய். தூக்கமின்மை ஆகியன தீரும். மயிர் வளரும், உடல் பிணியின்றி நூறாண்டு வாழலாம். (இதனால் பல பற்ப செந்தூரங்களை முடிக்கலாம்.)

***(3) கரியபோளம்*** (மூசாம்பரம்) கருஞ்சிவப்பு நிறத்துடன்

நாற்றமுள்ள, சிறு கற்றாழைப் பாலாகும்-**இதனால்,** மார்பு வலி, வயிற்று வலி, பக்க நோய், வீக்கம், மேகக்கட்டி, கைகால்களில் நிலைத்த சூலை, வாதப்பிணி, பசியின்மை, சூதகவலி, மலக்கட்டு, செரியாமை, மந்தம் ஆகியன நீங்கும். கருவழியும்.

**★★ 66. நீர்முள்ளி - நாயுருவி - நெருஞ்சிலின் பண்பு என்ன?**

இவற்றுள் *(1)* **நீர்முள்ளிச்** செடி நிறைந்த முட்களுடன் ஈரமுள்ள இடத்தில் கிட்டும், இதன் சமூலமும் பயன்படும் - **இதனால்,** வெள்ளை, வீக்கம், கழிச்சல். உடல் சோர்வு, பாண்டு, பெருவயிறு, நீர்க் கோவை, நீரேற்றம், சிறுநீரகப் பிணிகள், துர்நீர், மேகம், மூலம், உட்சூடு, ஆகியன நீங்கும். ஆண்மை மிகுந்து, உடல் வலுக்கும்.

*(2)* **நாயுருவிச்** செடியின் சமூலமும் பயன்படும் - **இதனால்,** கழிச்சல், ஆசன வழிக் குருதிப் போக்கு, பிரசவ அழுக்கு, வியர்வை, வெள்ளை, கபநோய், பசி, வீக்கம், பாண்டு, காமாலை, சூதகச்சிக்கல், நீர்க்கட்டு, வயிற்று வலி, சொறி, சுரம், பல்நோய், மூலம், குன்மம், காது - மூக்கு நோய், ஈளை இருமல், இரைப்பு, பிரசவத்தடை, கொறுக்குப்புண் ஆகியன தீரும். (இதனால் வங்கம் மடியும்)

*(3)* **நெருஞ்சில்** (யானை வணங்கி) மாட்டுக் கொம்பு போல் பிரிந்த முட்களும் மஞ்சள் பூக்களுமுடைய, தரையில் படரும் செடியாகும். இதன் சமூலமும் பயன்படும் - **இதனால்,** சொட்டு நீர், சுரவெப்பு, நீரடைப்பு, கல்லடைப்பு, நீரெரிவு, முக்குற்றம், தாகம், சூடு, மேகம், வெண்புள்ளி, அழல், எலும்புருக்கி, தமரக வீக்கம், காமாலை ஆகியன தீரும். ஆண்மை பெருகும்.

**★ 67. நாபி - நாய்க்கடுகு - நாவலின் பண்பு என்ன?**

இவற்றுள் *(1)* **நாபி** (பச்சை நாபி) வெள்ளை, சிகப்பு, நீலம், கருப்பு வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இதன் வெண்ணிறக் கிழங்கு பயன்படும் - **இதனால்** ஆசனக்கடுப்பு, செரியாமை, கபப் பிணிகள், குன்மம், குட்டம், தேள் நஞ்சு, காணாக்கடி, சூலை, சுரம், மார்பு வீக்கம், தாகம். அஸ்திசூடு, புண், புழுநோய், வல்லைக்கட்டி கவிசை, நழுகிய ஈரல், தலை வலி, வீக்கம், பாரிசவாயு, நரம்புச் சிலந்தி ஆகியன தீரும்.

***(2)* நாய்க்கடுகுப்** பூண்டின் இலை, விதை, வேர், பயன்படும்-**இதனால்,** வயிற்றுப் பொருமல், உடல் கடுப்பு - குத்தல், செவிநோய் - இரைச்சல், மூக்குநீர் வடிதல், சூதகவலி - தடை, வீக்கம், புண்கள், தலைவலி, வயிற்றுக்கிருமி, வளி, மாந்தம், பெண்கள் பேய்பிடத்தாடல், முப்பிணி ஆகியன தீரும்.

*(3)* **நாவல்** மரம் பலவகைப்படும். இதன் சமூலமும் பயன்படும் - **இதனால்,** பெரும்பாடு, நீரிழிவு, குழந்தைதோடம், ஈளை, இருமல், வாய்ப்புண், கரப்பான், குருதிக்கழிச்சல், சுரம், வளி, அடிபட்ட வீக்கம், கட்டி, தாகம், வெப்பம், நீர்ப்பெருக்கு, நஞ்சு ஆகியன நீங்கும். குருதியும் விந்துவும் பெருகும். (பட்டைச் சாறு இரும்பைச் செந்தூரிக்கும்.)

**★★ 68. சதகுப்பை - செந்தட்டி - சங்கின் பண்பு என்ன?**

இவற்றுள் *(1)* **சதகுப்பை** பூண்டின் இலை, பூ, விதை பயன்படும் - **இதனால்,** வளிநோய், குருதிப்போக்கு, தலை வலி, காதுவலி, மூக்குநீர் வடிதல், ஆசனக் கடுப்பு, காக்கை வலி, சூதகக்கட்டு-சன்னி, பசிமந்தம், பிரசவ அழுக்கு, வயிற்று வலி - பொருமல், கில் வாயு ஆகியன தீரும். விக்கல், வாந்தி, ஓக்காளம், தலைசுற்றல் காணும், ஈரல் - இரைப்பைக்கு வன்மை தரும். (இதை உலர்த்தி நோயாளியின் அறையில் புகைக்கலாம்).

*(2)* **செந்தொட்டி** (காஞ்சொறி) வேர் மூவகைப்படும் - **இதனால்** சொறி, சிரங்கு, தினவு, சுரம், தாகம், நீரிழிவு, வளிமிகுதி, கபஇரைப்பு, வாயு, சுவையின்மை, நீர்க்கோவை, இருமல், சுவாசகாசம் ஆகியன தீரும். (இது உடலில் பட நமைச்சல்காணும்) இதனால் செம்பு நீறும்.

*(3)* **சங்கன்** செடி முட்களுடனும், இலை தடித்து நுனியில் முள்ளுடனும் இருக்கும். இதன் இலை, வேர், பால் பயன்படும் - **இதனால்,** கரப்பான், கழலை, வெப்பம், குன்மம், கில் வீக்கம், வாதகோபம், பித்தநோய், நஞ்சுகள், கோழை, கபசுரம், கிரந்தி, உட்சுரம், வயிற்றுப்புழு, வீக்கம், நீரேற்றம், பிரசவ அழுக்கு, இருமல், வாந்தி, உள்வேக்காடு ஆகியன தீரும் - இங்ஙனமே, **பீச்சங்கக் குப்பியினால்** அரைக்கடுவன், கிரந்தி, கருங்குட்டம், வெள்ளை, செவ்வாப்புக் கட்டி, சொறி, சிரங்கு, சூலை, பாம்புகடி, பெருவளிநோய், கபக்குற்றம், முறைசுரம், குடற்புழு, கண்டக்கழலை ஆகியன தீரும். குருதியைத் தூய்மையாக்கி, உடல் வலுப்பெறும்.

**★★ 69. பிரண்டை-துமட்டி-கழற்சியின் பண்பு என்ன?**

இவற்றுள் *(1)* **பிரண்டைக்** கொடி பலவகைப்படும். இதன் தண்டும், வேரும் பயன்படும் - **இதனால்** ஆசனவாய் அரிப்பு குருதிமூலம், மந்தம், குன்மம், வாதக்கழிச்சல், குருதிக் கழிச்சல், கபப்பெருக்கு, மூலமுளை, கைகாலோய்வு, கரப்பான், காணாக்கடி, வாயு, வயிற்றுப்புழு, உடல் வெளுப்பு, மார்புநோய், சுவையின்மை, பொருமல், சூதகத்தடை, மூக்கில் குருதி, எலும்பு முறிவு ஆகியன தீரும். பசியைத் தூண்டி, ஆண்மையைப் பெருக்கி, உடல் வலுக்கும்.

*(2)* **துமட்டி** (பிச்சிக்காய்) காய் உருண்டையாய் பசுமை நிற வரிகளுடன், உள்ளே சோறு, விதைகளுடனிருக்கும் இதன் பழம், வித்து, வேரும் பயன்படும்-**இதனால்** கீல்ப்பிடிப்பால் நடையின்மை, சூதகக் கோளாறுகள், மலக்கட்டு, சோபை, வயிற்றுப் பொருமல், குன்மம், இருமல், குழந்தைகளின் இரைப்பு, உப்புசம், வயிற்றுப்புழு, கட்டி, குரு, முலைவீக்கம், கடிவிஷம், காக்கைவலி, நரைமயிர் ஆகியன தீரும். வாந்தி, குருதிக்கழிச்சல், குடல் புரட்டல் காணும்.

*(3)* **கழற்சி** (கச்சக்காய்) கொடி இருவகைப்படும். இதன் கொட்டை, இலை, பட்டை, வேர் பயன்படும் - **இதனால்** அண்ட வாயு, சூலைக்கட்டு, வெள்ளை, குன்மம், உட்சூடு, ஏறண்டம், இறங்கண்டம், தசையண்டம், வாதவீக்கம், வயிறு பொருமல், பசியின்மை பக்கசூலை, குடல் வாயு, விதை வீக்கம், ஆகியன தீரும். உடல் வலுக்கும்.

**★★ 70. வேலிப்பருத்தி - கண்டங்கத்திரி - முசுமுசுக்கை - கீழாநெல்லியின் பண்பு என்ன?**

இவற்றுள் *(1)* **வேலிப்பருத்தி** (உத்தாமணி) பாலுள்ளதொரு கொடியாகும். இதன் சமூலமும் பயன்படும் -**இதனால்** வாதத்தின் குடைச்சல்-குத்தல்-வீக்கம்-நடுக்கல்-இசிவு; சன்னிதோடவிஷம், கபக்கட்டு, சுவாசகாசம், வயிற்றுப் புழு, கால்வீக்கம். பிளவை, சூதகக்கோளாறு, மலக்கட்டு ஆகியன தீரும். கருவழியும் (இதனால் சரக்குகளைச் சுண்ணமாக்கலாம்.)

*(2)* **கண்டங்கத்திரிச்** செடியின் சமூலமும் பயன்படும் - **இதனால்** சுவாசகாசம், காசம், சயம், அக்கினிமந்தம், தீச்சுரம் சன்னிவாதம், வாதநோய், எழுவகைத்தோடம், கபக்கட்டு, பல்நோய், மூக்கு நீர்வடிதல், உடலின் நீரேற்றம், தலைவலி,

அக்குள் நாற்றம், கில்வாயு, மூலம், வெண்குட்டம், காதுவலி ஆகியன நீங்கும்.

**(3) முசுமுசுக்கை** (இருகுரங்கின் கை) கொடியின் இலையும் வேரும் பயன்படும்-**இதனால்** இருமல், இரைப்பு, கபம், நெஞ்சில் புகைக் கம்மல், ஈளை, மூக்குநீர் வடிதல், ஆண்மையின்மை, மந்தம், வாந்தி, குன்மம், அழல், மார்பு நோய், உட்சூடு ஆகியன தீரும்.

**(4) கீழ்வாய்நெல்லிச்** செடியின் சமூலமும் பயன்படும் - **இதனால்**, பித்தகோபம், வயிறு மந்தம், கண்ணோய், குருதிக் கழிச்சல், நீரிழிவு, காமாலை, உட்சூடு, மேகம், தாது வெப்பம் குருதிக்கேடு, தாகம், வெட்டை, சதைச்சிதைவு, புண்புரை வீக்கம், பெரும்பாடு, தலைச்சுற்றல், வாந்தி, குன்மம், கை காலெரிவு ஆகியன தீரும். உடல் குளிர்ந்து வாதம் அதிகரிக்கும்

## ★★ 71. கொடுவேலி - கொல்லன் கோவை- சேங்கொட்டை - சிவனார்வேம்புவின் பண்பு என்ன?

இவற்றுள் **(1) கொடுவேலி** (சித்திரமூலம்) வேர் மூவகைட் படும்-**இதனால்,** கட்டி, கழலை, புண், வளிநோய், அரையாப்பு குத்தல், சோபை, மூலம், உதிரக்கட்டு, நீரேற்றம், பெருவயிறு குறிப்புண், கிரந்தி, சுரம், நஞ்சு, வீக்கம், வயிற்றுப் புழு, தலைவலி, சுகசன்னி, பீனிசம், தும்மல், குட்டம், விப்புருதி, குன்மம் கண்டமாலை, உடல்வலி, காமாலை, கழிச்சல், சொறி, சிரங்கு கில்வாயு, தினவு, புற்று, பவுத்திரம், பிளவை, மேகம் ஆகியன தீரும். கருவழியும்.

**(2) கொல்லன் கோவை** (ஆகாசக்கருடன்) கொடியின் மரக்கலரில் சிரட்டையளவான கிழங்கும், வேரும் பயன்படும் - **இதனால்,** முக்குற்றம், சூலை, பாண்டு, அக்கிப்புண், உட்சூடு கண்டக்கழலை, குடல்வலி, குட்டம், கிரந்தி, நஞ்சுகள் கரப்பான், நமைச்சல், மேநோய், கீல்ப்பிடிப்பு, சீதக்கழிச்சல் சொறி, சிரங்கு ஆகியன தீரும்.

**(3) சேங்கொட்டை** (வல்லாதி) மரத்தின் பருப்புப் பிசுபிசுத்த எண்ணெய் சத்துடன் கருப்பாகவுள்ள கொட்டையும் பயன்படும் - **இதனால்**, நஞ்சுகள், பெருநோய், இளைப்பு கழலை, சூலை, திமிர்ப்படை, கரும்படை, வெண் குட்டம் திராக்கடி, மூலம், வாதப்பிணி, குன்மம், கீல்ப்பிடிப்பு, சொறி சிரங்கு ஆகியன தீரும். உடல்வலு, பசி, அழகு, குரலொலி இன்பம் ஆகியன விளையும். (இது காயகல்ப மருந்தாகும்)

*(4)* **சிவனார் வேம்பு** *(காந்தாரி)* பூண்டின் இலை, வேர், தண்டு, பூ பயன்படும் - **இதனால்,** சொறி, சிரங்கு, படை, பிளவை, புண், புரை, குட்டம், பாம்பு நஞ்சு, வாதப்பிணி, மந்தம், இரைப்பு, உப்புசம், உளைமாந்தை, பல்வலி வாய்ப்புண், கரப்பான், வெடிசூலை, வீக்கம், காயம் ஆகியன தீரும். அழகுண்டாகும்.

## ★ 72. நீரடி முத்து-வாய்விளங்கம் - குறுந்தொட்டி - வல்லாரையின் பண்பு என்ன?

இவற்றுள் *(1)* **நீரடிமுத்து** விதை மேற்றொலுடன் சிறுத்தும், சாம்பல் கலந்த கபில நிறத்தில், எண்ணெய்ப் பசையுடனுமிருக்கும் - **இதனால்,** கழலை, பெருநோய், சொறி, சிரங்கு, நமை, வாதநோய், படை, சூலை, பொடுகு, தவளைச் சொறி, கிருமி, அழுகல் புண் ஆகியன தீரும். உடல் தேறும்.

*(2)* **வாய்விளங்கம்** விதையுடன், சுவையும் மணமும் கூடிய பழமும் பயன்படும்-**இதனால்,** பாண்டு, குன்மம், மிகு பருமன், வாயு, விஷகடி, நுண்புழுக்கள், ஆசனவாய்ப்புண், செரியாமல் வயிறு பொருமல்-வலி, வாதக்குற்றம், தலைவலி, புடை ஆகியன தீரும். (இதனால் சூதம் - வங்கம் முதலியன கட்டும்)

*(3)* **குறுந்தொட்டி** *(சிற்றாமுட்டி)* யின் சமூலமும் பயன் படும்-**இதனால்** என்புசுரம், அழல்நோய், சுரதாகம், கிராணி, வாயு, குன்மம், கண்ணோய், தோடம், வாதம், மாந்தம், கணம், இருமல், சிறுநீரெரிவு ஆகியன தீரும். வியர்வையைப் பெருக்கும்.

*(4)* **வல்லாரைப்** பூண்டின் சமூலமும் பயன்படும் - **இதனால்** வாய்ப்புண், வயிற்றுக் கடுப்பு, பேதி, குருதிக்கழிச்சல், தொண்டைக் கம்மல், வெறி, யானைக்கால், விரைவீக்கம், நெரிகட்டி, மேகப்புண், காயம், வீக்கம், புடை, கண்ட மாலை, சூதகக்கட்டு, மார்பாணி, கொப்புளம், சுரம், பெருவயிறு, சீதக்கழிச்சல், சருமநோய்கள் ஆகியன தீரும். ஞாபகசக்தி, உடல்வன்மை, அழகு ஆகியன விளையும்.

## ★ 73. கருஞ்சீரகம் - மேதி - குக்கிலின் பண்பு என்ன?

இவற்றுள் *(1)* **கருஞ்சீரகம்** விதை மூன்று மூலைவடிவுடன் கருநிறமாயிருக்கும்-**இதனால்** மண்டைக் கரப்பான், புண், உட்சூடு, தலைவலி, கண்ணோய், வயிற்றுப் பொருமல், சிரங்கு, குன்மம், நெஞ்சுவலி, இருமல், வாந்தி, ஓக்காளம், வீக்கம், காமாலை, கடிநஞ்சு, மேகப்பிடிப்பு, சுரம், கீல் வீக்கம்,

பிரசவித்த பின் வலி, குடற்புழு, புடை, குறிதுவளல், சூதகக் கட்டு, விக்கல், திணறல், ஆகியன தீரும்.

(2) **வெந்தயம்** (மேதி) கீரையும், சிறிய மஞ்சள் நிற விதையும் பயன்படும் - **இதனால்**, வயிற்றுப்பிசம், மாந்தம், வாதம், கபம், இருமல், சுவையின்மை, உட்சூடு, சீதக்கழிச்சல், உடலெரிவு, வெள்ளை, குருதியழல், அஸ்திசுரம், கணக் காய்ச்சல், தாகம், இளைப்பு, மார்புவலி, மூச்சடைப்பு, பித்த மயக்கம், இடுப்புவலி, பலவீனம், மெலிவு, மயிர் உதிரல், வெப்பம், ஈரல் வீக்கம் நீங்கும். உடல் வன்மையுறும். (இது உணவில் சேர்க்கப்படும்)

(3) **குங்கிலியம்** (குக்கில்) கருமருது மரத்தின் பிசினாகும். இது நிறமின்றி கலக்கமற்று ஒரு வகையும், வெளுப்பு - மஞ்சள் - பசுமை நிறத்தில் ஒரு வகையும், **பூனைக் கண் குங்கிலியம்** என்றும் பலவகைப்படும்-**இதனால்**, வெள்ளை, பெரும்பாடு, மேகப்புண் உட்பட பலவகைப் புண்கள், விரணம், மூலம், சீழ் மேகம், காது-மூக்கு-உதடு நோய்கள், கட்டி, சூலை, நிணக் கழிச்சல், காணாக்கடி, நகச்சுற்று, கீல்ப்பிடிப்பு, அசுத்த நாற்றம், வாதவலி, நீர்க்கட்டு ஆகியன தீரும். உடல் வலுப்பெறும்.

## ★★ 74. கார்போகரிசி-கோட்டம் - மாசிக்காயின் பண்பு என்ன?

இவற்றுள் (1) **கார்போகரிசி** விதை ஒருவித மண முடனிருக்கும் - **இதனால்** விரணம், கடுவன், பாம்புகடி, வாதகபம், யானைச்சொறி, கிரந்தி, பசியின்மை, குட்டம், சிரங்கு, படர் தாமரை, அழுக்குப்படை, தினவு, வெண்புள்ளி ஆகியன தீரும். பித்தம் பெருகும்.

(2) **கோட்டம்** வேர் வெள்ளை-சிவப்பு நிறத்தில், ஒருவித மணமுடனிருக்கும்-**இதனால்**, கண்-தாடை-வயிறு-கழுத்து - தலை - நாவு - வாய் இவற்றிலான பிணிகள், சுரம், அதைப்பு, வாயு, மூலமுளை, புண், இரைப்பு, எலி - பாம்பு நஞ்சுகள், மேகக் கட்டி, பைத்தியம், வங்கு, முகக்குரு ஆகியன தீரும். தூக்கம் வரும். (இதனை மணத்திற்காகவும், பூச்சி கடிக்காதிருக்கவும் கையாளுவர்).

(3) **மாசிக்காய்** இதன் மரத்தின் கிளைகளில் ஒருவிதப் பூச்சி துளையிட, அதனின்று வடியும் பால் உருண்டு திரண்டு கட்டுப்படுவதாகும். இது கருப்பு, வெள்ளை, நீலம் என்ற வேறுபாடுடையது. இதனுள் சிக்கும் பூச்சி வெளிப்படுமுன்

எடுப்பதே நன்கு செயல்படும் - **இதனால்.** நீங்காத உட்சூடு, அக்கரங்கள், குழந்தைகளின் கணச்சூடு, பலவகை மேகம், மாந்தம், கக்கிருமல், கழிச்சல், கறும்புள்ளி, வெட்டை, ஐயசுரம், புண்கள், பலவிதக் குருதிப்போக்கு, மருந்து நஞ்சு ஆகியனதீரும்

## ★ 75. சுரை - வேம்பு - நன்னாரியின் பண்பு என்ன?

இவற்றுள் *(1)* **சுரைக்கொடி** இலை, காய், விதை பயன்படும் - **இதனால்** நீர்க்கட்டு, வீக்கம், சோகை, முப்பிணி, ஈரல் நோய், சுவையின்மை, மார்புவலி, உட்சூடு, வெறி, பெருவயிறு, கைகாலெரிவு, இரசவேக்காடு, மாலைக்கண், கண்டமாலை, தலைவலி ஆகியன திரும். மலநீரைக் கழிக்கும்.

*(2)* **வேம்பு** மரத்தின் சமூலமும் பயன்படும். இது நால்வகைப்படும்-**இதனால்,** பெருநோய், வயிற்றுப்புழு, மாந்தம், நச்சு சுரம், சொறி, சிரங்கு, அம்மைப்புண், காமாலை, மாலைக் கண், புழுவெட்டு, கபப்பிணி, கழிச்சல், வெள்ளை, கட்டிகள், வீக்கம், புண்கள், சுவையின்மை, ஏப்பம், நீடித்த வாதம், மூர்ச்சை, வாந்தி, குன்மம், முறைசுரம், முன்னிசிவு, சன்னி, கரப்பான், கணம், மாந்தம், செவிநோய், மூக்கடைப்பு, தலைவலி, சூதகச்சிக்கல், உடல் குளிர்ச்சி, கடுப்பு, கபக்கட்டு, மலச்சிக்கல் ஆகியன திரும். (இது அரியதொரு கல்ப மருந்தாகும். இதனின்று வேப்பெண்ணெய் எடுக்கப்படுகிறது.)

*(3)* **நன்னாரிக்** கொடியின் வேர் மேலே கருமையாகவும் உட்புறம் வெளுத்தும், நறுமணமுடனிருக்கும்-**இதனால்** அழல்நோய், வண்டுகடி, நீரேற்றம், தாகம், வாநீரூறல், நீரழிவு, புணர்ச்சியின் சூடு, கிரந்தி, சுரவேட்கை, வெள்ளை, அக்குள்வியர்வை நாற்றம், மேகப்புடை, செரியாமை, நீர்க்கட்டு, கண்ணெரிவு, தலைவலி ஆகியன திரும். ஆண்மை பெருகும். (இதை நீரிலிட்டு அருந்துவர்.)

## ★★ 76. தேற்றான்-பூண்டு-கருணையின் பண்பு என்ன?

இவற்றுள் *(1)* **தேற்றான்** விதையும் - பழமும் பயன்படும். **இதனால்,** இருமல், இரைப்பு, சன்னி, ருத்திரவாயு, பல்லை மேகச்சூடு, சூலைவலி, பாண்டு, பெருவயிறு, மூலம், பெரும்பாடு, சோகை, மூர்ச்சை, வாயு, மிகுபசி, உட்சூடு, நீரெரிவு, கண்ணோய், நீரிழிவு, கபக்கட்டு, அஸ்திசுரம், சீதக்கழிச்சல், வயிற்றுக்கடுப்பு ஆகியன தீரும். கழிச்சல் காணும். ஆண்மை பெருகும். (இது கலங்கிய நீரைத் தெளிவாக்கும்.)

(2) வெள்ளுள்ளி (பூண்டு) வெள்ளை நிறமுடன், மிகுகாரமாயிருக்கும்-இதனால் சிறிய கட்டிகள், செவிடு, நாட்பட்ட இருமல், இரைப்பு, வயிற்றுப்புழு, சன்னி, கபத் தலைவலி, வாய்நோய், சுளுக்கு, நீரேற்றம், சீதக்கழிச்சல், மூலம் பசியின்மை, சுவையின்மை, உப்புசம், செரியாமை, சூதகச் சிக்கல், சூலை, காது நோய், கடுப்பு, புண்புரை ஆகியன தீரும். (இது உணவுடன் கூட்டப் பெறும்).

(3) கருணைக் கிழங்கு பலவகைப்படும். இதனால் மூலமுளை, மிகு கொழுப்பு, பவுத்திரம், வாதக்குற்றம், சுரம், குருதிப்போக்கு, பசிமந்தம், சீத - இரத்தக் கழிச்சல், கரப்பான், சொறி, சிரங்கு, கழலை ஆகியன தீரும். (இதில் ஒருவகை உணவில் சேரும்.)

## நோயணுகா விதி!

"தின்ன மிரண்டுள்ளே சிக்க வடக்காமற்
பெண்ணின்பா லொன்றைப் பெருக்காமல் - உண்ணுங்கால்
நீர்கருக்கி மோர்பெருக்கி நெய்யுருக்கி யுண் பவர்தம்.
பேருரைக்கில் போமே பிணி"

-தேரையர்

## அழிந்த சித்தர் நூற்கள்!

"ஏரணம், உருவம், யோகம், இசை, கணக்கு, இரதம், காலம்
தாரணம், அறமே, சந்தம், தம்பம், நீர்நிலம் உலோகம்
ஆரணம், பொருள் என்றின்ன ஆன நூல் யாவும் வாரி
வாரணம் கொண்டந்தோ! வழி வழிப் பெயருமால்!

-செய்யுள்

# XIII வைப்புச்சரக்கு முறைகள்

## ★ 1. வைப்புச்சரக்கு - என்றால் என்ன?

**வைப்புச்சரக்கு** - என்பது பிறவிச்சரக்குக்கு எதிராக செயற்கை முறையில் தயாரித்துக் கொள்ளுவதாகும். அதாவது, மருந்து செய் முறைகளில் சேரக்கூடிய மூலப் பொருட்கள் கிட்டுதற்கரிதாகவோ, மிகமிக விலை உயர்ந்ததாகவோ உள்ள நிலையிலும் - போலி அல்லது கலப்படமான சரக்குகள் மலிந்து விட்ட நிலையிலும் - எளிதிலும், வெளிப்படையாகவும் பெற முடியாத நிலையிலும்-வழக்கொழிந்து விட்ட நிலையிலும்; மூலப் பொருட்களுக்கு இணையான வேறொரு பொருளைச் செய்து கொள்வதே **சரக்கு வைப்பாகும்.** இதுபற்றி அகத்தியர், மச்சமுனி, சட்டை முனி போன்றோர் விரிவாகக் கூறியுள்ளனர். அதன்படி, மூலப் பொருட்களின் பிறவிக் குணம் போன்றே செயல் படுவதற்கேற்ற வேறு சில சரக்குகளையும், சத்துரு மித்துரு பேதங்களுக்கேற்பவும் உரிய முறையில், தக்க அளவில் இணைத்துத் தயாரித்துக் கொள்ளலாம். இதில், சிலவகை பாடாணங்கள்- உபரசங்கள் -காரசாரங்கள்-உயிரினப் பொருட்கள் போன்ற பலவும் அடங்கும். இத்தகைய வைப்புச் சரக்குகள் பிறவிச் சரக்குகளைப் போன்றே, எவ்விதக் குறைபாடுமின்றி செயல்படும் என்ற உறுதி இருப்பதால், நிச்சயம் இவை **போலி சரக்குகள் ஆகாது.** எனவே, இவற்றை தடையின்றி ஏற்கலாம்.

## ★★ 2. துருசு வைப்பு முறை ஒன்றைக் கூறவும்?

ஒரு தாம்பரச்சட்டியில், கல்லுப்பு-800 கி, வெடியுப்பு-50 கி, படிகாரம்-50 கி, ஆகிய அளவில் நன்கு பொடித்துக் கலந்து போட்டு; அவை மூழ்க தயிரும், எலுமிச்சம் பழச்சாறுமிட்டு நிரப்பி, வாயில் செம்புத்தகட்டினால் மூடி, 7-சீலை வலுவாகச் செய்து, ஈரக்கசிவற்ற தரையில் புதைத்து; 5-மாதம் சென்றெடுத்துப் பார்க்க **துருசுப்பச்சை** விளைந்திருக்கும். (இதில், செம்பு-சிவம், உப்பு-சக்தி, தயிர்-விஷ்ணு, பழச்சாறு- பிரும்மா ஆகும்)

## ★★ 3. வங்காளப்பச்சை வைப்புமுறை யாது?

பூச்சூடன்-350 கி, வெள்ளாட்டு அமுரி-14லி. வீதம் கூட்டி

மண்சட்டியிலிட்டு எரித்து, கம்பிகளாக வரவும் இறக்கவும். இது **சீன வைப்பாகும்.** சீனவைப்பு-350கி, வெடியுப்பு-350கி, கல்லுப்பு-5600கி வீதம் பொடித்து, 1400மி.லி. எலுமிச்சம் பழச்சாறு விட்டுப் பிசரி, செப்புப் பானையிலிட்டு, செப்பு மூடியிட்டு சீலை மண் செய்து 60-நாள் பூமியில் புதைத் தெடுக்கவும். இந்த வைப்பு-350கி, வெடியுப்பு-70 கி, செம்புத்தூள்-350 கி. வீதம் கூட்டி பழச்சாறு விட்டு, செம்பு மடியும் வரை அரைத்து, கல்கார்க் புட்டியிலிட்டு மூடி சீலை செய்து, 3-மாதம் குப்பைக் குழியில் புதைத்தெடுக்க - **வங்காளப் பச்சை** ஆகும்.

**★★ 4. கஸ்தூரி வைப்பு முறை ஒன்று கூறவும்?**

புனுகு-1, பச்சைக் கற்பூரம் - 2, காய்ச்சுக்கட்டி-2, வெள்ளெருக்கம் பால் -4, ஊசி மிளகாய் - 8, குங்குமப்பூ-16, மாம்பிசினி-32, ஆகிய பங்கு வீதம் கூட்டி, முயலின் இரத்தத்தில் அரைத்து, ஆலிலையில் அப்பி, காற்றுப் படாமலேயே வைத்து; பிறகு புட்டியிலிட்டு, அதில் சிறிதளவு புனுகுச்சட்டமும் போட்டு வைக்க - **செயற்கைக் கஸ்தூரி** ஆகும்.

**★★ 5. அபினி வைப்பு முறை ஒன்றைக் கூறவும்?**

350-கி வெள்ளெருக்கலம் பூவை நீரில் வேகவிட் டெடுக்கவும். அத்துடன் சுத்தித்த எட்டி விதைத்தூள்-350 கி, வேப்பம் பிசினி - 140 கி, கசகசா-70 கி, பழைய வெல்லம் சரியளவு வீதம் கூட்டி, ஊமத்தன் சாறு விட்டரைத்து, நல்லெண்ணெய் விட்டுப் பிசரிக்கிண்டி எடுக்க **அபினியாகும்.** இதனை அடை தட்டி, சட்டியிலிட்டு மூடி சீலை செய்து, 1-மண்டலம் புதைத்தெடுக்க மாம்பழ மணம் வீசும். (இதில் க்ஷாரம் முடியும்)

**★ 6. சூடன் வைப்பு முறை யாது?**

1400-கி வெடியுப்பை, 14-லி வாழைக் கிழங்கு நீரில் கரைத்துக் காய்ச்சி, குழம்பு பதத்தில் 1400-மி.லி. கருவாப் பட்டைத் தைலம் விட்டு, புட்டு பதத்தில் கருகு முன் இறக்கிப் பொடித்து; செப்புச் சட்டியிலிட்டு, குடத்து நீரை மேலே வைத்தெரிக்க, **சூடன்** பதங்கமாய் மேலேறியிருக்கும். வழித் தெடுக்கவும்.

**★ 7. பச்சைக்கற்பூர வைப்பு பற்றிக் கூறவும்?**

வெடியுப்பு, சீனம், சாரம், சூடன், சாம்பிராணி இவை

வகைக்கு-105 கி, ஏலம்-175 கி, கச்சோலம் - 175 கி. இவற்றை தனித்தனியே பொடித்து, பீங்கான் பாத்திரத்திலிட்டு, மேற்சட்டி மூடி அதில் தீக்கங்கு வைத்து, சூடு பரவவும் பிரித்து விடவும். உள்ளிருப்பது **பச்சைக் கற்பூரம்** ஆகும்.

### ★ 8. சாம்பிராணி வைப்பு பற்றிக் கூறவும்?

வெண்குங்கிலியம் - 4, அரக்கு-2, கருவாப்பபட்டை-1 ஆகிய பங்கு வீதம் சிதைத்து, சட்டியிலிட்டு, ஆவின் நெய் ஊற்றி எரித்தெடுக்க **சாம்பிராணி** ஆகும். (இதில் 64 சரக்கும் சுத்தியாகும்)

### ★ 9. பெருங்காய வைப்பு பற்றிக் கூறவும்?

குக்கில்-1, சுக்கு-2, வெள்ளுள்ளி-2, காபூல்காயம்-2, பனை வெல்லம்-2, உளுவை விதை-4, உளுந்துமாவு-6, கூவிளம் சதை - 8 ஆகிய ப்ங்களவில் கூட்டி, அத்திப்பால் விட்டு மெழுகாய் இடித்து, கடுகுத்தைலம் விட்டுப்பிசரி, ஆட்டுத் தோலில் முடிந்து, 1 - மண்டலம் நெல்புடமிட்டெடுக்க - நயம் **பெருங்காயம்** ஆகும்.

### ★ 10. வெங்காரம் வைப்பு முறை எப்படி?

கல்லுப்பு, நல்லுப்பு, சீனம், அண்ட ஓடு, உளுந்து, குண்டுமணி இவை கூட்டியிடித்து, பால் நிரப்பிக் கிண்டி; சட்டி மூடி சீலை மண்ணிட்டு, ஒரு மண்டலம் புதைத் தெடுக்க **வெங்காரம்** ஆகும்.

### ★ 11. இந்துப்பு வைப்பு முறை என்ன?

கல்லுப்பு, கறியுப்பு, வெடியுப்பு, படிகாரம், நவக்ஷாரம் இவற்றை கழுதை நீரிலும், கோமூத்திரத்திலும் அரைத்து, எரித்து இறக்குமுன் அரைப் பங்கு பூநீறை விட்டு மூடி வைக்க, அனலில் வெம்பி - **இந்துப்பு** ஆகும்.

### ★ 12. சத்திச்சாரம் வைப்பு முறை என்ன?

பூ நீறு - 2, சுவர் உதிர்ந்த மண் - 2, சுண்ணாம்பு - 1 ஆகிய பங்களவில் கூட்டி - அடியில் தொளையிட்டு வைக்கோல் சொருகப்பட்ட குதிரிலிட்டு - நாலு மடங்கு நீரை சிறிது சிறிதாக ஊற்றி, அடிச்சட்டியில் நீரை வாங்கி, பிறகு காய்ச்சி எடுப்பதே - **சத்திச்சாரம்** ஆகும்.

**★★ 13. சீனம் வைப்பு முறையினைக் கூறவும்?**

தாரணியில் பிறக்கும் உப்பு-1, கல்லுப்பு-2 பங்கு வீதம் கூட்டி, பழச்சாறும், தயிரும் வார்த்து, பாண்டத்திலிட்டு மூடிச் சீலை செய்து, மாட்டுக் கொட்டடியில், மண்டலம் புதைத்தெடுக்க - **சீனம்** ஆகும்.

**★★ 14. நவக்ஷாரம் வைப்பு முறை யாது?**

மனிதன், மாடு, குதிரை, யானை, ஒட்டகம், கழுதை, ஆடு (யாவும் ஆண் இனம்) இவற்றின் சிறுநீர் சமன் கலந்து, அதில் 1/8 பங்கு வீதம் சூடன், சீனம், வெடியுப்பு கூட்டிப் பிட்டாய் எரித்து, பாண்டத்திலிட்டு எரிக்க - **நவக்ஷாரம்** ஆகும்.

**★★ 15. இலிங்கம் வைப்பு முறை எப்படி?**

இரசம்-4, கந்தகம்-1, வெடியுப்பு-1 ஆகிய பங்கு வீதம் கலந்து, காசிக்குப்பியிலடைத்து, வாலுகா யந்திரத்திலிட்டு, 18-மணி நேரம் எரித்தெடுத்து, ஆறிய பின் பிரித்தெடுக்க - **இலிங்கம்** ஆகும்.

**★★ 16. சவ்வீரம் வைப்பு முறை என்ன?**

இரசம்-280கி, கந்தி-56கி, கறியுப்பு-700கி. வீதம் கூட்டி இரசபற்பமாக்கிக் கொண்டு - இதற்கு சமனளவு வறுத்த உப்பும்; துத்தம்-140கி, பொட்டிலுப்பு-70கி, பூநீறு-70கி, அன்னபேதி -35கி, சாரம்-18கி. இவையும் கூட்டிப் பொடித்து குப்பியில் பாதியளவாகுமாறு அடைத்து மூடி சீலித்து, 36-மணி நேரம் எரித்தெடுக்க உட்புறம் மேலேறிப் பதங்கித்திருப்பதே - **சவ்வீரம்** ஆகும்.

**★★ 17. பூரம் வைப்புமுறை யாது?**

வெடியுப்பு, சீனம், வெங்காரம் இவை கூட்டியரைத்து, சந்தனக் கியாழத்தில் கூழாய்க் கரைத்து பாண்டத்திலிட்டு, வால்மிளகு போட்டு மூடி, ஒரு மண்டலம் பூமியில் புதைத்தெடுக்க, குருவாகி நிற்பதே - **பூரம்** ஆகும்.

**★★ 18. வீரம் வைப்பு முறை எப்படி?**

வெடியுப்பு, சீனம், கல்லுப்பு, இந்துப்பு, சாரம், துருசு

இவை கூட்டி, நிகரெடை சூதமும் கூட்டியரைத்து, முறைப்படி காசிக்குப்பியிலிட்டு எரித்தெடுக்க - **வீரம்** ஆகும்.

## ★★ 19. இரச கற்பூரம் வைப்பு முறை என்ன?

55-கி. கந்தகத்தை உருக்கி, அதில் 280-கி. இரசம் விட்டுக் கிண்ட கறுத்துத்தூளாகும். ஒரு பாண்டத்தில் பாதி செங்கல் தூளையிட்டு, அதில் 650-கி. கறியுப்பையிட்டு, அதன் மீது, முன் தூளையிட்டு, சட்டிவாய் மூடி சீலித்து, 12-மணி நேரம் எரித்தெடுக்க, மேலே கட்டியாக எறி ஒட்டியிருப்பதே - **இரசகற்பூரம்** ஆகும்.

## ★ 20. சிங்கிபாடாணம் வைப்பு முறை என்ன?

வெடியுப்பு-10கி. கந்தி-20கி. வீதம் பொடித்து; 80-கி. காரீயத்தை உருக்கி அதில்தூவி, மூடிச்சீலை செய்து, 36-மணி நேரம் கமலாக்கினியாக எரித்தெடுக்க, கம்பிபோலிருப்பதே - **சிங்கிபாடாணம்** ஆகும்.

## ★★ 21. அயச் செம்பு எடுப்பது எப்படி?

அயத்தூள்-4, மடல்துத்தம்-4, சாதிலிங்கம்-2, துருசு-1, பொரிகாரம்-2 ஆகிய பங்களவில் கூட்டி, எலுமிச்சம் பழச்சாற்றில் 3-சாமம் அரைத்தெடுத்து, மூசையிலிட்டு குகையமுழுக ஊதியெடுக்க-**அயச்செம்பு** ஆகும் (மதியிலிடலாம்)

## ★ 22. கந்தகச் செம்பு எடுப்பது எப்படி?

கந்தி-2, வெங்காரம்-1 பங்கு வீதம், தேங்காய்ப்பாலில் 4-சாமமரைத்து, அயச்சட்டியிலிட்டு, கமலாக்கினியாக எரித்து கடுகு பதத்தில் வழித்து, சமன், சூதம், கூட்டி, பழுபாகல் சாற்றில் 4-சாமமரைத்து, கோழிபுடமிடக் களங்காகும். காரம் கூட்டியுருக்க - **கந்தகச் செம்பு** ஆகும். (மதியிலிடலாம்)

## ★ 23. துருசுச் செம்பு எடுப்பது எப்படி?

துருசு-100கி. கந்தகம் -75கி. வீதம் கூட்டி, பழச்சாற்றிலரைத்துப் புடமிடக் கரிபோலாகும். உடன் வெங்காரம் கூட்டி, முன் சாற்றிலரைத்துப் புடமிட்டெடுத்து உருக்க - **துருசுச் செம்பு** ஆகும். (ரவி மதியிலிடவும்)

### ★★ 24. அயவங்கம் எடுப்பது எப்படி?

ஆடுதின்னாப்பாளைச்சாறு, கழுதையமுரி, குதிரை நீர், நிழலில் உலர்த்திய சிறு கண்பீளைச் சூரணம் இவை சமன் கலந்து–அதில், பழுக்கக் காய்ச்சிய மண்வெட்டியை சில முறை தோய்த்தெடுக்க **அயவங்கம்** கழறும். (ரவி, மதியிலிடவும்)

### ★★ 25. தாளக வங்கம் எடுப்பது எப்படி?

சுண்ணாம்பும், பூநீறும் சமனாக அமுரிவிட்டரைத்து, இதற்கு பாதியளவு தாளகக் கட்டிக்குக் கவசித்து உலர்த்தி, சீலைமண் செய்து, மணல் மறைவிலிட்டுப் புடமிட - **தாளகவங்கம்** ஆகும். (இதனைச் செந்தூரித்து ரவி, மதியிலிடப் பழுக்கும்)

## சித்தர்களின் சிறப்பு!

"அணிமாதி யட்ட சித்திகளையும் பெற்றவர்களே
செய்யவேண்டுவனவற்றைச் செய்து முடித்தவர்களே
எண்வகைக் கன்மங்களையும் ஜயித்தவர்களே. சித்தர்கள்".

– சிலப்பதிகாரம்

## வகாரத்திற்குரிய வரிசைக் கிரம முறை!

நலமான கல்லுப்பால் பூரங்கட்டே
பூரத்தால் தாளகத்தைக் கொன்றுநீயும்
புகழான தாளகத்தால் வங்கம் கொல்லு
வாரத்தால் வங்கத்தால் நிமிளை கொல்லு
வாதான நிமிளையினால் சாரம் கொல்லு
நீரத்த சாரத்தினால் துரிசைத்தான் கொல்லு
நேரான துரிசியினால் தங்கம் கொல்லு
வேரத்த தங்கத்தால் சூதத்தைக் கொல்லு
வெட்ட வெளியாச்சு திந்த வாதந்தானே!

# XIV - சிட்கா மருந்து முறைகள்

அதிகச் செலவும், கடும் உழைப்பும், காலவிரயமும் கொண்டு அரிய முறையில் தயாரிக்கப்படும் பெரிய மருந்துகளும் கூட அளிக்கத்தவறும் அருங்குணங்களை - எளிதில் கிட்டும் மூலிகை - சம்பசைச்சரக்கு முதலிய ஓரிரு எளிய மருந்துகளின் கலவையே சாதித்து விடுவதுண்டு இதனையே சிடுகா - கோஷாயி முறை அல்லது சிட்கா மருந்துகள் எனக் கூறப்படும். பெரிய மருந்துகள் கைவசம் இல்லாத போதும், அவசரத்திற்கும், முதலுதவியாகவும் இவற்றை மேற் கொள்ளலாமெனினும் - பல சமயம் இவையே நிரந்தரக் குணமளித்துவிடுவது முண்டு. இங்கு அவ்வகை எளிய. தீங்கற்ற கைப்பக்குவ முறைகள் சிலவற்றைக் கூறப்பட்டுள்ளது

## 1. சிட்கா மருந்துகள் சிலவற்றைக் கூறவும்?

**(1)** குமரிச்சாறு-30மி.லி, மஞ்சட்தூள்-1கி. வீதம் கூட்டி காலை மாலை தர குழந்தைகளின் ஈரல் குலைக்கட்டி, வீக்கம், கழலை நீங்கும் (இதற்கு, தனி மரமஞ்சள் துளும் கொடுக்கலாம்)

**(2)** பனம் பூவைச் சுட்ட சாம்பல் -500மி.கி. வீதம் - அல்லது கோநீரிலரைத்த காட்டு அவரை - 3கி. வீதம் பாலுடன் தர ஈரல் வீக்கம் தீரும். (அளவு கூட்டி பெரியவர்களுக்கும் தரலாம்)

**(3)** கழற்சியிலைக் கொழுந்து விழுது சுண்டையளவில் தந்து - அச்சாறும், எண்ணெயும் கூட்டிக் காய்ச்சி மேலே பூசியும் வர ஈரல் குலைக்கேடு, நரம்புக்கோளாறு, வாயு, விரைவீக்கம் தீரும். (பெரியவர்களுக்கு அளவைக் கூட்டவும்)

**(4)** மிளகு தக்காளியிலைச் சாற்றை முறித்து - 25மி.லி வீதம், சர்க்கரை கூட்டி மூவேளையும் தர ஈரல் கேடு, வீக்கம், அக்கரம், கரப்பான், உள்வேக்காடு, வாய்ப்புண் மாறும்.

**(5)** ஐம்பது நாகதாளிப் பழத்தை முள்ளுடன் இடித்து 4.லி. நீரிலிட்டு கால்பங்களவில் காய்ச்சி வடித்து, உடன் 1½-கிலோ சீனி கூட்டி மணப்பாகு செய்யவும். இதில் 10-மி.லி. வீதம் மூவேளையும் தர ஈரல் குலைநோய், பால்கட்டி விலகும்.

**(6)** கவிழ்தும்பையிலை, புழுங்கலரிசி, வெல்லம் இவை 100-கி. வீதம் கூட்டியரைத்து, நல்லெண்ணெயில் வேகவிட்டு 3-நாள் 6-வேளை தர கணத்தின் முக்கல், கிராணிக்கடுப்பு தீரும்.

(7) ஒரு ஆண்டு நிறைந்த அவரை அல்லது மிளகு தக்காளி இலையின் சாறு-10 மி.லி வீதம், ஒரு சிரங்கையளவு எருமைத் தயிருடன் தர கணத்தின் முக்கல், வயிற்றுக்கடுப்பு நீங்கும்.

(8) பருத்திப் பிஞ்சும், சீரகமும் கூட்டி - அல்லது, உதியமரப் பட்டையை, அரைத்து கழற்சியளவு வீதம் பாலுடன் கலந்து தர கணத்தின் வயிற்றுளைச்சல் - மூலக்கடுப்பு நீங்கும்.

(9) சுக்கு, மிளகு, திப்பிலி, வசம்பு, கோரோசனை வகைக்கு -10கி. உத்தாமணி கொழுந்துயிலை -20கி. வீதம் அரைத்து 250.மி.லி. அதே சாற்றில் கரைத்து வடித்து முறித்து, சங்களவில் தர மாந்தம், பொருமல், வலி, செரியாமந்தம் விலகும்.

(10) கொடுப்பை, கொட்டைக்கரந்தை, இஞ்சி, சங்கு, சின்னி இவற்றின் சாறும், சிற்றாமணக்கு நெய்யும் சமன் கூட்டிக் காய்ச்சி வடித்து 10.மி.லி. வீதம் தர சகல மாந்தமும் தீரும்.

(11) பூரம் -1, வாளப்பருப்பு -9, கடுக்காய்த்தோல் -12 பங்கு வீதம் கூட்டி நீர் விட்டு மெழுகாயரைத்து, மிளகளவு உருட்டி, ஒன்றுவீதம் தர மாந்தம், சுரம், மலக்கட்டு தீரும்.

(12) ஏழு வேலிப்பருத்தியிலையும், 11 - மிளகும் கூட்டியரைத்து, இப்படி 5-நாள் காலையில் கொடுத்துவந்து; பிறகு 15-நாள் கழித்து மீண்டும் முன்போல் தர பெண் திரளுவாள் (கரப்பான் பொருட்களை நீக்கவும்)

(13) காட்டுக் கொள்ளை முறைப்படிக் குடிநீரிட்டு வடித்து; மூவேளையும் 50-மி.லி வீதம் தர-பேய், பிசாசு குற்றங்கள் நீங்கி-பெண் திரளுவாள்.

(14) பேய்க்குமுட்டி வேர், கார்பேகம், புகையூரல் இவை வகைக்கு சுண்டையளவாகப் கூட்டியரைத்து, கண்டகாரிப்பழச் சாற்றுடன் காலை மாலை கொடுத்து வர - பெண் பூப்பெய்துவாள்.

(15) பிரமதண்டு வேர்ப்பட்டைச் சூரணம்-3கி. வீதம் பாலுடன் தரமுலைப்பால் சுரக்கும். (சிலருக்கு கழிச்சல் காணும்)

(16) ஆலம்விழுதுத்துளிர் - 10கி, ஆலம்விதை - 10கி, வீதம் கூட்டி நெகிழ அரைத்து, 100.மி.லி காய்ச்சிய பாலுடன் காலைமாலை உட்கொள்ள தாய்ப்பால் சுரக்கும்.

(17) பப்பாளிக்காயை அல்லது முருங்கைக் கீரையை சமைத்து உண்டுவர அமுதப் பால் பெருகும்.

(18) அரிசியுடன், வெந்தயமும் கூட்டி கஞ்சிகாய்ச்சி - அல்லது, வெந்தயக்களி கிண்டி உண்டுவர தாய்ப்பால் பெருகும்.

(19) மல்லிகைப் பூவை மார்பில் வைத்துக்கட்ட முலைப்பால் வற்றும். இதேபோல் நவ மல்லிகை எனப்படும் இருவாட்சியின் இலை, பூ, வேர் முதலியவற்றையும், முலைகளில் வைத்துக்கட்ட பால் வற்றும்.

(20) ஐநூறு கிராம் ஈனாக்கிடேரி எருவின்தூளை, 2-லி நீரிலிட்டுக் காய்ச்சி, பாதியளவில் வடித்து, வேளைக்கு 150-மி.லி. வீதம் 10-நிமிடத்திற்கொருமுறை தர மரித்த சிசு வெளிப்படும் (அடிக்கடி வயிற்றைப் புரட்டிவிட வேண்டும்)

(21) சேவகனார் கிழங்கை முலைப்பாலில் உரைத்து கொப்பூழில் பூச எளிதில் குழந்தை பிறக்கும். (இதனையே தேனில் உரைத்து குறியில் பூசிப்புணரவும் செய்யலாம்)

(22) நாயுருவி வேர் அல்லது இலையை நீர்விட்டுக் குழம்பா யரைத்து, வயிற்றில் அப்பி இறக்கித் தடவி விட சுகப்பிரசவ மாகும்.

(23) ஆமணக்கு நெய் -1, சதாப்பிலைச்சாறு -3,ஆகிய பங்குவீதம் கூட்டி மெழுகு பதமாகக் காய்ச்சி வடிக்காமல் எடுத்து - கல்கத்துடன் கலக்கி, 15-மி.லி. வீதம் தர சூதகச் சிக்கல் தீரும். (இரண்டும் சமனாக காய்ச்சாமலும், 20-மி.லி. வீதம் தரலாம்)

(24) பொருக்கும் நரம்பும் நீக்கிய முற்றிய வேப்பமரப்பட்டை -4, பொரிகாரம் -3, தோல்சீவிய சுக்கு -1, கருப்பட்டி -8 ஆகிய பங்குவீதம் கூட்டி மெழுகாக்கி - சுண்டையளவாக, 3-முறை மாதவிலக்கு சமயம்தர சூதகக்கட்டு-வலி-வாயு தீரும்.

(25) வீரம், பூரம், க்ஷாரம், சீனம் இவை 10-கி. வீதம் நுணுக்கி கோப்பையிலிட்டு, 5-சிற்றண்ட கருவும், 10-பழச்சாறும் விட்டுக்கிளறி, ரவியில் சுண்டவைத்து, தேன்கூட்டி மெழு காயரைத்து-குன்றியளவாகத்தர சூதக வாயு-கட்டு - வலி தீரும்.

(26) சீனம் -20, இஞ்சி -10, எலுமிச்சம்பழம் -5, காயம் -2 பங்குவீதம் கூட்டி எரித்துக் கரியாக்கவும். இதில் 2-கி. வீதம் வெண்ணெய், அல்லது நெய்யுடன் 6-வேளை தர துவாலை நிற்கும்.

(27) கல்லத்தி, நாவல், மருது இம்மரப்பட்டைகள் சமன்

கூட்டிச் சூரணித்தோ, குடிநீரிட்டோ தேனுடன் தர பெரும்பாடு, சீதரத்தக்கழிச்சல், உள்வேக்காடு நீங்கும்.

(28) பறங்கிப்பட்டையும், வெள்ளைக் காக்கணத்தி சமூலமும் சரியளவு கூட்டிக் குடிநீரிட்டு 30-மி.லி. வீதம் காலைமாலை தர பெரும்பாடு, மேகம், அரிப்பு, விரணம் நீங்கும்.

(29) விழுதிவேரை பாலிலரைத்துக்கலக்கி-அல்லது, முருங்கை விதைத்தூளை நெய்யில் குழப்பி, மாதவிலக்கின் 3-நாளும் கழற்சியளவாக உட்கொள்ள மலட்டுத்தன்மை மாறும்.

(30) அமிர்தவல்லி, தூதுளை, பிரமி, வேம்பு சிவதை, சுக்கு, சிறுகுறிஞ்சான், ஆடாதோடை இவை சமன் கூட்டியரைத்து, இதற்கு 4-பங்கு நெய்யிலிட்டுக் காய்ச்சி வடித்து, 15-மி.லி. வீதம் தர மலடுதீரும். (மேற்படி சாறுகளும், நெய்யும் சமன் கூட்டியும் காய்ச்சலாம்)

(31) பொரித்த காயம்-1, பொரிகாரம்-1, காந்தம்-1, தேங்காய்-4, வாளம்-4 ஆகிய பங்கு வீதம் கூட்டி, பழச்சாறு விட்டு 6-மணி நேரம் அரைத்து; குன்றியளவாக 6-வேளைதர, ஓரிரு குழந்தைக்குப் பின் ஏற்பட்ட (கதலி, அல்லது காக) மலடு தீரும்.

(32) வெள்ளறுகு சமூலம், பங்கம் பாளைச்சமூலம், நாய்க் கொட்டான்வேர், கருடன் கிழங்கு இவை சமன் கூட்டிப் பொடித்து கோப்பையிலிட்டு, வற்றவற்ற 5-முறை வெள்ளாட்டு அமுரி விட்டுப் பாவனை செய்து சூரணிக்கவும். இதில் மூவிரலளவாக பெண்களின் மாதவிடாயின் போது 3-தினம் 6-வேளை தர கருத்தடையாகும்.

(33) முருங்கைப்பட்டையை நீர்தெளித்து இடித்தசாறு, வேளைக்கு 30-மி.லி. வீதம் மாதவிலக்கு சமயம் உட்கொள்ள கருவுண்டாகாது.

(34) மலை வேப்பிலைத்தூளுடன், வேப்பெண்ணெயும், பசுவின் வெண்ணெய் அல்லது தேன் மெழுகும் கூட்டி உருக்கி ஆண்குறியில் தடவிப்புணர பெண் மலடாவாள்

(35) பேரீச்சங்காய்களை தேவையான அளவு நீரிலிட்டு நன்கு ஊறிய பின் வற்றக் காய்ச்சி வடித்து, தேக்கரண்டியளவாக அடிக்கடி கொடுத்துவர கக்கிருமல் மாறும்.

(36) புங்கம் பருப்பும், மிளகும் கூட்டி நீரிலரைத்து

மிளகளவாக உருட்டவும். இதில் ஒன்று வீதம் தர கக்குவான் தீரும்.

(37) ஐம்பது கிராம் அப்பக் கோவைக் கிழங்கை அரைத்து, 250-மி.லி. நல்லெண்ணெயில் கலக்கிக் காய்ச்சி வடித்து, 10-துளி வீதம் மூவேளையம் புகட்டி வர கக்குவாய் தீரும்.

(38) முசுமுசுக்கையிலையைப் பிட்டவித்து, கால்பங்கு மிளகு கூட்டியரைத்து, எருமை வெண்ணெயுடன் சாதத்திலிட்டுப் பிசைந்து உண்ண வரட்டிருமல் புகையிருமல் மாறும்.

(39) நிலவிளாயிலையும், மிளகும் சமன் கூட்டிய சூரணம், 2-கி. வீதம் நெய்யுடன் தர இருமல், வறட்டிருமல், உட்சூடு தீரும்.

(40) செங்கடுக்காயின் தோல் -6, அதிமதுரம்-1, மிளகு -1 பங்கு வீதம் கூட்டிச் சூரணித்து; வேளைக்கு 3-கி. வீதம் தேனுடன் தர 3-நாளில் சயம் குறையும். ஒரு மண்டலமுண்ண தீரும்.

(41) சுக்கு-50கி, பூண்டு-50கி. வீதம் கூடடி, 1-லி. கழுதை லத்திச்சாற்றிலரைத்து; சுண்டையளவில் உருட்டி; காலை மாலை தர ஒருவாரத்தில் சுவாசகாசம் தீரும். வாயுவும் நீங்கும்.

(42) விடதாரி, முட்குமிழ், கரு வாகை, முசுமுசுக்கை, உப்பிலாங்கொடி இவற்றின் இலைகளை சுண்டையளவாக கூட்டியரைத்து பாலுடன் தர உளமாந்தை, கபச்சிக்கல் மாறும்.

(43) நூறு கிராம் பூவரசம் பட்டைத்தூளின் நடுவில், 25-கி. அரிதாரத்தை வைத்து விரலால் அழுத்தி, ஓடுமூடிச் சீலைமண் செய்து 20-எருவில் புடமிட நீறும். இதில் அரிசி எடைவீதம் தேனுடன், காலையில் தர கபக்கட்டு, கபப்பிணி விலகும்.

(44) தாளகம் -4, சீனம் -10 ஆகிய பங்குவீதம் கூட்டி, தூதுளை, கண்டகாரிச்சாறுகளில் 6-மணி நேரம் வீதம் அரைத்து சிறுபுடமிடவும். இதில் குன்றியளவில் தேனுடன் தர கபப்பிணி தீரும்.

(45) சீனத்தை மிதிபாகலிலைச் சாற்றில் 9-மணி நேரம் அரைத்து உலர்த்தி குகையிலடைத்து அழுக ஊதி யெடுக்கவும் இதில் குன்றியளவில் சுடுநீருடன் தர கபக்கட்டு தீரும்.

(46) நீற்றிய கற்சுண்ணமும், ஆமணக்குநெய்யும் சமன் கலந்து

கொதிப்பித்து, இளஞ்சூட்டுடன் தொண்டை மீது தடவ தொண்டைவலி, குரலடைப்பு, தொண்டைக்கட்டு தீரும்.

(47) பொரித்த சீரகமும், கறியுப்பும் சமன் கூட்டிச் சூரணித்து 3-கி. வீதம் சுடுநீருடன் தர நெஞ்சுவலி, பசியின்மை தீரும்.

(48) சுக்கும், கற்கண்டும் சமனாகக்கூட்டி நுணுக்கி, 3-கி. வீதம் சுடுநீரில் தர மார்புவலி, மூச்சுத்திணறல், வாயுத்தொல்லை தீரும்.

(49) அடைகாத்த சிற்றண்ட ஓடு -40கி. பூரம் -20கி. வீதம் கூட்டி, எலுமிச்சம்பழச்சாற்றில் 9-மணி நேரம் அரைத்து, 30-எருவில் புடமிட்டு; குன்றியளவாக நெய் அல்லது பாலுடன் தர சலவை, வெட்டை, தந்திமேகம், குறிப்புண் தீரும்.

(50) நூறு மி.லி. சீமைக்காடி (வெனிகர்) நீருடன், குளிர்ந்த தண்ணீர் கலந்து அருந்தி வர சலவை, மிகுவியர்வை மாறும்.

(51) பால்துத்தம், படிகாரம், சாக்பவுடர் சரியளவு கலந்த தூளை மேலே பூசிவர சலவை மாறும் (இதற்கு நவபாடாண மெழுகு அல்லது செந்தூரமும் உட்தரலாம்)

(52) கீழாநெல்லிவேர், இண்டன் வேர், கொட்டைப்பாக்கு இவை சமனெடை கூட்டி நீர்விட்டரைத்து சிறு கழற்சியளவாக உருட்டி, காலை மாலை தர காமாலை, வறட்சி மாறும்.

(53) அமுக்கராக் கிழங்குத்தூளை, வேளைக்கு 5-கி. வீதம் எருமை மோருடன் தர பித்தபாண்டும் - வேப்பமரப்பட்டைச் சாறுடன் தர காமாலையும் குணமடையும்.

(54) ஒரு இளநீரின் கண் திறந்து, உள்ளே 4-தேற்றான் விதைகளையிட்டு ஊறவிட்டு, காலையில் அதே இள நீரிலரைத்துக் கலக்கித் தர காமாலை, வறட்சி, சோர்வு மாறும்.

(55) பேதிக்கிழங்கு -1, நிலக்கடம்புவேர் -1, மாசிப்பத்திரி -1, கரபஸ்ஓமம்-1, காரிகியூன்-1, காக்கணவிதை-5 ஆகிய பங்கு வீதம் கூட்டி பன்னீர் விட்டரைத்து சுண்டையளவாக உருட்டித் தர மகோதரம் சோகை, பாண்டு, மலநீர்க்கட்டு மாறும்.

(56) காக்கணவிதை, சிவதை, கடுக்காய், கரபஸ்ஓமம், ரூமிச்சோம்வு, அந்தரக்கொடி இவை சமன் கூட்டி பன்னீரிலரைத்து சுண்டையளவு உருட்டி, இருவேளையும் தர மகோதரம், மலநீர்க்கட்டு, பசிக்கேடு, செரியாமை, உட்சூடு விலகும்.

(57) ஆவின்பால் அல்லது வாழைக்கிழங்குச் சாற்றுடன் சரியளவு கோநீர் கூட்டி-வேளைக்கு 50-மி.லி. வீதம் தர மலநீர் பிரிந்து ஊதல், சுரப்பு, சோகை, காமாலை, பாண்டு தீரும்.

(58) சுண்டைவற்றல், மாம்பருப்பு, மாதுளம் ஓடு, கறிவேப்பிலை, வெந்தயம், சுக்கு இவை சமன்கூட்டிய சூரணம் -5கி. வீதம் மோர், வெண்ணெய், தேன் அல்லது வாழைப் பூச்சாற்றுடன் தர கிராணி, சீத - ரத்தபேதி, மூலக்கடுப்பு, வாயு தீரும்.

(59) மேற்றோல் நீக்கிய கோவைத் தண்டைச் சிதைத்து நீர்ச்சத்துப்போக வறுத்தும், பொன் வறுவலாக்கிய ஓமத்தை தேய்த்து உமி போக்கியும் சமனளவு கூட்டிச் சூரணிக்கவும். இதில் ஐவிரலளவில் நல்லெண்ணெயுடன் குழப்பியுண்ண மூலகிராணி, செரியாக்கழிச்சல் நீங்கும். (பாலன்னம் கொள்ளவும்)

(60) அபின், கல்மதம், சாதிக்காய், சாஸ்திரபேதி இவை சரியளவு கூட்டி, அத்திப்பால் விட்டரைத்து குன்றியளவு உருட்டவும், இதில் ஒன்று வீதம் மூவேளையும், சுடுநீருடன் கொள்ள கிராணி, சீத - ரத்தக் கழிச்சல், மூலக்கடுப்பு இவை நீங்கும்.

(61) கிராம்பு, கருவாய்ப்பட்டை, சாதிக்காய், சுக்கு, மிளகாய்வற்றல் சரியளவாகக் கலந்து நயம் சீமைச்சாராயம் விட்டரைத்து அதிலேயே கலக்கித்தர வாந்திபேதி நிற்கும்.

(62) வெள் வேல மரப்பட்டையை சிதைத்து முறைப்படி குடிநீரிட்டுத்தர வாந்திபேதி, குருதிகக்கல் நிற்கும்.

(63) சுக்கு -10, ஓமம் -5, மிளகு -5, சூடன் -5, அபினி-5 ஆகிய பங்கு அளவில் கூட்டி, தேன் விட்டரைத்து மிளகளவு உருட்டி, 4-மணிக்கொருமுறை தர வாந்திபேதி நிற்கும்.

(64) மிளகு, சுக்கு, ஓமம், வாய்விடங்கம் வகைக்கு-25கி. நிலவாகை -100கி இவற்றைச் சூரணித்து தனியாகவோ அல்லது வெல்லம் கூட்டிக்கிண்டியோ; வேளைக்கு 10-கி அளவாக சுடுநீருடன் தர குன்ம வாயு - வலி, பொருமல் உடன் தீரும்.

(65) சத்திச்சாரணைவேர், கடுக்காய், கறியுப்பு, சுக்கு இவை சமன் கூட்டி, முறைப்படி குடிநீர் வடித்து, 30-மி.லி. வீதம் இருவேளையும் தர வயிறு பொருமல், வாயு, வீக்கம் நீங்கும்.

(66) வெள்ளைக் காக்கணத்தி வேரும், மிளகும் சரியெடை

கூட்டியரைத்து, சுண்டையளவாக சுடுநீருடன் தர செரியாமை, வாயு, மலக்கட்டு விலகும்.

***(67)*** ஒரு சட்டியில் அருக்கன் இலைகளும், அதில் கால் பங்களவு சோடாவுப்பும் கூட்டி, ஒன்றன் மீது ஒன்றாக தேவையான அளவு பரப்பி மூடி எரித்து, யாவும் வெந்தபின் உப்பை மட்டும் எடுத்து, உடன் பாதியளவு பொரித்த காயத் தூளையிட்டுக் கலக்கவும். இதில், மூவிரலளவாக சுடுநீர், மோர் அல்லது சோடா நீருடன் தர வயிற்று வலி, பசியின்மை, வாயு தீரும்.

***(68)*** வெள்ளாட்டுப்பால், தேன், சருக்கரை மூன்றும் சமனளவு கூட்டி, நசியமிட சீழ்ப்பீனிசம், மூக்கில் குருதி வடிதல் நிற்கும்.

***(69)*** ஆடாதோடைச்சாறு -20மி.லி. தேன்-20மி.லி வீதம் கூட்டி உட்கொள்ள நாசியில் குருதிவடிதல், பீனிசம், சுவாசகாசம், இருமல், குருதிகக்கல், திணறல், கபம் விலகும்.

***(70)*** வில்வயிலை-50கி. நாகணம் -50கி. வீதம் இடித்து, 50-மி.லி நல்லெண்ணெயிலிட்டுக் காய்ச்சி வடித்து - நசியமிட பீனிசம், மூக்கு சதைவளர்ச்சி, சலதோடம், தலைகனம் நீங்கும்.

***(71)*** தைவேளை வேர் அல்லது இலையுடன் கடுகு கூட்டியரைத்து, துணியில் முடிந்து வேம்பு நெய்யில் நனைத்து அதே எண்ணெய் விளக்கில் எரித்து அமர்த்தி, நெற்றியில் ஒற்றிடமிட தலை வலி - கனம் தீரும்.

***(72)*** நல்லெண்ணெய் -1லி, செவ்வலரிப்பூச்சாறு -1லி, மிளகு -150கி. வீதம் கூட்டி, காய்ச்சிவடித்து - வாரமிருமுறை தலைமுழுகி வர தலைவலி, மண்டைப்பாரம், பீனிசம் விலகும்.

***(73)*** சிற்றகத்திப் பூவின் விழுது -1, நல்லெண்ணெய் -2 பங்கு வீதம் கூட்டி, காய்ச்சிவடித்து - தலைமுழுகிவர மண்டைப் பாரம், தலைவலி, பீனிசம், கண்ணோய், நீரேற்றம். மேகநீர் மாறும்.

***(74)*** தலைமயிரை சிறுக வெட்டி, சமன் வீரத்தூள் கூட்டி, நாகத்தை உருக்கி அதற்கு கிராசமிட வெட்டையாகும். அதை குப்பைமேனிச் சாற்றில் ஒரு நாள் அரைத்து புடமிடச் செந்துரமாகும். இதில் அரிசி எடை வீதம் நெய் அல்லது வெண்ணெயுடன் தர கண்ணோய்கள், மூலம், தாதுநட்டம் விலகும்.

*(75)* கொடுப்பைச்சாறு -4, நல்லெண்ணெய் -1 பங்குவீதம் கூட்டிக் காய்ச்சி வடித்து - தலைமுழுகி, பதமுமிட்டு வர சகல கண்ணோயும், மேகமும் நீங்கி, கண்ணொளி கூடும். (பொன்னாங்காணிக்கீரையை தினமும் உண்டுவர வியத்தகு பலன் கிட்டும்)

*(76)* வில்வப்பழச்சதையும், பாதாம் பருப்பும் சமனளவு கூட்டி மெழுகாயரைத்து வில்லைதட்டி, ஒரு தாம்பரம் அல்லது பித்தளைத் தட்டில் அப்பி, சிறிது சாய்வாக கடும் ரவியில்வைக்க எண்ணெய் கசியும். இதனை கண்களிலிட்டுவர கண் படலம் - சதைவளர்ச்சி-சிவப்பு - எரிச்சல்-சூடு-நீர்சொரிதல் தீரும்.

*(77)* சிற்றரத்தை, திப்பிலி, சுக்கு கூட்டிக்குடிநீரிட்டு, இறக்குமுன் வதக்கிய நொச்சியிலைச்சாறு சிறிதுவிட்டு, வடித்து -50மி.லி. வீதம் காலை மாலை தர சூலை, குடைச்சல், வாயு, வலி, வீக்கம், இடுப்புவலி தீரும். (இதோடு, இலுப்பை, புங்கு, வேம்பு நெய்களுடன், 1/8- பங்கு சூடன் கூட்டி வெதுப்பி, மேலே பூசலாம்.)

*(78)* மிளகு-4, இலவங்கம்-2, சாதிக்காய்-1 பங்கு வீதம் கூட்டி, அறுகங்கட்டைக் குடிநீரில் 6-மணி நேரம் அரைத்து பாக்களவு உருட்டி, மூவேளையும் தர சூலை, இடுப்புவலி, முரடு கட்டல், வீக்கம், வாயு, குடைச்சல்தீரும். (இதோடு, கழுமண்டியில் அருக்கன் பூவையிட்டுக் காய்ச்சி மேலே பூசலாம்)

*(79)* கடுகு, வசுவாசி, முருங்கைப்பட்டை, மாவிலங்குப் பட்டை, பூண்டு சமன் கூட்டியரைத்து, திருகுகள்ளியை வாட்டிப்பிழிந்த சாற்றிலிட்டு, கொதிப்பித்து குழம்பு பதத்தில் பூசிவர சூலை, வாயு, வலி, குடைச்சல், வாதம், திமிர் விலகும்.

*(80)* சூதம், கந்தி, தாளகம், மனோசிலை இவை சமனாக, காடியிலரைத்து துணியில் தடவி திரித்து, 10-பங்கு வேம்பு அல்லது ஆமணக்கு நெய்யிலிட்டு, சுடர்த் தைலமிறக்கி; 5-10 துளிவீதம் வெற்றிலையில் தடவியுண்ண சகலவாதமும், நடுக்கலும் தீரும்.

*(81)* இலவங்கப்பட்டைத் தூளை, ஆலிவ் அல்லது நல்லெண்ணெயிலிட்டு, கலக்கிக் கலக்கி 21-நாள் கடும் ரவியிலிட்டெடுத்து, மேலே பூசிவர வாய் கோணல் மயிர்க்கூச்சம், மதமதர்ப்பு, தேள்-விரியன் கடிவிஷம், சூலை ஆகியன நீங்கும்.

*(82)* எள்ளு, வேம்பு, புங்கு, புன்னை, கொட்டை முத்து இவற்றின் நெய்களை சரியளவாகக் கலந்து காய்ச்சி வடித்து

- தலை முழுகிவர வாதம், தனுர்வாயு, சன்னி, சுரம், இசிவு, தோடம் நீங்கும்.

**(83)** கழிவு நீக்கிய மயில்கறியை இடித்து, 12-லி நீரிலிட்டு, 1/8-பங்காய் குறுக்கி வடித்து, உடன் சமனளவு நிம்ப நெய், சித்திரமூலவேர்ப்பட்டை -50கி. வாலுளுவையரிசி -50கி. அமுக்கரா -50கி. வீதம் கலந்து காய்ச்சி வடித்து; 5-மி.லி. வீதம் தந்து, மேலேயும் பூசிவர பாலவாதம், பக்கவாதம், சூலைதீரும். (பெரியவர்கட்கு 10-மி.லி.யாகும்)

**(84)** வெள்ளைப் பூண்டுப்பல்லை இடித்து, இருபங்கு வேப்பெண்ணெயிலிட்டுப் பதமுறக் காய்ச்சி வடித்து; 5-மி.லி வீதம் உட்புகட்டி, மேலே பூசியும் வர இளம்பிள்ளைவாதம் நீங்கும்.

**(85)** ஐநூறு கிராம் வெண்தாமரைப் பூவிதழை இடித்து, 8-லி. நீரிலிட்டுக் காய்ச்சி, 1/2-லி. அளவில் வடித்து 50-மி.லி வீதம் மூவேளையும் சர்க்கரைகலந்து தர இளம்பிள்ளை வாதம், மூளை வளர்ச்சியின்மை, ஞாபகமறதி, பலவீனம், உட்சூடு விலகும்.

**(86)** வெறியுற்றவனின் உச்சந்தலையில் கீறி, அங்கு இலுப்பைப் பிண்ணாக்குத் தூளை அப்பிவைத்து, 10 எலுமிச்சம்பழத்தை இரண்டாகப் பிளந்து அரக்கித்தேய்த்து, பிறகு தலைக்கு குளிர்ந்த நீர் வார்க்கவும். இப்படி 10 தினம் செய்ய சகலவித பைத்தியமும், வெறியும், பிரமையும் விலகும்.

**(87)** கொம்மட்டிப் பழத்தின் தோலும் - விதையும் நீக்கிவிட்டு, காலையில் மட்டும் கழற்சியளவு உட்தந்து - அதே சதையை காலையும், மாலையும் உடல் முற்றும் துவாலையிட்டு, மாலையில் குளிர்ந்த நீரைத் தலைக்கு விட்டுக்குளிக்கச் செய்துவர பைத்தியம், புலம்பல், வீண்பயம், வெறி, மனக்குழப்பம் தீரும்.

**(88)** வேளைக்கு இஞ்சிச்சாறு -20மி.லி. கேசரியின்பால் -40மி.லி., கரும்பு வெல்லம் -10கி. வீதம் கலந்துதரவும். இப்படி 10-தினம் காலைமாலை தந்து, தானதருமமும் செய்ய பைத்தியம் தீரும். (இதோடு பேரண்ட பற்பமும் தரலாம்)

**(89)** சல்லாத்துக் கீரையின் சாறு -500மி.லி, நல்லெண்ணெய் -250 மி.லி வீதம் கலந்து பதமுறக்காய்ச்சி வடித்து, தலை - நெற்றியில் பூசிவர தூக்கமின்மை, தலைவலி நீங்கும்.

(90) ஓமத்தீநீரில் அரைத்த வெங்காரம், போஸ்தக்காயின் சத்து, குரோசாணி ஓமம், வெண்கடம்புவேர், கொய்னாப் பட்டை, கோட்டம், அபினுக்குப் பதில் பச்சைக்கற்பூரம் அல்லது சதகுப்பை இவற்றுள் ஒன்றைத்தர உறக்கம் வரும்.

(91) அதிமதுரமும், நற்சீரகமும் சமனளவு கூட்டிச் சூரணித்து; 5-கி. வீதம் சுடுநீருடன் உட்கொள்ள உறக்கமின்மை, பித்தம் நீங்கும்.

(92) உணவுக்குப்பின், ஒரு நாட்டுவாழைப்பழம் சாப்பிட்டு வர உடல் எடை அதிகரிக்காமலிருக்கும்.

(93) பூங்காவி -1, ஏலக்காய் -2, மூங்கிலுப்பு -4, கற்கண்டு -4, சீந்திலுப்பு -8 ஆகிய பங்குவீதம் கூட்டிய சூரணம், 5-10கி. வீதம் வெண்ணெய்-நெய்யுடன் தர உடலிளைப்பு - மெலிவு நீங்கி, வலுக்கும்.

(94) சாம்பிராணி, பூண்டு, கோதுமை, புதினா, இஞ்சி, தணியா, அரைக்கீரை, முருங்கைக்கீரை, வாழைத்தண்டு, முள்ளங்கி, அறுகு, அழவணம், நித்தியகல்யாணி, பாம்புக்கால் செடி இவற்றுள் ஒன்றை குடிநீர் அல்லது சூரணித்துத்தர குருதியின் கொழுப்பைக்குறைக்கும். இரத்தபித்தம், உடல்பருமன் மாறும்.

(95) பூச்சூடனும், மருதோன்றியிலையும் கூட்டியரைத்துப் பூசியும்-தாய் ஈசலைப்பிடித்து உண்டும் வர காலாணி, புற்று நீரும்.

(96) துரிசும், பூரமும் சமனளவு கூட்டி, வெள்ளறுகுச்சாறு விட்டரைத்துப் பசிவர காலாணி, புற்று, கழலை, கண்டமாலை நீரும்.

(97) கார்பாலிக் ஆசிட் -1, பார்மாலிக்ஆசிட் -1, சல்பூரிக் ஆசிட் -2 பங்கு வீதம் கூட்டி, புகையடங்கவும், 4-பங்கு ஆலிவ் ஆயில் கூட்டிக் கலந்து மேலே பூசிவர காலாணி, புற்று தீரும்.

(98) பங்கம்பாளைச் சாறும், தேங்காயெண்ணெயும் கூட்டிக்காய்ச்சி வடித்தோ - நயம் தேனையோ தடவிவர தீச்சுட்டபுண்ணும், கொதிநீர் முதலியன பட்ட புண்ணும் ஆறும்.

(99) தேங்காயெண்ணெயும், சுண்ண செயநீரும் கலந்து குலுக்க பால்போலாகும். இதை தனித்து, அல்லது முட்டை வெண்கரு விட்டுக் குழப்பிப் பூசிவர தீச்சுட்ட புண்கள் ஆறம்

(100) கம்பிச்சாரம் -2கி. சத்திச்சாரம் -10கி, வெடியுப்பு -10கி, துரிசு -60கி, சூதம் -100கி கந்தி -150கி, வெண்ணெய் -600கி. வீதம் கூட்டி, களிம்பாயரைத்துதப் பூசிவர குழி -புரை -கிரந்தி - மேகப்புண்கள், காயம், விரணம், பத்து, படை தீரும்.

(101) காஞ்சரம் பூவின் சூரணம், குன்றியளவாக காலைமாலை தேனுடன் தர வெண்புள்ளி தீரும் (இதோடு, புகையிலைச் செடி விதையை செக்கிலிட்டு எண்ணெய் பிழிந்து பூசலாம்)

(102) வெண்கடுகுச் சூரணம் -2கி. வீதம் தேனுடன் தர வெண்புள்ளி தீரும் (மேலும் வெங்காரத்தை வெள்ளைப்பூண்டு அல்லது வேப்பிலைக் கொழுந்து விட்டரைத்து மேலே பூசலாம்)

(103) கொய்யாமரத்தின் அட்டாங்கமும் சமனாகக் குடி நீரிட்டு, 50-மி.லி. வீதம் பருகிவர வெண்மேகம் மாறும் (இதோடு, டங்கணம், பேயத்தி வேர்ப்பட்டை, கார்போகி மூன்றும் சமன் கூட்டி, புளிக்கரைசலில் அரைத்து மேலே பூசலாம்)

(104) மிளகு -4, திப்பிலி-1, பனைவெல்லம் -10 ஆகிய பங்குவீதம் கூட்டி மெழுகாக்கி, 10-கி வீதம் தொடர்ந்து தர கருமேகம், மல நீர்க்கட்டு, கபம் தீரும்.

(105) ஈசுரமூலியின் பஞ்சாங்கச் சூரணம் -5கி. வீதம் காலை மாலை பாலுடன் தர செங்குட்டம், நஞ்சுகள் நீங்கும்.

(106) மஞ்சிட்டியை நெய், தேன் அல்லது நீர்விட்டரைத்துப் பூசிவர தேமல், தழும்பு, வங்கு மாறும். சருமம் ஒளிரும்.

(107) திருநீற்றுப்பச்சிலையின் சாற்றை தனியாகவோ, சிறிது வசம்பு கூட்டி இழைத்தோ பூசிவர முகத்தில் வரும் சாதாப்பரு, விஷப்பரு, அழற்சி, காந்தல் மறையும்.

(108) மான் செவிக்கள்ளியிலை, அல்லது சிறுதுத்தி இலையை அரைத்துப் பூசி வர வங்கு, தேமல், படை தழும்பு மாறும்.

(109) நோயாளி (பத்தியமுடனிருந்து) அதிகாலையில் கழிக்கும் தனது சிறுநீரின் நடுப்பகுதியைப்பிடித்து 30-மி.லி வீதம் பருகி வர குட்டம், மேகம், விஷரோகம் தீரும். கல்பமாகும்.

(110) சிவன் வேம்பு சமூலம், நிம்பவிதைப்பருப்பு, கனலி வேர்ப்பட்டை மூன்றும் சமன் கூட்டி குழித்தைலமிறக்கி; உடன் பூநாகத்தைலமும், அரிசி எடை கௌரி சிந்தாமணியும் கூட்டித்தர குட்டம், குறை, மேகம், நஞ்சு, வாதம் நீங்கும்.

*(111)* இரசம் -5கி, குறுந்தொட்டி சமூலச் சூரணம் -100கி. வீதம் கூட்டி நீர்விட்டு மெழுகாயரைத்து - குன்றியளவு வீதம் காலை மாலை தர குட்டம், வாதம், சருமப்பிணி விலகும்.

*(112)* பழுத்த கத்தரிக் காயினுள் கந்தகத்தையிட்டு, சாணத்தில் பொதிந்து, 8-எருவில் புடமிட நீறும். இதில் குன்றியளவாக பாலுடன் தர சொறி, சிரங்கு, அரிப்பு, தினவு மாறும்.

*(113)* வெள்ளெருக்கலம் வேர்ப்பட்டை -20கி, மிளகு -10கி, பனைவெல்லம் -30கி. வீதம் கூட்டி மெழுகாயரைத்து, குன்றியளவு வீதம் காலைமாலை பாலுடன் தர மேகச் சொறி, கரப்பான், புண், புரை, பத்து, படை, குட்டம், கிரந்தி, விஷகடி தீரும்.

*(114)* சீமை அகத்தியிலைச் சாற்றை மேலேதடவியும், 15-மி.லி வீதம் மூவேளையும் உட்கொண்டும் வர பத்து, படை, சொறி, சிரங்கு, கரப்பான், புண், புரை, விரணம் மாறும்.

*(115)* பொற்கையான்சாறு -100மி.லி.யில், 5-கி கறியுப்பைக் கரைத்து, மயிலிறகில் தொட்டுப் பூச அக்கி, அழற்சி தீரும்.

*(116)* இரசத்தை சிவகரந்தையிலைச் சாறு விட்டரைத்து, இலகுபுடமிட நீறும். இதில் அரிசிஎடை வீதம் வெண்ணெய் அல்லது நெய்யுடன் தர கிரந்தி, குட்டம், மேகம், வெள்ளை தீரும்.

*(117)* இரசம் -1, கந்தகம் -2 பங்கு வீதம் கூட்டியரைத்து, குகையிலிட்டு மூடிச்சீலை செய்து, உமிபுடமிடச்சிவக்கும். இதில் அரிசி எடைவீதம் நெய்யுடன் தர கிரந்தி, மேகப்படை, மேகச்சொறி, குட்டம், சருமப்பிணிகள் குணமாகும்.

*(118)* அரிதகித்தோலும், வீரமும் சரியெடை கூட்டி, கொடுப்பைச்சாறுவிட்டு 3-மணி நேரம் விழுதுபட அரைத்துப் பூசிவர கிரந்தி, கரணை, கரப்பான் பட்டுப்போகும்.

*(119)* மூக்கரைச்சாரணை வேர்ப்பொடி -5கி, சவர்க்காரம் அல்லது உப்புச் சோப்பு -15கி, நல்லெண்ணெய் -60 மி.லி. இவற்றை ஆலாக்கரண்டியிலிட்டுக் காய்ச்சிக்கடைந்தெடுத்து, 7 -அரசயிலைகளின் மீது சூட்டுடன் தடவி வைத்துக்கட்டி வர நரம்புச் சிலந்தி, வீக்கம், கட்டி தீரும்.

*(120)* கருணையின்வேர், அமுக்கராவேர், இஞ்சியின்வேர், இவை சமனளவு கூட்டியரைத்து, அவித்து அப்பிக்கட்டிவர 3-நாளில் நரம்புச் சிலந்தி, வீக்கம் தீரும்.

(121) மஞ்சள்தூள், ஓணாங்கொடியிலை, இட்லி இவை சமன் கூட்டி, விளக்கெண்ணெய் விட்டுப் பிசைந்து வெதுப்பி வைத்துக் கட்டிவர நரம்புச் சிலந்தி; மார்ஆணி, வீக்கம் தீரும்.

(122) ஒரு கிலோ கொடிக்கள்ளித் துண்டுகளை சட்டியி லிட்டு நீர்நிரப்பி, வாயில் வேடுகட்டி, அதில் கோதுமை மாவையிட்டுப் பிட்டவித்து உண்ண கருந்தேமல் தீரும்.

(123) சூதம், கந்தி, துரிசு, நீரடிமுத்துப்பருப்பு, வெற்றிலை இவை சமன் கூட்டியரைத்து, தேங்காயெண்ணெயிலிட்டு, காய்ச்சிப் பூசிவர கருமேகம், யானைத்தோல் குட்டம், நாய் முள் மாறும்.

(124) ஒரு கிலோ விதை நீக்கிய பேரீச்சங்காய் அல்லது பழத்தை 100-கி. துரிசுக்கு கவசித்து, சுண்ணச்சீலை -1, மண்சீலை-6, செய்து 100-எருவில் புடமிடச் செந்தூரமாகும். இதில் அரிசி எடை வீதம் காலைமாலை 7-நாள், நெய்யுடன் தர செம்மேகத்தழும்புகள் கொப்புளிக்கும். அதில் தேங்காய்ப்பூ நெய்யும், பூரமும் கூட்டியரைத்துப் பூச புண் ஆறி செங்குட்டமும், வேறு பல சரும நோயும் விலகும்.

(125) நூறு கிராம் மிளகுத்தூளை, 500-மி.லி நல்லெண்ணெ யிலிட்டுப் பதமுறக் காய்ச்சி வடித்து, பூசி வர பரு, தேமல், தழும்பு, வங்கு தீரும்.

(126) கழுதையின் லத்திச்சாறு - சிறுநீர் - பால் ஆகியனவும், ஆமணக்கு நெய்யும் சமன் கூட்டிக் காய்ச்சிவடித்து - மூவேளையும், 15-மி.லி. வீதம் பால் அல்லது சருக்கரையுடன் தர கொடிய கிரந்தி உட்பட பல சருமப்பிணிகள் தீரும். தாது வலுக்கும்.

(127) மணித்தக்காளிச் சாற்றில் 7-முறை உருக்கிச்சாய்த்த கந்தியை, 5-பங்கு ஈருள்ளிச்சாறு விட்டரைத்து சுண்டையளவாக, பாலுடன் தர சருமப் பிணிகள், பவுத்திரம் தீரும்.

(128) நல்லெண்ணெய் -1/4லி, நெய்-1/4லி, கனலிவேர்ப்பட்டை விழுது-100கி. வீதம் கூட்டிக் காய்ச்சி வடித்து; 10-மி.லி வீதம் சருக்கரையுடன் தர சருமப் பிணிகள், புண் புரை நீங்கும்.

(129) வெண்பூசனிப்பருப்பு, இடி கொள்ளுப்பருப்பு, மிளகு, இரசாஞ்சனம், அபினி, வேப்பிலை இவை சமனாக, நீர்விட்டரைத்து குன்றியளவு உருட்டவும். இதில் ஒன்று வீதம்

மூவேளையும் தர அக்கி, அழற்சி, எரிவு, தினவு, சுரம், காந்தல், அரிப்பு மாறும்.

(130) பீச்சசங்கன் வேரின் சாறு-10துளி வீதம், முலைப் பாலுடன் தர சிசுக்களின் அக்கி, செவ்வாப்பு, காந்தல் தீரும்.

(131) ஊமத்தையிலை விழுதை, எருமை வெண்ணெயில் - அல்லது, பசளைக் கீரை விழுதை முட்டை வெண்கருவில், குழைத்துப் பூசிவர அக்கி, எரிச்சல், சொறி, அழற்சி, தினவு காந்தல் தீரும்.

(132) ஆட்டின் முதுகிலுள்ள மூளைக்கொடியை (முகுளநரம்பு) எடுத்து அரக்கித் தேய்த்து வர படர்தாமரை மறையும்.

(133) வெண்குங்கிலியம், வெங்காரம், கந்தி, குரோசாணி ஓமம் இவை சமன்கூட்டி நீர்விட்டு மெழுகாயரைத்து உருட்டவும். இதனை எலுமிச்சம் பழச்சாறுவிடடு உரசிப்போட்டு வர படர்தாமரை, பத்து, படை, சொறி, சிரங்கு தீரும்.

(134) எருக்கலம்பூவும், ஊசித்தகரை விதையும் கலந்தோ - அல்லது, தனி வேப்பிலையையோ, அரைத்து கட்டித்தயிரில் குழப்பிப் பூசிவர படர்தாமரை, சொறி தீரும்.

(135) ஆளிவிரை எண்ணெயும், கண்டகாரிச்சாறும் சரியளவு கலந்து நீர்வற்றக் காய்ச்சி வடித்துப்பூசிவர பித்தவிரிவு, வெண்புள்ளி மறையும்.

(136) கற்சுண்ணமும், ஆமணக்கு நெய்யும் கூட்டிக் குழப்பி - அல்லது, முள்ளிக்கீரையை அரைத்து அப்பிவர பாதவெடிப்பு, நகச் சொத்தை, கால்படுவன், கிரந்திப்புண் நீங்கும்.

(137) செம்முள்ளிச்சாறு - ஆலம்பால் - முந்திரிக் கொட்டை நெய் இதிலொன்றை பூச பித்தவிரிவு, சேற்றுப்புண் தீரும்.

(138) சூதம் -10கி, அதிமதுரம் -100கி. வீதம் கூட்டி, தேன்விட்டு மெழுகாயரைத்து காலைமாலை துவரையளவாக பாலுடன் தர கண்டமாலை, கட்டி, கழலை, பிளவை நீங்கும்.

(139) வல்லாதி-2, பூரம்-1, கனவிவேர்ப்பட்டை-5, அச்சு வெல்லம்-16 ஆகிய பங்குவீதம் கூட்டியரைத்து மெழுகாக்கி - காலைமாலை 500-மி.கி. வீதம் பாலுடன் தர கண்டமாலை, கட்டி, கழலை, சூலை, மேகம், வெட்டை, புற்று, பிளவை இவை விலகும்.

(140) நொச்சியிலை விழுதை அல்லது சாற்றை துணியில்

தோய்த்துப் போட்டுக் கட்டிவர கட்டிகள் அமுங்கும்.

(141) கொடிப்பாலையிலை, புற்றான்பழம், ஒட்டடை, மஞ்சள், கையான்சமூலம் இவை சமன் கூட்டியரைத்து, வெண்ணெயுடன் கலந்து பூசிவர உதட்டுவெள்ளை, கிருமி, புண், வெடிப்பு மாறும்.

(142) சூதமும், நாதமும் சமன்கூட்டி, அருக்கன்பால் விட்டு மைபோலரைத்து உடனே கல்வத்தை நீர் விட்டுக் கழுவி, அந்நீரை எடுத்துக்காய்ச்சிப் பூசிவர உதட்டு வெள்ளை, வெடிப்பு, புண், கிருமி, பல்கிரந்தி இவை மாறும்.

(143) முதிர்ந்த பூவரசுமரப்பட்டைச் சாற்றை வாயிவிட்டு கொப்புளித்து விழுங்க கழிச்சல் காணும். இப்படி பல தினம் செய்ய உதட்டு வெள்ளை, வெடிப்பு, கிருமி விலகும்.

(144) நல்லெண்ணெய் -300மி.லியுடன், பங்கம்பாளை, கையான், பொடுதலை இவற்றின் சாறு வகைக்கு 100-மி.லி; கருஞ்சீரகம், காட்டுச்சீரகம், கார்போகி, கருடன் கிழங்கு வகைக்கு 10-கி. வீதம் கலந்து காய்ச்சி வடித்து தலை முழுகிவர புழுவெட்டு, சுண்டு, பொடுகு தீரும்.

(145) கொழும்புத் தேங்காயெண்ணெயும், சுண்ணாம்பு செயநீரும் சமனளவு கூட்டி நன்கு குலுக்க பால்போலாகும். இதனை தடவிவர சுண்டு, பொடுகு , சருமப்பிணி விலகும்.

(146) கோழி முட்டை மஞ்சட் கரு - 15கி, கழற்சிப்பருப்புத் தூள்-15கி., கோழியாவரைச்சாறு-200மி.லி., நல்லெண்ணெய் -100மி.லி. வீதம் கூட்டிக்காய்ச்சி இளகலாக்கி; 10-கி வீதம் மூவேளையும் தர விரைவாயு, ஏறண்டம், இறங்கண்டம் தீரும்.

(147) பொரித்தகாயம் -1, பேராமணக்குநெய் -2, வெள்ளைப் பூண்டுத்தைலம் -3 ஆகிய பங்கு வீதம் கூட்டியரைத்துப்பூச, ஏறண்டத்தில் மேலேறிய விதை உடனே கீழேயிறங்கிவிடும்.

(148) பசுமையான உலராத சித்திர மூல வேர்ப்பட்டை விழுதை, கல்போன்ற விரைவீக்கத்தின் எதிர்ப்புற கால் பெருவிரலில் வைத்து அப்பிக்கட்டி, ஒருமணி நேரத்தில் புண்ணாகவும் நீக்கிவிட கல்லண்டம் தீரும் (கால் புண் ஆற தேங்கா யெண்ணெய் தடவலாம்)

(149) கழற்சிப்பருப்புத்தூளும், சர்க்கரையும் -5கி. வீதம் கூட்டி, நெய்யுடன் தர குருதி - சீழ் - வறள் மூலம், வாயு, பாரிசவாயு தீரும்.

*(150)* நாற்றத்தகரையிலை -20கி. எடுத்து விழுதாக்கி, 100-மி.லி நீருடன் கலக்கி, உடன் 4-கி. பூங்காவியும் கலந்து, இதுபோல் இருவேளையும் உட் கொள்ள இரத்த மூலம் நீங்கும்.

*(151)* நூறுகிராம் கருவங்கத்தை குழவிபோல் வார்த்து, அதனால் 50-கி பருத்திவிதைப்பருப்பை மைபோல் இழைத்து வந்து, இரண்டும் தேய்ந்து 100-கி. அளவானதும் வழித்து ஆசனத்திலிட்டு வர மூல முளை கரையும். வலி, வேதனை, கடுப்பு தீரும்.

*(152)* ஐம்பது கிராம் கோதுமை உமியை, 1½-லி. நீரில் ஊறவிட்டு, காலையில் பிசைந்து சத்தைவடிக்கவும். இனிப்பு வாதுமைப்பருப்பு-50, பருத்திவிதைப்பருப்பு-6, கசகசா- 6, கொத்துமல்லிவிதை-4 ஆகிய கிராம் வீதம் கூட்டியரைத்து 100-மி.லி. நீரில்கரைத்து சத்தைப்பிழிந்து வடிக்கவும். இரண்டு சத்தும் கூட்டி, 40.கி. சீனிகூட்டிக்காய்ச்சி அருந்தவும். இதனால் மூளையின் சோர்வு, மறதி, கிறுகிறுப்பு, தூக்கமின்மை, தலைச்சுற்றல் இவை விலகும்.

*(153)* ஈனாக்கிடேரியின் சாணத்தை துணியில் முடிந்து வடியும் பாலை எடுத்து உட்கொடுத்து, தேன் மெழுகை திரியிலிட்டு எழும் புகை கடிவாயில் படச் செய்ய தேள் விஷம் முறியும்.

*(154)* சுண்ணாம்பும், மஞ்சளும் சேர்த்து அரைத்துப்பூச கரப்பான் பூச்சிக்கடி நஞ்சும்-இதோடு கறியுப்பும் கூட்டி யரைத்துத் தடவ தேள்கடி விஷமும் முறியும்.

*(155)* ஈருள்ளியை குறுக்கே நறுக்கி, விஷம் இறங்கும்வரை, ஒவ்வொன்றாக அரக்கித் தேய்த்து எறிய தேள்விஷம் தீரும்.

*(156)* குமரிச்சோறு, காரெள்ளு, காடிநீர் கூட்டியரைத்துப்பூச - அல்லது குமரி மடலை சுட்டுப் பிளந்து மஞ்சள் தூளைத்தூவி வைத்துக்கட்ட அட்டைக்கடியினாலான புண் ஆறும்.

*(157)* அவுரி வேரும், எட்டி வேரும் - அல்லது, வேலிப் பருத்தியும், பங்கம்பாளையும் - அல்லது, உத்தாமணி, பங்கம்பாளை, கருடன் கிழங்கு கூட்டியோ - அல்லது தனி கருடன் கிழங்குச் சூரணமோ, மூவேளையும் 5-கிராம் வீதம் சுடுநீருடன் தர சகலவித நண்டுவாய்க் காலியின் கடிவிஷமும் முறியும்.

*(158)* கற்பூர வல்லியிலை விழுது-2, காடிநீர்-2லி வீதம் கூட்டி, காலைமாலை சிறுகச்சிறுக அருந்தியும் - உடலில் துவாலை யிட்டும் வர 5-நாளில் சகல காணாக்கடிநஞ்சும் தீரும்.

(பத்தியமுடன் - காற்றுப்படாமல் அறையிலேயே இருக்கவும்,

(159) சுக்கு, மிளகு, களிப்பாக்கு, வேலம்பட்டை இவை 10-கி வீதமாக, குமரிச்சாற்றிலரைத்தும்-உடன் புளியம் புறணிச் சாம்பல் -1கி. வீதம் பாலுடனும் தர நாளான எலிக்கடி தீரும்

(160) சித்திர மூலவேர்ப்பட்டை, குளப்பாலை, தலைசுருளி, வெள்ளறுகு இவை சமன் கூட்டிய சூரணம் -3கி. வீதம் இருவேளையும் பாலுடன் தர எலிக்கடி விஷம், கழலை, புண் மாறும்.

(161) பூனையின் கறியை சமைத்து - அல்லது வற்றலாக்கிப் பொரித்து, உப்பு, புளி நீக்கி உண்டுவர சகல எலிக்கடி விஷமும் தீரும். (இதற்கு, பூனை மலத்தை சூரணித்தும் தருவதுண்டு)

(162) வேலிப்பருத்தி, முடக்கற்றான், கொழிஞ்சில், கோவை, வெற்றிலை இவற்றின் சாறு கலந்து கொதிப்பித்து கடிவாயில் பூச செவிப்பாம்பு கடிவிஷமும், கடுப்பும் மாறும்.

(163) உசிலம்பட்டையை, பசுவின்பால்விட்டு இடித்துச்சாறு பிழிந்து, வேளைக்கு 175-மி.லி. வீதம் 7-நாள் உட்கொள்ள கூழைப்பாம்பு கடிவிஷம் முறியும் (உப்பு, புளி நீக்கவும்)

(164) மிளகு, குடசப்பாளை, ஆடுதின்னாப்பாளை, கருடன் கிழங்கு, இம்பூரல் வேர், உரிச்சகொடி, கோபுரந்தாங்கிவேர், தக்காட்டிவேர் இவை சரியளவு கூட்டியரைத்து, 10-கி. வீதம் சுடுநீருடன் தர விரியன் முதல் சகல விஷகடியும் முறியும்.

(165) முசுமுசுக்கை சமூலத்தை குடிநீரிட்டு, 30. மி.லி. வீதம் சிறிது பனங்கற்கண்டும் கூட்டியருந்த இருமல், ஈளை தீரும்.

## சூதம் செத்தால் (கட்டினால்) கிட்டும் பயன்!

பாருநீசூதம் செத்தால் பராபரை முன்னே நிற்பாள்
பாருநீ சூதம் செத்தால் பளிச்சென்று பொன்னுமாகும்
பாருநீ சூதம் செத்தால் பரவிய உடம்பு பொன்னாம்
பாருநீ சூதம் செத்தால் பறக்கலாங் கவுனங் கேளே.

# XV பொதுவான விபரங்கள்

## ★ 1. வேதங்கள் என்பன யாவை?

பழமறை அல்லது உண்மை விளக்க சாத்திரங்களே வேதங்கள் எனப்படும். ஆதியில் **தாத்ரியம் - பௌடிகம் - தலவகாரம் - சாமம்** என்ற நான்கு வேதங்கள் இருந்தன. இவை, வாக்கு மனோதீத கோசரமாயுள்ள பரம் பொருளாகிய எண்குணக் கடவுளின் திருவாய் மொழிகளாகும். இவற்றை பேரறிஞர்களான சித்தர்களும் - முனிவர்களும் - இருடிகளும் போற்றிப் பேணிவந்தனர். பின்னர், உலகின் சிற்றறிஞர்கள் அவற்றின் அருமை பெருமைகளை அறியாமல் விரிந்துகிடந்த வேதங்களை கால நிலைக்கேற்ப சுருக்கி - **இருக்கு - யசுர் - சாமம்** எனும் மூவகையாக - முதலில் வியாசமுனியால் - வகுக்கப்பட்டது. இவற்றின் நடுவிலுள்ள யசுர்வேதத்தின் நடுவிலுள்ளது **சதருத்திர மந்திரம்** ஆகும். இதன் நடுவில் **நமச்சிவாயா** மற்றும் **சிவதராயச** ஆகிய **பஞ்சாட்சர மந்திரம்** விளங்கிக் கொண்டிருக்கும். பிற்காலத்தில் வியாசரால் **அதர்வண வேதமும்** அருளப்பெற்றது. மனிதர்களின் வினைகளினால் துன்பமும்-பிணியும் வந்து தொல்லைப்படுவதை கண்ட பிரம்மன் தம்மால் முதலில் தோற்றுவிக்கப் பெற்ற வேதங்களுக்குத் துணையாக, **அர்த்தவேதம் - ஆயுள்வேதம் - காந்தருவவேதம் - துனுர்வேதம்** ஆகிய நான்கு உபவேதங்களையும் உண்டாக்கினார். பொதுவாக, அனைத்து வேதங்களுமே உலகத்தோர் கடைப்பிடித்து உய்யும் பொருட்டு இறைவனால் அருளப் பெற்றவையாகும்.

## ★ 2. சைவ சித்தாந்தம் என்றால் என்ன?

ஆன்மாக்கள் உய்யும் பொருட்டு சிவபிரானால் அருளப்பெற்று - சித்தர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்ட மூல ஆகம தத்துவமே - **சைவசித்தாந்தம்** ஆகும். நால்வகை சித்தாந்தங்களாக, **சர்வதந்திர - பிரதிதந்திர - அதிகாரண - அபிவுபாகம** சித்தாந்தங்களைக் கூறப்படும். சித்தாந்த சாத்திரத்தில், **சரியை - கிரியை - யோகம் - ஞானம்** ஆகிய நான்கு நிலைகளும் விளக்கப்பட்டிருக்கும். குறிப்பாக, ஆன்ம சொரூபம் - மும் மலக் கூறு - சத்தி சொரூபம் - 36 தத்துவம் - ஆன்ம போகம் - உணவு, பாலுணர்வின் கருவி

முறை - மாயை, மகாமாயையில் காணும் வலிமை - அட்டமா சித்தி கிட்டும் முறை - போகத்திற்குரிய கிரியை முறை - ஆறாதார சித்தி முறை - மந்திரம், மதவழிபாட்டு முறை - முக்தி பெற தீட்சை விதி போன்றவையாகும். நால்வரால் கூறப்பட்ட **மெய்கண்ட சாத்திரமும்** சித்தாந்த விதிகளைச் சார்ந்ததேயாகும். இதில், **சிவஞான போதம் - சிவப்பிரகாசம் - நெஞ்சு விடுதூது - உண்மை நெறி விளக்கம்** முதலிய 14-நூற்களிருக்கும். இவையாவுமே சிவனின் அநுக்கிரகத்தினால் முடிவு பெற்றதாகக் கொள்ளப்படும்.

## ★ 3. சத்தி பூசை வழிமுறை யாவை?

கொங்கணவர் கடைக்காண்டம் உள்ளிட்ட, சித்தர்களால் கூறப்பட்ட பூசாவிதிகளின்படி - பெண்ணை நிர்வாணமாகச் செய்து, அவளது குறியின் மீது நாட்டம் வைத்து, பக்திப் பரவசமுடன் தேவியை நினைத்து தியானிப்பதே வாமபூசை எனப்படும் **சத்திபூசை** ஆகும். இதில், நிர்வாணமான பெண்ணின் குறியின் மீது, **நாற்பத்துமுக்கோண சக்கரம்** ஆகிய **ஸ்ரீசக்கரத்தை** அறைமூடியாகக் கட்டி, அவளையே அகிலாண்டேசுவரி தேவியாகப் பாவித்து, அவளுக்கு பூமாலை, தூபதீபமிட்டு, மங்களம் செய்வித்து ஒரே மனதாய்த் தியானித்து வணங்க பல சித்திகள் கை கூடும். சித்தர்கள் இவ்வழி பாட்டினால் அட்டமாசித்திகளையும் பெற்றுள்ளனர் ஆயின், **இலிங்கபூசையில்** இச்சக்திபூசையும் அடங்கியுள்ளது. காரணம், இலிங்கத்தின் பீடரூபமாயுள்ளதே சக்தி பீடமாகும். இதனையே **ஆவுடையார்** என்பர். சக்திவழிபாடு என்பது உலகின் வேறு பல இனமக்களும் கையாளுவதாகத் தெரியவரினும் - தமிழ் சித்தர்களது வழிபாட்டு முறையும், அடையும் சித்திகளும் முற்றிலும் வேறானதாகும். இவை பற்றி, **சாங்கிய - வேதாந்த - தாந்திரீக** தத்துவங்களிலும் கூறப்படும். தற்காலத்தில், சித்தர்கள் கூறிய விதிமுறைகளை விடுத்து - காளி முதலிய சத்திகளை பூசிப்பதாகக் கூறி, பிராணிகளைப் பலியிட்டும், மது - மாமிசம் படைத்தும், ஆடிப்பாடிக் கூத்தடித்தும் **வாமபூசையை** செய்கின்றனர். இவை ஏற்புடையதல்ல எனலாம்.

## ★ 4. பஞ்சலிங்கத்தின் இருப்பிடம் யாவை?

சிவனைக் குறிக்கக் கூடிய ஐந்துவித இலிங்கங்களே **பஞ்சலிங்கம்** எனப்படும். இவை பஞ்சபூதங்களால் ஐந்து

இடங்களில் நிறுவப்பட்டுள்ளன. அவை- (1) **பிருதிவிலிங்கம்** - இது, மண் பூதத்தால் **காஞ்சிபுரத்தில்** நிறுவப்பட்டுள்ளது. (2) **அப்புலிங்கம்** - இது, நீர் பூதத்தால் **திருவானைக்கா வலில்** (சம்புகேசுவரம்) அமைக்கப்பட்டுள்ளது. (3) **தேயு லிங்கம்** - இது, நெருப்பு பூதத்தால் **திருவண்ணாமலையில்** அமைக்கப்பட்டுள்ளது. இது தீயொளியில் மிளிரும். (4) **வாயு லிங்கம்** - இது, காற்று பூதத்தால் **காளத்தியில்** நிறுவப்பட்டுள்ளது. இங்கு இலிங்கத்தின் அருகேயுள்ள ஒரு விளக்கு மட்டும் எப்போதும் மாறாமல் மினுக்மினுக்கென ஒளியசைவு கொண்டு காற்று வீசுவதை உணர்த்துவதாயிருக்கும். மற்ற விளக்குகளில் ஒளியசைவு இராது. (5) **ஆகாயலிங்கம்** இது, வெளியாகிய பூதத்தால் **சிதம்பரம்** ஆலயத்தில் நிறுவப்பட்டுள்ளது (சிதம்பர ரகசியம்)

## ★ 5. சத்திகளின் வகை யாவை?

சிவத்தினின்று பிரிந்ததே **சத்தி** ஆகும். இச்சக்தியை, பெண் குறியை நோக்கியும், மானத பூசையினாலும் வழிபடுவதுண்டு. இச்சக்தி பலவகைப்படும். பொதுத்தத்துவப்படி மூவகையாகவும் - ஆகம (சிவ)தத்துவப்படி ஐவகையாகவும் கூறப்படும். அவை, தத்துவப்படி - (1) **இச்சாசத்தி** (உயிர்க்கருணேசம்) - இது, அன்பும், ஆன்மா மீது இரக்கமும் கொள்வதாகும். (2) **ஞானாசத்தி** - இது, மனிதனது செயலுக்கேற்ப, வரும் இன்ப துன்பங்களை அறியும் பகுத்தறிவைத் தருவதாகும். (3) **கிரியாசத்தி** - இது, உலகங்களைப் படைப்பதாகும். சிவதத்துவப்படி - (1) **சிற்சத்தி** - இது, தெய்வீக சக்தியால் ஆன்மாவுக்கு ஒளியாய் நிற்பதாகும். (2) **இச்சாசத்தி** - இது, ஐம் பெரும் பூதங்களாக நிற்பதாகும். (3) **ஞானாசத்தி** - இது, ஐம் பொறிகளின் உணர்வாக நிற்பதாகும். (4) **பராசத்தி** - இது, தசவாயுக்களாக நிற்பதாகும். (5) **கிரியா சத்தி** - இது, உலகின் பொருட்களின் தோற்றத்திற்கும், வளர்ச்சிக்கும், செயல்களுக்கும் துணை புரிவதாகும். இவை தவிர, படைத்தல் - காத்தல் - அழித்தல் ஆகிய தெய்வீக வலிமையைக் கொண்டுள்ளதாகிய, **சிவசக்தி, விந்துக** பராசக்தி, **சிரோதான சக்தி, விந்து சக்தி** போன்ற வேறு பல சக்திகளுமுண்டு.

## ★ 6. சத்துவாதி என்போர் யாவர்?

சித்த முறையில் கூறியுள்ள 120 - துணைத் தாதுக்களின் உதவியினால் வாத - வைத்திய முறைகளில் தேர்ச்சி பெற்ற

இரசாயன வல்லுநர்களே - **சத்துவாதி** எனப்படுவர் . எனவே சித்தர்களும் இராசயனவாதிகளேயாகும். காரணம், உடலின் வளர்ச்சி, பிணிபற்றல் போன்ற அனைத்தும் இரசாயன செயல் முறைகளின் அடிப்படையில் தான் நிகழும் என்பதையும் - இவ்வுடல் என்றும் தேய்ந்து, அழியக் கூடியதாவே, இதனைக் காத்து வளர்த்தால் மட்டுமே அதிலுள்ள உயிரையும் வளர்த்துக் கொண்டு அரிய சக்திகளையும் பெறவியலும் என்ப்தையும் உணர்ந்தவர்களாகும். எனவே, வளர்ந்து மறையும் இவ்வுடல் தத்துவங்களை, தமது ஊக்கத்தாலும், இடைவிடா முயற்சியாலும் கண்டறிந்து **மணி – மந்திர – மருந்துகளின்** உதவியினால் உடற்பிணி, சாக்காடு இவற்றைக் கடந்து முக்திப் பேறடைய இத்தேகமே முக்கியமெனக் கருதிச் செயல்பட்டு வெற்றி கொண்டனர். அதன் அடிப்படையில் உருவான **வாத – வைத்திய – யோக – ஞானம்** ஆகிய நான்கு முனைகளை ஆதாரமாகக் கொண்டுதான் - பதினேழாம் நூற்றாண்டின் ஐரோப்பிய ஞானியான **பாராசெலஸ்** அவர்களது பள்ளியின் **இன்ட்ரோ கெமிஸ்ட்ஸ்** என்போர் கண்டறிந்த **லூதர் ஆப் மெடிசின்** கொள்கை உருவானது. அவரது ஆய்வின்படி, மருந்துகள் யாவும் **வாதம் – வான சாத்திரம் – தத்துவம் – சீரிய பண்பு** ஆகிய நான்கு தூண்களின் மீது கட்டப் பட்டவையாகும் எனக் கூறுவார்.

## ★ 7. ஆறாதாரச்சக்கரம் என்றால் என்ன?

உடலுக்கு; மனோத்தத்துவ ரீதியில் கூறப்படும் - அறுவகை அடிப்படை ஆதார மையங்களின் மூலம் கிட்டும் தெய்வீக, மனோசக்தியின் பயன்களையே **ஆறாதாரச்சக்கரம்** எனப்படும். அவை -**(1) மூலாதாரம்** - இது, இரகசியமான, அரிய சக்திகளைப்பெற-முதுகெலும்பைப்போல் அடிப்படையா யுள்ளது. இதன் வலிமையால் இயற்கை விதிகளைக் கட்டுப்படுத்தவும்-உடலை நினைத்தபடி மாற்றவும், அழிக்கவும், ஆக்கவும் முடியும். **(2) சுவாதிட்டானம்** - இதனால், நீர் மேல் நடக்கவும், பஞ்ச பூதங்களைக் கட்டுப்படுத்தவும் இயலும். **(3) மணிபூரகம்** - இதனால், உடல் வெப்பம். தீபாக்கினி, தோற்றப்புலன் இவற்றை கட்டுப்படுத்தலாம். **(4) அனாகதம்** - இதனால், ஆன்ம சக்தியைக் கட்டுப்படுத்தவும் - பிறர் நினைப்பதை அறியவும் - கூடுவிட்டுக்கூடு பாயவும் முடியும். **(5) விசுத்தி**-இதனால், விண்மீன்களின் மீது ஆதிக்கம் செலுத்தி - நோயையும், மரணத்தையும் தடுக்கலாம். **(6) ஆக்கினை** -

இதனால், உடலிலிருந்து பிரிந்து உலவிவரவும் - சகல சித்துக்களை அடையவும் முடியும். இவையாவும். மேற்கூறிய சூக்குமமான நரம்புக் கூட்ட மையங்களின் சக்தி மிகு உணர்வுகளை தன்வயப்படுத்துவதன் மூலம் அடைவதாகும். இவற்றுக்கும் கிரக நிலைகளுக்கும் நேரடி தொடர்பு உண்டு. இச் சக்தி மையங்களின் மூலம் கிரகங்களின் அனுசரனையும் - பிரபஞ்சம் முழுவதுமான சாதனைகளையும் அடையவியலும். இவை யாவும் சித்தர்களுக்குக் கட்டுப்படும்.

## ★ 8. ஓங்காரம் என்றால் என்ன?

ஓம் அல்லது ஓங்காரம் என்பது பிரணவம் ஆகும். இது அ+உ+ம் என்ற மூன்றெழுத்து சேர்ந்தது. இதில், அ-சிவனையும், உ-சக்தியையும், ம்-சிவ சக்தியையும் குறிக்கும். இச் சிவசக்தி சொரூபமே வரிவடிவில், 'ஓ' எனவும், பிள்ளையார் சுழியாகிய 'உ' எனவும் - வழிபடும் வடிவாகக் கொள்ளுகையில் 'சிவலிங்கம்' எனவும் - ஒலியெழுத்தாகக் கூறுகையில் ஓங்காரம், பிரணவம் எனவும் ஏற்கப்படும். இதுவே, "அழியாததும் எல்லாமுமாய்" இருப்பதோடு, திருமூர்த்தியையும் குறிப்பதால் - இதனை தியானித்து செபிப்பதால், உடலினுட் சக்திகள் மேலெழும்பி, பல சித்திகளும் கிட்டும். அனைத்து ஒலிகளுக்கும் முதலாகவிருந்து, அகமும்- புறமும் இயற்கையாய் ஒலிக்கும் ஓங்கார ஒலி மூன்றாகப்பிரிந்தும்; அதில் அகார ஒலி முதலில் பிறந்து - படைத்தலையும்; உகார ஒலி அடுத்து தோன்றி - காத்தலையும்; மகார ஒலி முடிவாதலின் - அழித்தலையும், ஆக முத்தொழிலையும் அடக்கி நிற்கும் இயற்கை ஓசையாகும். இங்ஙனமே, உலக வழக்கில் இம் மூன்றெழுத்தும் மூவித நிலை அல்லது இயல்பினைக் குறிக்கும். இவ்வொலி, உடலில் உந்தியின் கீழ் தங்கியிருக்கும். அ+உ+ம எனும் முப்பிரிவு ஒலியின் இணைப்பாகிய ஓம் என்ற முதலொலியே உலகின் சகல தோற்றத்திற்கும் அடிப்படை யாகும்.

## ★ 9. குண்டலினி சக்தி என்றால் என்ன?

ஆறாதாரங்களுள் முதன்மையான மூலாதாரத்திற்கு காரணகர்த்தர்கள் கணபதியும் - வல்லபையும் ஆகும். குண்டலித்தாயாகிய வல்லபையே குண்டலினிசக்தி எனப்படும். இது, சுருட்டைப் பாம்பு போல் சுருண்டிருக்கும். இதில் 'ஓம்' என்ற பிரணவமும் அடங்கியுங்ளளது. குண்டலினி சக்தியை

எழுப்பி சித்தி பெற - சபம், தபம், தியானம், யோகம் ஆகிய சாதனைகளால் மட்டுமே முடியும். இச்சாதனைகளால் மூச்சொடுங்கிய பின்னர், இச்சக்தியானது அணுவணுவாய் தன்னிடத்தை விட்டகன்று, முள்ளந்தண்டுக் கயிற்றுக்கு நடுவேயுள்ள சுழுமுனைக்குச் செல்லும் தாரைவழியே - சாதிப்பவரின் மனோ சக்திக்கும், சாதனைக்கு மேற்ப மேலுயர்ந்து போகும். ஆறாதாரமும் தனித்தனியே நரம்பு முடிச்சுக்களால் இடைக்கிடையே மூடப்பட்டுள்ளதால், குண்டலினிச் சக்தி மட்டுமே இதன் வழியே ஊடுறுவிச் செல்லவியலும். அப்படிச்செல்கையில் ஆறு ஆதாரத்தலமும் தரிசனமாகும். அவ்வமயம் சகல சித்திகளும் கை கூடும் - நினைத்ததெல்லாம் நடக்கும்-அநேக காட்சிகளும் தெளிவாகத் தோன்றும். இச்சித்திகளை பொருட்படுத்தாது, ஆறு தலங் களையும் கடந்து செல்ல - சிரசிலுள்ள ஆக்கினைத் தானத்தின் உச்சியிலுள்ள பிரமரந்திரத்தில் போய் இச்சக்தி ஒடுங்கும். அப்போது தான் சமாதி கைகூடும். இதனை அடைய யோகிகளால் மட்டுமே முடியும்.

### ★ 10. வாசி நிலை என்றால் என்ன?

உயிர் வாழ்வோரின் நாசிவழியே சுவாசநிசுவாசமாக உலாவுகின்ற உயிர்க் காற்றாகிய பிராணவாயுவே வாசியாகும். சிவசக்தி வடிவாகிய சூரிய சந்திரர் எனப்படும் இவ்வாசியானது நாளொன்றுக்கு 21 - ஆயிரம் சுவாசமாக நடந்துவரும். இதனால் மனம் சுழலும். இவ்வாசியைத் தன் வயப்படுத்தி நடத்துவோர் சகல சித்திகளையும் பெறுவர். சுழுமுனையில் - இடகலையாகிய சந்திரன் சேர பஞ்சபூதங்களும், அறிவும் ஒடுங்கும் - பிங்கலையாகிய சூரியன் சேர ஐம்புலனும், அறிவும் பெருகும். சூரியசந்திரன் ஒன்றாகக்கூடி சுழுமுனையிடத்தில் நிற்பின் தசவாயுவும், அறிவும் ஒடுங்கும். எனவே, அவ்வாசியின் மத்திய நிலையில் - மூலம், குய்யம், நாபி, இதயம், கண்டம், குருபதி இவற்றில் எழுந்தருளியுள்ள ஆதார மூர்த்திகளை சதாகாலமும் சேவித்து நிற்பவர்களே மெய்ஞானிகளாவர்.

### ★ 11. சுழுமுனை நாடி பற்றி விளக்குக?

உடலின் தசநாடிகளுள் மூலாதாரம் முதல் ஆக்கினை வரை வீணாத்தண்டு வழி ஓடி உச்சியில் அச்சுருவாணியாய் நிற்பதே சுழுமுனை நாடி ஆகும். இது, அஸ்தி பிரம்மலோக பிராப்திக் காரணமாகி நிற்கும் ஆதாரமாகவே இதனை பிரம

**தண்டம்** என்பர். பிரம்மலோக பிராப்திக்கு உபாசிப்போரை, இந்நாடி பிரம்மரந்திர மூலம் சூரிய மண்டலம் வரை ஓடி, பிரம்மலோகத்தில் செலுத்தும் பரஞ்சோதி வடிவாகிய பரப்பிரம்மம் இதில் வசிக்கின்றார். இந்நாடியே சுத்த பிரம்மத்திற்கு வடிவாயுள்ள சூரிய சந்திர அக்கினிக்கும்; பஞ்சபூதம், எழுகடல், வேதம், மந்திரம், கலைக்கியானங் களுக்கும் ஆதாரமாயுள்ளது. இரு க்காலின் பெருவிரல் முதல் உடலின் நடு சந்தத்தானம் வரை, இரு கிளையாய் ஓடி அதற்கு மேல் பிரமரந்திரம் வரை ஒரு கிளையாகவும் ஓடி, ஆறாதாரச் சக்கரங்களையும், அதன் மேல் துவாதசாந்தம் வரை நான்கு சக்கரங்களையும் பரப்பி, பிரமரந்திரம் வரை சகல வடிவாகவும், அப்பால் துவாத சாந்தம் வரை களங்கமின்றியும் இருப்பதால் இதனை **நடுநாடி** எனவும் கூறுவர். இது, வாசியோகத்திற்கு நடுநிலையாதலால் **புருவமத்தி** எனக் கொள்ளப்படும்.

## ★ 12. அமுதக்கோளங்களின் பயன் யாவை?

**அமுதக்கோளங்கள்** என்பன - உயிர்தரு மருந்தைப் போன்ற சத்துக்கள் அடங்கிய, அமிர்தம் போன்ற நீரைக் கசியச் செய்யக் கூடியதும், உடலின் பல இடங்களில் உருண்டைகளாகவும் காணக் கூடிய சிறிய **மாமிச மொத்தைகளாகும்**. சித்தர்கள் கூற்றுப்படி **'அமுத நிலைகள்'** எனப்படும் இக்கோளங்கள் சிரசின் மூளை, கண்ட மூலம், நெற்றி, மார்பு முதலிய சில இடங்களில் உள்ளன. இவற்றினின்று சுரக்கும் அமுதம் போன்ற சத்து நீர் உடலைக் காக்கும் இன்றியமையாத பொருளாக மட்டுமின்றி - பொதுவாக மனிதர் உயிர் வாழவும் முக்கியமாயுள்ளது. யோகாப்பியாசத்தினால் இவற்றின் தொழில்கள் அதீதமடைந்து, இவற்றினின்று கசியும் **அமுத நீரானது** உடலினுள் ஊறி - நரை, திரை, மூப்பு, பிணி, சாக்காடு இவற்றை முற்றிலும் தடுத்து, உயிரையும், உடலையும் நிலை பெறச் செய்யும். இதன் வாயிலாகவும் சித்தர்களும் யோகிகளும் அனேக கால்மாக உயிருடன் வாழுவார்கள் (அமுத தாரைகள் இல்லாத கோளங்களும் உடலில் உள்ளன. இவற்றின் அமைப்புக்குரிய காரணமும்-பயனும் இன்னதென நமக்கு விளங்குவதில்லை.)

## ★ 13. அட்டாங்கயோகம் என்றால் என்ன?

**யோகாப்பியாச** முறையின்படி கூறப்பட்டுள்ளதான எண்வகை நிலைமைகளே **அட்டாங்கயோகம்** எனப்படும்

அவை, முறையே- (1) **யமம்**- இது, பசியை விலக்கல். (2) **நியமம்** -இது, மதவழிபாட்டை ஏற்றல். (3) **ஆசனம்**- இது, மனதையும் - உடலையும் விரும்பியவாறே நிலைக்கச் செய்தல். (4) **பிராணாயாமம்** - இது, சுவாசத்தை குறிப்பிட்ட முறையில் நிலைநிறுத்தல். (5) **பிரத்தியாஹாரம்** - இது, உணர்வுகளை விலக்குதல். (6) **தியானம்** - இது, அலைபாயும் மனதை ஒருநிலைப்படுத்தி, மூலகர்த்தரை மட்டுமே தியானித்தல். (7) **தாரணை**- இது, ஒரே உடலுறுப்பில் மனதைச் செலுத்துதல். (8) **சமாதி** இது, மனதை ஆன்மாவில் நிலைக்கச் செய்து பேரமைதியுடன் தியானித்தல் ஆகியனவாகும். இவ்வழிகளின் மூலம் சித்திகளை அடையலாம்.

## ★ 14. அடயோகம் என்றால் என்ன?

**அட(ஹட)யோகம்** என்பது - உடலின் தொடர்பாக செய்யும் பழக்க வழக்கங்களின் விரிவாகிய - ஒருவித **அப்பியாசப் பழக்கமாகும்**. இதனால், உடல் வலிமையுற்று, முதுமை தடுக்கப்படும். எனவே, **ஆத்மலாபம்** பெறவேண்டி தன் உடலை சுத்தித்து,பூரிக்கச் செய்து, பல முண்டாக்கி, நல்ல நிலையில் வைத்திருக்க விழைவோரே அதனை மேற்கொள்ள தகுதி படைத்தவராவர். பொதுவாக தன்னுள் உள்ள சக்திக்கும், அகண்ட சக்திக்கும், உரிய பிராணவாயுவின் வேறுபாட்டினாலான நிலைப்பாடின்மை; அடயோகத்தால் மாறி சமநிலையுற்று உடலில் ஆத்ம சக்தி பெருக இடமளிக்கும். குறிப்பாக, ஐம் புலனை வெல்ல ஆத்ம விசாரணை தேவை. நமக்குள் இயல்பாயுள்ள சக்தி, உலக நடைமுறைகளின் தேவைக்கேற்பவே அமைந்துள்ளதால்; அதிகரித்த ஆத்ம பலத்தைப் பெற போதாது. எனவே, தேவையான பிராணசக்தியை வேறொரு வழியில் பெற-மேற்கூறிய சக்தி இல்லாவர்கள் - இம்முறையை ஏற்பதே அட(ஹட)யோகம் எனப்படும். இதில், **ஆசனம் - பிராணாயாமம்** ஆகியவை முக்கியமானதாகும். இதனால், ஆத்ம சக்தி அபரிமிதமாகப் பெருகுவதால், இயல்பான நிலையிலிருந்து மேம்பட்டு அதிக வலுவுடன் திகழலாம்.

## ★ 15. அப்பியாச யோகத்தினாலான பயன் என்ன?

**அப்பியாச யோகம்** என்றால் மன ஒருமைப்பாடு அடைவதற்கென தொடர்ந்து செய்யும் ஏக சிந்தனை அல்லது **தியானமாகும்**. இதனால் ஓயாத கடல் அலைபோல் எழும்

சிந்தனைகள், அல்லது பழைய நினைவுகளை (சம்ஸ்காரம்) அடக்கியாள வழி பிறக்கும். தியானம் சித்தியானால் இயற்கைத் தத்துவங்களை வெல்லும் ஆத்ம சக்தி தானாகவே ஏற்படும். தொடர்ந்த தியானத்தால் உலகை மறக்கவும் ஏதுவாகும். அப்பியாச யோக சித்தி பெறுவோருக்கு அதிசயிக்கத்தக்க சித்திகளெல்லாம் கைகூடும். இதனால், மனிதரை ஆட்டுவிக்கும் சக்திக்கெல்லாம் தானே ஒரு சூத்திரதாரி போலாவதோடு; உலகின் ஐம்பெரும் பூதச் செயல்களெல்லாம் தனது ஆற்றலுக்கு இணங்கி வணங்கவும் செய்யலாம். நீரின் மீதும், ஆகாயத்திலும் உலாவலாம். சுழுத்தி நிலையாகிய ஆழ்ந்த தியானத்தால் - தன்னைத்தான் அறிவதோடு, தன்னை அறியும் அறிவையும் தன்னால் அறியலாம். மேலும், பொறி - புலன்களின் செயல்கள் இயக்கமடைந்து, மன அலைவும் நீங்குவதால், விரும்பும் சித்தியெல்லாம் தானாகவே வந்தடையும். ஏகாந்த நிலையில் இருப்பதால் மனம் சுத்தியாகி பக்குவமடைந்து, உலகப் பற்று நீங்கி, சீவன் முக்தி நிலையை அடையச்செய்யும்.

## ★ 16. இராசயோகம் என்றால் என்ன?

**இராசயோகம்** - என்பது ஞானிகளுக்குரிய நால்வகை யோகங்களில் ஒன்றாகவும் - சகல பிற யோகங்களிலும் முதன்மையாகவும், சிறந்ததாகவும் கொள்ளப்படும். காரணம், இது இயற்கையில் ஏற்பட்ட மலத்தைப் போக்கி, மோட்ச நிலைக்குரிய வழிகளை நேரடியாக மேற்கொள்ள, சிறந்த முறையாகக் கருதப்படும். இதனால் மனதை எளிதாக லயப்படுத்தி, அந்தக் கரணங்களை வென்று, ஆன்மாவில் ஒடுங்கச் செய்து, சகல பொருளிலும் இறையின் வடிவைக் காணவியலும். மேலும். ஞானவிளக்கத்தினால் மென்மேலும் மனோசக்தி பெருகி, முடிவில் தன்னைத்தான் மறந்து சமாதி நிலையடைய வழிகிட்டும். இப்படியான சிதாகாச நிலையில் சகல சங்கல்பங்களும் லயித்துத் தன்மயமாய் இருப்பதினால் பிரம சொரூபத்தில் ஐக்கியமடைவார்கள். சித்தர்களும், ஞானியரும் தவத்தின் வலிமையால் தமது உடலை மாற்றி இலிங்க வடிவாய் நிற்பார்கள். இத்தகைய இலிங்கத்தை மதுரை, தஞ்சை, திருச்சி, குடந்தை, நெல்லை உட்பட, பொதுவாக தெற்கேயுள்ள புகழ்மிகு சிவத்தலங்கள் தோறும் காணலாம். இத்தகைய சிவாலயங்களில் அமைந்துள்ள இலிங்கங்களெல்லாம் சித்தர் சொருபங்களாகிய சமாதிகளே தவிர வேறில்லை என அறிதல் வேண்டும்.

★ 17. தாரணை எத்தனை வகைப்படும்?

இதயம், கண்டம், நாபி, நெற்றி இவற்றுள் ஒன்றில் ஏகசிந்தனை வைத்து தியானம் செய்து நினைவை ஒரு வழிப்படுத்துதலே - **தாரணை** எனப்படும். அட்டாங்க யோகத்துள் ஒன்றாகிய இதனை சிவயோகியர் 9-வகையாகக் கூறுவர். அவை - **(1) நியமதாரணை** - இது, இறைவனுக்கு ஒரு வடிவமும், பெயரும் தந்து வணங்குவதாகும். **(2) மான்யதாரணை** - இது, உலகை முற்றும் துறந்துவிட்டு - வடிவமும், பெயருமில்லாத எல்லையற்ற கடவுளை வணங்குவதாகும். **(3) பேததாரணை** - இது, உடலிச்சைகளை அடக்கி, காற்றை இதயத்தில் நிறுத்தி யோகப் பயிற்சியில் ஈடுபடுவதாகும். **(4) மந்திரதாரணை** - இது, பஞ்சாட்சர மந்திரம் ஓதி சிவனை வழிபடுவதாகும். **(5) சதுரங்க தாரணை** - இது, நால் வகை பூதங்களுள் மனோசக்தியைப் பொருத்தி இறையை வழிபடுவதாகும். இதில், நெருப்பு (விளக்கம்) - நீர் (மனோபல தியானம்) - மண் (பற்று) இவை கூடி, காற்று (மனம்) மூலமாக பிரமத்தை அடையும். **(6) சத்த தாரணை** - இது, தெய்வீகம் நோக்கி "ஓம்" எனும் சொல்லை இடைவிடாமல் கூறுவதாகும். **(7) வஸ்துதாரணை** - இது, பிரமத்தை மனம் மூலம் அறிவதாகும். **(8) வச்சிரதாரணை** - இது, பிரம்மன், விட்டுணு மீதுள்ள பற்றை விடுத்து சிவலிங்கத்தை மட்டும் வணங்குவதாகும். **(9) சித்திரதாரணை** - இது, 96 தத்துவம், ஆத்மம் இவற்றை முழுமையாக உணர்ந்து, தெய்வீக அறிவுடன் இறை வழிபாட்டில் இணைவதாகும்.

★ 18. பிராணாயாமம் என்றால் என்ன?

உயிர்க்காலாகிய பிராணவாயுவை, யோகநிலைக்கென கட்டுப்படுத்தி மூச்சுவிடும் முறையே **பிராணாயாமம்** ஆகும். சாதாரணமாக மனத்தை நடத்தும் பிராணவாயு, பாண்டும் 12. வட்டமாகி இடகலையிலும் (சந்திரப்பகுதி), பிங்கலையிலும் (சூரியப்பகுதி) ஐம்பூதங்களைப்பிரித்துக் காட்டும். இவையோ, அந்தக்கரணங்களினால் ஞான அறிவைத் தோற்றுவிக்காமல், நரை, திரை, மூப்பை எளிதில் உண்டுபண்ணி, ஆயுளையும் குறைத்துவிடுகிறது. எனவே, மனதையும், புலன்களையும் அவ்வழி செல்லவிடாமல் அறிவால் தடுத்து ஒரு முகப்படுத்துவதே பிராணாயாம நெறியாகும். இதனை விடாது பற்றிப் பயின்று வாசிதாரணை சித்தி செய்வதற்கு, கற்ப முறைகளும் தெரிதல் அவசியமாகும். பிராணவாயுவின்

அசைவிற்கேற்பவே சித்தமும் அசையும். எனவே, இது மனம் அடங்குவதற்கு செய்வதன்றி வேறில்லை, இதில் **இரேசக பூரக கும்பகம்** அடங்கியுள்ளது. மனோலயமாவதற்கு சிறந்த வழியாகிய இதனை, குருமூலம் சிறிது சிறிதாய் கணக்குப்படி பயில வேண்டும். இதனால், தவயோக ஞானங்கள் சித்தியாவதால் பிறப்பைத் தவிர்க்கலாம். பிறகு பேரின்ப நிலையையும் அடையலாம்.

## ★ 19. மாந்திரீகம் என்றால் என்ன?

ஒருவித இரகசியமான கலையே - **மாந்திரீகம்** எனப்படும். இதனால் நன்மை - தீமை இரண்டையும் செய்யலாம். இது பல வகைப்படும் இது, முக்கியமான போதனை நூற்களில் கண்டுள்ள மாந்திரீக எழுத்துக்களையும், வார்த்தைகளையும் உச்சரிப்பதன் மூலமும் - ஐங்கோலத்தைலம், சில வகை மைகள் முதலியவற்றை பயன் படுத்துவதன் மூலமும்-செபம் முதலிய தியானங்களைச் செய்வதன் மூலமும் கிட்டும் சக்திகளின் மூலம் சாதிப்பதாகும். இத்தகைய தெய்வீக முறையிலுள்ள, எளிதில் புலப்படாத அடைமொழிகளின் மூலம் இறைவனிடம் செல்வாக்கடைவதோடு - பேய், பூதம், துர்தேவதைகளை குற்றேவல் புரியவும் செய்யலாம். மாய வேலைகளின் மூலம், பூதம், தேவதைகளை எழுப்புதல் - மறைக்கப்பட்ட புதையலைக் கண்டறிதல் - முறண்படும் ஆவி முதலியவற்றை மகிழ்வித்து வசப்படுத்தல் - தியசக்திகளை வரவழைத்தல் அல்லது விரட்டியடித்தல் முதலியவற்றை சாதிக்கலாம். மேலும் **மாந்திரீக சிகிச்சை** மூலம் தோடம், நஞ்சு, பிணி இவற்றை விலக்கலாம். (ஆதி) சங்கராச்சாரியாரின் **மந்திரசாஸ்திரம்** என்ற நூலிலுள்ள **சௌந்தரியலகரி** (59.பாடல்), **ஆனந்தலகரி** (41-பாடல்) ஆகியனவும் கூட ஒரு வகை **மந்திரவித்தைதான்.** (மாந்திரீக வாதிகளை தரக் குறைவாக நினைப்பினும் - அவர்களைப்பற்றிய அச்சம் மட்டும் விலகுவதில்லை)

## ★ 20. பிரமநிஷ்டர் என்போர் யாவர்?

பிரமத்தை நோக்கித்தவமியற்றும் முனிவர்களே - **பிரமநிஷ்டர்** எனப்படுவர். இவர்கள் நால் வகையாகும். அவை (1) **பிரமவித்துவன்** - இவர்கள், சாதாரணமாக தொடக்க நிலையிலுள்ளஅப்பியாசியாகும். (2) **பிரம வித்வரன்** - இவர்கள் சாபமிடுமளவு சத்திபெற்றவர்களாகும் (உ-ம்:- கவுசிகன்) (3) **பிரமவித்வரியான்**-இவர்கள் சுற்றுச் சூழலையும்,

உலகையும் மறந்து ஆத்துமதவம் புரிபவர்களாகும். **(4) பிரம வித்வரிஷ்டன்** - இவர்கள், மேற்கூறிய மூன்று நிலைகளையும் கடந்த மேலோர்களாகும்.

## ★ 21. தச காரியம் - என்பன யாவை?

ஆன்மா கைவல்யமாகுங் காலத்தில் அடையும் பத்துவிதமான அனுபவங்களே - **தசகாரியம்** எனப்படும். அவை **1) சைவ தத்துவப்படி** - ஆன்மரூபம், ஆன்மசுத்தி (பரிசுத்த நிலைமை), ஆன்மதரிசனம் (ஆத்தும நிலையறிதல்), சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம், சிவராஜயோகம், தத்துவரூபம் (உண்மை வடிவம்), தத்துவ தரிசனம் (ஞானக்காட்சி), தத்துவ சுத்தி (தத்துவங்களின் பரிசுத்தம்) ஆகியனவாகும் **2) அத்வைத தத்துவப்படி** - சீவரூபம், சீவ சுத்தி, சீவதரிசனம், பிரமரூபம், பிரம தரிசனம், மாயரூபம், மாயசுத்தி, மாயதரிசனம், தேக கைவல்யம், விதேக கைவல்யம் ஆகியனவாகும்.

## ★ 22. தசதீட்சை - என்பன யாவை?

சித்தர்களும், ஞானிகளும் தன் உடல் சித்தியாவதற்கென செய்யும் பத்து வித சுத்தி முறைகளே - **தசதீட்சை** எனப்படும். அவை 1) உரோமத்துவாரங்கள் வழியாக துர் நீர்களை வியர்வையாகக் கழியுமாறு செய்தல். 2) வாத, பித்த, கபம் ஆகிய முக்குற்றங்களை நீக்குதல், 3) பழைய கெட்ட குருதியைக் கசியச் செய்தல். 4) சர்ப்பம் தோலுரிப்பது போல் தன் உடலின் சட்டையைக் கழற்றுதல் 5) சட்டை கழன்ற பின் உடல் செந்நிறமுற்று, உரோமம் கருத்தல் - பஞ்சமூர்த்திகளும் வசமாவர். 6) சுழுமுனை வாசல் திறந்து தூர திருட்டி வசமாதல். 7) உடல் சோதி வடிவாகி, தீபம் போல் பிரகாசித்தல் 8) உடலை உயரத் தூக்கி இலகிரியாதல் - கூடுவிட்டுக் கூடுபாய்தல். 9) யோகம், ஞானம் விளங்கி, உடல் சூரியப் பிரகாசமாகி, அட்டமா சித்தியடைந்து, தேவர்கள் ஏவல் புரிதல், 10) உடலை வெட்டினால் கத்தி ஒடி ஊடாடல், சொரூப சித்தியடைதல்; நரை, திரை, மூப்பு, பிணி இவற்றைத் தவிர்த்தல், காற்று வடிவாக விளங்கும் திருமேனியை அடைதல் - மரணமே இல்லாதிருத்தல் ஆகியனவாகும்.

## ★ 23. பரகாயப் பிரவேசம் என்றால் ன்ன?

பொதுவாக, **பரகாயப்பிரவேசம்** என்றால் **மறுபிறவி**

எனப்படும். இயற்கையில் நிகழுவது **அடுத்தபிறவி** எனவும்; செயற்கையில் நிகழுவது **கூடுவிட்டுக் கூடு பாய்தல்** எனவும் கூறப்படும். இப்படி, **ஆன்மா** தன்னிடமிருந்து நீங்கி வேறிடம் செல்வது இருவகைப்படும். அவை **(1) தன்னிச்சையாகச் செல்வது** - இது, சித்தர்கள், யோகிகள் முதலியோர் தனக்குரிய சக்தியினாலும், விருப்பத்தினாலும்; தான் உயிருடன் உள்ளபோதே வேறொரு இறந்த அல்லது உயிருள்ள உடலுக்குள்; ஐம்பூத அல்லது உடல் தொடர்பான தனிப்பட்ட சிறப்புமுறையில் விளையாட்டாகப் புகுந்து உலவுவதாகும். இது, கூடுவிட்டுக் கூடுபாய்தலாகும். **(2) தன்னிச்சையின்றி செல்வது** - இது, தனது விருப்பமின்றியே, தான் இறந்த பிறகு, இயற்கை விதிப்படி, தனது ஆன்மா வேறோரு தாயின் கருவினுள் புகுந்து மனித உருக்கொள்வதாகும். இது, உலகில் மற்றயாவருக்கும் பொதுவானதாகும். இது அடுத்த பிறவியாகும்.

## ★ 24. அட்டமா சித்திகள் என்பன யாவை?

சித்தர்கள் யோக வழி நின்று பெறக்கூடிய எண்வகை அரிய பலாபலன்களே - **அட்டமா சித்திகள்** எனப்படும். அவை, (1) **அணிமா** - இது, மனோசக்தியினால் தன்னை அணுவளவுக்கு சுருக்குவதாகும். (2) **மகிமா** - இது, தன்னை மலையளவுக்கு பெரிதாக்குவதாகும். (3) **கரிமா** - இது, தன்னை மிகவும் பாரமாகவோ - எதனையும் ஊடுருவுமளவு அணுமயமாகப் பிரித்தலோ ஆகும். (4) **இலகிமா** - இது, தன்னை இறகு போல் இலேசாக்குதலாகும். (5) **பிராத்தி** - இது, தான் விரும்பியவற்றை அடைதலாகும். (6) **பிராகாமியம்** - இது, தடை செய்யப்பட்ட அல்லது இயற்கைக்கு விரோதமாகவுள்ள இடங்களுக்கும், தான் விரும்பியவாறு செல்லுதலாகும். (7) **ஈசத்துவம்**-இது, தான் நினைத்தவற்றை உருவாக்க, காக்க,அழிக்க இயலுவதாகும். (8) **வசித்துவம்** - இது, யாவற்றையும் தன்வயமாக்குதலும் - இயற்கையை மாற்றி, தான் விரும்பிய வடிவெடுத்தலும் ஆகும்.

## ★ 25. அட்டதுர்க்கை மூலிகை பற்றிக் கூறவும்?

அட்டதுர்க்கை மூலிகை என்பன மாந்திரீகத் தொழிலுக்குப் பயன் படக்கூடிய எண்வகைப் பச்சிலைகளின் வேர்களாகும். அவை, (1) **முருங்கைவேர்** - இதனால், தலையை அனுசரித்து வரும் பிணிகளை உண்டாக்கலாம் . (2) **முடக்கொற்றான் வேர்** - இதனால் எதிரிகளை முடமாக்கலாம். (3)

**மூக்ரைச்சாரணைவேர்** - இதனால், உடலில் பிளவை, கட்டிகளை உண்டாக்கலாம். (4) **முசுட்டைவேர்** - இதனால், எதிரிப்படைகளை வெல்லலாம். (5) **மூக்காவேளைவேர்** - இதனால், வனவிலங்குகளை அடித்து விரட்டலாம் (6) **முள்ளிவேர்** - இதனால், உடலில் கடும் எரிச்சலை உண்டாக்கலாம். (7) **முசலை வேர்** - இதனால், பில்லி, சூனியக்கேடுகளை அகற்றலாம் (8) **மஞ்சணைவேர்** - இதனால் சகதி மண்ணையும் மணமிக்க பொருளாக்கலாம்.

## ★ 26. அட்ட கரும வித்தை என்பன யாவை?

பஞ்சாட்சரத்தின் மாறலினால் செய்து முடிக்கும் எண்வகை மாந்திரீகத் தொழிலையடுத்த கிட்டுதற்கரிய செயல்களே **அட்டகரும வித்தை** எனப்படும். இதற்கெனத்தயாரிக்கப்படும் **அட்டகருமக்கரு** எனப்படும் மாந்திரீக 'மை' யின் துணை கொண்டும் - **ந,ம,சி,வ,ய** எனும் மந்திர எழுத்தின் வலிமை கொண்டும் - ஒவ்வொரு தொழிலுக்கும் ஏற்ப தயாரிக்கப்படும் **அட்டகருமப்பலகை** என்ற மனைகளில் அமர்ந்து செபிப்பதால் இவை கைகூடும். இவ்வகை **அட்ட கரும சித்திகளாவன** – (1) **ஆக்கருடணம்** - இதனால், தேவதை, ஆவி, ஆத்மா முதலியவற்றை அழைக்கலாம். (2) **உச்சாடனம்** - இதனால், பேய், பிசாசு முதலிய தீய சக்திகளை விரட்டலாம். (3) **பேதனம்** - இதனால், குடும்பம், அல்லது நண்பர்களைப் பிரித்துவிடலாம். (4) **மாரணம்** - இதனால், சூனியம்மூலம் ஒருவரைக் கொன்று விடலாம். (5) **மோகனம்** - இதனால், மகிழ்வூட்டி ஒருவரை மயக்கலாம். (6) **வசியம்** - இதனால் ஒருவரை வசீகரித்து, தனது கட்டுப்பாட்டிற்குக் கொண்டு வரலாம். (7) **வித்துவேடணம்** - இதனால் இருவரிடையே பகை அல்லது வெறுப்பை உண்டுபண்ணலாம் - (8) **தம்பனம்** -இதனால், நீர் - நெருப்பு - குருதிப்பெருக்கு-செயல்- பேச்சு - அசைவு - மிருகம் - விந்துக்கலிதம் போன்றயாவற்றையும் இயங்காமல் நிறுத்தி வைக்கலாம்.

## ★ 27. இரசத்திற்குரிய சிறப்புக் குணங்கள் யாவை?

**இரசம்** சகலவிதமான கொடிய - நாட்பட்ட பிணிகளையும் முழுமையாக நீக்கி, உடலுக்கு புதுவடிவும் - வலிமையும் அளிக்க வல்லதொரு மிக உயரிய பொருளாகும். இது குரு - தைலம் போன்ற பலவித பற்பம்-செந்தூரம்-சுண்ணம்-களிம்பு - மருந்துகளாகவும்: மற்றும் **வாதம்** உள் - வெளிப்பயனுக்குரிய **மருந்துகளாகவும்:** மற்றும் **வாதம்**

**-கவுனம்** போன்ற அரிய செயல்களுக்குதவும் **குளிகை** முதலியன செய்வதற்கும் உதவுகிறது. **சூதத்திற்கு இயற்கையா** யுள்ள, **சர்ப்பம்-வங்கம்-கந்தி-வன்னி-மந்தம்-மலம்-சாஞ்சலம்-நாளம்** ஆகிய எண் வகைக் குற்றங்களையும் சுத்திக் கிரமங்களின் படி நீக்கி தூய்மை செய்து பயன்படுத்தினால் சித்தர்கள் கூறிய செயல் யாவும் புரியும். ஈசன் விந்து பொதுவாக-சித்தரசம்-நவநீதரசம்-தொடுப்புரசம்-சிராவணரசம்-சுத்தரசம்-நின்மலரசம்-அட்சயரசம்-விந்திரசம் என 8 வகைப்படும். (இவற்றுள் முதல் நான்கும் செந்தூரித்து **வேதை** செய்யவும் - கடைசி நான்கும் சாரணையேற்றி **குளிகை** செய்யவும் பயன்படும்.) குறிப்பாகக் கூறப்புகின், சித்தர்களின் **வைத்திய-யோக-ஞானத்தத்துவ வெற்றிக்கும்**, உலகின் சகல சித்திகளுக்கும் உரிய அனைத்துப் பொருள்களிலும் முதலிடமும் - மேன்மைச் சிறப்பும் பெற்ற இரசத்தின் சிறப்புக் குணங்களைக் கூற ஓர் எல்லையில்லை எனலாம்.

## ★ 28. இரசவகையின் பயன் யாவை?

கொங்கணவரின் கூற்றுப்படி - **திசைரசம்** அதாவது **எண்வகை ரசம்** என அறியலாம். இரசத்துடன் வெண்காரமும், வீரமும் கூட்டி, சிப்பிசெயநீர் விட்டரைத்து உருக்கி - மீண்டும் மேற்கூறிய 3-சரக்கும் கூட்டி, சிப்பிசெயநீரிலரைத்து உருக்கி -இப்படியே 8முறை செய்துவர, ஒவ்வொரு முறையும் இரசத்தின் வேகம் கூடிக்கொண்டே வரும். தடவைக்குத்தடவை அதன் பெயரும் - பயனும் பின்வரும் கிரமப்படி கூறப்படும். அவை - (1) **சித்தரசம்** - இதனால் நவலோகம் பழுக்கும். கவுனமோடும். காயசித்தியாகும். (2) **நவநீதரசம்** - இதனால் உலோக, உபரசம் பொன்னாகும். உடல் கல்பமாகி மன்மதன் போலாகும். (3) **தொடுப்புரசம்** - இதனால் வேதையாகும். பொன் 108 - மாற்றாகும். (4) **சிராவணரசம்** - இதனாலும் 108 - மாற்றுள்ள தங்கம் செய்யலாம். (5) **சுத்தரசம்** - இதனை 100 - முறை சாரணையேற்ற 'கமலினி' எனப்படும் ககனக்குளிகையாகும். இதன் செந்தூரத்தால் உபரச, உலோகம் யாவும் பொன்னாகும். (6) **நின்மலரசம்**-இதனை 201-முறை சாரணை தீர்க்க மேருமுதல் திரியலாம். இப்படி 7-முறை சாரணையிட கமலினி என்ற குளிகையாகும், இதனால் 1008-அண்டங்கள் சுற்றலாம். நீர் (கடல்வற்றும்), நெருப்பு (தீச்சுவறும்), வாயு (காற்று சுண்ணும்) ஆகிய பூதங்களை வெல்லலாம். (7) **அட்சயரசம்** - இதனை 11-முறை சாரணை

தீர்க்க அட்டமாசித்தி உண்டாகும். **(8) விந்திரசம் (இந்திரரசம்)** - இதனை 201x100 முறை சாரணை தீர்க்க 'சொரூபக் குளிகை' ஆகும், இதனால் உடலையும், உடலின் செயல் பாடுகளையும் மாற்றியமைக்கவும், மறுபடியும் தோற்றுவிக்கவோ இயலும்.

## ★ 29. இரச பாகங்கள் என்பன யாவை?

சித்தர்களால் ஈசன்விந்து எனச்சிறப்பிக்கப்படுவதும், மேலான குருச்சுண்ணம் செய்யப் பயன்படுவதுமான இரசத்தைக் கையாளும் பல்வேறு முறைகளையும் கூறுவதே - **இரசபாகம்** ஆகும். இரசத்தை முறைப்படி கையாள - வேதை, கல்பம், யோகம், குளிகை முதலியவற்றை அடைவதோடு; கர்மவினைப் பிணிகளையும் களைந்து நலமூட்டலாம். பௌதிகம், இரசாயனம், மாந்திரீகம், வாதம், வைத்தியம், தத்துவஞானம் முதலியவற்றை அனுசரித்து பலவாறு கூறியதோடு - பின் வரும் பயன்களைப் பெறலாம் எனவும் கூறியுள்ளனர். அவை-(1) **இரசத்தை மணியாகக்கட்டி**, சாதாரணமாக உடலில் அணிந்து கொள்ள சுகமுண்டாகும் - சிறிதும் களைப்பின்றி நீண்டதூரம் விரைந்து நடக்கலாம் - இடுப்பில் அணிந்து கொள்ள விந்து தம்பித்து, களைப்பின்றி பெண்களை நெடுநேரம் புணரலாம் - கவுனக்குளிகை செய்து, ஆகாயத்தில் பறந்து, பல அண்டங்கள் செல்லலாம். **(2) உணவு கொள்ளும் பாத்திரம்** செய்து பயன்படுத்த உடல் வலுப்பெறும். **(3) காயகல்பமாகக்** கொள்ள உதவும் **(4) குரு மருந்துகளைச்** செய்து அசாத்தியப் பிணிகளை நீக்கலாம். **(5) மாந்திரீகத்தில்** பில்லி, சூனியத்தால் வரும் கேடுகளைத் தீர்க்கலாம். **(6) வகாரப்** போக்குக்குப் பயன் படுத்தலாம் **(7) உடலை** தூல, சூக்குமமாக மாற்றலாம். (8) பல்வேறு **சித்திகளையும்** அடைய உதவும்.

## ★★ 30. மூவுப்பூ (முப்பூ) உண்டாகும் வகை யாது?

கடல் நீரையுண்டு திரண்ட மேகம் களியுப்பாயிருந்து இழையும் போது கக்கும் உப்பானது, இடியாக பூமியின் நிலம் - கடல்-மலை ஆகிய பகுதிகளில் விழுகையில், மிக காரமுள்ள செயநீர் உப்பாக முறையே **பூநீறு உப்பு - பாறை உப்பு - உதகநீர் உப்பு** என மாறுகின்றது. அதாவது, (1) இடி தரையில் விழுந்து பூமியினுட் செல்லுகையில் சத்தி இருந்து கிரகித்துக் கொள்வதால், அங்கு அண்டக்கல்லாக நின்று அப்பகுதியை

உவர் நிலமாக்கி தரையின் மேலே **உவர்ப்பூ** (பூநீறு - பூமிநாதம் - கானல்பூ - வெடியுப்பு) பூர்க்கின்றது. **(2)** இடி கடலில் விழுந்து நீரினுட் செல்லுகையில் சத்தியினிடம் ஐக்கியப் படுவதால் நீரினுள் உறைந்து படர்ந்தும், மிதந்தும் **பாறையுப்பாக** பரிணமிக்கின்றது. **(3)** இடி மலையில் விழுந்து, பிளந்து உட்செல்லுகையில் சத்தியால் நிறுத்தப்படுவதால், அப்பகுதியை சல்லிகளாய்த் துளைத்து, மணல் போலாக்குகிறது அங்கு மழைநீர் உட்சென்று, மஞ்சள், சிவப்பு நிறமான பாசங்கள் குருணைச் சோறு போல் குகையினுள் நின்று, ஊற்றுப்போல் மலை வெடிப்புகளில் நீர் கசிந்து வெளியேறி அருகாமையிலுள்ள பள்ளத்தாக்கில் தேங்கி அங்கும் உப்பு சாப்பிட்டு, பெரிய சுனை போல் (உதகநீர்) இருப்பதிலிருந்து எடுப்தே **உதகநீர் உப்பாக** விளைகின்றது. (இம்மூவகை உப்புக்களினாலும் பாடாணவகை தீயில் கட்டுப்பட்டு மருந்தாகப் பயன் தரும்.)

### ★ 31. உதகநீரின் பண்பும் - பயனும் யாவை?

**உதக நீரானது** சிவப்பு, பச்சை, மஞ்சள், கருப்பு என்ற நிறத்தில் கழுநீர் போன்றும்; குழகுழத்துப் பிசுபிசுப்பாகவும், என்றுமே வற்றாத தன்மையுடனும் இருக்கும். (மழை நீர் வந்தால் உதகத்தின் மேற்புறமே நின்று வெய்யிலின் போது வற்றிவிடும்.) உதக நீரை மனிதர், பறவை, மிருகம் போன்றோர் அருந்தினால் கல்லாகி விடுவர். இதுவன்றி, உதகநீரின் மீது விழும் இலை, தழை, குச்சி முதலிய யாவும் கல்லாக மாறி, பின் பெரு மழையின் போது அடித்து இழுத்து வந்து ஆறுகளில் மணலாக்கி கொண்டு வந்து தள்ளி விடும். நிற்க, **உதகநீர்** முறையே, **சணவேதி–நாள்வேதி–இரு நாள்வேதி–திரிநாள்வேதி–பஞ்சவேதி–சப்தவேதி–தசவேதி–மாதவேதி –மண்டலவேதி - அறுபது நாள் வேதி** என 10 - வகைப்படும். (இந்த வகைகளில் குறிப்பிட்டுள்ள நாளளவில் தான் அதில் விழுந்த பொருள் கல்லாகி தன் இயற்கை தன்மையையும் இழக்கும்). இத்தகைய உதகநீரை அதனதற்குரிய பரிசீலனை முறைகளின்படி கண்டறிந்து, உரிய மந்திரங்களைச் செபித்து, தக்க முறையில் எடுத்து, கவனமுடன் பயன்படுத்தினால் **வாதம் – வைத்தியம் – கவுனம் – காயகல்பம்** முதலிய சகல சித்திகளும் கைகூடும். (நிற்க, உதகநீர் என்பது அண்டத்தில் மட்டுமல்ல, மனித பிண்டத்திலும் உள்ளது எனக் கூறப்படும்.)

## ★★ 32. அண்டக்கல் என்றால் என்ன?

சித்தர்களால் போற்றப்படுவதுவும், சித்தர்களின் பல தலைகளுக்கு ஆதாரமாக விளங்குவதுவும், முப்பூ முதலிய குருமருந்து முடிக்க அடிப்படைத் தோற்றமாக விளங்கு வதுவுமான ஒருவகை மேலான சுண்ணாம்புக்கற்களே - **அண்டக்கல்** எனப்படும். இவை, புரட்டாசி முதல் கார்த்திகை மாதத்திற்குள் - உவர்ப்பூமியில் இடுப்பளவு பள்ளம் தோண்டிப் பார்க்க, பூநீறானது மாறி பல்லி அல்லது ஓணான் முட்டைகளைப் போலிருக்கக் கூடியதான - **விஷக்கற்களாகும்**. இதற்கு, சிற்றண்டம், பேரண்டம், நடுவண்டம், ஆனைக்கல், காரசாரக்கல், நடுமையக்கல், ஆகாசபிரம விந்து, பிரமக்கல், பிரமகற்பம், வெள்ளைக்கல், பிண்டக்கல், பிரமகல்பக்கல், எழுபிறப்புக்கல் என்றெல்லாம் மறைமொழிப் பெயர்களுண்டு. இது, முதலில் ஆகாயத்தில் ஒளியாயிருந்து, பிறகு பூமியையடைந்து, பிருதிவியினுள் ஏழுதரம் மாறுதலடைந்த தாகக் கூறப்படும். அவை, முறையே - ஆதியிலே ஒளியுமாச்சு, மறு பிறப்பு நீலமாச்சு, பூமியிலே சிவப்புமாச்சு, காங்கை கொண்டு மறு பிறப்பு வெள்ளையாச்சு, துள்ளியது பின் பிறப்பு மஞ்சளாச்சு, அதன் பின்பு தோகைமயில் நிறமதாச்சு, (ஈராக) உயிர்க்கோழி முட்டை நிற படிகமாச்சு எனப்படும். (சிலர், இதனை - கற்சுண்ணத்திற்குரிய **சுக்கான்கல்தான்** எனக் கருதுவதுமுண்டு.)

## ★★ 33. முப்பு செய்முறை ஒன்றைக் கூறவும்?

இறையருளால் - சித்தர்களது ஆசியால் மட்டுமே முடிக்கக் கூடிய, உலகப் பொது மருந்தே - **முப்பு** என்பதாகும். இதன் வகையறியாமல், சித்தர்களுடைய மறைமொழிக்கு தத்தமது சிற்றறிவிற்கேற்ப பொருள் கொண்டு ஏதேதோ முறைகளில் செய்து பார்த்து தோல்வியுற்றோர் எண்ணிக்கைக்கோர் எல்லையில்லை. மனமது செம்மையானால் சித்தர்கள் கூறிய சூக்குமம் புரியும். முப்பு முடித்தோரிடம் அட்ட லட்சுமியும் வாசம்புரிவர். அவர்களுக்கு இணையானோர் எவருமிலர். இங்கு, **சௌமிய சாகரத்தில்** கூறப்பட்டுள்ள ஒரு முறையைக் காணலாம். **முப்புசெய்முறை** : இந்திரகோபம்-1, எவச்சாரம் -1, குருவண்டு-1, துருசு-2, கல்நார்-2, இந்துப்பு-2, வெடியுப்பு -3, தாளகம்-3, கடல்நுரை-5, பொன்னம்பர்-5, பூநீறு-11, வெள்ளி நிமிளை-18 ஆகிய பங்குவீதம் ஆக மொத்தம் 54-விராகனெடை எடுக்கவும். இவற்றை முதலில் திருநீற்றுப்

பச்சிலைச் சாற்றிலும்; பிறகு முறையே கருப்பு வட்டக்கிலு கிலுப்பைச் சாறு, செங்கீரைச்சாறு, வெள்ளெருக்கலம் பால், சிறுவர் அமுரி, முலைப்பால் இவற்றிலும் தினமொன்றாய் அரைத்தெடுக்கவும். இதனை பூரணை தொடங்கி இரவு முழுவதும் பனியில் வைத்து, சூரிய உதயத்திற்கு முன் எடுத்து: இப்படி 10-தினம் செய்தபின் - வெள்ளைப்புனுகைக் கரைத்து, எலுமிச்சம்பழச்சாறு கலந்து, மீண்டும் முன்போல் 10-தினம் வைத்தெடுக்கவும். இது, தினையளவாய் மணிபோல் ஒளிரும். மீண்டும் முன்போல் பழச்சாறுவிட்டு வைத்தெடுக்க கடுகளவாய் ஒளிரும். இதுவே **முப்பாகும்**. இது சேர யாவும் கட்டி நீறும் - மருந்துகளுக்கு உயிரூட்டும் - இரசம் கட்டி மணியாகும் - காயம் கல்பமாகும் - பல சித்திகள் கிட்டும். (III-ம் பகுதியில் வேறொரு முறையும் கூறப்பட்டுள்ளது)

## ★ 34. நவமணிகளின் பண்புகள் யாவை?

**நவரத்தினங்களுள்** முறையே, சூரியனின் அருணன் நிறமுள்ள **மாணிக்கம்** குருதியின் வித்தாகவும்-சந்திரனின் பால் நிறமுள்ள **முத்து** பற்களின் வித்தாகவும் - செவ்வாயின் செந்நீர் நிறமுள்ள **பவளம்** தசையின் வித்தாகவும்-புதனின் கரும்பச்சை நிறமுள்ள **மரகதம்** பித்தத்தின் வித்தாகவும் - வியாழனின் பசும்பொன் நிறமுள்ள **புட்பராகம்** கபத்தின் வித்தாகவும்- சுக்கிரனின் சுத்த வெண்மை நிறமுள்ள **வைரம்** எலும்பின் வித்தாகவும்- சனியின் நீல நிறமுள்ள நீலம் க்ண்ணின் வித்தாகவும்-ராகுவின் கறுப்பு நிறமுள்ள **கோமேதகம்** நிணம் வித்தாகவும்-கேதுவின் கருஞ்செம்மை நிறமுள்ள **வைடூரியம்** மயிர் வித்தாகவும்-அமையப்பெற்றுள்ளன. இதில், முத்து, மரகதம் இவை **சாத்மீக குணமும்;** பவளம், மாணிக்கம், கோமேதகம், புட்பராகம், வைரம், வைடூரியம் ஆகியன-**இராசத குணமும்;** நீலம்-**தாமத குணமும்** உடையனவாகும். நிற்க, மேற்கூறியுள்ள உடற் தாதுக்களினா லான கோளாறுகளை நீக்க, அதனதற்குரிய மணிகளைப் பயன்படுத்த நலன் கிட்டும். (பொதுவாக, நவமணிகளால் உடல் நலம் மட்டுமின்றி, சகலவளமும், பெருமையும் கிட்டும்.)

## ★★ 35. நவமணிகளின் மருத்துவப் பயன் யாவை?

**நவரத்தினங்களுள்** முறையே **(1) கோமேதக** மணியினால் வாதபித்தம், மலக்கட்டு, பசியின்மை, சுரத்தாலான கேடுகள் இவை நீங்கி, உடல் ஒளிரும். **(2). நீல மணியினால்** குதிகால்

வலி, மேகம், பித்தம், பாண்டு, அறிவு மாறல் இவை நீங்கி, நுட்ப அறிவும், போக சுகமும் கிட்டும். **(3) பவள மணியினால்** உடல் தோடம், கபம், சன்னிபாத சுரம், இருமல், அரோசகம், விஷகடி, தாது நட்டம், தாகம், நாவின்சுரசுரப்பு இவை நீங்கி, உடல் ஒளிரும். **(4) புட்பராக மணியினால்** மேகநோய்கள் நீங்கி, சுக்கில விருத்தியும், அறிவுத் தெளிவும் உண்டாகும். **(5) மரகத மணியினால்** மதுமேகம், புண்கள், நச்சுக்கெடுதி இவை நீங்கி, தாது விருத்தியுண்டாகும். பூத பிசாசுகள் ஒழியும். **(6) மாணிக்க மணியினால்** சுரம், சன்னி, மிகுதாகம், வன்மேகம், நாட்பட்ட கண்ணோய், கபம், விஷம், கர்மம், இவை நீங்கி, விந்துவும் சிவ சக்தியும் பெருகி, வசியமும் காணும், பூத வேதாளம் ஓடும். **(7) முத்து மணியினால்** என்பு சுரம், சோபை, சுவையின்மை, வலிமை குன்றல், கண்ணோய், பித்தம், சீதளம், விஷம், கபம், தாதுநட்டம் இவை நீங்கி, உடல் வன்மையும், மனத்தெளிவும் ஏற்படும். **(8) வைடூரிய மணியினால்** கபவாதம், புளியேப்பம்; சளி, சூலை, வாதகுன்மம், பித்தம், அபத்தியதோடம் இவை நீங்கி, வசியமும் விளையும். **(9) வைர மணியினால்** கண்ணோய், இருதய பலவீனம், கடினப்பிரச்வம் முதலிய பல பிணிகள் நீங்கி உடல் அழகும், வசியமும் உண்டாகும்.

## ★ 36. சோதிடம் என்பதன் விளக்கம் என்ன?

**சோதிடம்** (எண்) என்பது **சிவபெருமான்** அருளிய நான் மறையின் பொருளை உணர்வதற்குரிய கருவிகளாய் விளங்கும் அறுவகை வேதங்களுள் கண்ணைப்போல் முதன்மை வாய்ந்தாகும். இது **பராசரர்** முதலியோரால் விரிவாகவும். பிறகு **வராகமிகிரர்** போன்றோரால் சுருக்கமாகவும் கூறப்பட்டுள்ளது. நிற்க, கிரக நிலைகளை பிழையின்றி விளக்குவதான - **கணிதம்**; அவரவர் பிறந்த காலத்திலுள்ள கிரக நிலையைக் கொண்டு இலக்கணம் முதலிய பன்னிரு பாவங்களை தெரிவிப்பதான - **சாதகம்**; தான் விரும்பியவற்றின் பலாபலன்களை அறியும் பொருட்டு வினவும் காலத்தில் தோன்றும் கிரகநிலையைக் கொண்டு பலாபலன்களை அறிவிப்பதான-**ஆருடம்** என **சோதிடம் மூவகைப்படும்.** (இம் மூன்றும் ஒன்றுடனொன்று இணைந்ததாகவே, இம் மூன்றையும், அறிந்திருத்தல் வேண்டும்.) இது புண்ணிய காலமுணர்ந்து அவ்வப்போது செய்வதற்குரிய வினைகளைச் செய்து புண்ணியம் மீட்டுதற்கும் - முன்வினையால் விளையும்

இன்ப துன்பங்களை வரும் காலமுணர்ந்து, வருவது நன்மையாயின் மேலும் நலனடைதற்குரியன செய்தற் பொருட்டும்; வருவது தீமையாயின் அது நீங்குதற்குரிய சாந்தி முதலியன செய்து நீக்கிக் கொள்ளுதற்கும் இன்றியமையாத தாக உள்ளது. பொதுவாக, மூவகைக் காலமும் நெறியினால் ஆற்றல் பெறுவதும் - இரவு பகல் இடைவிடாது விண்வெளியை நோக்கி அங்கு நிகழும் வில், மீன், ஊர்கோள், தூமம், மின் வீழ்ச்சி, கோளின்நிலை, மழைநிலை இவையும், பிறவும் கண்டு உரிய பலன்களைக் கூறுவதே "**சோதிடம்**" என்பதாகும்.

## ★ 37. குளிசங்கட்டல் என்றால் என்ன?

தோடங்களை நிவர்த்திக்க வேண்டி தாயத்து மந்திரித்து - நோயாளிகள், குழந்தைகள், பெண்கள், பேய்-பூதம்-பிசாசு பிடித்தவர்கள் ஆகியோருக்கு அணிவித்து சிகிச்சை செய்வதே - **குளிசமாடல்** அல்லது **குளிசங் கட்டல்** எனப்படும். இது பலவகைப்படும். அவை, **(1) பரிகாரம்** - இது, செம்பு, வெள்ளி தங்கம் முதலிய உலோகத்தகடுகளில் சக்கரம் அல்லது கோடுகளைக்கீறி அதன் கட்டங்களுள் மந்திர எழுத்துக்களைப் பதித்து, சிறு குழாயினுட் வெலுத்தி, பாதிப்புற்றவர்களின் உடலில் கை முதலிய வசதியான இடங்களில் கட்டி; அல்லது கழுத்தில் தொங்கவிடுவதாகும். இதனால் பேய், பிசாசு, பில்லி சூனியம், கிரகதோடம், தேவதைக்குற்றம், நோய் இவற்றினாலான பாதிப்புகள் நீங்கும். சிலவற்றால் வசியமும் வசதிகளும், செல்வாக்கும் பெருகும். தீயசக்திகள் எதுவும் அண்டாது. **(2) நஞ்சுமுறிவு** - இது, சில உயர் மூலிகை வேர்களை, மாந்திரீகர், விஷகடி வைத்தியர், பாம்பாட்டிகள் ஆகியோர், தாயத்திலடைத்து தமது உடலில் அணிந்து கொள்வதாகும். இது, கடியுண்ட விஷத்தை இறக்குவதற்கும் - நச்சுயிர்கள் அல்லது கடிவிஷங்களினின்று தன்னைக் காத்துக் கொள்ளவும் உதவும். **(3) காப்புக்கட்டுதல்** - இது, உயர்வகை மூலிகைகளின் சாப நிவர்த்திக் கெனவும், அல்லது அவற்றின் முழுக்குண நலன்களைப் பெற வேண்டியும் மந்திரப்பூர்வமாக அவற்றுக்கு குளிசம்போல் காப்புக் கட்டுவதாகும்.

## ★ 38. இருதுவின் (சூதகம்) பயன் யாவை?

**இருது** என்பது - சாதாரணமாக, பெண்களுக்கு கருப்பையினின்று யோனி வழியாக வெளிப்படுப்

**மாதவிடாய்க் குருதியேயாகும்.** சூத்கத்தின் போது கருப்பையினுள் இரத்தம் திரண்டும், உட்சவ்வுகள் வளர்ந்துமிருக்கும். சித்தர் நூலின்படி, மாதருதுவிற்கு இயற்கையிலேயே பல சிறந்த குணங்கள் உள்ளதாகக் கருதி, இதனை வாத, வைத்திய, மாந்திரீக வித்தைகளுக்கு இரகசியமாகப் பயன்படுத்தி வந்ததாகத் தெரிகிறது. அதாவது **(1) இரசாயன நூலின்படி** இக்குருதிக்கு நீர்க்கும் தன்மை இயற்கையிலேயே உள்ளதெனக்கருதி கடினமான பொருட்களை நீராக்கும் படி பயன் படுத்தியுள்ளனர். **(2) வாதநூலின்படி** இக்குருதியிலுள்ள பொருட்களுக்கு, உலோகங்களிலுள்ள தாதுப் பொருட்களை மாற்றியமைக்கும் சக்தி இயற்கையிலேயே உள்ளதால், இழிந்த உலோகங்களை பொன்னாகச் செய்வதற்கு, இதனை மற்ற பொருட்களுடன் பயன் படுத்தியுள்ளனர். (3) **மாந்திரீக நூலின்படி** இக்குருதியினால் ஏவல், பில்லி, சூனியம், சால வித்தை முதலியவற்றுக்கும் - உருமாற்றம், மறைவுமை, யந்திரதந்திரம் முதலிய வித்தைகளுக்கும் வெற்றிகிட்டுமளவில் பயன் படுத்தியுள்ளனர். (4) மாதருது வெளியில் படாதபடி யோனிவாயிலை அடைத்து வைக்கப் பயன்படுத்தும் பழந்துணியாகிய **இருது காலச்சீலைத்துண்டும்** வைத்தியம், வசியம், மாந்திரீகம், வேதை முதலியவைகளுக்குப் பயன்படும். (5) முதல் ருதுக்சீலையும் - **கன்னி முதல் தீட்டும்** மகா சக்திகளை உடையதாகவும் கூறப்பட்டுள்ளது.

## ★ 39. சாபமூலிகைகள் - என்றால் என்ன?

அரிய சக்திகளையும், மாயமான வியத்தகு செல் பாடுகளையும் அளித்து, பல சித்திகளையும் பெறவுதவும் சில வகை உயிர் மூலிகைகளை; அவை பரவலாகவும், எளிதிலும் கிடைத்து விடாதவாறு மறைத்தும்; மீறிக்கிடைப்பினும் அவற்றின் முழுசக்தியும் வெளிப்பட்டு விடாமலும், அவற்றைக் கட்டுப் படுத்துமளவில் சித்தர்கள், யோகிகள் போன்றோரால் சாபமிடப்பட்டு தடை செய்யப்பட்டுள்ளவையே - **சாப மூலிகைகள்** எனப்படும். அவற்றை நமது மனோசக்தியினாலும் - உரிய நாள், நட்சத்திர இணைப்பு போன்ற சமயங்களில் உச்சரிக்கப்படும் தக்க மந்திர மொழிகளினாலும், கவர்ந்து தன்வயப்படுத்தி உரிய முழுப்பலனையும் பெறலாம் எனக்கூறி, அதனதற்குரிய சாபநிவர்த்தி முறைகளையும் சித்தர்களே வகுத்துள்ளனர். அம்முறையினைக் கடைப்பிடித்தாலன்றி, அவற்றின் பயனைப் பெறவே முடியாது என்பது உறுதி. சித்தர்களின் சாபத்தால் தனது சக்தியையும், குணத்தையும்

வெளிக்காட்டாதபடி கட்டுண்ட நூற்றுக்கணக்கான மூலி கைகளுள் - பெருங்குமிழ், வல்லாரை, சிரியாணங்கை, பெரியாணங்கை, கருந்தும்பை, கரிசல், பெருந்தும்பை, பூனைக்காலி, இருவேலி, நத்தைச் சூரி, கவிழ்தும்பை, அழுகண்ணி, தொழுகண்ணி, கற்றாமரை, கருநொச்சி போன்றவை சிலவாகும்.

### ★ 40. காயகல்பம் ஏற்பதினாலான பயன் யாவை?

உடலாகிய காயத்தை கல்பமாக்குவதற்கென, எளிய மூலிகையிலிருந்து, உயரிய சுண்ணம் வரை ஏராளமான மருந்துகள் கூறப்பட்டுள்ளன. இவற்றை முறைப் படித்தயாரித்து - பிசகாமல் ஏற்பதால் நரை, திரை, மூப்பு, பிணி, சாக்காடு முதலியவற்றை வென்று, என்றும் குன்றா இளமையோடு வாழலாம் எனக் கூறப்படும். காயகல்பத்தை ஏற்கையில் அவற்றை உண்ணும் கால அளவிற்கேற்ப, பின்வரும் கிரமப்படி உரிய பலன்களைப் பெறலாம். அதாவது, மாதம் -1ல் உடல்பிணிகள் தீரும், 2-ல் உடல்மாறும், 3-ல் உடல்துர்நாற்றம் போகும், 4-ல் சதுர்ம பிரகாசிக்கும், 5-ல் சோம்பல் மாறும், 6-ல் விந்தூறும், 7-ல் ஒளியுண்டாகும், 8-ல் கண்டதெல்லாம் படிகம் போலிருக்கும், 9-ல் இரவு பகலாகும், 10-ல் மறதிநினைவாகும், மாதம் 11-ல் ஞான உடலாகும்.

### ★ 41. கல்ப மூலிகைகளை ஏற்கக்கூடிய மாதங்கள் யாவை?

கல்ப சாதனைக்கென உட்கொள்ளக் கூடிய மூலி கையினங்களை முறைப்படிப்பறித்து, நிழலில் உலர்த்தி, இடிக்குமுன் 1-மணி நேரம் ரவியிலிட்டுப் பதம் போக்கி, சூரணித்து சுத்தி செய்தபின், தினமொரு வேளை, உரிய அனுபானத்துடன் திரிகடியளவாக சாப்பிட்டு வரவேண்டும். அதனையும், பின் கூறியுள்ளபடி அந்தந்த மாதங்களில், அவ்வவற்றைச் சாப்பிட வேண்டும். அதாவது, சித்திரைத் திங்களில் - கடுக்காய்ப் பிஞ்சு, வைகாசியில் - சிவகரந்தை, ஆனியில் - ஆவாரம்பூ, ஆடியில் - பொற்கையான், ஆவணியில் - மதனகாமப்பூ, புரட்டாசியில் - வெண்தாமரைமலர், ஐப்பசியில் - சீந்தில்கொடி, கார்த்திகையில் - வேப்பம்பூ, மார்கழியில் - தில்லை மரப்பட்டை, தையில் - இஞ்சி, மாசியில் - சுக்கு, பங்குனி மாதம் - ஏலக்காய் ஆகியவற்றின் சூரணங்களை முறையே உட்கொள்ள வேண்டும்.

## ★ 42. கடுக்காய் கற்பம் கொள்வது எப்படி?

பொதிகையில் விளையும் கருங்கடுக்காய் அல்லது பொற்கடுக்காயின் தூளை, அமுரியில் கலந்து ஒரு மண்டலம் உட்கொள்ளுவதே - கடுக்காய்க் கல்பம் எனப்படும். இதனால் - மும்மலக்களிம்பு போகும், நாடி முறுக்கேறும், அறிவுக் கூர்மையுண்டாகும், பூத பிரேத சங்கைகள் முதலிய சகலமும் ஓடும், உடலை நெடு நாள் நிலைபெறச் செய்யும். இதனை - முறையே, **ஆனி – ஆடி** மாதத்தில் வெல்லத்துடனும்; **ஆவணி – புரட்டாசியில்** கால் பங்கு இந்துப்புக் கூட்டி, அமுரியிலும்; **மாசி – பங்குனியில்** - அமுரியிலும்; **சித்திரை – வைகாசியில்** சிறு குறிஞ்சா, தேன் கூட்டியும் உண்ணவேண்டும். மேலும் 20-30-40-50-60-70-80 ஆகிய வயதுடையோர், முறையே 20-25-30-35-40-45-50 ஆகிய எண்ணிக்கையிலான நாட்கள் முடிய உட்கொள்ள வேண்டும். 80-வயதிற்கு மேல் சித்தியில்லை எனக் கூறப்படும் (கடுக்காயை உண்ணுகையில் தினமும் வழலை (கபம்) வாங்க வேண்டும்)

## ★★ 43. வாத (வகார) வித்தை என்றால் என்ன?

**வாதவித்தை (வகாரக்கலை)** என்பது, வாதம் - வைத்தியம் - யோகம் - ஞானம் எனும் நான்கு பிரிவு சித்தர் நூற்களிலும் முதன்மையும், தெய்வீகத்தன்மையும், ஆத்மசக்தியை மூலமாகக் கொண்டதுமாகும். இதனால், சில சிக்கலான பொருட்களையும், அவற்றின் பண்புகளையும் பிரிக்கவோ, சேர்க்கவோ, மாற்றியமைக்கவோ இயலுவதுடன் - தாவர, தாது, சீவ இனங்களின் உதவியால் ஈயம், இரும்பு, செம்பு போன்ற மட்டமான உலோகங்களையும் வெள்ளி, பொன் போன்ற உயரிய உலோகங்களாக மாற்றிவிடவும் இயலும், மேலும் வாதம் பல சித்திகளைப் பெற அடிப்படையாகவும், ஞான அறிவிற்கு ஓர் உறை கல்லாகவும், பல அரிய செயல் முறைகளுக்கு முன்னோடியாகவும் திகழுகின்றது. (இதில் வெற்றி பெற-சில கிரகங்களின் அமைப்புகளின் படி பிறந்தும், தெய்வ பக்தியும் தன்னலமற்ற தன்மையுடனும்-ஒழுக்க நெறிகளுடனும் திகழ்ந்தும்-பிறவி வாதியாக இருக்க வேண்டும் எனவும் கூறப்பட்டுள்ளது.)

## ★ 44. மூலிகைகளின் ஓடதிக்கூறு என்பன யாவை?

**மூலிகையினங்களின்** வேர் முதல் வித்து முடியவுள்ள

பலவித உறுப்புக்களின் பிரிவையே ஓடதிக் கூறு எனப்படும். அவை முறையே, பூங்கதிர்-பூவடியிதழ்-பூமடல் - பூலிங்கம் - பூமுகிழ்-பூந்தாது-மகரந்தம்-பூந்தூள்-மொக்கு-பாளை-பூ-இலை -இலைநரம்புக் கூட்டம்-இலைநரம்புத் தொகுதி - மெல்லிழை-புறவிதலிழை-சிற்றிலை-காம்பிலை-பூங்கொத்து-காம்பு-புறவிதழ்-வேர்க்கொடி-காய்-பழம்-கொட்டை-தண்டு-அடிமரம்-வேர்-வேர்ப்பட்டை-கிழங்கு-மரப்பட்டை-விதை-சதைப்பற்று-தளிர்-தழை-கொழுந்து-முளை-புரணி-கோது-படர்கொடிக் கூந்தல்-படர்கொடி எனப் பலவகைப்படும். இவை இடத்திற்கேற்ப குணத்திலும் மாறுபடும். எனவே, தனித்தனிக் குணமறிந்தும், சமூலப் பண்புணர்ந்தும் பயன் படுத்துதல் நலம்.

### ★★ 45. உயிர்ப்புத் தூண்டும் முறை என்றால் என்ன?

**உயிர்ப்புத் தூண்டும் முறை:** ஏதோ ஒரு காரணத்தினால் திடீரென மூச்சு நின்று விட்டால் **உயிர்ப்பைத் தூண்டுதல்** அவசியமாகும். அதாவது மூச்சு நின்றவனைக் குப்புறப்படுக்க வைத்து, மார்பினடிப்புறம் துணியை பந்து போல் சுருட்டி வைத்து, தலையை மார்பின் மட்டத்திற்குத் தாழச்செய்து, முகத்தை ஒருபுறம் திருப்பி வைத்து, அவன் கை கால்களை மடக்கித் தலையினடியில் கொடுத்து, வாயை நன்கு திறக்கச் செய்ய வேண்டும். பிறகு, உதவி செய்பவன் நோயாளியின் இருபுறமும் முழங்கால்களால் மண்டியிட்டுக்கொண்டு தன் இரு .கைகளையும் விரித்து, அவனது விலாப்புறம் வைத்து அவசரமின்றி, ஆனால் பலமாக, தனது பாரம் நோயாளியின் மீது விழும்படி, ஐந்து வினாடிகள் அமுக்கி, பின் தன் பாரத்தை பின்னால் இழுக்க வேண்டும். (ஆயின் கைகளை எடுத்துவிடக் கூடாது). இப்படியே சில வினாடிகளுக்கொருமுறை செய்ய வேண்டும். இவ்வமயம், அடுத்தவர் நோயாளியின் கை கால்கள் சூடாகுமாறு ஏதேனும் ஒற்றடமிட வேண்டும். இம்முறையினால் நோயாளியின் நுரையீரலில் அடங்கி உள்ள காற்று சிறிது சிறிதாக வெளிப்பட்டு மயக்கமும் தெளியும்.

### ★ 46. மருந்துகளின் சீரணகால அளவு என்ன?

**மருந்து வகைகளுள்,** கற்கம், செய்நீர், சாராயம் இவை- *1 சாமம்;* பற்பம், குடிநீர், இவை- *3 நாழிகை;* கழுநீர், காடி இவை- *5 நாழிகை;* சாறுகள், கஞ்சி, இளநீர், சர்க்கரை,

பானகம் இவை- 7 நாழிகை; தாவரங்களின் கேசரம், தளிர் பூ, வித்து, பழம் இவை- 7½ நாழிகை; தேன், சூரணம் தைலம், லேகியம், நெய் இவை- 12 நாழிகை ஆகிய கால அளவில் சீரணமாகும்.

## ★ 47. பசி - தாகம் என்பன யாவை?

இதில் (1) **உடலுறுப்புகள் நன்கு செயல்பட** ஆதாரமாயுள்ள உயிரணுக்கள் தோன்றி உடலைக்காத்து வளர்ப்பதற்கென ஏதேனுமொரு உணவு தேவையெனத் தெரிவிக்கும் (அன்னாசயத்தினின்று வெளிப்படும்) உணர்வே **பசி** எனப்படும். இதனை உடனே தணிக்காவிடில் உடலும் உள்ளமும் சோர்வடைவதுடன் தாதுக்கள் குன்றி கிழத்தன்மையும், இனவெறுப்பும் ஏற்படும். (2) **செந்நீரின் குறைவைக்** குறிக்க வாயிலும்-தொண்டையிலும் காணும் உணர்வே **தாகம்** எனப்படும். இதனைத் தணிப்பதற்குரிய நீரை அருந்த மனநிறைவும், செரிமானமும் கண்டு உணவும் நன்கு உடலில் பரவி வலிமை தரும்.

## ★ 48. மருந்துகளின் செயல்திறன் என்றால் என்ன?

பொதுவாக, **மருந்து வகைகள்** உடலினுள் சென்று **செயலாற்றும் விதம்**, அதனதன் தன்மைக்கேற்ப பலவகைப் படும். குறிப்பாக (1) காய கல்பத்தினால் நரை, திரை மாற்றம் -இளமை-நீண்ட ஆயுள் முதலியன தருதல் (2) ஆத்மதத்து வத்தை எழுப்பி சித்தி பெறச் செய்தல். (3) வசியம் முதலிய மருந்தீட்டினால் பிறரைத் தன் வயமாக்கல். (4) மயக்கம் - தூக்கம் - சித்தப்பிரமை - பேதி, வாந்தி முதலியவற்றை உண்டாக்கல். (5) மூலிகைகளுக்கு காப்புக் கட்டி உருவேற்றி பேய்-பில்லி-சூனியம் இவற்றை இயக்குவது. (6) உடலுக்கு குளிர்ச்சி-வெப்பம் - பசி - தாகம் - சுறுசுறுப்பு - பாலுணர்வு இவற்றைத் தூண்டுதல். (7) பிணிக்கு மருந்து தருகையில் உடனடியாகவோ-உடம்பில் ஊறியோ குணமாக்கல். (8) மருந்துண்ணுகையில் பத்தியக்கேடுற்றால் உடலில் மாறுதல் களைத் தோற்றுவித்தல். (9) சதை, எலும்பு முதலியன காயமுற்றால் அவற்றை சீராக்குதல் - மற்றும், வேறு கேடின்றி விரணங்களை ஆற்றுதல். (10) சுத்தியின்மை - செய்முறைக் குற்றம்-அளவு வேறுபாடு - அனுபானக் கோளாறு முதலிய வற்றால் துர்க் குறிகளையும், வேறு பிணிகளையும் உண்டாக்கல்

எனப் பலவித செயல் முறைகளையும் மருந்துகள் கொண்டிருக்கும்.

### ★ 49. காட்சிகளின் வேறுபாடுகள் எவை?

பொதுவாக, கண்களின் பார்வைக்குப் புலப்படக்கூடிய தோற்றமே-காட்சி எனப்படும். இவை, பின்வருமாறு பலவகைப்படும். (1) **கண்மருத்துவப் படி** - தெளிந்த காட்சி இரட்டுறக்காணல், திரியக் காண்டல் போன்றவையாகும். (2 **காம நூலின் படி** - விரகதாபக் காட்சியாகும். (3) **தத்துவ நூலின்படி** - அகக் காட்சி, புறக்காட்சிகளாகும். (4) **ஆகப தத்துவப்படி** - பிரத்தியட்சப் பிரமாணங்களாகும். அவை **ஐயக்காட்சி** (தெளிவற்ற, அல்லது சந்தேகமுள்ள தோற்றம் - **திரிபுக் காட்சி** (மாறுபட்ட, அல்லது ஒன்று வேறொன்றான தவறான தோற்றம்) - **விகற்பக் காட்சி** (வித்தியாசமான அல்லது பொருள், வகை, பிரிவு, தரம், செயல், பெயர் இவற்றின் பேதங்களை பகுத்தறிவதாலான தோற்றம்) - **பொறிவாயில் காட்சி** (மனோசக்தியின் உதவியால் உணரும் தோற்றம்) - **மனக்காட்சி** (மனதில் உதிக்கும் சிந்தனையால் உணரும் தோற்றம்) - **அநுபவக் காட்சி** (அனுபவம் அல்லது பொருளை நேசிப்பதாலான தோற்றம்) - **யோகக்காட்சி** (தியானம் அல்லது முக்காலமுணரும் தெய்வீக சக்தியினாலான தோற்றம்) ஆகியனவாகும்.

### ★ 50. காரச்சரக்குகள் என்பன யாவை?

பொதுவாக, சாம்பலுப்பு, பூநீறு முதலிய கடுங்கார உப்புக்களை **காரச்சரக்குகள்** எனக்குறிப்பிட்டாலும் - இங்கு கூறுவது உறைப்பான மருந்துப் பொருட்களே யாகும். அவை - அப்பிரகம், அண்டவெண்கரு, இரும்பு, கல்லுப்பு, கடல் நுரை, காரீயம், கிளிஞ்சல்ஓடு, கௌரி, சங்கு, சூடன், சூதம். தங்கம், தொட்டி, நாகம், பச்சைக்கற்பூரம், மூத்திரம், விந்து. வீரம், வெடியுப்பு, வெண்ணெய் முதலியனவாகும்.

### ★ 51. சுரபேதப் பெயர்கள் யாவை?

பொதுவாக **சுரம் (காய்ச்சல்)** மனிதர்களை மட்டுமல்ல இதர சீவயினங்களுக்கும் - பொருட்களுக்கும் கூட வருதாகக் கூறப்படும். அவ்வவற்றுக்கு வரும் சுரங்களின் பெயர்களாவன **ஊசரம்** - நிலங்களுக்கு ஏற்படும் சுரம்; **சிலாசத்து** -

மலைகளுக்கு ஏற்படுவது, **நீலாகா** - தணணீருக்கு வருவது; **பாகலம்** - யானைக்கு உண்டாவது; **நிர்மோகம்** - பாம்புக்கு ஏற்படுவது; **சீதிகா** - பசுவுக்குக் காண்பது; **அளர்க்கம்** - நாய்க்கு வருவது; **திருட்டி பிரதியவரோதனம்** - புலிக்கு ஏற்படுவது; **அபஸ்முருதி** - குதிரைக்குக் காண்பது; **சிகோத்பேதம்** - மயிலுக்கு உண்டாவது; **தத்துரம்** - பெருச்சாளிக்கு வருவது; **பிரவாசதம்** - காகத்திற்கு ஏற்படுவது; **பிருட்ட பேதம்** (உரோம நாசனம்) - பூனைக்கு வருவது; **சுரம்பித்திகாயம்** - கிளிக்கு ஏற்படுவது; **சிரம்** - சிறுத்தைக்கு வரும் சுரம் ஆகியனவாகும். (மனிதர்களுக்கு குற்ற மீறல்களினாலும் - மிருகம் முதலியனவற்றுக்கு மரணத்திற்கு முன் இறுதி காலத்திலும் கடைசியாக சுரம் உண்டாகும்)

## ★ 52. பண்டிதர் இலக்கணம் யாவை?

ஒரு நல்ல **மருத்துவருக்கு** இருக்க வேண்டிய **நற்பண்புகளாக** பின் வருவனவற்றைக் கூறப்படும். அவை, **சித்த மருத்துவம்** தொடர்பான சகல நூற்களையும் நன்கு கற்று தெளிதல் - பொருள், வளம் மீது ஆசையற்றிருத்தல் - மூலிகை, சரக்குகளின் நிறை, குறை குணங்களை நன்கறிதல் - சினம் நீக்கி, அடக்கமுறல்-மருந்து செய்திறனும், வலிமையுமறிதல் - மத ஒழுக்கமுடன், இறையை வழிபடுதல் - அறமியற்றல் - குருவிடம் பணிவும், உண்மையும் கொண்டு முறைகளை அறிதல் மருந்துகளில் நீண்ட அனுபவமும், பயிற்சியும் பெறல் - மருந்து கைபாகம். செய்பாகத்தில் தெளிவுறல் - இலக்கண, இலக்கிய புலமை பெறல் - பிறர் உயிரை, தன்னுயிர்போல் பாவித்தல் - துணை மருந்துகளின் பேதமும், பயனுமறிதல் - நோய்களின் குறிகுணங்களை தெளிவாக அறிதல் - சரக்குகளின் சுத்திமுறைகளில் தேர்தல் - சத்துரு, மித்துரு சரக்குகளின் பேதமறிதல் - உலோக, உபரச, பாடாண, காரசாரம் முதலியவற்றை நீற்றினமாக்கும் முறையறிதல் - எண்விதத் தேர்வு முறையிலும், நாடிப் பரிட்சையிலும் தேர்தல் - பஞ்சபூத நிலையும், முக் குற்ற மாறுதலும் அறிதல் - எப்போதும் தொழில் மீது பற்றும், பக்தியும் கொண்டிருத்தல் ஆகியனவாகும். (இன்னும் பலவுண்டு)

## ★ 53. நல்ல - கெட்ட சகுணங்கள் என்பன யாவை?

ஒரு மருத்துவன் நோயாளியைக் காணச் செல்கையில் எதிர்ப்படும் அறிகுறிகளையே **நல்ல - கெட்ட சகுணங்கள்**

எனப்படும். நல்ல சகுணத்தில் சென்றால் பிணிதீரும். கெட்ட சகுணமாயின் போகாமல் திரும்புவதே நலம். இவை பல வகையுண்டு. சிலவற்றை இங்கு கூறப்பட்டுள்ளது. அவை (1) **நல்ல சகுணங்கள்;** ஆண்கள் இடமிருந்து வலதுபுறம் செல்லல் - பெண்கள், நரி வலமிருந்து இடதுபுறம் செல்லல் - திருமண நிகழ்வு, கருடன், பிணம் இவை காணல் - கள்ளுக்குடம், பசு, குடை, உத்தமயோகி, கழுதையின்குரல், மேளச்சத்தம் இவை எதிர்படுதல் ஆகியனவாகும். **(2) கெட்ட சகுணங்கள்;** உப்பு பாசிப்பயறு, எள்ளு, எரு, மீன், மாமிசம், கருவாடு, சேற்றுப்புழுதி, குப்பை இவற்றைச் சுமக்கும் வண்டி முதலியன; மலம் கழித்தல், மாதவிடாயுற்றவள், சண்டாளன், சந்நியாசி, விதவை, சிப்பாய், ஒற்றைப்பிராமணன், நாவிதன் குதிரைச்சவாரி, நோயாளிப்படுக்கை, ஆண்யானை, ஆண் கோவேறுகழுதை, கருப்புநாய் இவைகள் எதிர்படுதல் - தைலம், எண்ணெய்க் குடம், நெய், வலை, உரிநெருப்பு இவற்றைக் காணல். - சண்டை, கூச்சல், அழுகை, திட்டல், தும்மல், கலகம், அபாயம் இவற்றைப் பார்த்தல் - பூனை, குரங்கு, காகம், ஆந்தை, நாய், நரி இவை ஓலமிடல், சண்டையிடல் - சில உயிரினங்கள் வலமிடம் போதல் ஆகியனவாகும்.

## ★ 54. தூதவன் வரும் திசையின் சகுனம் என்ன?

ஒருவன் மிக்க பிணியுற்றுள்ள போது அவன் பொருட்டு, வெளிச்சென்று மருத்துவனை அழைத்து வருபவனே **"தூதன்"** எனப்படுவான். மருத்துவனை அழைக்கவரும் தூதுவன் **மருத்துவன்** இருக்குமிடத்திற்குக் கிழக்கு (இந்திரன்திசை)- வடக்கு (குபேரதிசை)-வடகிழக்கு (ஈசானம்) இத்திசைகளி னின்று அழைப்பின் நோய் தீரும் எனவும்; தென்கிழக்கு (அக்கினி மூலை) தெற்கு (எமன் திசை) தென்மேற்கு (நிருதிதிசை). இத்திசைகளின்று அழைப்பின் மரணம் நேரும் எனவும்; மேற்கில்-(வருணன்திசை) இருந்து அழைப்பின் நோய் நீங்குவது மத்திமம் எனவும் அறியவும்.

## ★ 55. மருத்துவன் அறிந்திருக்க வேண்டியது என்ன?

**மருத்துவன்** முறையே , அகத்தியர் பாடற்களுடன், கோள் பஞ்சபட்சி-தேவதை-மந்திர-கன்மகாண்ட-சர நூற்கள் முதலி யவற்றையும் கற்றுத் தெளிய வேண்டும். காரணம், இன்ன நாளில் நோய் கொண்டு படுத்தால் பிழையான் எனவும்- இன்ன நாளில் சுரமுற்றால் இத்தனை நாளில், தீரும் அல்லது

தீராது எனவும்-இன்ன நோயில் இத்தனை நாளில், பாதிக்கப் பெற்ற பின் இன்ன நட்சதிரம் கடந்தால் நன்மைகிட்டும் எனவும்-'ஞாயிறு நிற்கும்' நாட்கணக்கையும், 'மருந்துகளில்' உச்சம் நீசம் இலாது எனவும், கோள்களில், சுங்கனோடு சத்த மஞ்சிவாடு பொன் போல் எனவும் மருத்துவ நூற்களில் பலவாறு புகன்றிருப்பதை உணர்ந்து கொள்ள **"சோதிடமும்"**- வாழ் நாளின் அளவையும், சரநாடியையும் **'மருத்துவ நூல்'** கூறுவதால் அதனையறிய **"சரநூலும்"**-இந்நோய் இன்ன கன்மத்தால் வந்தது, இதனை இத்தொழிலால் நீக்கவேண்டும் என அறிவதற்குக் **"கன்ம காண்டமும்"** (கர்மசூத்திரம்) கற்றிருத்தல் அவசியமாகும்.

## ★ 56. காலம் - அயணம் என்றால் என்ன?

இவற்றுள் (1) **காலம்** என்பது, ஒரு ஆண்டின் இரண்டிரண்டு மாதத்தைக் கொள்ளும் ஆறு பிரிவாகும். இவையே **பெரும் பொழுது** எனப்படும், இதில் (1) **கார் காலம்** (ஆவணி-புரட்டாசி) வாடைக்காற்று வீசும் பருவமாகும். (2) **கூதிர்க்காலம்** (ஐப்பசி-கார்த்திகை) குளிர் காற்று வீசும் பருவமாகும். (3) **முன்பனிக்காலம்** (மார்கழி-தை) கொண்டல் காற்று வீசும் பருவமாகும். (4) **பின்பனிக் காலம்** (மாசி - பங்குனி) உலவைக் காற்று வீசும் பருவமாகும். (5) **இளவேனிற் காலம்** (சித்திரை-வைகாசி) தென்றல் காற்று வீசும் பருவமாகும். (6) **முதுவேனிற்காலம்** (ஆனி-ஆடி) கோடைக் காற்று வீசும் பருவமாகும். நிற்க, இந்த பருவ நிலைகளுக்கேற்ப நாம் உணவு, வாழும் முறையினை வகுத்துக் கொள்ள வேண்டும். (ஒரு நாளின் மாலை-யாமம்- வைகறை -காலை-நண்பகல் ஆகிய ஐந்தும் **"சிறு பொழுது"** எனப்படும்.)

(2) **அய்ணம்** (வழி) என்பது, தை மாதப்பிறப்பாண்டினை இரு பிரிவாகக் கூறுவதாகும். இதில் (1) **உத்தராயணம்** என்பது. சூரியன் தை முதல் ஆனி முடியவுள்ள-ஆறு மாதத்தில் வடக்கு வழியாய்ச் செல்வதாகும். (2) **தக்ஷிணாயணம்** என்பது சூரியன்- ஆடி முதல் மார்கழி முடியவுள்ள-ஆறு மாதத்தில் தெற்கு வழியாய் செல்வதாகும்.

## ★ 57. வாக்படர் கூறும் அறிவுரைகள் யாவை?

மருத்துவத் தொழிலைக் கையாளுவோர் கடைப்பிடிக்க வேண்டிய நெறிமுறைகளாக **வாக்படர்** பின்வரும்

அறிவுரைகளைக் கூறுகின்றார். அதாவது (1) எப்பொழுதும் நல்லொழுக்கமும், பக்தியுமுள்ள நண்பர்களுடன் மட்டும் பழகவும். (2) பின்வரும், கொடுமை-திருட்டு-சோரம் போதல்-கோள்-கடுமையான சொற்கள்-பொய்-நிலையற்ற பேச்சு-அடுத்தவர்க்குத் தீங்களிக்கும் எண்ணம்-பொறாமை-சாத்திர விதிகளில் நம்பிக்கையின்மை ஆகிய 10 செயல்களையும் மனம், மெய், வாக்குகளினின்று அறவே நீக்க வேண்டும் (3) வறுமை, வருத்தம், சோர்வு, நோய் இவற்றால் பாதிக்கப் பெற்றவர்களுக்கு உதவவும். (4) உனக்குத் தீங்கிழைப்பவர்க்கும் நன்மையே தவறாமல் செய். (5) செயலின் முடிவு பற்றிக் கருதாமல் செயலாற்றவும். (6) என்றும் எவரையும் எதிரியாகக் கருத வேண்டாம். உன்னையும் அடுத்தவரின் எதிரியாகக் கொள்ள வேண்டாம். (7) நீ அடைந்த இழிவை எவரிடமும் கூற வேண்டாம் (8) என்றும் மது வகையை தயாரித்தல், விற்றல், ஏற்றல், கொடுத்தல் ஆகியன கூடாது. (9) அனைவரிடமும் அன்பு, தியாகம், மனம், மெய், வாக்கின் அடக்கம் கொள்வதே நல்லவரின் குறிக்கோளாகும். (10) அடுத்தவர் பொருளையும், உன்னுடையதைப் போல் சமமாகப் பாதுகாக்கவும். (11) உன்னை சந்திப்பவர்களிடம் மகிழ்வு தெரிவித்துப் பேசுவதில் முதன்மையாயிருப்பதுடன், எப்பொழுதும் இனிய, அனுதாப மிக்க சொற்களையே பயன்படுத்த வேண்டும்.

## ★ 58. சில பரிபாஷைகளின் விளக்கம் என்ன?

1. திரிதோடம் - வாதம், பித்தம், சிலேத்துமம்.
2. திரிகடுகு - சுக்கு, மிளகு, திப்பிலி.
3. திரிபலை - கடுக்காய், தான்றிக்காய், நெல்லிவற்றல்.
4. திரிமஞ்சள் - மஞ்சள், மர மஞ்சள், கஸ்தூரி மஞ்சள்.
5. திரிகடி - முவ்விரல் கூட்டி அள்ளுவது.
6. முக்கூட்டுநெய் - ஆவின்நெய், நல்லெண்ணெய். விளக்கெண்ணெய்.
7. வெருகடி - ஐவிரல் (பூனையின் பாதம்) அளவு.
8. பஞ்சகவியம் - பசுவின் பால், தயிர், வெண்ணெய், சாணம், நீர்.
9. பஞ்சசூதம் - இரசம், இலிங்கம், இரசச்செந்தூரம், வீரம், பூரம்.

10. **பரிமளவர்க்கம்** - சாதிக்காய், சாதிப்பத்திரி, இலவங்கம், இலவங்கப்பட்டை, ஏலம்.

11. **பஞ்சபூதம்** - மண், நீர், நெருப்பு, காற்று, வெளி.

12. **ஐங்காயம்** - கடுகு, வெந்தயம், ஓமம், பெருங்காயம், வெள்ளுள்ளி.

13. **ஐந்தெண்ணெய்**- நல்லெண்ணெய், வேப்பெண்ணெய். விளக்கெண்ணெய், இலுப்பையெண்ணெய், புங்கெண்ணெய்.

14. **அறுசுவை** - இனிப்பு, கசப்பு, புளிப்பு, உவர்ப்பு, கார்ப்பு, துவர்ப்பு.

15. **அஷ்டகாயம்** - சுக்கு, மிளகு, திப்பில், ஓமம், பெருங்காயம், கருஞ்சீரகம், நற்சீரகம், இந்துப்பு.

16. **நவலோகம்** - பொன், வெள்ளி, பித்தளை, செம்பு, நாகம், வெண்கலம், வெள்வங்கம், கருவங்கம், இரும்பு.

17. **நவவுப்பு**-சோற்றுப்பு, இந்துப்பு, வெடியுப்பு, கல்லுப்பு. பாறையுப்பு, மூங்கிலுப்பு, வளையலுப்பு, அமுரியுப்பு. பூநீறுஉப்பு.

18. **நவரத்தினம்** - வைரம், வைடூரியம், மாணிக்கம், மரகதம், முத்து, பவளம், நீலம், கோமேதகம், புட்பராகம்.

19. **தசமூலம்** - வில்வம், முன்னை, ஈசுரமூலி, பாதிரி, கண்டங்கத்திரி, பெருமரம், நெருஞ்சில், ஈரிலைத் தாமரை மூவிலைத்தாமரை, தழு தாழை ஆகியவற்றின் வேர்கள்.

20. **சமூலம்** - ஒரு செடியின் வேர் முதல் வித்து வரை உள்ள சகல பகுதிகளின் மொத்தத் தொகையாகும்.

## ★ 59. மருத்துவ அளவு விபரம் யாவை?

| | | |
|---|---|---|
| (1) திரிகடியளவு | - | முவ்விரல் கூட்டி எடுப்பது |
| வெருகடியளவு | - | ஐவிரல் கூட்டி எடுப்பது |
| (2) 2½ நாழிகை | - | 1 மணி |
| 2½ மணி | - | 1 சாமம் |
| (3) நிறுத்தலளவை | | |
| 1 உளுந்து | - | 1 கிரெய்ன் (சுமார்) |

| | | |
|---|---|---|
| 4 யவம் | - | 1 குன்றி (சுமார் 2-கிரெய்ன்ஸ்) |
| 1 மஞ்சாடி | - | 4 கிரேய்ன்ஸ் (சுமார்) |
| 6 குன்றி | - | 1மாஷம் (சுமார் 15-கிரெய்ன்ஸ்) |
| 3¾ குன்றி | - | 1 பணவெடை |
| 32 குன்றி | - | 1 விராகன் (1-டிராம்) |
| 40 குன்றி | - | 1 கழஞ்சு (1¼-விராகன்) |
| 10 விராகன் | - | 1 பலம் (320-குன்றி) |
| ¾ பலம் | - | 1 கஃசு (கைசா) |
| 1 தோலா | - | 1 ரூபாயெடை (180-கிரெய்ன்ஸ்) |
| 1 அவுன்ஸ் | - | 2½ ரூபாயெடை (சுமார்) |
| 3 தோலா | - | 1 பலம் |
| 8 பலம் | - | 1 சேர் |
| 40 பலம் | - | 1 வீசை (3-பவுண்டு 2-அவுன்ஸ்) |
| 50 பலம் | - | 1 (தூக்கு) |
| 2 தூக்கு | - | 1 துலாம் |
| 60 துளி | - | 1 தேக்கரண்டி |
| 8 தேக்கரண்டி | - | 1 அவுன்ஸ் |
| 16 அவுன்ஸ் | - | 1 பவுண்டு |

(4) முகத்தலளவை

| | | |
|---|---|---|
| 360 நெல் | - | 1 சோடு (செவிடு) |
| 5 சோடு | - | 1 ஆழக்கு (சுமார் 6-அவுன்ஸ்) |
| 2 ஆழக்கு | - | 1 உழக்கு |
| 3 உழக்கு | - | 1 உரி (½-நாழி) |
| 2 உரி | - | 1 நாழி (25-பலம்) |
| 8 நாழி (படி) | - | 1 மரக்கால் (குறுணி) |
| 2 மரக்கால் | - | 1 பதக்கு |
| 3 மரக்கால் | - | 1 முக்குறுணி |

| | | |
|---|---|---|
| 4 மரக்கால் | - | 1 தூணி (2-பதக்கு) |
| 12 மரக்கால் | - | 1 கலம் (3 தூணி) |
| 400 மரக்கால் | - | 1 கரிசை (80-பரை 33-1/3 கலம்) |

## ★ 60. சித்த மருத்துவ நூற்கள் சிலவற்றைக் கூறவும்?

சித்த மருத்துவ நூற்களின் எண்ணிகை கணக்கிலடங்காது அவற்றுள், அகத்தியர் கன்மசூத்திரம்-150, அகத்தியர் பரிபூரணம்-400 அகத்தியர் வைத்தியம்-1500, -அகத்தியர் வைத்திய ரத்தினச் சுருக்கம்-அனுபோக வைத்திய தேவரகசியம் - அனுபவ வைத்திய பிரம ரகசியம்-சட்டமுனி நிகண்டு-சூடாமணி நிகண்டு-தன்வந்திரி ரத்தினச் சுருக்கம்-தேரன் கரிசல் -தேரன் தைல வர்க்கச் சுருக்கம்-நவரத்தின வைத்திய சிந்தாமணி -பதார்த்தகுண சிந்தாமணி-பாலமிழ்தம்-பிரம முனிகருக்கடை-புலிப்பாணி வைத்தியம்-500, புலஸ்தியர் வாத சூத்திரம்-300 போகர் நிகண்டு-போகர்-7000, வைத்தியராஜ சிந்தாமணி - பதினெண் சித்தர் நாடி சாத்திரம்-பாலவாகடம்-கருவூரார் நொண்டிச்சித்து-மணிமந்திர வைத்திய சேகரம்-வைத்திய சாரசங்கிரகம்-யாகோபுசாத்திரம் - ஊர்வசி வைத்திய சிட்கா-நைடதம் முதலிய நூற்கள் சிலவாகும். (இவை தவிர எமது குருகுலத்தின் பாட நூற்கள் - வினாவிடைநூல் உட்பட சமீப காலத்திய தொகுப்பு நூற்களும் பல உள்ளன).



### உடம்பு என்றால் என்ன?

கூறுவேன் தேகமது என்னவென்றால்
குருபரனே எலும்புதனைக் காலாய் நாட்டி
மாறுபடா எலும்புக்குத் துவாரமிட்டு
வன்மையுடன் நரம்பினால் வலித்துக் கட்டி
தேறுதலாய் இரத்தமதை உள்ளே ஊற்றி
தேற்றமுடன் அதன் மேலே தோலைமூடி
ஆறுதலாய் வாய்வுதனை உள்ளடக்கி
அப்பனே தேகமென்ற கூறுண்டாச்சே.

(அ.மா.கா. 1000)

# XVI - பாடத்திட்டமும் - மாதிரி வினாக்களும்

## பதிவுத் தேர்வுகளுக்குரிய பாடத்திட்டங்கள்

அரசுப்பதிவு (R.I.M.P.) பெறுவதற்கென நடத்தப்படும் - அரசினரின் எழுத்து மற்றும் வாய்மொழித் தேர்வுகளில் (WRITTEN & ORAL TESTS) கலந்து கொள்ளுவோர், கீழே கண்ட அரசினரின் பாடத்திட்டங்களின் (SYLLABUS) படி கூறியுள்ள விபரங்களை உரிய முறையில் அறிந்து வைத்திருக்க வேண்டுமென்பது பதிவுச் சட்ட விதி முறைகளில் ஒன்றாகும். அவையாவன:

### ★ 1 சித்த மருத்துவப் பாடத்திட்டம்

(1) சித்த வைத்திய முறையின் ஆரம்பநிலை - முத்தோடங்கள் - பஞ்சபூதங்கள் - தசவாயுவுகள் - தசநாடிகள்- சப்ததாதுக்கள் போன்றவை உள்ளிட்ட பொதுப் படையான அடிப்படைத் தத்துவ விளக்கங்கள்.

(2) அகமருந்து-32, புறமருந்து-32, என்ற பிரிவினுள் அடங்கும் சூரணம், இலேகியம், தைலம், பற்பம், செந்தூரம், பூச்சு,நசியம், கலிக்கம் போன்ற மருந்து வகைகளின்செய்முறை விளக்கங்கள்.

(3) மூலிகைகள் - உலோகங்கள் - உப்புக்கள் - உபரசங்கள் பாடாணங்கள் - உயிரினங்கள் முதலியன அடங்கிய தாவர - தாது - சீவ இனங்களின் குணநலன்களும் -பயன்களும் பற்றிய பொருட்பண்பு (குணபாடம்) விளக்கங்கள்.

(4) முக்கியமருந்துச்சரக்குகள்-சிறப்பான நச்சு மருந்துகள்- அருகாமையில் கிட்டும் நாட்டு மருந்துகளின் பயன்கள் பற்றிய விளக்கங்கள்

(5) அம்மை-வாந்தி பேதி-கக்கிருமல்-சொறி சிரங்கு போன்ற தொற்று நோய்களுக்குரிய சிறப்பான சிகிச்சை, மற்றும் தடுப்புமுறை மருந்துகள் பற்றிய விளக்கங்கள்.

(6) சுரம்-இருமல்-வயிற்றுக் கடுப்பு-வலிகள்- மலச்சிக்கல் போன்ற சாதாரண நோய்கள் பற்றிய விபரமுடன், அவ்வவற்றுக்குரிய தனிப்பட்ட (பத்திய) உணவுக் குறிப்புகள் பற்றிய விளக்கங்கள்

## ★ 2. ஆயுர்வேத மருத்துவப் பாடத்திட்டம்:

(1) ஆயுர்வேத வைத்திய முறையின் சகலவிதமான அடிப்படைத் தத்துவ விளக்கங்கள்.

(2) முக்கிய மருந்துப் பொருட்கள் - சிறப்பான நச்சு மருந்துகள்-சாதாரணமாகக்கிட்டும் நாட்டு மருந்துகளின் குணநலன்கள்-பயன்கள் பற்றிய பதார்த்த குண விளக்கங்கள்.

(3) சகலவிதமான மருந்து வகைகளின் செய்முறை பற்றிய அறிவும்-பயிற்சியும்-அனுபவமும் கூடியதான விளக்கங்கள்.

## ★ 3. யூனானி மருத்துவப் பாடத்திட்டம்:

(1) யூனானி வைத்திய மறையின் சகலவிதமான அடிப்படைத் தத்துவ விளக்கங்கள்.

(2) தாது-தாவர-சீவ இனங்களின் பொருட்பண்பு விளக்கங்கள்.

(3) பலவிதமான மருந்துகளின் செய்முறை விளக்கங்கள்.

(4) சதாரணமான நோய்களின் விபரமும் - அவ்வவற்றுக் குரிய யூனானி முறையில் செய்யப்படும் மருந்துகளும் பற்றிய விளக்கங்கள்.

---

**ஆசிரியர் குறிப்பு:-** அரசினரில், சித்த மருத்துவப் பதிவுபெற - **தமிழிலும்:** ஆயுர்வேத வைத்தியப் பதிவுபெற - **சம்சுகிருதத்திலும்;** யூனானி வைத்தியப் பதிவுபெற-**உருதுவிலும்** தேர்ச்சி பெற்றிருக்க வேண்டும் என்பது விதிகளுள் ஒன்றாகும் எனினும், குறிப்பிட்ட மொழி தெரியாத வேறு வழியற்ற நிலையில் அவரவர் தாய் மொழியிலேயே தேர்வுகளில் கலந்து கொள்ளுமளவில் விதிவிலக்கும் உண்டு

நிற்க, மேலே கூறியுள்ளபடியான பதிவுத் தேர்வுகளுக்குரிய அரசினரின் பாடத்திட்டங்களின் விபரங்கள் யாவுமே ஒன்றுகூட விடுபட்டு விடாமல் இருப்பதுடன் - மேலும் அதிகப்படியாகவும், என்றென்றும் நிலைத்து நின்று பயன் படுமளவிலும் - தெளிவான கருத்துச்செறிவுடனும், சுருக்கமான விளக்கங்களுடனும் இந்த நூலிலும் மற்றும் எமது குருகுலப் பாடநூற்களிலும் கூறப்பட்டிருப்பதை படித்தறிந்திருப்பீர்கள். இவை தவிர குழப்பமூட்டும் வேறு நூலெதுவும் கண்டிப்பாகத் தேவையில்லை என்பதை உணர்ந்து கொள்ளவும். எனவே, அரசுப்பதிவுத் தேர்வுகளில் வெற்றி பெறுவதற்கு மட்டுமின்றி - மற்ற சமயங்களிலும் எமது நூற்களைக் கற்றறிந்து அறிவுத்தெளிவும் - அனுபவத்திறனும் பெற்று ஆற்றலுடன் திகழ்ந்து நலன்பெற வேண்டுகிறோம்.

(Dr. பெ. மு. இரா.)

# மாதிரி வினாத்தாள்கள்

## பரம்பரை வைத்தியர் தேர்வு

(நேரம் - 2 மணி, 30 நிமிடங்கள்)

(மொத்தம் மதிப்பெண்கள் - 100)

# I. சித்த மருத்துவம் (1974)

1. வாத-பித்த நாடி எந்தெந்த நோய்களில் காணப்படும்? (10)
2. குன்மம்-சோபை-நீரிழிவு நோய்களில் எந்த நாடி காணும்? (10)
3. தசவாயுவுகள் யாவை? அவை பற்றி சிறுகுறிப்பு எழுதுக? (20)
4. சேராங்கொட்டை - உத்தா மணி - கீழ்வாய் நெல்லி நொச்சி - துளசி ஆகியவற்றின் செய்கை - உபயோகம் பிணி நீக்கமும் பற்றி விரிவாக எழுதுக? (20)
5. ஆமையோடு பற்பம், இலிங்கச் செந்தூரம், பால சஞ்சீவி மாத்திரை, தாமிர பற்பம், நத்தை பற்பம் ஆகியவைகளின்சிறு செய்முறை - செயல் - பிணி நீக்கம் - உபயோகம் பற்றி எழுதுக. (20)
6. சீதக்கழிச்சல், பித்தசோபை, இரத்தமூலம், அள்ளுமாத்தம் பெரும் பாடு ஆகிய நோய்களின் குறி குணங்களும் - அவைகளுக்குரிய பரிகாரம் - பத்தியம் முதலானவற்றை எழுதுக? (20)

---

# II. ஆயுர்வேத மருத்துவம் (1974)

1. கீழ்க்கண்டவைகளுக்கு ரசம்-வீரியம்-விபாகம்- உபயோகம் முதலியவைகளை விளக்குக:- (a) குக்குலு (b) வாச (c) சுண்டி (d) திலத்தைலம் (c) கிருதம். (15)
2. பஞ்சபூதங்கள் யாவை? அவைகளை விளக்குக. பஞ்ச பூதங்களுக்கும், திரவியங்களுக்கும் உள்ள சம்பந்தங்களை தெளிவாக எழுதுக (20)
3. சரீரத்தில் நடக்கும் படியான "ஆஹார பரிணாமத்தை" கூறுக (15)
4. யாதாவதொரு உங்களுக்குப் பழக்கத்தில் கையாண்ட கிருதத்தின் செய்முறையையும், அதன் பிணி நீக்கமும் வரைக., (15)
5. சுவாசகாசத்தின் குறி குணங்களைக் கூறுக. அதற்கான ஐந்து மருந்துகளை விளக்கி அவைகள் அந் நோயிற்கு எவ்வாறு உபயோகமாகிறதென்று வரைக. (20)
6. பிரவாஹிக (சீதபேதி) நோயிக்கான காரணங்களைக் கூறுக. அதற்கான பரிகாரமும் - பத்தியமும் விளக்குக. (15)

# III. யூனானி மருத்துவம் (1978)

1. மஞ்சள் காமாலை நோயின் காரணம் - குறி குணம் -சிகிச்சை முறை பற்றி விளக்குக. (20)
2. ரோஜா-நெல்லிவற்றல்-கடுக்காய்-சந்தனம்-மூங்கிலுப்பு அப்ரேஷம்-காசினிக்கீரை-கவுசுபான் ஆகியவற்றின் பண்புகளை விளக்குக. (20)
3. திரிதோஷங்களைப் பற்றி தெளிவாக விளக்குக. (15)
4. உமூரத் அபியா என்பதன் வகையும் - விளக்கமும் கூறுக. (15)
5. பின்வரும் மருந்துகளின் செய்முறையும் பயனும் பற்றி விளக்குக.

   (a) ஷர்பத்தே குஜிரி (b) ஷபூபே கபாஷியே (மூங்கிலுப்பு சூரணம்) (c) ரூப்யா அமிலா (நெல்லிக்காய் லேகியம்) (d) ரோகனேகுல் (ரோஜப்பூத் தைலம்) (e) முப்பரே அஹமதி (f) இத்ரிபலே கிஷ்னிஸ் (திரிபலாதி) (15)
6. ஹபீப்ஸலாதீன் (குரோட்டன் வகை)-குஸ்லா (எட்டிவிதை) ஸக் அமோனியா (பேதி உப்பு) ஆகியவற்றின் சுத்தி முறை யாவை? (15)

N:B:-(வினாக்களின் இறுதியிலுள்ள அடைப்பிற்குள் இருப்பது தரப்படும் "மதிப்பெண்" ஆகும்).

---

ஆசிரியர் குறிப்பு:- சித்தா-ஆயுர்வேதம் - யூனானி ஆகிய முறைகளின் பதிவுக்கென கடந்த ஆண்டுகளில் நடை பெற்றுள்ள அரசினரின் எழுத்துத் தேர்வுகளின் பொழுது கேட்கப்பெற்ற வினாக்களின் மாதிரிக்கு வகைக்கு ஒன்றாக மேலே கொடுத்துள்ளோம். இவற்றை ஒட்டியே நேரடித் தேர்வுகளிலும் கேட்கப்படும் வினாக்கள் அமையும். மேலும், நேர்முகத்தேர்வின் பொழுது எளிதில் கிட்டுவதான நடைமுறைப் பயனிலுள்ள ஒருசில மூலிகையினம் - பாடாண வகை -காரசாரங்கள் - உபரசங்கள் போன்ற பொருட்களை வைத்திருந்து, அவற்றின் அடையாளத்தைக் கேட்பதுடன், அவ்வவற்றின் பயனையும் எளிய முறையிலான தொரு மருந்து செய்முறை விபரத்தையும் கூறும்படி வினவுவர். எனவே நூற்களைப் படித்தறிவதோடன்றி - செய்முறைப் பயிற்சியிலும் சிகிச்சை முறைகளிலும் தேர்ச்சியுடன் திகழ வேண்டியது அவசியமாகும் என்பதை உணர்ந்து செயல்பட வேண்டுகிறோம்.

(DR.பெ.மு.இரா.)

---

கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக

- குறட்பா

# நோயணுகா விதிமுறைகள்

இரவில் பகுவின் பாலையே உண்போம் (மந்தம் தரும் வேறு பாலெதுவும் உண்ணோம்)-எண்ணெயிட்டுத் தலைமுழுகும் போதெல்லாம் வெந்நீரிலேயே குளிப்போம் - பகல்பொழுதில் புணர்ச்சியும், துயிலும் கொள்ளமாட்டோம் - வயதிற்கு மூத்த மாதரையும், உடலிற்படும் இளம் வெய்யிலையும் விரும்போம் - மலசலங்களை அடக்கோம் - இடக்கையைக் கீழமைத்தே உறங்குவோம்-மூலநோய்களை உண்டாக்கும் கறிகளை உண்ணோம் - புளித்த தயிரையே பெருக்கியுண்போம் - முன்னாள் சமைத்த கறி அமுதுக்கு ஒப்பெனினும் அருந்தோம் - பசித்தாலொழிய உணவருந்தோம் - நாள் ஒன்றுக்கு இரு முறையன்றி மும்முறை உணவு கொள்ளோம் - இராக்காலம் தவறி பகற்பொழுதில் உறங்கோம் - பெண்களைத் திங்கட்கொரு முறையேயன்றி மற்ற காலங்களில் சேரோம் - பெருந்தாகம் கொண்டாலும் உணவின் கடையிலன்றி மற்ற சமயங்களில் நீரை அருந்தோம் - கிழங்கு வகைகளில் கருணைக் கிழங்கையே புசிப்போம் - வாழைக் கச்சலின்றி கனியை அருந்தோம் - உண்டபின் சிறிது தூரம் குறுநடை கொள்வோம் - ஆறு திங்கட் கொருமுறை வாந்தி மருந்தையும், நான்கு திங்கட் கொருமுறை பேதி மருந்தையும் கொள்வோம் - ஒன்றரை மாதத்திற்கொருமுறை நசியம் செய்து கொள்வோம் - வாரத்திற்கொரு முறை சவரம் செய்து கொள்வோம். நான்கு நாட்கொருமுறை எண்ணெயிட்டுத் தலைமுழுகுவோம் - மூன்று நாடகொருமுறை கண்களுக்கு மையிடுவோம் - வாசனைப் பொருட்களையும், பூக்களையும் நடு இரவில் முகரோம் - விழுப்படைந்த மாதர்களிடமிருந்து உண்டாகும் மணம்; ஆடு, கழுதை, துடைப்பம் இவற்றினின்று எழும் தூசு மேற்படும்படி நெருங்கோம் - இரவில் விளக்கு, மனிதர், மரம் இவைகளின் நிழலில் தங்கோம் - உணவு பக்குவமாகும் சமயத்தில் புணர்ச்சி கொள்ளோம் - உறக்கம், உணவு, மலநீர்க்கழிவு, புணர்ச்சி, அழுக்காடை, சீப்பிட்டுச் சீவும்போது சிந்துகின்ற மயிர் இவற்றை மாலைக்காலங்களில் விலக்குவோம். நகத்தினின்றும் மயிரினின்றும் தெறிக்கும் நீர் உடலில் படும்படி அணுகோம் - கன்றுடன் கூடிய பசுவையும், தெய்வத்தையும், பிதுர்க்களையும், குருவையும் வணங்காதிருக்க மாட்டோம். மேற்கண்ட நியதிகளைக் கைக்கொண்ட எம்மிடத்தில் யமனுக்கு என்ன வேலை? (இறவாது நெடுநாள் இருப்போம்)

-தேரையர்




# சித்த மருத்துவக் குருகுலம்

(1958-ம் ஆண்டில் நிறுவிப் பதிவு செய்யப்பட்டது.

பைகரா, மதுரை - 625 004.

போன் : 0452 - 2370632

பேரன்புடையீர்,

தமிழகத்தின் தலையாய மருத்துவத் தலைவரால் தமிழகத்திலேயே முதன் முதலில் தோற்றுவிக்கப் பெற்றதும் - அரிய நற்சேவையில் அனைவர்க்கும் முன்னோடியாகத் திகழுவதும் - வறியவரின் வளமிகு வாழ்விற்கு வழியாகத் திகழுவதுமான தன்னிகரற்ற தலையாய நிறுவனம், நாட்டில்

## சித்த மருத்துவக் குருகுலம் ஒன்றேயாகும்!

எமது *'சித்த மருத்துவக் குருகுலத்தில்'* பயின்ற ஆயிரக்கணக்கான மருத்துவர்கள் அரசினர் பதிவுத் தேர்வுகளில் வெற்றி பெற்று *"அரசுப்பதிவுச் (R.I.M.P. & என்லிஸ்ட்மெண்ட்) சான்றிதழ்"* பெற்று வளமுடன் தொழில் [illegible] வருகின்றனர்.

எமது குருகுல மாணவர்களில் சிலர் தனியே மருத்துவக் கல்லூரி நிறுவியுள்ளதையும்; ஓரிருவர் மூலிகை - மருத்துவ விளக்கம் குறித்த இதழ்களை இயக்கி வருவதையும்; சிலர் மருத்துவக் கட்டுரை ஆசிரியர்களாகத் திகழுவதையும்; சிலர் மருந்துத் தயாரிப்பு நிறுவனங்களையும் - பலர் மருத்துவமனைகளையும் அமைத்து நடத்தி வருவதையும்; பலர் அரசினரின் கிராம - நகரவை - ஊராட்சி ஒன்றிய - அறநிலைய - மற்றும் தனியார் துறை மருத்துவமனைகளில் மருத்துவ அதிகாரிகளாகப் பணிபுரிந்து வருவதையும் பெருமையுடன் கூறிக் கொள்கின்றோம்!

எனவே, எமக்கு மட்டுமே உரிய 'தனித்தன்மை' யினையும் எமது குருகுலத் தொடர்பினால் கிட்டும் பலவிதப் பயன்களின் சிறப்பினையும், நாடெங்கினுமுள்ள எமது பழைய மாணவர்களிடம் வினவி அறிவதுடன் - விரைந்து குருகுல உறுப்பினராகியும் - அரசுப் பதிவு பெறுவதற்கானவை செய்தும் பயனுற வேண்டுகிறோம்.

முழு விவரங்களுக்கு 5/- ரூபாய் தபால் தலையுடன் எழுதவும்

- இயக்குநர் (சி.ம.கு.)

அச்சாக்கம் : ஸ்ரீ விநாயகம் பிரஸ், மதுரை. போன் 2690438